VITHYA VINOTHINI SERIES.

உ

சிவமயம்.

பதினொன்றாந்திருமுறையின்

ஓர்பகுதியாகிய

# பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

## கோயின்நான்மணிமாலை

முதலிய மூலமும்,

ஷை திருமுறையில்சேராது தனித்துவழங்கும்

கோயிற்றிருவகவல்முதலிய

## திருப்பாடற்றிரட்டுமூலமும்,

அவற்றிற்கு

வித்யாவிநோதினி பத்ராதிபர்களால்

எழுதுவித்த பதவுரையும்,

ஷை பட்டணத்துப்பிள்ளையார்

சரித்திரமும்.

---

இவை

திரு-சம்பந்தமுதலியாரால்

சென்னை:

அமெரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

1892.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாந் திருமுறையுள்

திருவெண்காடர் என்னும்

பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

முதலாவது

# கோயினான்மணிமாலை.

வெண்பா.

1. பூமேலயனறியாமோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந்தளவைநாட்டுவோம்-பாமேவு
மேத்துகந்தான்றில்லையிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான்கொற்றக்குடை.

இ - ள். பாமேவும் - (அறிஞராற்செய்யப்பட்ட) பாடல்களிற் பொருந்திய, எத்து - துதிகளை, உகந்தான் - விரும்பினவனும், தில்லையிடத்து உகந்தான்-தில்லையாகிய இடத்தை விரும்பினவனும், அம்பலத்தே - பொன்னம்பலத்திலே, கூத்து - நடனம்பண்ணுதலை, உகந்தான் - விரும்பினவனும் ஆகிய சிவபெருமானது, கொற்றம் - வெற்றிதங்கிய, குடை - குடையானது, பூமேல் - தாமரைமலரில் வாசம்பண்ணுகிற, அயன்-பிரமனும், அறியா-அறியவொண்ணாத, மோலிப்புறத்தது-திருமுடிமேலது, ஏ - இஃதோர்வியப்பிருந்தவாறென்னை, புகழ்ந்து அளவைநாட்டுவோம் நாமே - (இதின்பெருமையை) புகழ்ந்து அளவறுக்கவல்லோம் நாமாவோமோ, ஆகோம். எ - று.

இறைவன் நெருப்புருவாய் நிமிர்ந்து நின்றபோது பிரமன் அன்னவுருவாய் அளவற்ற காலம் பறந்தும் அறியாத திருமுடியாதலால் பூமேல் அயன் அறியாமோலியென்றார். சடப்பொருளாகிய இக்குடை, பிரமனுமறியாத்திருமுடி மேலதாயிற்றேயென வியத்தற்பொருள் தந்து நின்றமையால் ஏ-வியப்பிடைச்சொல். நாமே என்னுமேகாரம் இங்கு எதிர்மறைப்பொருளது. அயன் என்பதில் உயர்வுசிறப்பும்மைதொக்கது. புறம்

ஏழனுருபு. பிரமனுமறியாத திருமுடிமேலதாயிருத்தற்குரிய புண்ணியஞ் செய்த இந்தக் குடையின் பெருமையைப் புகழ்தல் எம்மாலியை வதன் றென்பது கருத்து. இறைவனது திருவுருவத்தை விட்டு, அவனது குடையை முற்படப் புகழ்ந்ததற்குக் காரணம், கேசாதிபாதமாக அநுபவிக்கப் புக்க இவர்க்கு திருமுடிமீது கவிக்கப்பட்ட குடைமுற்படக்கண்ணுக்குப் புலப்பட்டமைபோலும்.

### கலித்துறை.

**2.** குடைகொண் டிவ்வையமெலாங்குளிர்வித்தெரிபொற்றிகிரிப்
படைகொண் டிகறெறும்பார்த்திவராவதிற்பைம்பொற்கொன்றைத்
தொடைகொண்டவார்சடையம்பலத்தான்றொண்டர்க்கேவல்செய்து
கடைகொண்டபிச்சைகொண்டுண் டிங்குவாழ்தல்களிப்புடைத்தே.

இ - ள். குடைகொண்டு - தம்வெண்கொற்றக்குடையால், இவையம் எல்லாம் - இந்தவுலகமுழுதையும், குளிர்வித்து-குளிரச்செய்து, எரி - எரிகின்ற, பொன் - அழகிய, திகிரிப்படைகொண்டு - சக்கராயுதத்தைக் கொண்டு, இகல்தெறும் - பகைவரையழிக்கின்ற, பார்த்திவர் ஆவதின்-சக்கரவர்த்திகளாவதைப் பார்க்கிலும்,பை-பசுமையாகிய, பொன்-பொன்னிறமுள்ள,கொன்றைத்தொடைகொண்ட-கொன்றைமலர் மாலையையணிந்த, வார்சடை-நீண்டசடையையுடைய, அம்பலத்தான்-பொன்னம்பலவனது, தொண்டர்க்கு-அடியார்களுக்கு, ஏவல்செய்து-பணிவிடைசெய்து, கடைகொண்ட - கீழ்மையைக் கொண்ட, பிச்சைகொண்டு - பிக்ஷையேற்று, உண்டு - அருந்தி, இங்கு - இந்தத்திருப்பதியில், வாழ்தல் - வாழ்வது, களிப்புடைத்து - இன்பந்தருவதாம். எ - று.

முதலிரண்டடிகளிலுள்ள கொண்டு மூன்றுவதன்சொல்லுருபு. இவ்வையமெல்லாம் குடைகொண்டு குளிர்வித்து என்றதனால், பார்த்திவர் என்பதற்கு,உலகமெல்லாம் ஒருகுடைக்கீழ்வைத்தாளுகின்ற சக்கரவர்த்திகள் என்று பொருளுரைக்கலாயிற்று. அவ்வாறு ஆளுகையில், அக்குடைநிழலில் இன் புற்றுவாழுங்குடிகட்குத் துன்பஞ் செய்வாரைக் கடிந்து அவற்றைக்காப்பது அவர்கட்குக் கடன்மையாதலால், குளிர்வித்து என்றதையடுத்து எரிபொற்றிகிரிப்படை கொண்டிக றெறும் பார்த்திவர் என்றும், பகைவரையழிக்கு மாற்றலுண்மைதோன்ற, எரிபொன்திகிரிப்படை என்றும் கூறினர். குளிர்வித்தலாவது, வறுமையாகிய கோடை நலியாமற்காத்தல்.பொற் கொன்றை யென்பதற்குப் பொன்போலுங் கொன்றையென்றுரைத்தலுமாம், "ஏற்பதிகழ்ச்சி" எனமூதறிவாட்டிகூறினமையால் கடைகொண்டபிச்சையென்றார். "அளகாபுரியன்னபட்டணத்தே சுதையால் வளைந்த, களவார் முகில்படிமாடத்திலூடுசெளித்தலினும்-புளகாடவியெழமெய்ப்போரிவேலனைப்போற்றியுய்வார், வளவார் புறந்திண்ணைவைகுத

லேதமின்மாசுகமே" என்றார் பிறரும். சக்கரவர்த்திகளாய் வாழ்வதினும், அம்பலத்தடிக ளடியார்க் கேவல் செய்து பிச்சை யேற்றுண்டுவாழ்வது களிப்புடைத் தென்பது கருத்து.

கழிநெடில்விருத்தம்.

3. களிவந்தமுதூறிக்கன்மனத்தையெல்லாங்
கசியும்படிசெய்துகண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன்மனம்புகுந்ததென்றால்
விரிசடையும்வெண்ணீறுஞ்செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந்தொன்னடமுங்காட்டு
முடையானுயர்தில்லையம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற்சென்றவர்க்குப்பொய்கொண்
டிடைமிடைந்தபுன்மொழியாலிச்சையுரையோமே.

இ - ள். விரிசடையும்-பரந்தசடையையும், வெண்ணீறும்-திருவெண்ணீற்றையும், செவ்வானம் என்ன - செவ்வானம்போல, ஒளிவந்த - ஒளிதங்கிய, பொன்நிறமும் - பொன்னிறத்தையும், தொல் நடமும் - பழமையாகிய திருநடனத்தையும், காட்டும் - தன்னடியார்க்குக் காட்டுகின்ற, உடையான் - எல்லாப்பொருள்களையும் உடையவனது, உயர் - உயர்ந்த, தில்லை அம்பலம் - தில்லை யம்பலமானது, களிவந்த அமுது ஊறி - இன்பத்தைத் தருகின்ற அமுதஞ்சுரந்து, கல்மனத்தை எல்லாம் - கல்லையொத்தவன் மனத்தையெல்லாம், கசியும்படிசெய்து-உருகும்படிசெய்து, கண்டறிவார் இல்லா - கண்டுணர்வாரில்லாத, வெளிவந்து-ஒளியுருவாய் வந்து, அடியேன் மனம் - அடியேனது மனத்தின்கண், புகுந்தது என்றால் - பிரவேசித்ததாயின், ஒன்று அல்லால் - அந்தத்தில்லையம்பலம் ஒன்றை நன்மொழியாற் புகழ்ந்துரைப்பதன்றி, இனி - இனி, எளிவந்து - தாழ்வாகி, பிறர்பால் சென்று - பிறரிடத்துச்சென்று, அவர்க்கு-அவர்களுக்கு, பொய்கொண்டு இடை மிடைந்த - பொய்யோடு கலந்த, புல்மொழியால் - புன்சொற்களால், இச்சை - எம்விருப்பத்தை, உரையோம் - சொல்லிக்கொள்ளோம். எ - று.

இன்னதையுடையான் என்னாதுஉடையானெனவாளாகூறினமையின், எல்லாப்பொருள்களையுமுடையவனெனப்பொருளுரைக்கலாயிற்று. இறைவனதுதில்லை யம்பலமானது, ஒளியுருவாகி என்மனத்திற்புகுந்து குடிகொண்டிருந்ததாயின், யாம் பிறரிடத்துச் சென்று எமது குறை கூறியிரவோம், அவ்வம்பலத்தையே புகழ்வேம் என்பது கருத்து.

## இணைக்குறளாசிரியப்பா.

௪. உரையின்வரையும்பொருளினளவு
மிருவகைப்பட்டவெல்லையுங்கடந்து
தம்மைமறந்துநின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந்தில்லைமன்றினுட
மாடுமம்பலவாணநீடு
குன்றக்கோமான்றன்றிருப்பாவையை
நீலமேனிமாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்தஞான்றுபெருமநின்
ருதவிழ்கொன்றைத்தாருமேதமில்
வீரவெள்விடைக்கொடியும்போரிற்
றழங்குந்தமருகப்பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கையாறும்பொய்தீர்
வரையாக்கலியெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண்வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும்வானநாடு
மையறுகனகமேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லையாகியதொல்பெரும்
பதியுமென்
றொருபதினுயிரந்திருநெடுநாமமு
முரிமையிற்பாடித்திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தறுகுசாத்திநின்
றமர்பெயரெழுதியவரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுதவேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற்காணுறுவனுவும்
வானுறநிமிர்ந்துகாட்டுங்
கானில்வானுளம்புங்கருடனுதலினே.

இ - ள். உரையின்வரையும் - சொல்லளவும், பொருளின் அளவும் - பொருளளவும் ஆகிய, இருவகைப்பட்ட எல்லையும் - இருவகையாகிய எல்லையையும், கடந்து - தாண்டி, தம்மைமறந்து - தம்மைமறந்துவிட்டு, நின்னை நினைப்பவர் - உன்னை நினைப்பவரது, செம்மை மனத்தினும் -

செவ்வையாகிய மனத்தின்கண்ணும், தில்லைமன்றினும் - தில்லையம்பலத்தின் கண்ணும், நடம் ஆடும் - நடனமாடுகின்ற, அம்பலவாண - அம்பலவாணனே, நீடு - நீண்ட, குன்றக்கோமான் தன் - மலையரையனது, திருப்பாவையை - அழகிய புதல்வியும், நீலம்மேனி - நீலநிறமுள்ள, மால் - திருமாலின், திருத்தங்கையை - திருத்தங்கையுமாகியபார்வதியாரை, திருமணம் புணர்ந்தஞான்று - திருமணம் புணர்ந்த காலத்தில், பெரும - எம்பெருமானே, நின் - உன்னுடைய, தாது அவிழ் - மகரந்தத்தோடுமலர்கின்ற, கொன்றை - கொன்றைமலர்களாற் சமைத்த, தாரும் - மாலையும், ஏதம் இல் - குற்றமற்ற, வீரம் - வீரத்தன்மையுள்ள, வெள் - வெள்ளிய, விடைக்கொடியும் - இடபக்கொடியும், போரில்-யுத்தகளத்தில், தழங்கும்-ஒலிக்கின்ற, தமருகப்பறையும் - இடக்கைவாத்தியமும், முழங்கு ஒலி-முழங்காநின்ற ஒலியையுடைய, தெய்வம்-தெய்வத்தன்மையமைந்த, கங்கையாறும்-கங்கைநதியும், பொய்தீர்-பொய்யில்லாத, வரையாக்கலிஎன்னும்-வேதம்என்கிற, ஆணையும்-திருவாணையும், நிரை நிரை-வரிசைவரிசையாக, ஆயிரம் வகுத்த - ஆயிரம் என்னுங் கணக்கினால் வகுக்கப்பட்ட, மா இருமருப்பின்-மிகப்பெரிய கொம்புகளோடு, வெள்நிறம்-வெண்ணிறத்தையும், செங்கண் - செம்மையாகிய கண்ணையுமுடைய, வேழமும் - யானையும், பண் இயல் - பண்ணமைந்த, வைதிகப்புரவியும்-வேதசம்பந்தமாகிய குதிரையும், வானநாடும்-வானநாடும், மை அறு - களங்கமற்ற, கனகம் - பொன்னொளியன்ற, மால் - பெரிய, மேருவரையும் - மேருமலையும், செய்வயல்-திருத்தப்பட்டவயல்கள்சூழ்ந்த, தில்லை ஆகிய-தில்லையாகிய, தொல் - பழைய, பெரும்பதியும் - பெரிய திருப்பதியும், என்ற - என்று சொல்லப்பட்டவைகளோடு, ஒருபதினாயிரம் திருநெடுநாமமும் - ஒருபதினாயிரம் திருநெடுநாமங்களையும், உரிமையின்பாடி-உரிமையாற்பாடி, திருமணப்பந்தருள் - திருமணப்பந்தலில், அமரர்-தேவர்கள், முன்புகுந்து - முற்சென்று, அறுகுசாத்தி - அறுகுசூட்டி, நின் தமர்பெயர் எழுதிய -உன்னடியார்களுடைய திருநாமங்களை யெழுதிய, வரிநெடுபுத்தகத்து - மிகப்பெரிய புத்தகத்தில், என்னையும் எழுதவேண்டுவன்-என்னையும் எழுதிவைக்க விரும்புகின்றேன், நின் அருள் ஆணை-உன் திருவருளாணையால், வைப்பில் - உலகத்தில், கானில் வால் நுளம்பும் - காட்டில்வாழும் வெள்ளிய கொசுகும், கருடன் - கருடனும், காண் ஒண்ணு அணுவும் - பார்க்கக்கூடாத அணுவும், வான் உறநிமிர்ந்துகாட்டும் - ஆகாயத்தைத் தொடும்படி உயர்ந்துதோன்றும், ஆதலின் - ஆதலால்—எ - று.

சொற்பொருள்களைக்கடந் தோனாதலால் "உரையின்வரையும் பொருளினளவும் இருவகைப்பட்ட வெல்லையுங்கடந்து" என்றும், அடியார் மனத்தினும் அம்பலந்தன்னினும் நடிப்பவனாதலால், தம்மைமறந்து நின்னை

நினைப்பவர் செம்மைமனத்தினுந்தில்லை மன்றினு நடமாடுமம்பலவாணா" என்றும், கூறினர். "சொற்பதங் கடந்ததொல்லோன்" "சொல்லாலும் பொருளாலு மளவையாலுந் தொடரவொண்ணவருணெறி" "சொல்லாற்றொடர்பொருளாற் றொடராப்பரஞ்சோதி" "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தை யுள்ளுமுறைவான்" என இங்ஙனம் அறிஞர் கூறுதலுங்காண்க.இறைவனே உன் திருவருளுண்டாயின், கொசுகு கருடனாதலும், அணுமேருவாதலும் கூடுமாதலால், ஒன்றுக்கும் பற்றாத சிறியேனும் உன்தமர்பெயரெழுதிய புத்தகத் தெழுதற் குரியனானேன் என்பது கருத்து. தமர்-பிரமன் இந்திரன் முதலிய தேவரும் முனிவர் இருடியர் முதலியோரும். புத்தகம் திருமணத்துக்கு வந்தஅடியவர் இன்னார் இன்னாரென்று பதிந்து வைக்கும் புத்தகம், இவர்மிகப்பலராதலால், 'வரிநெடும் புத்தகம்' என்றார். இதில், திருத்தார்முதல், திருநாமம் இறுதியா யுள்ள இறைவனது திருத்தசாங் கத்தைப்புகழ்ந்து பாடினர் அமரர் என்பது விளங்குகின்றது.

என்னை;'தாதவிழ் கொன்றைத்தாரும்' என மாலையும்,
'வீரவெள்விடைக் கொடியும்' எனக் கொடியும்,
'போரிற்றழங்குந்தமருகப்பறை' எனப் பறையும்,
'முழங்கொலித் தெய்வக்கங்கையாறும்' என யாறும்,
'பொய்தீர்வரையாக்கலியெனுமாணையும்' என ஆணையும்,
'நிரைநிரையாயிரம் வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச் செங்கண்வேழமும்' என யானையும்,
'பண்ணியல் வைதிகப்புரவியும்' எனப் புரவியும்,
'வானநாடும்' என நாடும்,
'மையறு கனகமேருமால்வரையும்' என மலையும்,
'செய்வயற்றில்லையாகிய தொல்பெரும் பதியும்'என ஊரும்,
'ஒருபதினயிரந்திருநெடுநாமமும்' எனத் திருநாமமும்,

குறிக்கப்பட்டிருத்தலானென்க. இவற்றுள், ஊர் நாட்டினுறுப்பாதலால் பத்தென்னுந் தொகைபெற இரண்டையும் ஒன்றாகக்கொள்க.

"வரையாறுநாடுநகரூர்துரகமதகரியே
விரையாருமாலைமுரசம்பதாகைமெய்யாணையென்னு
முரையார்தசாங்கத்தினெவ்வொன்றைநாடியுறவகுத்தே
தரையாளுமன்னர்முதலாயெவருக்குஞ்சாற்றுகவே"

என்றபடி திருநாமத்தை யொழித்துப் பத்தாகக் கோடலுமாம். இத்தசாங்கத்தைத் திருவாதவூரடிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகத்துள்ளும் காண்க.

# திருவாசகம், திருத்தசாங்கம்.

திருச்சிற்றம்பலம்.

---

நாமம்.

ஏராரிளங்கிளியேயெங்கள்பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையாய்-யாரூரன்
செம்பெருமான்வெண்மலரான்பாற்கடலான்செப்புவபோ
லெம்பெருமான்றேவர்பிரானென்று.

நாடு.

ஏதமிலாவின்சொன்மரகதமேயேழ்பொழிற்கு
நாதனமையாளுடையானாடுரையாய்-காதலவர்க்
கன்பாண்டுமீளாவருள்புரிவானாடென்றுந்
தென்பாண்டிநாடேதெளி.

நகரம்.

தாதாடுபூஞ்சோலைத்தத்தாய்நமையாளு
மாதாடும்பாகத்தன்வாழ்பதியென்-கோதாட்டிப்
பத்தரெல்லாம்பார்மேற்சிவபுரம்போற்கொண்டாடு
முத்தரகோசமங்கையூர்.

ஆறு.

செய்யவாய்ப்பைஞ்சிறகிற்செல்வீநஞ்சிந்தைசே
ரையன்பெருந்துறையானாறுரையாய்-தையலாய்
வான்வந்தசிந்தைமலங்கழுவவந்திழியு
மானந்தங்காணுடையானாறு.

மலை.

கிஞ்சுகவாயஞ்சுகமேகேடில்பெருந்துறைக்கோன்
மஞ்சன்மருவுமலைபகராய்-நெஞ்சத்
திருளகலவாள்வீசியின்பமருமுத்தி
யருளுமலையென்பதுகாணாய்ந்து

புரவி.

இப்பாடேவந்தியம்புகூடுபுகலென்கிளியே
யொப்பாடாச்சீருடையானூர்வதென்னே-யெப்போதுந்
தேன்புரையுஞ்சிந்தையராய்த்தெய்வப்பெண்ணேத்திசைப்ப
வான்புரவியூருமகிழ்ந்து.

படை.

கோற்றேன்மொழிக்கிள்ளாய்கோதில்பெருந்துறைக்கோன்
மாற்றாரைவெல்லும்படைபகரா-யேற்றா
ரழுக்கடையாநெஞ்சுருகமும்மலங்கள்பாயுங்
கழுக்கடைகாண்கைக்கொள்படை.

முரசு.

இன்பான்மொழிக்கிள்ளாயெங்கள்பெருந்துறைக்கோன்
முன்பான்முழங்குமுரசியம்பா-யன்பாற்
பிறவிப்பகைகலங்கப்பேரின்பத்தோங்கும்
பருமிக்கநாதப்பறை.

தார்.

ஆயமொழிக்கிள்ளாயள்ளூறுமன்பர்பான்
மேயபெருந்துறையான்மெய்த்தாரொன்-றீயவினை
நாளுமணுகாவண்ணநாயேனையாளுடையான்
றாளியறுகாமுவந்ததார்.

கொடி.

சோலைப்பசுங்கிளியேதூநீர்ப்பெருந்துறைக்கோன்
கோலம்பொலியுங்கொடிகூறாய்-சாலவு
மேதிலார்துண்ணெனமேல்விளங்கியேர்காட்டுங்
கோதிலாவேறுங்கொடி.

திருச்சிற்றம்பலம்.

---

வெண்பா.

5. ஆதரித்தமாலுமறிந்திலனென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங்காட்டுமே-போதகத்தோற்
கம்பலத்தானீணாககங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி.

இ - ள். போதகந்தோல் - யானையின்தோலை, கம்பலத்தான்-மேற்போர்வையாகக்கொண்டவனும், நீள் - நீண்ட, நாககங்கணத்தான் - சர்ப்பகங்கணத்தையணிந்தவனும், தென்புலியூர் - தென்புலியூர்க் கண்ணதாகிய, அம்பலத்தான் - திருச்சிற்றம்பலத்தை யுடையவனுமாகிய சிவபெருமான், செம்பொன் அடி - செம்பொன்போலுந் தன்திருவடியை, ஆதரித்த-காணவிரும்பின, மாலும் - திருமாலும், அறிந்திலன் என்ற அஃது - உணர்ந்திலன் என்னும் அச்செய்தியை, அறிந்தே - அறிந்துவைத்தும், காதலித்த - காணவிரும்பின, நாயேன்கு உம் - நாயினேனுக்கும், காட்டுமே - காட்டுவனோ. எ - று.

மாலும் என்றவும்மை உயர்வுசிறப்பும், நாயேற்கும் என்றவும்மை இழிவு சிறப்புமாம். என்ற அஃது என்பது என்றஃது எனநிலைமொழியீற்றுப் பெயரெச்சத்தகர விகுதிதொகுத்தல் பெற்றது "புகழ்புரிந்தில்லிலோர்க்கு" என்பதிற்போல. இறைவன், திருமாலுக்குக் காட்டாத தன்திருவடியை எனக்குக் காட்டுவனோ என்பது கருத்து.

### கலித்துறை.

6\. அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதிப்பா [லைப்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்ததுமுற்றும்வெள்
பொடியொன்றுதோளெட்டுத்திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன்றிருநடமே.

இ - ள். பூ - அழகிய, கரும்பின்செடி - கருப்பங்கொல்லைகள், ஒன்று - சூழப்பெற்ற, தில்லை - திருத்தில்லையின்கண்ணதாகிய, அம்பலத்தான் - சிற்றம்பலவனது, திருநடம் - திருநிருத்தத்தின் காலத்தில், அடி ஒன்று - திருவடி யொன்றுமே, பாதலம் ஏழிற்கும் - அதோலோகமேழுக்கும், அப்புறம்பட்டது - அப்பாற்பட்டது, இப்பால் - இப்புறம், முடி ஒன்று - திருமுடியொன்றுமே, இஅண்டங்கள் எல்லாம் கடந்தது - இந்த வுலகங்களெல்லாவற்றையுங் கடந்து நின்றது, முற்றும் - முழுதும், வெள்ளைப்பொடி ஒன்று - திருவெண்ணீறு அணியப்பெற்ற, தோள் - திருத்தோள்கள், எட்டுத்திக்கின் புறத்தன - அஷ்டதிசைகளுக்கும் அப்பாற்பட்டுகின்றன.

"எங்கள்பெருமான் பாதமிரண்டும் வினவிற் பாதாளமேழினுக்கப்பால், சோதிமணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்றதொன்மை" என மேலோர் கூறுதலுங் காண்க.

### கழிநெடில்விருத்தம்.

7\. நடமாடியேழுலகுமுய்யக்கொண்ட
நாயகரோநான்மறையோர்தங்களோடுந்
திடமாடமதிட்டில்லைக்கோயில்கொண்ட
செல்வரோயுமதருமைதேராவிட்டீ
ரிடமாடியிருந்தவளும்விலக்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்கவியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப்பணிந்தவானோர்
தஞ்சுண்டாயங்கருந்தீநஞ்சுண்டீரோ.

இ - ள். நடம் ஆடி - திருநிருத்தஞ்செய்து, ஏழுலகும் - ஏழுலகங்களையும், உய்யக்கொண்ட - உய்யக்கொண்டருளிய, நாயகரோ - இறைவரோ, நான்மறையோர்தங்களோடும் - நான்குவேதங்களையுடையோராகிய அந்தணரோடும், திடம் மாடம் மதிள் - திண்ணிய திருமாளிகைகளும் திருமதில்களும் சூழ்ந்த, தில்லை - திருத்தில்லையில், கோயில்கொண்ட - திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற, செல்வரோ - மஹைசுவரியமுடையாரோ, உமது அருமை - உமது அருமையை, தேராவிட்டீர் - அறியாதுவிட்டீ

த்தீர், இடம் மாடு இருந்தவளும் - இடப்பக்கத்தவளாயிருந்த எம்பெருமாட்டியும், விலக்காவிட்டால் - விலக்காதபக்ஷத்தில், என்போல்வார்க்கு - என்னையொத்தவர்களுக்கு, உடன்நிற்க இயல்வது அன்று - உடம்போடு கூடிநிற்றல் அமைவதன்று, தடம் மாலை - பெரிய கற்பகப் பூமாலையை யணிந்த, முடி - தலைகளை, சாய்த்து - வளைத்து, பணிந்த - வணங்கின, வானோர் - தேவர்களுக்கு, தஞ்சுண்டாய் - பற்றுக்கோடாகி, அங்கு - அந்தப்பாற்கடலிற் பிறந்த, அரு - பிறர் உண்டற்கரிய, நஞ்சு - கொடியநஞ்சை, உண்டீர் - அமுதுசெய்தீர். எ - று.

மாடு-பக்கம். இறைவன் திருநடனஞ்செய்வது உலகத்தார் கண்டுய்தற்பொருட்டாதலால், நடமாடி யேழுலகுமுய்யக்கொண்ட நாயகரோ என்றார். தஞ்சம் என்பது தஞ்சுஎனக் குறைந்து நின்றது. அடைந்தவர் பொருட்டுச் செய்தற்குரியவல்லனவுஞ் செய்வோன்என்பது தோன்றத் தடமாலைமுடிசாய்த்துப் பணிந்தவானோர் தஞ்சுண்டாயங்கருநஞ்சுண்டீரோ என்றார். இறைவரோ, உமது அருமையை யுணராமல் அடைந்தாரைக்காக்கும்பொருட்டு நஞ்சுண்டீர், உண்டபோது உம்மிடப்பாகத்திலிருந்த உமாதேவியும் விலக்காவிடின், அருகிருக்கவும் இல்லாத எம்போலியர் விலக்குதல் எங்ஙனங் கூடுமென்பது கருத்து.

### நேரிசையாசிரியப்பா.

௮. நஞ்சுமிழ்பகுவாய்வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கநென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன்வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறைபிறழ்பேழ்வா
யயிற்றலையன்னவெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொருவயிறோம்பற்குப்
பல்லுயிர்செகுத்துவல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும்போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக்கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூதூ
ராடுமம்பலக்கூத்தனைப்
பாடுதல்பரவுதல்பணிதலோவிலமே.

இ - ள். நஞ்சுஉமிழ் - நஞ்சைக்கொட்டுகின்ற, பகுவாய் - பிளந்த வாயினையும், வெம்சினம் - வெவ்விய கோபத்தையுமுடைய, மாசுணம் -

பெரும்பாம்பு, தன்முதல் முருக்க - தன்னை முதலில் சினவ, நெல் முதல் சூழ்ந்த - நெற்றாரில் சுற்றியிருக்கிற, நீர்ச்சிறுபாம்பு - சிறிய நீர்ப்பாம்பானது, தன்வாய்க்கு எதிர் - தன்வாய்க்கெதிரே, வந்த தேரையை - வந்த தவளையை, வவ்விய ஆங்கு-கவர்ந்துவிழுங்கிய அத்தன்மைபோல, யான் - நான், முன் - ஆதியில், கரு இடைவந்த - கருவினிடத்துத்தோன்றிய, ஒருநாள்தொடங்கி - ஒருதினந்தொடங்கி, மறவாமறலி - மறவாமையை யுடைய யமனது, முறைபிறழ் - வரிசைபிறழ்ந்த, பேழ்வாய் - பெரியவாயி லுள்ள, அயில்தலை அன்ன - வேல் நுனிபோன்ற, எயிற்றிடை - பல்லின் மேல், கிடந்து-தங்கி, ஆங்கு - அவ்வாறே, ஒருவயிறு ஓம்பற்கு-ஒருவயிறு நிரப்புதற்பொருட்டு, நனிஅருள் இன்றி - பெரிதும் கருணையில்லாமல், வல்லிதின் - வலாற்காரமாக, பல்உயிர்செகுத்து - பலவுயிர்களைக்கொன்று, அருந்தி - உண்டு, அயர்த்தனன் இருந்தும் - சோர்வடைந்தவனுயிருந்தும், பெயர்த்துநின்று - அடிபெயர்த்துநின்று, எண்தோள்வீசி - எட்டுத்தோள்களை வீசி, தொல்எயில் உடுத்த - பழமையாகிய மதில் சூழ்ந்த, தில்லைமூதூர் - தில்லையாகிய பழைய வூரின்கண், கண்டோர் உருக - பார்த்தோரது உடலுயிர்களுருகும்படி, ஆடும் - ஆடுகின்ற, அம்பலக்கூத்தனை - அம்பலக் கூத்துடையானை, பாடுதல்பரவுதல் பணிதல் ஒவிலம் - பாடுதலும் நினைத்தலும் வணங்குதலும் ஆகிய தொழில்களை நீங்கிலேம். எ - று.

முறைபிறழ்தல் - ஒன்றற்கொன்று விலகியும் நீண்டும் குறுகியும் இருத்தல். போலும் - இசைநிறையசைச்சொல். மறலிக்கு மறவாமையாவது உயிர்களுக்கு நியமிக்கப்பட்ட நாள்வரையறையை மறவாமை. "கூம்பலங் கைத்தலத்தன்பரொன் பூடுருகக்குனிக்கும் பாம்பலங்காரப்பரன்" என மேலோர் கூறுதலால், 'கண்டோருருகத் தொல்லெயிலுடுத்த தில்லைமூதூர் ஆடுமம்பலக்கூத்தனை' என்றும், வயிறொன்றேயாயினும் அதை நிரப்புதற்பொருட்டுக்கொல்லப்படுகிற வுயிர்கள் பலவாதலால், 'ஒருவயிறோம்பற்குப் பல்லுயிர் செகுத்து வல்லிதினருந்தி என்றும், அக்கொலை அருளின்மையால் நிகழ்வதாதலால். அருணனியின்றி, எனவும் கூறினர். பரவுதல் இவ்விடத்து மனத்தின்றொழிலாகிய நினைத்தலுக்காயிற்று. பாடுதல் பரவுதல் பணிதலோ இலம் எனப்பிரித்து, இவ்வாறு பலவுயிர்களைக்கொன்றருந்தினும், அம்பலக்கூத்தனைப் பாடுதல் பரவுதல் பணிதல் களையாயினுஞ் செய்பின்உய்வேம் அவற்றையுமோசெய்கிலேம், இனி எவ்வாறுய்வேம் எனப்பொருளுரைத்தலுமாம். பெரும்பாம்பினால் துன்புறா நின்றதோர் நீர்ச்சிறுபாம்பு தன்வாய்க்கெதிர்வந் தகப்பட்ட தவளையைக்கவர்ந் துண்டுகளித்தல்போல மறலியின் வாய்ப்பல்லிலகப்பட்டு நிற்கிறயானும் பிறபலவுயிர்களைக்கொன்றருந்திக்களியாநின்றேன், ஆயினும், தில்லை

யம்பலக்கூத்தனைத் திரிகரணத்தானும் வழிபடுதலை நீங்கிலோம் என்பதும் அவன் கூற்றுருற்றல் மாற்றியோனுதலால், அவனால் எனக்கும் கூற்றம் குதித்துய்தல் கூடுமென்பதும் கருத்து.

வெண்பா.

௯. இலவிதழ்வாய்வீழ்வாரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே-னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தேயாளுடையார்நின்றுடு
நாடகங்கண்டன்பானநான்.

இ - ள். இலகும் - விளங்குகின்ற, ஒளி - காந்தியையுடைய, ஆடகம்சேர் அம்பலத்து - பொன்னம்பலத்து, ஆள் உடையார் - என்னையடிமையாகவுடையவராகிய சிவபெருமான், நின்று ஆடும் நாடகம் - நின்றுடுகின்ற திருநடனத்தை, கண்டு-சேவித்து, அன்பு ஆனநான்-அன்பு பூண்டநான், இலவு இதழ்வாய் - இலவம்பூப்போன்ற அதரத்தினிடத்து, வீழ்வார் - விரும்பிவீழ்வாராகிய காமுகரை, இகழ்வார் - அவமதிப்பவராகிய, அவர்தம் - அந்தப்பொதுமாதருடைய, கலவி-புணர்ச்சியைவிரும்பி, கடைக்கணித்தும்காணேன் - கடைக்கண்ணினாலும் (அவர்செய்யும் நடனத்தைப்) பாரேன். எ - று.

ஆடகம் - நால்வகைப் பொன்னுளொன்று. நால்வகைப் பொன்னாவன - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்பன; இவை மிக்கவொளியுள்ளனவாதலால், 'இலகுமொளி யாடகம்' என்றும், பொதுமாதர், தம்மதரபானம் விரும்பிவருங்காமுகரை முன்னர்த்தாமும் அவரைவிரும்பினவர்போல நடித்து, அவர் கைப்பொருள்முழுதும் கவர்ந்துகொண்டபின்னர் அவரை யிகழ்தலே இயற்கையாகவுடையராதலால், 'இலவிதழ்வாய் வீழ்வா ரிகழ்வார்' என்றும், அவரது கலவி நரகத்துக்கேதுவாதலால் அவர்தங்கலவிகடைக் கணித்துங் காணேன் என்றும் கூறினார். பேரின்பத்தைத்தருகிற இறைவரது திருநடனத்தைக் கண்டு அன்புபூண்ட நான் சிற்றின்பத்தைத்தருகிற இவரது நடனத்தை கடைக் கண்ணினாலும் நோக்கேன் என்பது கருத்து. இலகுமொளியாடகஞ் சேரம்பலம், என்பதை "அரணம் பலம்போற்றே யத்ததாய்" எனவும், "அவன் றில்லையின் ஞெளிபோன்று" எனவும் கூறியமேலோர் திருவாக்கானுமுணர்க.

கலித்துறை.

10. நானேபிறந்துபயன்படைத்தேனபனுரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றிமையெல்லாமறுக்குந்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே.

இ - ள். அயன் - பிரமனும், நாரணன் - திருமாலும், எம்கோனே என - எம்மிறைவனே யென்றுதுதிக்க, தில்லை அம்பலத்தே நின்று - தில்லையம்பலத்தின் கண்ணின்று, கூத்து உகந்த - நடநஞ்செய்தலைவிரும்பிய, தேனே - தேன்தானே, திருவுள்ளம் ஆகி - (என்னையாட்கொள்ளத்) திருவுளம்பற்றி, என் தீமை எல்லாம் அறுத்து-என்பாபக்கட்டுகளை யெல்லாம் சேதித்து, அடியேன் மனத்து - என்மனத்தின்கண், தானேபுகுந்து வந்து சந்திக்க - தானே எழுந்தருளிவந்து சந்தித்ததனால், பிறந்து - மானிடப் பிறப்பிற்பிறந்து, பயன்படைத்தேன் - பயன் பெற்றவன், நானே - நானொருவனே. எ - று.

, தில்லையம்பலத்தே நின்று கூத்துகந்ததேன் என்றது நடராசனை. இது, "மாற்றேனெனவந்த காலனையோலமிடவடர்த்தகோற்றேன் குளிர் தில்லைக் கூத்தன்" என்னும் மேலோர்திருவாக்கானுமினிது விளங்கும். இறைவன், தனக்காட்படுந் தன்மையுண்டாவதற்கு முன்பேதன்னன்பனையாள் வதொருபுதிதாகிய முறைமையையுடையோனாதலால், "தேனே திருவுள்ளமாகியென்றீமை யெல்லாமறுத்துத் தானேபுகுந்தடியேன் மனத்தேவந்து சந்திக்க" என்றார். இது, "என்னைமுன்னாளுடையான்" என்பதனாலினிது விளங்கும். மானிடப்பிறவி அரியதென்பதை, "அரும்பெறல் யாக்கையைப்பெற்ற" எனவும், "பெறுதற்கரியபிறப்பீது" எனவும், "எறியுங் கடலினுகத்தொளையில் யமைக்கழுத்துப்புகுவதுபோற் - பொறிவெம் பிறவிய நேகத்தாற் புருடன் வியெனப்பிறந்து" எனவும், "அற்றால ளவறிந்துண்கவஃதுடம்பு, பெற்றானெடிதுய்க்குமாறு" எனவும் வருவனவற்றாற்காண்க. இறைவன் என்னைவலிதினாட்கொண்டமையான், நானொருவனே இந்த அரியமானிடப்பிறப்பின் பயனடைந்தேன் என்பது கருத்து.

## கழிநெடில்விருத்தம்.

11. சந்துபுனையவெதும்பிமலரணை தங்கவெருவியிலங்குகலையொடு
சங்குகழலநிறைந்தவயலவர் தஞ்சொலியம்பலிந்துகிளியொ
டு, பந்துகழல்கண்மறந்துதளிர்புரைபண்டைநிறமுமிழந்துநிறை
யொடு, பண்புகவிரவனங்களவொடுநண்புபெருகவிளைந்த
வினையனை, நந்திமுழவுதழங்கமலைபெறுநங்கைபகிழவணிந்தவரா
வுக, ணஞ்சுபிழியமுரன்றுமுயலகனைக்துநரலவலைந்தபகிரதி
யத்திமதியொடணிந்துதில்லைநகரம்பொனணியுமரங்கினடநவி
லங்கணரசைப்படைந்துதொழுதிவளன்றுமுதலெதிரின்றுவளை
[யுமே.

இ - ள். நந்தி - நந்திகொட்டுகின்ற, முழவு - மத்தளம், தழங்க - ஒலிக்கவும், மலைபெறு நங்கைமகிழ - மலையரையனால் பெறப்பட்ட பார்வதி கண்டு களிக்கவும், அணிந்த - ஆபரணமாகத் தரித்திருக்கிற, அரவுகள் - பாம்புகள், முரன்று நஞ்சுபிழிய - சீறி விஷத்தைச்சிந்தவும், முயலகன் - முயலகனெனவன், நைந்து நரல - (திருவடியினால் துவையுண்டு) வருந்தியலறவும், அலைந்த பகீரதி - அசையுமியல்புள்ள கங்கையை, அந்திமதியொடு - அந்திப்பிறையுடன், அணிந்து - சூடி, தில்லைநகர் - தில்லைநகரின்கண், அம்பொன் அணியும் - அழகிய பொன்னினாற் செய்யப்பட்ட, அரங்கில் - கனகசபையில், நடம் நவில் - திருநடனம்பண்ணுகின்ற, அங்கண் அரசை - அழகிய கிருபைக்கரசனாகிய சிவபெருமானை, இவள் அடைந்து தொழுது - இந்தமாது நெருங்கிவணங்கி, அன்றுமுதல் - (தொழுத) அந்நாள்முதல், எதிர் இன்று வரையும் - நிகழாநின்ற இந்நாளளவும், சந்துபுனைய - சந்தனம்பூச, வெதும்பி - வெப்பமடைந்து, மலர் அணைதங்க வெருவி - புஷ்பசயனத்தி லிருத்தற்கஞ்சி, இலங்குகலையொடு - விளங்குகின்ற ஆடையுடன், சங்குகழல - சங்கவளையல்கள் கழலாநிற்க, நிறைந்த - நிரம்பிய, அயலவர்தம் சொல்நலிய - அயலார் பேசுகிற பழிமொழிகள் வருத்துதலால், மெலிந்து - இளைத்து, கிளியொடு - கிள்ளைகளுடன், பந்துகழல்கள் மறந்து - பந்து அம்மனை ஆகிய இவைகளை மறந்து, தளிர்புரை - மாந்தளிரையொத்த, பண்டைநிறமும் இழந்து - பழைய நிறத்தையும் இழந்து, நிறையொடு - கற்பினோடு, பண்புதவிர - தன்குணமும் நீங்க, அநங்கன் அவனொடு - உருவிலியாகிய அவனுடன், நண்புபெருக - சிநேகம் அதிகரிக்க, இனையன - இப்படிப்பட்ட அநர்த்தங்கள் பலவும், விளைந்த - இவளுக்குண்டாயின.

இது நற்றாயிரங்கல். அதாவது, நடராசனைக்கண்டு மோகித்து வருந்தாநின்ற தலைமகளது நிலைமையை, நற்றாய்பிறரறியச் சொல்லியிரங்கல். அணிந்தவரவுகள் நஞ்சுபிழிதல், முயலகன் நைந்துநரலல் முதலியன நிகழ்வது இறைவனது திருநடனவேகத்தாலென்க. அங்கணரசு என்றமையால் இவள் இறைவனது கண்ணழகி லீடுபட்டாளென்பது விளங்குகின்றது. விரகிகளுக்கு, சந்தநம்மலர்ச்சேக்கை முதலியன வெம்மையாயிருத்தலும், ஆடை அணிவளை முதலியன கழலலும், உடல்மெலிதலும், நிறமிழத்தலும், பந்துமுதலிய விளையாட்டுக் கருவிகளையும் கிளி நாகணவாய்ப்புள் முதலியவற்றையும் மறத்தலும் இறத்தலும், இயல்பாதலால், சந்துபுனையவெதும்பி என்பது முதல் அநங்கனவனொடு நண்புபெருக, என்னுந்துணையுங் கூறிவிடுத்தார். "அநங்கனவனொடுநண்புபெருக, என்றதனால் இறத்தல் பெறப்பட்டது. இறைவன் அருளுடையனெனக்கருதி, அவனருளைப் பெறாமையால் இவள் இவ்வாறாயினள், இனியிவள் இறந்துபடவுங்கூடும் இதற்குயானென்செய்வேனென்பது கருத்து.

நிலமண்டிலவாசிரியப்பா.

12. வரையொன்றுநிறுவியரவொன்றுபிணித்துக்
கடறடவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்துணவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்றகாலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாழ்வதுபொரூஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புரையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுலகுகுழைத்தொருநாஅளுண்டது
மூலகமூன்றுமளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்றுமிலவேதேரி
னுரைப்போர்க்கல்லதவன்குறைவின்றே
யினையனுகிய தனிமுதல்வானவன்
கேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடுத்
தூழியூழிகீழுறக்கிளைத்துங்
காண்பதற்கரியநின்கழலும்வேண்டு
நிகிலலோகமுநெடுமறைத்தொகுதியு
மகிலசராசரமனைத்துமுதவிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்
காண்டிலாதநின்கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின்மறுவின்றிவிளங்கி
யேவருங்காணவாடுதியதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்ததெந்தைவளையாது
கல்லினும்வலிதுநல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினுமுள்ளிடைநிரம்ப
வான்பொயச்சமாயாவாசை
மிடைந்தனகிடப்பவிடம்பெறலருமையி

லைவர்கள்வர்வல்லிதிற்புகுந்து
மண்மகன் றிகிரியிலெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்தபீடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்துதழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந்தடுத்தசெங்கையும்
புள்ளியாடையுமொள்ளிதின்விளங்க
நாடகமாடுதிநம்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிறமாதலின்மொழிவது
பெரியதிற்பெரியையென்றுமன்றே
சிறியதிற்சிறியையென்றுமன்றே
நிறைபொருண்மறைகளுஞன்குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினிலார்த்துவைத்த
மறையவர்தில்லைமன்றுள்கிழவோனே.

இ - ள். வரைஒன்றுநிறுவி - ஒருமலையை (மத்தாக) நட்டு, அரவு ஒன்றுபிணித்து-ஒருபாம்பை (அம்மலையிற்) கடைகயிறாகக் கட்டி, கடல் - கடலையே, தடஆக - விடாவாகக்கொண்டு, மிடலொடும் வாங்கி - வலிமையுடன்வளைத்து, திண்தோள் ஆண்ட-தம்திண்ணியதோள்களாற்கடைந்த, தண்டா அமரர்க்கு - கெடாத தேவர்களுக்கு, அமிர்து - அமிர்தத்தை, உணா அளித்த - உணவாகத்தந்த, முது - பழமையாகிய, பெருங்கடவுள்-பெரியதேவன், கடையுகச்சென்றகாலத்து - யுகமுடிவுநேர்ந்தகாலத்தில், நெடுநிலம் - பெரியபூமியானது, ஆழிப்பரப்பில் - கடற்பரப்பில், ஆழ்வது-அமிழ்வதை, பொறாது - சகிக்காமல், அஞ்சேல் என்று - பயப்படாதே யென்று சொல்லி, செம் சேல்ஆகி - செவ்வியமீன்வடிவெடுத்து, தன் - தனது, தெய்வம் - தெய்வத்தன்மையமைந்த, உதரத்து - வயிற்றிலுள்ள, சிறுசெலுப்புரையில் - சிறிய சிலாம்புப் பள்ளத்தில்,பௌவம்ஏழ்பட்டது-எழுகடலும் அடங்கிற்று, ஏ-என்னவியப்பு, (அதுநிற்க) பௌவத்தோடு-கடல்களுடன், உலகு-உலகை, குழைத்து - குழைவித்து,உண்டதும் - விழுங்கினதும், ஒருநாள் - ஒருநாளே, உலகம்மூன்றும் - மூன்றுலகங்களையும், அளந்துழி-அளந்தகாலத்தில், (அவை) ஆங்கு-அவ்விடத்து,அவன்-அந்தத்திருமாலினுடைய, ஈரடிநிரம்பிற்றும் இலவே-இரண்டடிகளுக்கும் நிரம்பிக்காட்டவும் பற்றாதாயினவே, தேரின்-ஆராயின், உரைப்போர்க்கு

அல்லது-சொல்லுவார்க்குக்குறைவுள்ளனவேயன்றி,அவன்குறைவுஇன்றே-அவனதுகுறைவுகாணப்படுதலின்றே,இனையன் ஆகிய-இத்தன்மையனாகிய, தனி-ஒப்பற்ற,முதல்வானவன்-முதற்கடவுள்,கேழல் திருஉருஆகி,வராஹ ரூபமாகி, ஆழத்து அடுக்கிய-பாதாளத்தில்அடுக்கப்பட்ட, ஏழும்-ஏழுலகங்களையும், எடுத்தனன் எடுத்து எடுத்து - எடுத்தெடுத் தெடுத்து, ஊழிஊழி-ஊழிக்காலங்கள்தோறும், கீழுறக்கிளைந்தும் - கீழ்ச்செல்லக் கிண்டியும், காண்பதற்கு அரிய-காண்டற்கருமையாகிய, நின்கழலும்-உன்திருவடிகளையும், வேண்டுபு-விரும்பி, நிகிலலோகமும்-எல்லாவுலகங்களையும், நெடுமறைத்தொகுதியும்-பெரியவேதக்கூட்டத்தையும், அகிலம்-உலகத்துள்ள, சராசரம் அனைத்தும்-சராசரங்கள் எல்லாவற்றையும், உதவிய-படைத்த, பொன்னிறக்கடவுள் - பொன்னிறக்கடவுளாகிய பிரமன், அன்னம் ஆகி - அன்னவுருக்கொண்டு, காண்டிலாத-காணப்பெறாத, நின் - உனது, கதிர் - ஒளிபொருந்திய, நெடுமுடியும்-நெடியமுடியையும், (ஆகிய) ஈங்கு இவைகொண்டு - இங்குச்சொல்லிய இவற்றைக்கொண்டு, நீங்காதுவிரும்பி - பிரியாமல் இச்சித்து, சிறியபொதுவில் - சிற்றம்பலத்தின்கண், மறு இன்றி-களங்கமில்லாமல், விளங்கி - பிரகாசித்து, ஏவரும் காண - யாவருங்காணும்படி, ஆடுதி - நடனஞ்செய்கின்றனை, அது எனக்கு அதிசயம் விளைக்கும் - அது எனக்கு வியப்பையுண்டாக்காநிற்கும், மொழிந்தது - இப்பொழுது சொன்னவிஷயம், அதிசயம் விளையாது அன்றே - வியப்பைவிளைக்காததல்லவே, (அது நிற்க) எந்தை - எந்தையே, வளையாது - வணங்காது, கல்லினும்வலிது - கல்லினும் வன்மையானது, அது நல்லிதில் செல்லாது - அது நல்வழியிற்செல்லாது, தான்சிறிது ஆயினும்-தான் நுண்ணியதே யாயினும், உள் இடை நிரம்ப - உள்ளிடமெல்லாம் நிறையும்படி, வான்பொய் - மிக்க பொய்யும், அச்சம் - பயமும், மாயாஆசை - கெடாதஆசையும், மிடைந்தனகிடப்ப - நெருங்கிக்கிடத்தலாலும், இடம்பெறல் அருமையில் - இடம்பெறலருமையாதலாலும், ஐவர்கள்வர்-ஐம்புலக்கள்வர், வல்லிதின்புகுந்து-வலாத்காரமாக நுழைந்து, மண் மகன்திகிரியின் - குயவன் சக்கரத்தினும், எண்மடங்கு சுழற்ற - எண்மடங்கதிகமாய்ச் சுழற்ற, ஆடுபுகிடந்த - ஆடிக்கொண்டு கிடந்த, பீடுஇல் நெஞ்சத்து - பெருமையில்லாத மனத்தின்கண், நுழைந்தனைபுகுந்து - வந்துபுகுந்து, தழைந்தநின்சடையும் - செழித்தவுனது சடையும், செய்யவாயும் - செவந்தவாயும், மையமர்கண்டமும் - கருமையமைந்த கண்டமும்,நெற்றியில் திகழ்ந்த-நெற்றியில்விளங்காநின்ற, ஒற்றைநாட்டமும்-ஒற்றைக்கண்ணும், எடுத்தபாதமும் - தூக்கினதிருவடியும், தடுத்தசெங்கையும் - அஞ்சலியத்தமும்,புள்ளிஆடையும்-புலித்தோலாடையும், ஒள்ளிதின்விளங்க-நன்குவிளங்கும்படி, நாடகம்ஆடுதி-திருநிருத்தம்பண்ணுநின்றனை,நம்ப-நம்பனே,கூடும்-சேர்ந்த, வேதம்நான்கும்-நான்குவேதங்களும், விழுப்பெருமுனிவரும் - மிகப்பெரிய தபோதநரும், பெரிய

திற்பெரியையென்றும் - பெரிதிற்பெரியோன் என்றும், சிறியதிற்சிறியை யென்றும் - சிறிதிற்சிறியோன் என்றும், மொழிவது - கூறுவது, நின்திற ம்ஆதலின் - உன்பெருமையையேயாதலால், ஆதி - முதல்வனே, நிறை பொருள் - மெய்ம்மைநிரம்பிய, மறைகள்நான்கும் - நான்குவேதங்களையும், நின் - உன்னுடைய, அறைகழல் இரண்டொடும் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியிரண்டுடன், அறிவினில் ஆர்த்துவைத்த - தம்மறிவி னிடத்தே பிணித்துவைத்த, மறையவர் - தில்லைமூவாயிரவராகிய வேதி யர் வாழ்கின்ற, தில்லைமன்றுகிழவோனே - தில்லையம்பலத்திற்குத் தலைவ னே. எ - று.

வரை - மந்தரமலை, அரவு - வாசுகி. தடா தட எனக்குறுகி நின்றது. முதுபெருங்கடவுள்-திருமால். செஞ்சேலாகியென்றது மச்சாவதாரத்தை. ஐவர் - பஞ்சேந்திரியங்கள். மண்மகன்திகிரி - குலாலசக்ரம். அது அதி வேகமாய்ச்சுழல்வ தாதலால் அதனை மனத்துக்குவமித்தார். மனம்குலால சக்ரத்தினும் அதிவேகமாய்ச்சுழல்வதென்பது, "திரிகையிலாயிர வெல்லா ழிமண்விண்டருசிரபாத் - திரிகையிலாயிர வாநந்தநாடகி சேரிமகோத் - திரிகையிலாயிரமிக்குமைந்தா செந்திலாயொருகால்-திரிகையிலாயிரக் கோ டிசுற்றோடுந்திருத்துளமே" என்னும்மேலோர்திருவாக்கானுமினிது விளங் கும். தில்லையம்பலவாணனே, அப்பலத்திற் போலச் சிறியேனது மனத் தின்கண்ணும் வாழ்கின்றனையே, அடியேன்செய்த பெரும் புண்ணியமெ ன்னை யென்பது கருத்து.

வெண்பா.

13. கிழவருமாய்நோய்மூப்புக்கீழ்ப்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமாகண்டோ-மொழிதெரிய
வாயினாலிப்போதேமன்றினடமாடு
நாயனென்றுரைப்போகாம்.

இ - ள். (மனமே) காமத்துழவரும் - காமுகர்களாகிய யவ்வன புரு ஷர்களும், போய் - அந்த யவ்வனம் நீங்கி, கிழவரும் ஆய் - விருத்தருமாகி, நோய்மூப்பு - பிணிமூப்புகளுக்கு, கீழ்ப்பட்டு - அடங்கினவர்களாகி, ஓயும் ஆறுகண்டோம் - இறக்குமாற்றைக் கண் கூடாகக்கண்டோம், (ஆதலால்) இப்போதே - இப்பொழுதே, மொழிதெரிய - சொற்கள் விளங்கும்படி, வாயினால் - வாயைக்கொண்டு, மன்றில் நடம் ஆடும் - தில்லையம் பலத்தில் திருநிருத்தஞ்செய்கின்ற,நாயனார்என்று-நாதனென்று, நாம்உரைப்போம்- யாம் கூறுவோம். எ - று.

நோய்மூப்புக்கிழவருமாய் எனவைத்து, நோய்மூப்புக்களையடைதற் குரியராய் என்றுரைப்பினுமாம். காமத்து உழவர் - காமத்தை விருத்தி

செய்வோர். ஓயுமாறு என்பது ஓயுமா என ஈறுதொகுத்தது. மொழிதெரிய என்றது சொற்கள்கேட்போர்க்கு விளங்கும்படித் தடுமாற்றமின்றிச் சொல்லுதலை. இப்போதேயென்றது அந்த இறுதிக்காலத்தில் நாத்தடுமாற்றம் முதலியவை நேரிடுமென்றற்கு இது "நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை-மேற் சென்று செய்யப்படும்" எனவும்,

"பரணமாகியபெண்டிருஞ்சுற்றமும்பண்டுதெங்கையிற்றந்த
விரணமானவைகொண்டிடவிவனைவிட்டியம்பிடாதிவணைகு
மரணவேதனையாவராலறியலாமயங்கியைம்புலனந்தக்
கரணமியாவையுங்கலங்கிடவருந்துயர்கடவுளேயறிகிற்பான்"எனவும்,

"வந்திடுமரணத்துன்பமறித்துமுறைசெய்யப்போமோ
வுந்திமேலையும்பித்துமுணர்வொடுபொறிகலங்கி
நந்திடாவிருளேமூடிநாவுலர்ந்தலமந்தென்னே
யிந்தமாவிறப்பிற்றுன்பம்பவத்துன்பத்தெண்மடங்கே" எனவும்,

கூறிய அறிஞருரையாலினிது விளங்கும். மனமே, இளைஞரும் முதிஞராயிறந்தொழியக் கண்டோம், ஆதலால், இறுதிக்காலம் நேரிடுமுன்பே தில்லையம்பலவாணனை யாம் புகழ்வோம் என்பது கருத்து.

## கலித்துறை.

14. நாமத்தினலென்றனுத்திருத்தேனறைமாமலர்சேர்
தாமத்தினலுன்சரண்பணியேன்சார்வதென்கொடுநான்
வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தாய்
சேமத்தினலுன்றிருத்தில்லைசேர்வதோர்செந்நெறியே.

இ - ள். வாமத்திலே - இடப்பக்கத்தில், ஒருமானைத்தரித்து - ஒரு மானைத்தாங்கி, ஒரு மானைவைத்தாய் - ஒரு பெண்ணைவைத்தாய், நாமத்தினல் - உன்திருநாம உச்சாரணத்தால், என்றன் நா - என்னுவை, திருத்தேன் - திருந்தச்செய்யேன், நறை-தேனும் பரிமளமுமுள்ள, மா-அழகிய, மலர்சேர் - மலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட, தாமத்தினல் - மாலைகளைக்கொண்டு (அலங்கரித்து), உன் சரண்பணியேன் - உன்திருவடிகளை வணங்கேன், நான் - (இங்ஙனமாகிய) நான், சேமத்தினல் - என்ரக்ஷணத்தின் பொருட்டு, உன்திருத்தில்லை சேர்வது - உன் திருத்தில்லையையடைவதாகிய, ஓர் செந்நெறி - ஒரு செவ்வியவழியை, என்கொடுசார்வது-எதனைக்கொண்டடைவது. எ - று.

மான் இரண்டனுள்பின்னையது உமாதேவியை யுணர்த்திநின்றது. பிற தெய்வங்களைப் புகழ்தல் முதலியவற்றல் நாவிற்கெய்திய குற்றம்

இறைவனது திருநாமோச்சாரணத்தால் நீங்கு மென்றற்கு "நாமத்தினு லென்றனுத் திருத்தேன், என்றூர். இறைவனே, உன் திருநாமத்தையுச்ச ரியேன், மலர்மாலைகளைக் கொண்டு உன் திருவடியை யலங்கரியேன், இப் படிப்பட்ட நான் உன் திருத்தில்லையை யெவ்வாறடைவேனென்பது கரு த்து. ஆகவே இறைவனது திருப்பதியைச் சேர்தலே வீடுபேற்றுக்கேது வென்றூராயிற்று, "தில்லையெல்லைக்குறவணா மாத்திரைக்கே நலமிகுவரோ" என்றூர் பிறரும்.

### கழிநெடில்விருத்தம்.

**15.** நெறிதருகுழலையறலென்பர்கணிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகையென்பர்கணிறம்வருகலசமுலையென்பர்க
ளறிகுவதரிதிவிடையென்பர்களடியிணைகமலமலரென்பர்க
ளவயவமிணையமடமங்கையரழகியரமையுமவரொன்செய
மறிமழுவுடையகரனென்கிலர் மறலியைமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர்மலைமகண்மருவுபுயனென்கிலர்
செறிபொழினிலவுதில்லையென்கிலர் திருநடநவிலுமிறையென்கி
சிவகதியருளுமரசென்கிலர்சிலர்நரகுறுவரறிவின்றியே. [லர்

இ - ள். நெறிதருகுழலை-நெறிந்த கூந்தலை, அறல் என்பர்கள்-கரு மணல் என்பார்கள், நுதல்-நெற்றியை, நிழல் எழும்மதியம் என்பர்கள்- ஒளிமிகுகின்ற அர்த்த சந்திரனென்பார்கள், நகை - பல்லை, நிலவினும் வெளிது என்பர்கள் - சந்திரிகையினும் வெள்ளியது என்பார்கள், முலை - தனங்கள், நிறம்வருகலசம் என்பர்கள் - ஒளிபொருந்திய பொற்கலசங்கள் என்பார்கள், இ இடை - இந்த இடையை, அறிகுவது அரிது என்பர்கள் - அறிவது அருமை என்பார்கள், அடி இணை - இருபாதங்கள், கமல மலர் என்பர்கள் - தாமரைமலர்கள் என்பார்கள், அவயவம் இணைய - அவயவங் களால் இப்படிப்பட்ட, மடமங்கையர் - இளமைபொருந்திய மாதர்கள், அழகியர் - அழகையுடையவர்களே, அமையும் - போதும், அவர் சிலர் - (அவர்களை இப்படிவருணிக்கும்) அந்த ஆடவரில் சிலர், என்செய்ய - என் செய்யவோ, அறிவு இன்றி - உணர்வில்லாமல், மறிமழுவுடைய கரன் என்கிலர் - மான்மழுவுள்ளகையினன் என்ருதவரும், மறலியைமுனியும் அரன் என்கிலர் - யமனையுதைத்த அரன் என்ருதவரும், மதிபொதி சடி லதரன் என்கிலர் - பிறைபொதிந்த சடாதரன் என்ருதவரும், மலைமகள் மருவுபுயன் என்கிலர் - பார்வதிதேவிதழுவுகின்ற தோளினன் என்ருதவ ரும், செறிபொழில் நிலவு தில்லை என்கிலர் - நெருங்கிய சோலைகள் நிலை பெற்ற திருத்தில்லை என்ருதவரும், திருநடம் நவிலும் இறை என்கிலர்

(அந்தத்திருப்பதியில்) திருநடஞ்செய்கிற இறைவன் என்றுதவரும், சிவகதி அருளும் அரசு என்கிலர் - சிவபதத்தை யருள்செய்யும் வேந்தன் என்றுதவருமாகி, நரகு உறுவர் - நரகத்தையடைவார்கள். எ - று.

நிழல் எழும் என்பதற்குக் குளிர்ச்சியாய்த் தோன்றுகின்ற எனினுமாம். மதியம் எனப்பொதுப்படக் கூறினேனும் நுதலென்பதனுல் அது அர்த்த சந்திரனென்றுரைக்கப்பட்டது. நிறம்வருகலசம் மார்பிலுண்டாகிய பொற் கலசங்கள் என்றலுமொன்று. சில அறிவிலிகளாகிய மக்கள், சிவபிரானை வருணியாமல், மாதரைவருணித்து நரகத்துக்காளாகின்றார்களே, இது என்னபாவம் என்பது கருத்து.

## நேரிசையாசிரியப்பா.

16. அறிவிலொழுக்கமும்பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையுமிடும்பையீட்டமு
மினையனபலசரக்கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநகரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீனலமந்துதொடரப்
பிறப்பெனும்பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற்பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னுநெடுங்கடல்வீழ்த்து
நிறையெனுங்கூம்புமுறிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய்கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படுகாயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழாமுன்னமலங்கன்
மதியுடனணிந்தபொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்ததெய்வநாயக
தொல்லெயிலுடுத்ததில்லைகாவல
வம்பலர்தும்பையம்பலவாணநின்
னருளெனுநலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரைசேர்த்துமாசெய்யே.

இ - ள். அறிவு இல் ஒழுக்கமும் - அறிவற்றநடையும், பிறிதுபடு பொய்யும் - மாறுபடுகின்றபொய்யும், கடும்பிணித்தொகையும் - கொடிய பிணிக் கூட்டமும், இடும்பை ஈட்டமும் - துன்பத்தொகுதியும், (ஆகிய) இனையன - இத்தன்மையவாகிய, பலசரக்கு ஏற்றி - பலபொருள்களைச்

சுமத்தி, வினைஎன்னும் - வினையென்றுசொல்லப்படுகிற, தொல்மீகாமன்-பழையமாலுமி, உய்ப்ப - செலுத்த, அ நிலை - அந்தநிலையாகவே, கருஎன்னும் - கருப்பம் என்கிற, நெடுநகர் - பெரிய நகரின்கண், ஒருதுறை சேர்த்து-ஒரு துறையாகிய துக்கவெள்ளத்தில், புலன் என்னும் - ஐம்புலன்களென்கிற, கோள்மீன் - துன்பத்தைச் செய்கிற மகரங்கள், அலமந்து தொடர - சுற்றித்தொடர, பிறப்பு என்னும் - பிறவியென்கிற, பெருங்கடல் - பெரியசமுத்திரத்தில், உறப்புகுந்து - நன்றாய்முழுகி, அலைக்கும் - வருத்துகின்ற, துயர்த்திரை உவட்டில் - துக்கமாகிய அலைகளின் பெருக்கினால், பெயர்ப்பு இடம்-நிலை பெயருமிடங்கள்தோறும், அயர்த்து-விடாய்த்து, குடும்பம் என்னும்-குடும்பமென்கிற, நெடுங்கடல் வீழ்த்து - பெருங்கடலைத்தள்ளி, நிறை என்னும் - நிறைகுணமென்கிற, கூம்பு - பாய்மரம், முறிந்து-ஒடிந்து, குறையா உணர்வுஎன்னும் - குறையாத அறிவென்கிற, நெடும்பாய்கீறி - பெரியபாய்கிழிந்து, பெயரும்-நிலைபெயர்தற்குரிய, மாயப்பெயர்ப்படு - மாயமென்னும் பெயர் பொருந்திய, காயம் - சரீரமாகிய, சிறைக்கலம் - காவலோடு கூடிய மரக்கலமானது, கலங்குபு - கலங்கி, கவிழாமுன்னம் - கவிழ்தற்கு முன்பே, அலங்கல் - கொன்றைமாலையை, மதியுடன் அணிந்த - பிறையுடன் சேர்ந்து முடித்த, பொதி அவிழ்சடிலத்து - பூவரும்புகள் கட்டவிழ்கின்ற சடாபாரத்தின்கண், பை அரவு அணிந்த-படத்தையுடைய சர்ப்பத்தையு மணிந்த, தெய்வநாயக - தேவர்பிரானே, தொல் எயில் உடுத்த-பழமையாகியமதில்களாற்சூழப்பெற்ற,தில்லைகாவல-தில்லை நகர்க்கிறைவனே, வம்பு அலர் - வாசனையோடுமலர்கின்ற, தும்பை-தும்பைமலர்மாலையைத்தரித்த, அம்பலவாண-அம்பலவாணனே,நின் அருள் என்னும் - உன்னருளென்கிற, நலத்தார்பூட்டி-நல்லவடத்தைத்தொடுத்து, திருவடி - உன்திருவடியென்கிற, நெடுங்கரை-பெருங்கரையை, சேர்த்தும் ஆறு - சேர்க்கும் வகையை, செய்-பண்ணுவாயாக. எ - று.

வினை - நல்வினைதீவினை "பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தார்-இறைவனடிசேராதார்" எனத் தெய்வப்புலவர் கூறினமையால், இவரும் பிறப்பெனும் பெருங்கடல் என்றார். உவட்டு - பெருக்கு. இறைவனே, இந்தச் சரீரம் விழுமுன்னமே, நான் உன் திருவருளையடையும்படிப் பண்ணவேண்டும் என்பது கருத்து.

வெண்பா.

**17.** செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
றையல்வளைகொடுத்தல்சாலுமே-யையன்றேர்
சேயேவருமளவிற்சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற்சங்கு.

இ - ள். செய்திருமேனி - செவந்ததிருமேனியையுடைய, சிற்றம் பலவருக்கு - திருச்சிற்றம்பலமுடையார்க்கு, என் தையல்வளைகொடுத்தல் சாலுமே - என்மகள் தன்கைவளையலைக் கொடுக்கை அமையுமோ, எ - று. தாயே-அன்னையே, நமதுகையில் சங்கு-நமதுகையிலுள்ளசங்கவளையல்கள், ஐயன்தேர் - இறைவனது இரதம், சேயேவரும் அளவில் - தூரத்தில் வருமளவிற்றானே, சிந்தாதமாத்திரமே-கழன்று சிந்தாதமாத்திரமோ. எ-று

இது தேர்வரவுகூறல். இதில் முதன்முடிபு தாய்க்கூற்று, இரண்டா முடிபுதோழிக்கூற்று: முதல்முடிபில் தாய்தோழியைநோக்கி, திருச்சிற்றம் பலமுடையார் பொருட்டு என் பெண்ணுணவள் தன்கையிற் சங்கவளை யலைபகுத்தல் அவளது நிறைபுடைமைக்குத்தகுமோ வென்ன, இரண்டா முடிபில் தோழிதாயை நோக்கி இறைவரது தேர் நெடுந்தூரத்தில் வரும் பொழுதே நமது கையிற் சங்கவளையல் மாத்திரம் சிந்தாதிருந்ததோ வென் றாள் என்பது. திருக்கோவையாரில் புணர்ந்துடன் வருவோரைப் பொருந் தி விறைவற்றுறையாகிய "மீண்டாரெனவுவந்தேன்" என்னுஞ் செய்யுளுக் கு நக்சினார்க்கினியர் உரைத்தவுரையானும் இது இனிதுவிளங்கும். தேர்வ ரவுகேட்டலும் வளைகழலல் முதலாயினவுளவாமென்பது, திருக்கோவை யாரில், இளையனெதிர் கோடற்றுறையாகிய "யாழின்மொழிமங்கை" என் னுஞ் செய்யுளிற்காண்க.

கலித்துறை.

18. சங்கிடத்தானிடத்தான்றனதாகச்சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றாயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேலுன்பசப்பொழியே.

இ - ள். சங்கு இடத்தான் - சங்கையிடப்பக்கத்திலுடையவனாகிய திருமாலை, இடத்தான்-இடதுபக்கத்திலுடையவனும்,ஒருத்தி அங்கு தனது ஆகச்சமைந்து - ஒருபெண் அவ்விடத்துத் தனதாட்சியாகக் கொண்டு, இடத்து ஆள் - இடப்பாகத்தை யாளுதற்கிடந்தந்த, தில்லையம்பலக்கூத் தன்கு - தில்லையம்பலத்தின்கண் திருநிருத்தஞ்செய்வோனுமாகிய சிவபெ ருமானது, அவிர் - ஒளிசெய்கின்ற, சடைமேல் - சடைமீதணிந்திருக்கிற, கொங்கு இடம் - வாசனைக்கிருப்பிடமான, கொன்றைமலர்தார் என்றாய் - கொன்றைமலர் மாலையென்றாய், எங்கை - எங்கையே, நீயும் ஒருபங்கிடத் தான்வல்லையேல் - நீயும் ஒருபாகம் பகிர்ந்து கொள்ளவல்லையாயின், (அவ் வாறுசெய்), இல்லையேல்-இல்லையாயின், உன்பசப்பு ஒழி - உன்பசலை நிறத் தையொழித்துவிடு. எ - று.

இது பரத்தையைக் கண்டதலைமகள் கூற்று. பரத்தையைக்கண்ட தலைமகன், அவளைநோக்கி, எங்கையே, தில்லையம்பலக் கூத்தனது இடப்பா

கத்திலொருத்தி யமர்ந்திருக்கின்றாள், நீயும் வலப்பாகத்தைப் பங்கிட்டுக் கொள்ளவல்லையாயின் அப்படிசெய், இல்லையாயின் உன்பசப்புநீங்கு என்பது· தலைமகட்குப்பின் வந்தவளாதலால் பரத்தையை எங்கையென்றாள். எங்கை என்தங்கையென் பதன்மரூஉ. தில்லையம்பலக் கூத்தற்கு ஒருத்தியிடத்தாள், நீவலத்தாளாகவல்லையாயின் ஆதி என்னலுமாம். பரத்தையை எங்கையெனத் தலைமகள் விளித்துக்கூறல், "திருக்கோவையாரில்" "கலவியிடத் தூடற்றுறையாகிய" "சிலைமலிவாணுதலெங்கை" என்னுஞ் செய்யுளிற்காண்க.

## கழிநெடில்விருத்தம்.

**19.** ஒழிந்ததெங்களுறவென்கொலோவெரியிலொன்னலார்கள்புர
முன்னொர்நாள்,விழுந்தெரிந்துதுகளாகவென்றிசெய்தவில்லிதி
ல்லைநகர்போலியார், சுழிந்தவுந்தியிலழுந்திமேகலைதொடக்கநி
ன்றவர்நடக்கநொந், தழிந்தசிந்தையினும்வந்ததாகிலுமோர்சிந்
தையாயொழிவதல்லவே.

இ - ள். எங்கள் உறவு ஒழிந்தது என்கொல் - எங்கள் நட்பு நீங்கிப் போயிற்று இது என்னோ, முன் ஒருநாள் - முற்காலத்தொருநாளில், ஒன்னலார்கள்புரம் - பகைவருடைய முப்புரங்கள், எரியில் விழுந்து - நெருப்பில் வீழ்ந்து, எரிந்து - பற்றி, துகள்ஆக - நீறும்படி, வென்றிசெய்த - (அழித்து) வெற்றிபெற்ற, வில்லி - வில்லையுடைய சிவபெருமானது, தில்லைநகர்போலியார் - தில்லைநகரையொத்த இம்மாதரது, சுழிந்த உந்தியில் - சுழித்தநாபியினிடத்தில், அழுந்தி - முழுகி, மேகலை தொடக்கநின்று-(அவரணிந்த) மேகலையானது பிணிக்கநின்று, அவர்நடக்கநொந்து - அவர்நடத்தலைச் செய்யவருந்தி, அழிந்தசிந்தை - அழிந்துபோனமனம், இன்னும் வந்ததாகிலும் - இன்னமும் வந்ததாயினும், ஒருசிந்தையாய் ஒழிவது அல்லவே - ஒருமன மாயொழிவதன்றே. எ - று.

இது, தலைமகன் தலைமகளது அவயங்கண்டழுங்கிக் கூறல். தில்லைநகர் போலியாருடைய அவயவத்தழகிலாழ்ந்த என் மனம் மீண்டுவருமாயினும் அங்குமிங்குமாய் இருமனமாயியங்குதலன்றி ஒருமனமாயியங்காதென்பதாம். இருமன மெனவொன்றுண்டோவெனின், "இருமனப்பெண்டிருங்கள்ளுங்கவறும், திருநீக்கப்பட்டார் தொடர்பு" என்பதிற்காண்க.

## நேரிசையாசிரியப்பா.

**20.** அல்லல்வாழ்க்கைவல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்துகார்வருமென்று
வித்துவிதைத்தும்விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு

முளைமுதிர்பருவத்துப்பதியெனவழங்கியும்
மருளாவையவரம்பிடைநடந்தும்
இருளுறுபவ்வத்தெந்திரங்கடாஅய்த்
துன்றுதிணைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியும்
ஆற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டும்
தாளுழந்தோடியும்வாளுழந்துண்டும்
அறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியும்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியும்
குடும்பப்பாசநெடுந்தொடர்பூட்டி
யையவணைந்திடத்தீர்ப்பநொய்தின்
பிறந்தாங்கிறந்துமிறந்தாங்குபிறந்தும்
கணத்திடைத்தோன்றிக்கணத்திடைக்கரக்கும்
கொப்புட்செய்கையொப்பின்மின்போல்
உலப்பில்யோனிக்கலக்கத்துமயங்கியும்
நெய்யெரிவளர்த்துப்பெய்முகில்பெயறரும்
தெய்வவேதியர்தில்லைமூதூர்
ஆடகப்பொதுவினாடகநவிற்றும்
கடவுட்கண்ணுதனடமுயன்றெடுத்த
பாதப்போதும்பாய்புலிப்பட்டும்
மீதியாத்தசைத்தவெள்ளெயிற்றரவும்
சேயுயரகலத்தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்குமொருபேராரமும்
அருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரும்
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமும்
கங்கைவழங்குந்திங்கள்வேணியும்
கண்ணிடைப்பொறித்துமனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துணைக்கவுறுதவஞ்செய்தனன்
நான்முகன்பதத்தின்மேனிகழ்பதந்தான்
உறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோர்பேறுபெற்றேற்கே.

இ - ள். அல்லல்வாழ்க்கை - துன்பவாழ்வினை, வல்லிதின்செலுத்தற்கு - வலாற்காரமாய் நடத்துதற்பொருட்டு, கைத்தேர் உழந்து - அலங்கரித்த ஏரினால் நிலத்தையுழுது, கார்வரும்என்று - கார்காலம்வருமென்

று, வித்துவிதைத்தும் - விதையைவிதைத்தும், விண்பார்த்து இருந்தும் - மேகத்தைநோக்கியிருந்தும், கிளையுடன்தவிர-உறவினரைக்கொண்டு செல் லுதலேயன்றி, பொருளுடன்கொண்டு-பொருளையும் உடன்கொண்டுசென் று,முளைமுதிர்பருவத்து-முளைமுதிராநின்ற பருவத்தில்,பதியெனவழங்கியும்-நடுகவென்றுசொல்லியும், மருளா - மயங்கி, வையவரம்பிடை நடந்தும் - உலகவரம்பின்கண் அடங்கி நடந்தும், இருள் உறுபெளவத்து-இருள்மிக்க கடலில், எந்திரம் கடாய்-கப்பல்செலுத்தி, துன்றுதிரைப்பரப்பில்-நெருங் கிய அலைகளையுடைய கடற்பரப்பில், குன்றுபார்த்து இயங்கியும் - மலையை நோக்கிச்சஞ்சரித்தும், ஆற்றல்வேந்தன்கு-வலியவேந்தனிடத்து,சோற்றுக் கடன்பூண்டும் - சோற்றுக்கடன்பூண்டு சேவகஞ்செய்தும், தாளுழந்தோடி யும் - அடிவருந்த ஓடியும், வாளுழந்துஉண்டும் - வாட்போர்செய்து அதனு லுண்டும், அறியாவொருவனை - ஒன்றுமறியாத ஒருவனை, செறிவந்து - நெருங்கிவந்து, தெருட்டியும்-வற்புறுத்திபபேசியும், சொல்பலபுனைந்தும் - பலசொற்களால் அலங்கரித்துப்பாடியும், கற்றனகழறியும் - தாங்கற்றவற் றைச்சொல்லியும், குடும்பப்பாசம் - குடும்பத்தின்மீதுள்ள ஆசையாகிய, நெடுந்தொடர்பூட்டி - நெடியவிலங்கைப்பூட்டி, ஐவர்-ஐம்பொறிக்கள்வர், ஐந்து இடத்துஈர்ப்ப-ஐம்புலன்களில் இழுத்துச்செல்ல, நொய்தின்-அற்ப மாக, பிறந்தாங்கு இறந்தும் - பிறந்ததுபோல இறந்தும், இறந்தாங்குபிறந் தும் - இறந்ததுபோலப்பிறந்தும், கணத்திடைத்தோன்றி - க்ஷணகாலத்தி ல்காணப்பட்டு, கணத்திடைகரக்கும் - க்ஷணகாலத்தில் மறைகின்ற, கொப்புள்செய்கை(போல்) - நீர்க்குமிழியின் செய்கைபோலவும், ஒப்புஇல் மின்போல் - (விரைந்தழிதலில் தனக்கு) நிகரில்லாத மின்னலைப்போல வும், உலப்பு இல்யோனி - அளவற்ற யோனிபேதங்களின், கலக்கத்துமய ங்கியும் - துன்பத்தினுல்மயங்கியும், நெய்எரிவளர்த்து - யாகாக்கினியை வளர்த்து, பெய்முகில் - நீரைப்பொழிகின்ற மேகத்தை, பெயல்தரும்-பெ ய்யச்செய்கின்ற, தெய்வம் - தைவிகமுள்ள, வேதியர் - மறையோர்வாழ் கின்ற, தில்லைமூதூர் - தில்லையாகிய பழையநகரின்கண், ஆடகப்பொது வில் - பொற்சபையில், நாடகம் நவிற்றும் - நடனம்பண்ணுகிற, கண்ணு தற்கடவுள் - நெற்றிக்கண்ணையுடைய கடவுள், நடம்முயன்று எடுத்த - நடநம்பண்ணக்கருதியெடுத்த, பாதப்போதும் - திருவடித்தாமரைமலரை யும், பாய்புலிபட்டும் - பாய்கின்ற புலித்தோலாகிய பட்டாடையை யும், மீது - அதன்மீது, யாத்து அசைத்த - கட்டியசைத்த, வெள்எயிற்று அரவும் - வெண்பல்லையுடைய பாம்புகளையும், சேய்உயர் அகலத்து-மிகவும் உயர்ந்தகன்ற, ஆயிரங்குடுமி - ஆயிரமுச்சிகளிலும், மணிகிடந்து இமைக் கும் - மாணிக்கங்கள் கிடந்து ஒளிசெய்கின்ற, ஒருபேர்ஆரமும் - ஒரு பெரியபதக்கத்தையும், அருள்பொதிந்து அலர்ந்த - அருள்தங்கிவிரிந்த, திருவாய்மலரும் - திருவாய்மலரையும், நெற்றியில்திகழ்ந்த - நெற்றியில்

விளங்காநின்ற, ஒற்றைநாட்டமும் - ஒற்றைக்கண்ணையும், கங்கைவழங்கும் - கங்கைதங்கிய, திங்கள்வேணியும் - சந்திரசேகரத்தையும், கண்ணிடைப்பொறித்து - கண்ணிற்பதித்து, மனத்திடைஅழுத்தி - மனத்திற்பிரதிட்டைசெய்து, ஆங்கு - அவ்வாறே, உள்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, உரைக்க - துதிசெய்ய, உறுதவம் செய்தனன் - மிக்க தவத்தைச்செய்தேன், பெறுதற்கரியது - அடைதற்கரிதாகிய, ஓர் - ஒப்பற்ற,பேறுபெற்றேன்கு- பெரும்பேற்றையடைந்த எனக்கு, நான்முகன்பதத்தின் - பிரமன்பதத்தினும், மேல்நிகழ்பதந்தான் - மேலாகிய பதமாயினும், உறுதற்கு அரியதும் உண்டோ - அடைதற்கரிதாயுமிருக்குமோ. எ - று.

கைத்த ஏர்கைத்தேர் எனத்தொகுத்தலாயிற்று. கடலோடிகள் மலையை அடையாளமாகக்கொண்டு துறைகாணல் வழக்காதலால், துன்றுதிரைப்பரப்பிற் குன்றுபார்த்தியங்கியும் என்றார். ஐவர் - பஞ்சேந்திரியங்கள். அவை, மெய், வாய், கண், மூக்கு, செவியென்பன. ஐம்புலன்கள்- ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசையென்பன. அக்கிநிகாரியமுதலிய புண்ணியங்கள் செய்யப்படும் நிலத்தில் காலமாரி சாலப்பெய்யுமென்பதனால்; "நெய்யெரிவளர்த்துப் பெய்முகில் பெயரும் தெய்வவேதியர்" தில்லையென்றார், கண்ணிடைப்பொறித்து என்றதனால் காயமும், மனத்திடையழுத்தியாங்குண்மகிழ்ந்து என்றதனால் மனமும், உரைக்க என்றதனால் வாக்கும் ஆகிய முக்கரணங்களுங் கொள்ளக்கிடந்தன. நான்முகன் பதத்தின்மேனிகழ்பதம் என்றது, தவலறுநிலைத்தாஞ் சிவபெரும்பதத்தை. இவ்வுலகில் துன்பவாழ்வின்பொருட்டுத் திரைகடலோடல் முதலிய பற்பல தொழில்களைச் செய்து இறந்தும் பிறந்து முழன்றேனாயினும், இப்பிறப்பின்கண்தில்லைப்பொன்னம்பலத்தானை முக்கரணங்களானும் வழிபடப்பெற்றேன், இந்தப்பெரும்பேறு பெற்ற எனக்குச் சிவபதம் பெறுதலருமையாமோ என்பது கருத்து.

### வெண்பா.

21. பெற்றோர்பிடிக்கப்பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித்தொழாநிற்கு-மொற்றைக்கைம்
மாமறுகச்சீறியசிற்றம்பலத்தான்மான்றேர்போம்
கோமறுகிற்பேதைக்குழாம்.

இ - ள். ஒற்றை கை மா-ஒரு துதிக்கையினையுடைய யானையானது, மறுக - மயங்கும்படி, சீறிய - அதனைக்கோபித்த, சிற்றம்பலத்தான்-திருச்சிற்றம்பலவனது, மான்தேர் - குதிரைபூண்ட தேரானது, போம் - போகின்ற, கோமறுகில் - ராஜவீதியில், பேதைக்குழாம் - பேதைப்பருவப்பெண்களின்கூட்டம், பெற்றோர்பிடிக்க - ஈன்றதாயர்பற்றிப்பிடிக்க, பிழை

த்து - அவர்களுடைய கையினின்றும் தப்பி, செவிலியர்கள் - செவிலித் தாயர், சுற்றோட-சூழ்ந்தோட, ஓடி - விரைந்துசென்று, தொழாநிற்கும் - (அந்தச் சிற்றம்பலவனை) வணங்காநிற்கும். எ - று.

இறைவரது திருத்தேர்காணும் விருப்பினராய் ஓடும் பேதையின் கூட்டம், ஈன்றோர்தொடர்ந்துபற்றவும் நில்லாது அவர்கையைத் தப்புவி த்துக்கொண்டோடித் தொழாநிற்கும் இஃதோர் வேட்கையிருந்தவாறென் னையெனக்கண்டோர் வியந்து கூறுவது, பேதையராதலால் வியத்தற் கேதுவாயிற்று. பேதை - ஏழுவயதுப்பெண். இது "வாரிமணிவெய்யோ ன்மதி பாரதம் வள்ளல், சேரியலறம் வளர்க்குஞ் செய்கைதான், நேரிழாய், பேதைமுதலாகப் பேரிளம் பெண்ணீறாக, வீதெழுவர்தம் பருவமெண்" என்பதனுலினிது விளங்கும். இது அறியாப்பருவமென்பதனை, "பேதை ப்பருவம் பின்சென்றது" என்னுந் திருக்கோவையார் செய்யுளானும் அத ற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையானுங் காண்க.

கலித்துறை.

22. பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான்
கோதையந்தாமத்தன்கொன்றைகொடானின்றுகொல்லவெ
யூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. [ண்ணி

இ - ள். பிரமன் தனக்குத்தாதை - பிரமனுக்குத் தந்தையாகிய திரு மால், தன் தாதையென்று - தன்தந்தையென்று, ஏத்தும் - புகழ்கின்ற, பிரான் - பெருமான், தண் - குளிர்ச்சிபொருந்திய, புலிசைப்பிரான் - தில் லைப்பெருமான், கோதை - உமாதேவிக்கு, அம் - அழகிய, தாமத்தன் - (இடம்பெற்றுவாழ்தற்கு) இடமாயிருப்பவன், (அவ்விறைவன்) கொன் றைகொடான் - தானணிந்த கொன்றைப்பூமாலையைத் தருகின்றிலன், இன்று - இப்பொழுது, ஊதையும்காரும் - வாடைக்காற்றும் மேகமும், கொல்லஎண்ணி - கொல்லநினைத்து, துளியொடும்கூடி உலாவிய - நீர்த்து ளிகளோடு கூடி உலாவா நின்றன, (ஆகையால்) இனி-இப்படியானபிறகு, பேதை - பேதைப்பருவத்தையுடைய இப்பெண், எங்கே தேறி உய்வாள்- எப்படித்தேறிப் பிழைக்கப்போகிறாள். எ - று.

புலிசை புலியூர் என்பதன் மரூஉ. தன்கொன்றைக் கோதையந்தாம மென இருபெயரொட்டாகக் கோடலுமொன்று. தண்கொன்றை என்ப தூஉம் பாடம். இறைவன் தன்கொன்றைமாலையைக் கொடாமையே யமைவதாக, அதன் மேலும் ஊதைமுதலியவை இவளைக்கொல்ல நினைத் துழலாநின்றன,இது என்னபேதைமை,என்பேதையினும் இவைபேதைமை யுடையனவென்றாளாயிற்று. இது நற்றாய்கூற்று. துறைகூதிர்ப்பருவங் கண்டிரங்கல்.

## கழிநெடில்விருத்தம்.

**23.** உலவுசலதிவாழ்விட மமரர்தொழவுணவென
நுகருமொருவரூழியி னிறுதியொருவராழிய
புலவுகமழ்கரோடிகை யுடையபுனிதர்பூசுரர்
புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள் கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடை நெடியவிழியினாரிதழ்
இலவிலழகியாரிடைகொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரெனதிதயமுழுதுமாள்வரே.

இ - ள். உலவுசலதிவாழ்விடம் - அசையாநின்ற கடலிற்றங்கிய நஞ்சை, அமரர்தொழ - தேவர்கள் (அஞ்சி) வணங்க, உணவென நுகரும் ஒருவர் - அதனை யுணவாகக்கொண்டு பருகின ஒப்பற்றவரும், ஊழியின் இறுதி ஒருவர் - யுகக்கடையினும் அழியாதிருக்கு மொருவரும், ஆழியபுல வுகமழ் - ஆழமுள்ள முடைநாற்றம் வீசுகின்ற, கரோடிகையுடைய - தலை மாலைகளையுடைய, புனிதர் - பரிசுத்தரும் ஆகிய சிவபெருமானது, பூசுரர்- தில்லைமூவாயிரவர் வாழ்கின்ற, புலிசை - புரியூரின்கண், அலர்செய் - மலர் தலைச்செய்கின்ற, போது-பேரரும்புகளால், அணி - அலங்கரிக்கப்பட்டிரு க்கிற, பொழிலின் நிழலின் வாழ்வது - சோலையின்நிழலில் வாழ்வதாகிய, ஓர்கலவமயில் அனார் - ஒருகலாபத்தையுடைய மஞ்ஞையையொத்தவரும், சுருள்கரிய குழலினார் - சுருண்ட கருமையாகிய கூந்தலையுடையவரும், குயில்கருதும் மொழியினார் - குயில்மொழியேயென யாவரும் நினைக்கத் தக்க மொழியையுடையவரும், இதழ் இலவில் அழகியார் - அதரம்இலவம் பூவினும் அழகியதாகப் பெற்றவரும், இடை கொடியின் வடிவினார்-இடை பூங்கொடியினுருவமாகப் பெற்றவரும், வடிவு எழுதும் அருமையார்-உருவ மெழுதுதற் கருமையாகப்பெற்றவரும் ஆகிய இம்மாதர், எனது இதயம்மு ழுதும் ஆள்வர் - என்னிருதயமுழுமையும் ஆளாநிற்பர். எ - று.

உலவு சாதியடை. கரோடிகை - பிரமன்முதலியோர் தலைமாலை. சிரமாலையுடைமையாகிய ஏற்றம் விளக்க ஆழியபுலவு கமழ் கரோடி கை யென்றாரேனும், அப்புலவுகமழ்கரோடிகையால் இறைவற்கு அசுத்த மின்றென்பதற்கு, அதை யடுத்துப் புனிதர் என்றார். புலியூர்ப்பொழிலினி ழலின் வாழ்பவராகிய இம்மாதர் என்னிதய முழுதும் கவர்ந்துகொண்டா ரென்பது கருத்து. இது தலைமகன் தலைமகளது அவயவமியங்கக்கண்டழு ங்கிக் கூறல்.

## இணைக்குறளாசிரியப்பா.

24\. ஆளெனப்புகுதிநின்வந்தடைந்திலமத்தநின்
றாளிணைவறலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவதுன்
ஐந்தெழுத்தவையெஞ்சிந்தையிற்கிடத்தி
நனவேபோலநாடொறும்பழகிக்
கனவிலுநவிற்றுங்காதலேம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப்புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தைவரைந்துநிதியென
வருத்திசெய்திடுவதுருத்திரசாதனம்
காலைமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
னாலயம்வலம்வருதற்கேசால்பினின்
கைகொடுகுயிற்றுவதையநின்னது
கோயிற்பல்பணிகுறித்தேயோயா
தருகிநின்னினைந்தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ்வுலகினுங்காண்பன
எல்லாம்
நீயேயாகிநின்றதோர்நிலையே
நாயேன்
தலைகொடுசேர்வதுன்சரண்வழியல்லால்
அலைகடல்பிறழினுமடாதேயதனால்
பொய்த்தவவேடர்கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின்வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமைவயின்
மானிடமாக்களைவலியப்புகுத்தும்
மாறுவிரதத்தகப்படுத்தாழ்த்து
வளைவுணர்வெனக்குவருமோவுளர்தரும்
நுரையுந்திரையுநொப்புறுகொட்பும்
வரையில்சீகரவாரியுங்குரைகடல்
பெருத்துஞ்சிறுத்தும்பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகியிருங்கடலடங்கும்

தன்மைபோலச்சராசரமனைத்தும்
நின்னிடைத்தோன்றிநின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய்மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர்நடுவுபுக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதூர்
அம்பலத்தாடுமும்பர்நாயகனே.

இ - ள். அத்த - ஐயனே, ஆள் என - உன்னடிமையென்று, புதி தின் - நூதநமாக, வந்து அடைந்திலம் - வந்தடைந்தோமில்லோம், நின்தாளின் ஏவல் - உன்திருவடியினாலிட்ட ஏவல்களை, தலையின் இயற்றி - சிரசினாற்செய்து, வழிவழிவந்த - வமிசபரம்பரையாய்வந்த, மரபினம் - தொண்டர் மரபையுடையோம், மொழிவது - யாம் உச்சரிப்பது, உன் ஐந்து எழுத்து - உன்பஞ்சாக்ஷரமே, அவை - அவ்வைந்தெழுத்துக்களை, எம்சிந்தையில்கிடத்தி - எம்மனத்திலிருத்தி, நனவேபோல - சாக்கிராவஸ்த்தையேபோல, நாள்தொறும்பழகி - தினந்தோறும் அப்பியாசித்து, கனவிலும் - சொப்பநத்திலும், நவிற்றும் - உச்சரித்தற்கு, காதலேம்-ஆசையுடையேம், வினைகெட - வினைகள் நசிக்கும்படி, கேட்பது - சிரவணஞ்செய்வது, நின் பெருங்கீர்த்தி - உனதுபெரும்புகழே, மீட்பது - (விஷயங்களிற்செல்லாது) தடுத்து மீட்டுக்கொள்வது, நின்நெறி அல்லா - உனது வேதமார்க்கமல்லாத, புல்நெறிபடர்ந்த - இழிவாகிய தீயவழியிற்சென்ற, மதி இல் - அறிவில்லாத, நெஞ்சத்தை - மனத்தையே, நிதியெனவாங்கு - செல்வமெனக்கொண்டு, அருத்திசெய்வது - விரும்புவது, உருத்திரசாதனம் - ருத்திராக்ஷத்தையே, காலையும் மாலையும் - காலையினும் மாலையினும், கால்பெயர்த்திடுவது - அடிபெயர்த்திடுவது, உன் ஆலயம் வலம்வருவதற்கே - உன் ஆலயத்தைப் பிரதக்ஷிணம்பண்ணுவதற்கே, சால்பினின்-பெருமையோடு, கைகொடு குயிற்றுவது - கைகளைக்கொண்டுசெய்வது, ஐய - ஐயனே, நின்னது - உன்னுடைய, கோயில்பல்பணிகுறித்தே - கோயிலின் பலதிருப்பணிகளைக்குறித்தே, ஓயாது உருகி - இடையறாதுருகி, நின்னை நினைந்து - உன்னை நினைந்து, அருவிசோர-கண்ணீரருவிசிந்த, எவ்வுலகினும்-எவ்வுலகத்தினும், கண்ணின்காண்பன எல்லாம் - கண்ணாற்காண்பனயாவும், நீயே ஆகி நின்றது ஓர்நிலையே - நீயாகியேநின்ற ஒருநிலையையே - நாயேன் தலைகொடுசார்வது உன்சரணவழி - நாயினேன் தலையினாலடையப்படுவது உன்திருவடியையடையு நெறியையே, அல்லால் - இவைகளேயல்லாமல், அலைகடல்பிறழினும் - அலையாநின்றகடல் வரம்பழிந்தாலும், அடாதே - (வேறானவழியிற்செல்லத்) தகாதே, அதனால், - ஆதலால்,

பொய்த்தவவேடர்-பொய்யாகிய தவவேடம்பூண்டோர், கைத்துஅகப்படுத்தற்கு - பொன்னையீட்டுதற்பொருட்டு, வஞ்சச்சொல்லின் - கபடவார்த்தைகளாகிய, வார்வலைபோக்கி - பெரியவலையைவீசி, சமயப்படுகுழிசமைத்து - சமயமாகிய படுபள்ளங்கள் உண்டாக்கி, ஆங்கு-அவற்றில், அமைவயின் - அமைதற்குரிய இடத்தில், மானிடமாக்களை - மானிடரை, வலியப்புகுத்து-வலாற்காரமாகப் பிரவேசிக்கப்பண்ணி, மாணு - பெருமையற்ற, விரதத்து - விரதங்களில், அகப்படுத்து ஆழ்த்து - சிக்குவித்து அமிழ்த்தி, வளைவுணர்வு எனக்குவருமோ - அவர்களை வளைத்துக்கொள்ளும்படியான கபடமதி எனக்குண்டாகுமோ, உளர்தரு-சிந்துகின்ற, நுரையும் திரையும்-நுரையும்அலைகளும், நொப்பு உறுகொட்பும் - தடைப்படுகின்ற சுழிகளும், வரை இல் - அளவில்லாத, சீகரவாரியும் - திவலைகளையுடைய பெருக்கும் உள்ள, குரைகடல் - ஒலிக்கின்றகடலானது, பெருத்தும் சிறுத்தும் - பெரிதாகியும் சிறிதாகியும், தோன்றிபிறங்குவ - உண்டாகிவிளங்குவன, எண் இல ஆகி - அளவற்றனவாகியும், இருகடல் - பெரியகடலினிடத்து, அடங்கும் தன்மைபோல - ஒடுங்குந்தன்மைபோல, சராசரம் அனைத்தும் - இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் என்னும் எல்லாப்பொருள்களும், நின் இடைதோன்றி - உன்னிடத்துண்டாகி, நின் இடை அடங்கும் - உன்னிடத்தே யொடுங்கும், நீ ஒன்றினும் தோன்றாய் - நீ ஒன்றினுமுண்டாகாய், ஒன்றினும் அடங்காய் - ஒன்றினுமொடுங்காய், வானோர்க்கு அரியாய் - தேவர்களுக்கு அருமையானவனே, மறைகளுக்கு எட்டாய் - வேதங்களுக்கெட்டாதவனே, நான்மறையாளர் நடுவு புக்கு அடங்கி - நான்குவேதங்களில் பிரசித்தரானதில்லை மூவாயிரவர்க்கு நடுவே பிரவேசித்தொடுங்கி, தில்லைமூதூர் - தில்லைப்பழம்பதியில், செம்பொன் அம்பலத்து - கனகசபையில், ஆடும்-நிருத்தம்பண்ணுகிற, உம்பர்நாயகனே-தேவர்பிரானே. எ-று.

அலை சாதியடை. நான்மறையாளர் நடுவு புக்கு அடங்கி என்பதற்கு, தில்லைமூவாயிரவருள் ஒருவராயிருந்து எனவும், அவரதுஇதயத்தில் நுழைந்தடங்கிஎனவும் பொருளுரைத்தலுங்கூடும். செம்பொற் றில்லையம்பலக்கூத்தா, நுரைமுதலியன கடலிற்றோன்றி அதன்கண்ணே யடங்குமாறுபோல, எல்லாவுயிர்களும் உன்னிடத்துத்தோன்றி உன்னிடத்தேயடங்குவன, நீயோ ஒன்றிற்றோன்றுவாயுமல்லை அடங்குவாயுமல்லை, ஆதலால், உனக்கு யாம் வழிவழிவந்த மரபுடையடியேம், எம்மைக்காப்பதுன் கடன்மையென்பது கருத்து.

வெண்பா.

25. நாயனையவென்னைப்பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனுயருளுந்தம்பிரான்-றூயவிரை
மென்றுழாய்மாலொடயன்றேடவியன்றில்லை
மன்றுளேயாடுமணி.

இ - ள். தூய - பரிசுத்தமாகிய, விரை-மணமுள்ள, மெல் - மெல்லிய, துழாய்-துளசிமாலையை யணிந்த, மாலொடு - திருமாலுடன், அயன், பிரமனும், தேட - காணாது தேடாநிற்க, வியன் - பெருமைபொருந்திய- தில்லைமன்றுள்ளே - தில்லையம்பலத்தின்கண்ணே, ஆடும் - (அன்பர்கட்கெளிதாய்) திருநிருத்தம்பண்ணுகின்ற, மணி - மாணிக்கம்போல்பவனே, நாய் அனைய என்னை-நாய்போன்ற என்னை, பொருள்படுத்தி-பொருட்டன்னைப்படுத்தி, நன்கு அளித்து-செவ்வனே காத்து, தாய் அனையன் ஆய்-தாய்போன்றவனாகி, அருளும்-அருளாநின்ற, தம்பிரான்-மஹோபகாரகன் ஆவன்.

திருமால் பிரமன் என்பவர்கட்கரியனாயினும் அன்பர்கட்கெளியனாய்த் தில்லையம்பலத்தின்கண்ணே திரு நிருத்தஞ்செய்பவனாகிய சிவபெருமானே என்னை யொருபொருளாக்கி யாண்டருளு மஹோபகாரகன் என்பது கருத்து. "பொருளாவெனைப்புகுந்தாண்டு புரந்தரன் மாலயன்பா, லிருளாயிருக்குமொளிநின்ற சிற்றம்பலம்" என்றார் திருவாதவூரடிகளும்.

கலித்துறை.

26. மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லாம்
அணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே.

இ - ள். புலன்வழிபோம் - ஐம்புலவாயில்லாகச் செல்கின்ற, நெஞ்சமே - மனமே, இனி - இனி, பையப்பைய-மெல்லமெல்ல, பிணி ஆய் - பல்பிணிகளையுடையையாய், எல்லோரும் - யாவரும், பிணம் என்ன-பிணமென்று சொல்லும்படி, சாதி - இறக்கப்போகிறாய், (ஆதலால் அவ்விறப்பு நேரிடுவதற்குமுன்பே), மணிவாய் முகிழ்ப்ப-அழகிய வாயானது குவியவும், திருமுகம்வேர்ப்ப - திருமுகமானது வெயர்வரும் பவும், அ மன்றுக்கெல்லாம் - அந்தத்தில்லையம் பலத்துக் கெல்லாம், அணி ஆய் - அழகைச்செய்பவனாய், அருள் - கிருபையால், நடம் ஆடும் பிரானை - நடநம்பண்ணும் பெருமானை, அடைந்து - குறுகி, உருகி - மனங்கரைந்து, பணியாய் - தொழக்கடவை. எ - று.

அருள் நடமாடுதலாவது-யாவரும் எளிதிற்கண்டுய்யும்படி தன்பெருங்கருணையால் நடநம் பண்ணுதல். மனமே, இறுதிக்காலம் நேரிடுவதற்கு முன்பே தில்லையம்பலக் கூத்தனைத்தொழக்கடவாயென்பது கருத்து.

### கழிநெடில்விருத்தம்.

**27.** என்னுமினிமட வரலாய்செய்குவ தினமாய்வண்டுகெண் மலர்கிண்டித், தென்னுவெனமுரல் பொழில்சூழ்தில்லையு ளரனார்திருமுடி யணிதாமம், தன்னாலல்லது தீராதென்னிடர்தகையாதுயிர்கருமுகிலேறி, மின்னுகின்றது துளிவாடையும்வர வீசாகின்றது பேசாயே.

இ - ள். மடவரலாய்-பெண்ணே, வண்டுகள் - வண்டுகளானவை-மலர்கிண்டி - மலர்களைமூக்கினாலுழுது, தென்னுஎன - தென்னுவென்று, முரல் - சத்திக்கின்ற, பொழில் - பூஞ்சோலைகள், சூழ்-சூழ்ந்த, தில்லையுள்-திருத்தில்லையிலெழுந்தருளியிருக்கிற, அரனார் - பரமசிவனார், திருமுடி - தமது திருமுடியின்மேல், அணி - தரித்த - தாமம் தன்னால் அல்லது - கொன்றைமாலையினாலல்லது, என் இடர்தீராது - என்துன்பமொழியாது, உயிர் - என்னுயிரும், தகையாது - நீங்காமல்தடை பட்டுநில்லாது, கருமுகில்-கரியமேகம், ஏறி - ஆகாயத்திலேறி, மின்னுகின்றது-மின்னுகின்றது, வாடையும் - வடகாற்றும், துளிவரவீசாநின்றது-நீர்த்துளிகளை என் மேல் வந்துவிழும்படிவீசாநின்றது, இனி-இவ்வாறாயின பின்பு, நாம் என்செய்குவது - நாம் யாது செய்யத்தக்கது, பேசாய் - நீசிந்தித்துச் சொல்லக்கடவை. எ - று.

மடவரலாய் என்றதுதோழியை. இது தலைமகள் கூற்று, துறைகார்ப்பருவங்கண்டுவருந்தல். தோழீ, தில்லையம்பலவாணரது திருமாலையாலல்லது வேறொருவழியால் என்துன்பமொழியாது, கார்ப்பருவமும் வந்து என்னைநலியாநின்றது, இதற்குயான் செய்யவடுப்பது யாது, நீயாலோசித்துச் சொல்லவேண்டும் என்பது கருத்து.

### இணைக்குறளாசிரியப்பா.

**28.** பேசுவாழிபேசுவாழி
ஆசையொடுமயங்கிமாசுறுமனமே
பேசுவாழிபேசுவாழி
கண்டனமறையுமுண்டனமலமாம்
பூசினமாசாம்புணர்ந்தனபிரியும்
நிறைந்தனகுறையுமுயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும்பெரியனசிறுக்கும்
ஒன்றொன்றொருவழிநில்லாவன்றியும்

செல்வமொடுபிறந்தோர்தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர்கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர்படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர்நலத்தினின்வந்தோர்
எனையவொங்குலத்தினரிறந்தோரனையவர்
பெருநின்றிலபோலுந்தேரின்
நீயுமஃதறிதியன்றேமாயப்
பேய்த்தேர்போன்றுநீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்றுநனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக்கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவுசார்ந்தனைநீயும்
நன்மையிற்றிரிந்தபுன்மையையாதலின்
அழுக்குடைப்புலன்வழியிழுக்கத்தினெழுகி
வளைவாய்த்தூண்டிலினுள்ளிரைவிழுங்கும்
பன்மீன்போலவும்
மின்னுறுவிளக்கத்துவிட்டில்போலவும்
ஆசையாம்பரிசத்தியானைபோலவும்
ஓசையின்விளிந்தபுள்ளுப்போலவும்
வீசியமணத்தின்வண்டுபோலவும்
உறுவதுணராச்செறுவுழிச்சேர்ந்தனை
நுண்ணூனூற்றுத்தன்னகப்படுக்கும்
அறிவில்கீடத்துநுந்துழிப்போல
ஆசைச்சங்கிலிப்பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினோடியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக்குறங்குபுகிடத்தி
கறவைநினைந்தகன்றெனவிரங்கி
மறவாமனத்துமாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்தனை
மறையவர்தில்லைமன்றுளாடும்
இறையவனென்கிலையென்னினைந்தனையே.

இ - ள். ஆசையொடுமயங்கி-ஆசையோடுகூடிமயங்கி, மாசு உறும்மனமே - அழுக்கடையாநின்ற நெஞ்சமே, கண்டனமறையும் - காணப்பட்டனவெல்லாம் மறைந்துபோம், உண்டனமலம் ஆம் - உண்ணப்பட்டனவெல்லாம் மல்வுருவாய்ப் பரிணமிக்கும், பூசினமாசு ஆம்-பூசப்பட்டனவாகிய நறுமணப்பொருள்களெல்லாம்அழுக்காயொழியும்,புணர்ந்தன பிரியும்-கூடினவைபிரியும், நிறைந்தனகுறையும் - நிறைந்தனகுறைவுபடும், உயர்ந்தனபணியும் - உயர்ந்தவைதாழும், பிறந்தன இறக்கும் - தோன்றினவை அழியும், பெரியன சிறுக்கும்-பெரியவை சிறியவையாம், ஒன்றொன்று - ஒவ்வொருபொருளும், ஒரு வழிநில்லா - ஒரு நிலையில் நிற்கமாட்டா, அன்றியும் - அல்லாமலும், செல்வமொடுபிறந்தோர் - செல்வத்தோடு கூடியே பிறந்தவரும், தேசொடுதிகழ்ந்தோர் - புகழோடுகூடிவிளங்கினவரும், கல்வியின்சிறந்தோர்-கல்வியினாற் சிறப்படைந்தவரும், கடுந்திறல்மிகுந்தோர்-பெரிதாகிய வெற்றியினால் மிக்கோரும்,கொடையின்பொலிந்தோர் - ஈகையினால் பொலிவுற்றவரும், படையிற் பயின்றோர் - ஆயுதங்களிற்பயின்று தேர்ந்தோரும், குலத்தின் உயர்ந்தோர் - குலத்தினால் உயர்ந்தவரும், நலத்தினின்வந்தோர் - நற்குணத்தோடுவிருத்தியடைந்தோரும், எம்குலத்தினர் - எமது குலத்திலுதித்தோருமாகி, இறந்தோர் - மாண்டோர், எனையர் - எத்தனையர், அனையவர் - அத்தனையருடைய, பேரும் நின்றில - பெயர்களும் இவ்வுலகில் நிலைபெற்றிருந்தில, தேரின்-ஆராயுமிடத்து, அஃது-அவ்வுண்மையை, நீயும் அறிதி அன்றே - நீயும் உணர்கின்றாயல்லவா, மாயம் - பொய்யாகிய, பேய்த்தேர் போன்றும் - கானல் நீரையொத்தும், நீப்பு அரும் உறக்கத்து - நீக்குதற் கரியதூக்கத்திலுண்டாகின்ற, கனவே போன்றும் - சொப்பனத்தையொத்தும், நனவுபெயர்பெற்ற - சாக்கிராவஸ்தையெனப்பெயர்பெற்ற, மாயவாழ்க்கையை - பொய்வாழ்வை, மதித்து - (மெய்வாழ்வெனக்) கருதி, காயத்தை - உடம்பை, கல்லினும் வலிது ஆகருதி - கல்லினும் உறுதியுடையதாக வெண்ணி, பொல்லாத்தன்மையர் - தீக்குணத்தினரது, இழிவு-இழிதகவை, நீயும்சார்ந்தனை-நீயும் அடைந்தாய், நன்மையின்திரிந்த - நன்னெறியினின்றுமாறுபட்ட, புன்மையை ஆதலின் - புன்மையையுடையையாதலால், அழுக்குஉடை - தவறுள்ள, புலன்வழி - ஐம்புலவழியே, இழுக்கத்தின் ஒழுகி - குற்றத்தோடு கூடிச் சென்று, வளைவாய்த் தூண்டிலின் உள் - வளைந்தவாயினையுடைய தூண்டிலிற்கோக்கப்பட்ட, இரை - உணவை, விழுங்கும்-விழுங்கியழிகின்ற, பல் மீன்போலவும் - பலமீன்களைப்போலவும், மின்னுறுவிளக்கத்து - மின்னாநின்ற விளக்கின் மீது விழுந்தழிகின்ற, விட்டில் போலவும்-விட்டிற்பூச்சி போலவும், ஆசை ஆம்பரிசத்து - ஆசையையுண்டாக்கு கின்றபரிச சுகத்தினால் அழிகின்ற, யானைபோலவும் - யானையைப்போலவும், ஓசையின்

விளிந்த - சத்த இன்பத்தினாலழிந்த, புள்ளுப்போலவும் - அசுணப்பறவை போலவும், வீசியமணத்தின் - வீசுகின்ற நறுமணத்தினாலழிந்த,வண்டுபோலவும் - வண்டைப்போலவும், உறுவது உணரா - மேல்விளைவதாகிய கேட்டையறியாமல், செறுஉழிசேர்ந்தனை - அழிவுக்குக் காரணமாகிய தீ நெறியிற் சேர்ந்தாய்,நுண்நூல் நூற்று - நுண்ணிய நூலைநூற்று, தன் அகப்படுக்கும் - (அதனிடத்துத்) தன்னைச்சிக்குவித்துக் கொள்ளுகிற, அறிவு இல் கிடத்து - உணர்ச்சியற்ற கோற்புழுவின், நுந்துழிப்போல - கூட்டைப் போல, ஆசைச்சங்கிலி - ஆசைச்சங்கிலியெனப்படுகிற, பாசத்தொடர்ப்பட்டு - பாசத்தளையிலகப்பட்டு, இடர்கெழுமனத்தினோடு - துயருறுமனத்தோடு, இயற்றுவது அறியாது - செய்தற்குரிய காரிய மிது வென்றுணர மாட்டாமல், குடர்கெழுசிறை அறைக்கு - குடல்கள் பொருந்திய சிறையாகிய வீட்டின்கண் (உடம்பின்கண்), உறங்குபுகிடத்தி - உறங்கிக்கிடக்கின்றனை, கறவைநினைந்த - பாற்பசுவை நினைத்த, கன்று என - (ஈன்றணிமையுள்ள) கன்றின்தன்மைபோல, மறவாமனத்து - தன்னையிடையறாது நினைக்கின்ற மனத்தினையுடைய, மாசு அறும் அடியார்க்கு - குற்றமற்ற அடியவர்களுக்கு, இரங்கி - இரக்கமுற்று, அருள் சுரந்து அளிக்கும்- அருளமுது சுரந்தருள்கின்ற, அற்புதக் கூத்தனை - வியக்கத்தக்கபொது நடஞ்செய்வோனை, மறையவர் - தில்லைமூவாயிரவர்வாழ்கின்ற, தில்லைமன்றுள் - தில்லையம்பலத்தின்கண், ஆடும் - நிருத்தம் பண்ணுகின்ற, இறையவன் - இறைவனே, என்கிலை - என்று கூறுகின்றிலை, என்நினைந்தனை - (உன் உய்வுக்குக் காரணமாக) எதனை நினைத்திருக்கின்றனை, பேசு பேசு பேசு பேசு - கூறாய் கூறாய் கூறாய் கூறாய், வாழி வாழி வாழி வாழி - வாழ்க வாழ்க வாழ்க வாழ்க. எ - று.

மீன், விட்டில், யானை, அசுணப்புள், வண்டு, என்னுமிவைகள், முறையே இரதத்தாலும், ரூபத்தாலும், பரிசத்தாலும், சத்தத்தாலும், கந்தத்தாலும்அழிவனவாதலால்,வளைவாய்த் தூண்டிலினுள்ளிரை விழுங்கும் பன்மீன்போலவும்,மின்னுறுவிளக்கத்துவிட்டில்போலவும்,ஆசையாம்பரிசத்தியானைபோலவும், ஓசையின் விளிந்த புள்ளுப்போலவும்,வீசியமணத்தின் வண்டுபோலவும்என்றார்.கோற்புழுவானது தானிழைத்த நூற்கூட்டிற்றானே சிக்கியழிவதுபோல்மனமும் ஐம்புலவாசையிற் சிக்கியழிவதாதலால்,"நுண்ணூனூற்றுத் தன்னகப்படுக்கு மறிவில் கிடத்துநுந்துழிப்போலஆசைச்சங்கிலிப்பாசத் தொடர்ப்பட்,டிடர்கெழுமனத்தினோடியற்று வதறியாது,குடர்கெழுசிறையறைக் குறங்குபு கிடத்தி" என்றார். "வரிபுடல் சூழக்குடம்பை நூறெற்றிப், போக்குவழிபடையாதுள்ளுயிர் விடுத்தலி, னறிவுபுறம் போயவுலண்டதுபோலக், கடற்றிரை சிறுகமலக்கு துயர்காட்டு, முடலெனும் வாயிற்சிறைநடுவுபுக்குப், போகாதுணங் குறும் வெள்ளறிவேமும்" என்

ருர் கல்லாடரும். மனமே, மாயவாழ்வை நித்திய வாழ்வாகவும், பொய்யுடலைமெய்யாகவுமதித்து, ஐம்புலவாசையிற் சிக்கியலமந்து பிறவிச்சிறையிற் பிணிப்புண்டுகிடந்தாய், தில்லையம்பலக் கூத்தனைவாழ்த்து கின்றிலை, நீ உய்தற்குபாயமாக எதனை நினைந்திருக்கின்றனை என்பது கருத்து.

வெண்பா.

29. நினையார்மெலியார்நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றைபொதுவோ-வனைவீரும்
மெச்சியேகாணவியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப்பெறும்.

இ-ள். நினையார் - நினையாதவராகியும், மெலியார் - நினைத்து இளையாதவராகியும், நிறை அழியார் - நிறையழியாதவராகியும், வாளா - சும்மா, புனைவார்க்கு - அணியவிரும்புவோர்களாகியமாதருக்கு, கொன்றை - (இறைவனது) கொன்றைமாலையானது, பொதுவோ - (தாம்பலரும் அநுபவித்தற்குரிய) பொதுத்தன்மைத்தோ (அன்று), அனைவோரும் - எல்லாரும், மெச்சிகாண - மெச்சிப்பார்க்கும்படி, வியன் தில்லையான் அருள் - பெருமைவாய்ந்த தில்லைக் கண்ணுள்ளாகிய இறைவன் அருள, என்பிச்சியே - என்பிச்சிப்பெண்ணே, நாளைபெறும் - நாளை (அக்கொன்றைமாலையைப்) பெறுதற்குரியளாவள். எ - று,

இதுதாய்க்கூற்று. தில்லையம் பலவாணனை நினைந்தும், மெலிந்தும், நிறையழிந்தும்,பிச்சியாகியஎன்பெண் அவனது கொன்றைமாலையைப் பெறுதற்குரியளாவதன்றி ஏனையர் பெறுதற்குரியராகா ரென்பது கருத்து. பிச்சி - பிச்சேறினவள் (பேதை) இது பித்தியெனவும்வரும், "சுத்தியபொக்கணத் தென்பணிகட்டங் கஞ்சூழ்சடைவெண், பொத்திய கோலத்தினீர் புலியூரம் பலவர்க்குற்ற, பத்திப்போலப் பிணைத்திறு மாந்தபயோதரத்தோர், பித்திதற்பின்வர முன்வருமோவொர்பெருந்தகையே" என்றார் திருவாதவூரடிகளும்.

கலித்துறை.

30. பெறுகின்றவெண்ணிலிதாயரும்பேறுறும்யானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கணெல்லாம்
அறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே.

இ - ள். தில்லை - தில்லைக்கண்ணுள்ளனாகிய, ஆளுடையான் - என்னையடிமையாகவுடையானது, செம்பொன் அம்பலத்து - பொன்னம்பலத்தின்கண்ணே, பெறுகின்ற எண் இலிதாயரும் - என்னையீனும் அளவிலிகளாகிய தாய்மாரும், பேறு உறும் யானும் - அவர்கள் பெறுதலையடைகின்ற நானும், என்னை உறுகின்ற-என்னைவந்தடைகின்ற, துன்பங்கள் - துயரங்கள், ஆயிரகோடியும் - ஆயிரகோடிகளும், ஓய்வொடும்-தளர்வோடும், சென்று இறுகின்ற - சென்றுமுடிகின்ற, நாள்களும் ஆகி-நாள்களும் நேர்ந்து, கிடந்த - என்னிடத்துத்தங்கியிருந்த, இடுக்கண் எல்லாம் - துன்பங்களெல்லாம், அறுகின்றன - அழிந்தொழிபாநின்றன. எ - று.

தில்லையாளுடையான் செம்பொனம்பலத்தில், என்பிறவிகளும், அவற்றில்நேர்கின்றதுன்பங்களும் முடிந்தொழியுங்காலம் நேர்ந்து எல்லாத் துன்பங்களும் அற்றொழியாநின்றன என்பது கருத்து. துன்பம் என்றது உடம்பைப்பற்றியுண்டாகின்றதுக்கத்தையும், இடுக்கண் என்றது உயிரைப்பற்றியுண்டாகின்றதுக் கத்தையும் உணர்த்திநின்றன.

### கழிநெடில்விருத்தம்.

31. அம்பலவரங்கணரடைந்தவர்தமக்கே
யன்புடையரென்னுமிதெனானையையுரித்துக்
கம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசைபேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமியுழந்தென்
கொம்பலமருந்தகைமைகண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியிரென்றருளுவீரோ.

இ - ள். (அன்னைமீர்) அம்பலவர் - பொதுவினர், அங்கணர் - கிருபைக்கண்ணினர், அடைந்தவர்தமக்கு அன்புடையார் - தம்மையடைந்தவரிடத்தே யன்புடையார், என்னும் இது என் - என்று நீவிர் கூறுவதற்குக் காரணம்யாது, ஆனையைஉரித்து - யானையையுரித்து, கம்பலம் உவந்தருளுவீர் - மேற்போர்வையாகத் திருவுளம்பற்றியருள்வீர், மதனன் வேவக் கண்டருளுவீர் - மன்மதன் வெந்து நீறும்படிப் பார்த்தருள்வீர், பெரியகாதல் அறியாதே - (என்மாதுகொண்டிருக்கும்) ஆசைப்பெருக்கத்தை யுணராமலே, வம்பலர் நிறைந்து - அயலவர்நிறைந்து, வசைபேச - நிந்தைமொழியவும், ஒருமாடு - ஒருபக்கத்தில், வாடை - வடகாற்றானது, உயிர் ஈர - உயிரைப்பிளக்கவும், மணிமாமையும் இழந்து - அழகிய நிறத்தையுமிழந்த

வளாய், என்கொம்பு - என்பூங்கொடிபோலும் பெண், அலமரும் தகைமை கண்டு - வருந்துந் தன்மையைப்பார்த்து, தகவுஇன்றி - கிருபையில்லாமல், கொன்றை அருளீர் - கொன்றைமாலையை அருள்செய்யாதிருக்கிறீர், (ஆதலால்) கொடியிர் என்று அருளுவீர் - நீர் கொடியீர் என்று வன்மொழிபுகன்றருள்வீராக. எ - று.

இது தலைமகள்கூற்று. தாய்மாரே, தில்லையம்பலவர், பெருங்கருணையர், அடைந்தார்மீது அன்புடையவர் என்று நீவிர் கூறுவதென், அவருக்கெதிரே சென்று, மதயானையுரித்தவரோ, மதநனை யெரித்தவரோ, அயலவர் புறம்பழித்தலாலும்,வாடைக்காற்றுஉயிரைவருத்துதலாலும், என்பெண்ணுணவள் அழகிழந்து வருந்துவதைக்கண்டு வைத்தும், நீர் இரங்கிக் கொன்றைமாலையை யருள்செய்கின்றிலீர், ஆதலால், நீர்கொடியீர், எனவன்மொழிபுகல்வீராக என்பதுகருத்து. இவ்வாறன்றி இறைவனைநோக்கிநற்றாய்கூறினாளாக வுரைப்பினுமாம். இவ்வாறு கூறுங்கால், அம்பலவர்,அங்கணர், அடைந்தவர்தமக்கே அன்புடையர் என்று யாவருஞ் சொல்லுதலாகிய இது என்னை, நீர் ஆனையையுரித்துக் கம்பலமுவந்தருளுவீர், மதனன்வேவக்கண்டருளுவீர், என்பெரிய காதலறியாதே வம்பலர் நிறைந்துவசைபேச, ஒருமாடே வாடையுயிரீர மணிமாமையுமிழந்து என்பெண்ணுனவள் அலமராநின்ற தகைமையைக்கண்டும், பெருந்தன்மையின்றி உமதுகொன்றைமாலையை யருளாதிருக்கின்றீர். ஆதலால் நீர் கொடியீர், அதனைஎன்றுதான் அருள்செய்ய விருக்கின்றீர் எனப் பொருளுரைக்க

### இணைக்குறளாசிரியப்பா

32. அருளுவாழியருளுவாழி
விரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றுழித்தோன்றிநிலைதபக்கறங்கும்
புற்புதச்செவ்வியின்மக்கள்யாக்கைக்கு
நினைப்பினுங்கடிதேயிளமைநீக்கம்
அதனினுங்கடிதேமூப்பின்றொடர்ச்சி
அதனினுங்கடிதேகதுமெனமரணம்
வாணுள்பருகியுடம்பைவறிதாக்கி
நாணுள்பயின்றநல்காக்கூற்றம்
இனையதன்மையதிதுவேயிதனை
யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவேசெய்வனசிலவே

செய்பாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றென்பசிலவேதீதென்பசிலவே
ஒன்றினும்படாதனசிலவேயென்றிவை
கணத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவும்
கணக்கில்கோடித்தொகுதியவைதாம்
ஒன்றொன்றுணர்வுழிவருமோவனைத்தும்
ஒன்றாவுணர்வுழிவருமோவென்றொன்று
தெளிவுழித்தேறல்செல்லேமளிய
மனத்தின்செய்கைமற்றிதுவேநீயே
அரியைசாலவெம்பெருமதெரிவுழின்
உண்டாய்த்தோன்றுவயாவையுநீயே
கண்டனையவைநினைக்காணுவவைதாம்
நின்வயின்மறைத்தோயல்லையுன்னை
மாயாய்மன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற்கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய்பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடைநின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின்மறைந்தோயல்லை
இடையிட்டுநின்னைமறைப்பதுமில்லை
மறைப்பினுமதுவும்
நீயேயாகின்றதோர்நிலையே
அஃதான்று
நினைப்பருங்காட்சிநின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சியென்நிலையதுவே
இனிநனியிரப்பதொன்றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப்புலன்வழிபடரினும்
நின்வயினினைந்தேமாகுதனின்வயின்
நினைக்குமாநினைக்கப்பெறுதலனைத்தொன்றும்
நீயேயருளல்வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லெனவெறிவிசும்புவறிதாக

இம்பருய்யவம்பலம்பொலியத்
திருவளர்தில்லைமூதூர்
அருநடங்குயிற்றுமாதிவானவனே.

இ - ள். அருளு அருளு - அருளாய் அருளாய், வாழிவாழி - நீவாழ்க வாழ்க, விரிசடைக்கடவுள் - படர்ந்த சடையைத்தாங்கிய கடவுளே, அருளு - அருளாய், வாழி - நீவாழ்க, வேய்முதிர்கயிலை - மூங்கிற்காடு முதிர்ந்தடர்ந்த கைலாயம், புல்லென - பொலிவழியவும், எறிவிசும்புவறிது ஆக - ஒளிவீசுகின்ற சிதாகாயம்ஒளிகெட்டு வறுமையடையவும், இம்பர் உய்ப - இவ்வுலகினர் உய்யவும், அம்பலம்பொலிய - பொற்சபைவிளக்கமடையவும், திருவளர் - அழகுவளராகின்ற, தில்லைமூதூர் - தில்லைப்பழம்பதியில், அருநடம்குயிற்றும் - அருமையாகிய நிருத்தத்தைச் செய்கின்ற, ஆதிவானவனே - முதற்கடவுளே, தோன்றுழித்தோன்றி - உண்டாதற்குரிய இடத்திலுண்டாகி, நிலைதபக்கறங்கும் - நிலைகெடச் சுழன்றழிகின்ற, புற்புதம்செவ்வியின் - நீர்க்குமிழியின் அழகினையுடைய, மக்கள் யாக்கைக்கு - மக்களுடம்புக்கு, இளமைநீக்கம் - இளமைப்பருவத்தின்கழிவு, நினைப்பினும் கடிதே - நினைப்பினும் விரைவானதே, மூப்பின்தொடர்ச்சி - முதுமையின்தொடர்பு, அதனினும் கடிதே - அதினும் விரைவானதே, கதுமெனமரணம் - கதுமென வுண்டாகின்ற மரணமானது, அதனினும் கடிதே - அதினும் விரைவானதே, வாணுள்பருகி - ஆயுளையுண்டு, உடம்பைவறிதுஆக்கி - உடம்பைவறியதாகச்செய்து, நாள்நாள்பயின்ற - தினந்தோறும் பழகின, நல்காகூற்றம் - அருள்செய்யாததாகிய கூற்று, இனைய தன்மையது இதுவே - இப்படிப்பட்ட குணத்தையுடையதாகிய இதுவே, இதனை - இவ்வுடம்பை, எனது எனக்கருதி - என்னதென்றுநினைத்து, இதற்கு என்று தொடங்கி - இதன்பொருட்டு என்று ஆரம்பித்து, செய்தனசில - செய்த காரியங்கள்சில, செய்வனசில - செய்யட்போங் காரியங்கள் சில, செய்யாநிற்பனசில - செய்யாநின்ற காரியங்கள்சில, அவற்றிடை - அவற்றுள், நன்று என்பசில - நன்றெனப்படுவனசில, தீதுஎன்பசில - தீதுஎனப்படுவனசில, ஒன்றினும் படாதனசில - (இவ்விரண்டனுள்) ஒன்றோடும் பொருந்தாதனசில, என்றஇவை - என்றுசொல்லப்பட்ட இவை, கணத்திடை - க்ஷணகாலத்தில், நினைந்து களிப்பவும் - நினைந்து மகிழ்தற்குரியனவும், கலுழ்பவும் - அழுதற்குரியனவும், கணக்கு இல்கோடிதொகுதி - கணக்கற்ற கோடிகளின் தொகையாம், அவைதாம் - அவைகள்தாம், உணர்வுழி - நினைக்குமிடத்து, ஒன்றொன்றுவருமோ - ஒவ்வொன்றாகக் கிடைக்குமோ, உணர்வுழி - நினைக்குமிடத்து, அனைத்தும் ஒன்றுவருமோ - எல்லாம் ஒருங்கேகிடைக்குமோ, என்று ஒன்று தெளிவுழி - என்று ஒன்றைத் தெளியுங்கால், தேறல்செய்யேம் - தெளிவையடையமாட்டேம், அளியமனத்தின்செய்கை இதுவே - ஏழை

நெஞ்சத்தியற்கையிதுவே, எம்பெரும - எம்மிறைவனே, நீயேசால அரியை-நீயேமிகவும் அரியை யாயிருக்கின்றனை, தெரிவுறின் - தெரியுங்கால், உண்டாய் தோன்றுவயாவும் நீயேகண்டனை - உளவாகிக்காணப்படுவன வெல்லாவற்றையும் நீயேகண்டாய், அவை நின்னைகாணு - அவை உன்னைக்காணமாட்டா, அவைதாம்-அவற்றையே,நின்வயின் மறைத்தோய் அல்லை-உன்னிடத்து மறைத்தனையுமன்று, உன்னைமாயாய்-உன்னையழிக்காமல், மன்னினை - நிலைபெற்றிருந்தனை, நீயே - நீயேயாதலால், வாழி-வாழக்கடவை, மன்னியும் - நிலைபெற்றும், சிறுமையில் கரந்தோய் அல்லை - சிறுமையில் மறைந்திருந்தாயுமல்லை, பெருமையில் பெரியோய் - பெருமையிற் சிறந்தோய்,பெயர்த்தும்-மீட்டும்,நீயே-நீயே,பெருகியும்-உயர்ந்தும்,சேண் இடை நின்றோய் அல்லை-தூரத்தில் நின்றனையல்லை, தேர்வோர்க்கு-ஆராய்வோர்க்கு,தம்மினும் அணியை நீயே-தம்மினும் அண்ணியையாயிருப்பவன் நீயே, நண்ணியும் - பொருந்தியும், இடை ஒன்றில் மறைந்தோய் அல்லை - இடையே ஒன்றில் மறைந்தவனும் அல்லை, இடையிட்டு நின்னைமறைப்பதும் இல்லை - இடையே வந்து உன்னைமறைப்பதோர் பொருளும் இல்லை, மறைப்பினும் - மறைத்தாலும், அதுவும் - அப்பொருளும், நீயே ஆகி நின்றது ஓர் நிலையே - நீயேயாகிநின்றதாகிய ஒப்பற்ற நிலையே, அஃ தான்று - அதுவன்றி,நினைப்பு அருகாட்சி நின்னிலையிதுவே-நினைத்தற்குமரியதோற்றத்தையுடைய உன் நிலையிதுவே, நினைப்பு உறும்காட்சி எம்நிலை அதுவே-நினைத்தற்குரிய தோற்றத்தையுடைய எமதுநிலைஅதுவே, இனி-இனி,நனி-மிகவும்,இரப்பது ஒன்று உடையம்-(உன்னிடத்தில்)யாசிப்பதாகிய ஒருகாரியத்தையுடையேம், மனம் மருண்டு-மனமயங்கி, புன்மையின் நினைத்து - அற்பமாய் எண்ணி, புலன் வழிப்படரினும்-ஐம்புலவழியிற் சென்றாலும், நின்வயின் நினைந்தேம் ஆகுதல்-உன்னைநினைந்தோமாதலும்,நின்வயின் நினைக்குமாநினைக்கப்பெறுதல்-உன்னைநினைக்கும் வண்ணம்நினைக்கப்பெறுதலும் ஆகிய,அனைத்து ஒன்றும் - அத்தன்மைத் தாகிய ஒன்றைமாத்திரம், நீயே அருளல்வேண்டும் - நீயேயருள்செய்தல் தகுதி. எ - று.

தோன்றுழித்தோன்றுதலாவது வினைக்கீடாகச்சென்று பிறத்தற்கிடமாகிய தேவர்மக்கள்முதலிய பேதம். கூற்றம் - இயமன். கூற்றம்சொல்லால் அஃறிணையாதலால் அதற்கேற்ப "இனையதன்மைய திதுவே" என்றார். ஒன்றினும்படாதன என்றது - நன்றென்பவற்றுள்ளும் தீதென்பவற்றுள்ளும் படாது வருவன, அவை துரும்புகிள்ளல்முதலியன. உன்னை மாயாய் மன்னினையென்றது இறைவன் தன்னிலைகெடாது நிலைபெற்றிருத்தலை. நினைக்கும்வண்ணம் நினைத்தலாவது தன்னைமுன்னிடாது திருவருளைமுன்னிட்டு நினைத்தல். அருளுரு மூன்றினும் உகரம் சாரியை. புரிசடைஎனவும் பாடம், பொருள்கட்டப்பட்ட என்பது. கைலாயமும் சிதா

காயமும் வறிதாம்படி தில்லையம்பலத்தில் திருநிருத்தம் பண்ணுவோனே, யாம் ஐம்புலவழியிற்சென் றுழல்வோமாயினும், உன்னை நினைக்கும்படி எமக்கருள்செய்தல் வேண்டுமென்பது கருத்து.

வெண்பா.

33. வானோர்பணியமணியாசனத்திருக்கும்
ஆனாதசெல்வத்தரசன்றே-மானாகம்
பந்திப்பார்நின்றாடும்பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாதவாழ்வு.

இ - ள். மால் நாகம் - பெரியசர்ப்பங்களை, பந்திப்பார்-கைமுதலான இடங்களில் கங்கணமுதலானவைகளாகக் கட்டியிருப்பவர், நின்று ஆடும்-நிலைபெற்றுநடனஞ்செய்கிற, பைம்பொன்னின் அம்பலத்தே - கனகசபையிலே (நின்று), வந்திப்பார் - (அவரைத்) துதிப்பவர், வேண்டாத - விரும்பாத, வாழ்வு - வாழ்க்கையானது, வானோர்பணிய - தேவர்கள் வணங்க, மணிஆசநத்து இருக்கும் - ரத்நசிங்காசநந்தின்மேல் வீற்றிருக்கின்ற, ஆனாத செல்வத்து -நீங்காத செல்வத்தையுடைய, அரசு அன்றே - தேவாதிபத்திய மல்லவா. எ - று.

மான் ஆகம் பந்திப்பார் எனப்பதம்பிரிந்து பெண்ணைத்தம் திருமேனியின் ஓர்பாகத்திலிருத்தினவர் எனவுமுரைக்கலாம். அம்பலத்தே வந்திப்பார் என்பதற்கு அம்பலத்தையே வாழ்த்துவோர் எனவுரைப்பினுமாம். மணி அழகென்றலுமொன்று. வானோர் பணிய என்றதனால், அரசு தேவேந்திரன்வாழ்வுக்காயிற்று. மால் நாகம் என்றது தாருகாவனத்திருடியர் செய்தஹோமாக்கினியிற் றோன்றிய சர்ப்பங்களை. பொன்னம்பல வரடியார்கள் இந்திரபதத்தையும் விரும்பார்கள் என்பது கருத்து. "வானேயும் பெறில் வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்" என்றார் திருவாதவூரடிகளும்.

கலித்துறை.

34. வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க [த்
ஆள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றை
தாழ்வாரறியார்கடனஞ்சையுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே.

இ - ள். மறையோர் - வேதியர்கள், தங்கள் வாழ்வாகவும் - தங்களுடைய வாழ்க்கையாகவும், தங்கள்வைப்பாகவும் - தங்களுடைய நிக்ஷேபமாகவும், (எண்ணி) வணங்க - தொழ, ஆள்வாய் - (அவர்களை) ஆண்டருள்வோய், திருத்தில்லை அம்பலத்தோய் - திருத்தில்லை யம்பலத்தை யிட

மாகக்கொண்டோய், உன்னை அன்றி - உன்னையல்லது, ஒன்றை-வேறொருதெய்வத்தை, அறியார் தாழ்வார் - மெய்ப்பொருளையுணராதார் வணங்குவார், (அவர்கள்) கடல் நஞ்சை உண்டிலையாகில் - கடலிற் பிறந்த விடத்தை நீயுண்டருளாயாகில், அன்றே - அப்பொழுதே, மாள்வார்சிலரை அன்றோ - மடிந்துபோதற்குரியவராகிய சிலரையல்லவா,தெய்வமாகவணங்குவது - கடவுளராகமதித்துத் தொழுவது, ஏ - இதென்னபாவம். எ-று.

மறையோர் - தில்லைமூவாயிரவர். "வணங்க ஆள்வாய்" என்றமையால், நினைத்தல் வாழ்த்தல்களைச் செய்வோரை ஆள்வது சொல்லாதேயமையும். தில்லை யம்பலவனே பாற்கடல் கடையப்பட்டகாலத்தில் அதனிடத்திற்றோன்றிய நஞ்சையஞ்சித்தேவர்கள் முறையிட அவர்களுக்கிரங்கி நீயதனையுண்டிலையாயின், அன்றேயிறந்தொழிதற்குரியார் சிலரையன்றோ உண்மையறியாதவர் வணங்கு கின்றனர் என்பது கருத்து.

## கழிநெடில்விருத்தம்.

35\. வணங்குமிடையீர்வறிதுவல்லியிடையாண்மேல்
மாரசரமாரிபொழியப்பெறுமனத்தோ
டுணங்கிவடானுமெலியப்பெறுமிடர்க்கே
ஊதையெரிதூவியுலவப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடையாடநடமாடும்
பித்தரெனவும்மிதயமித்தனையுமோரீர்
அணங்குவெறியாடுமறியாடுமதுவீரும்
மையலையுமல்லலையுமல்லதறியீரே.

இ - ள். வணங்கும் இடையீர்-வளையாநின்ற இடையையுடையவர்களாகிய பெண்களே, வறிது - வீணே, வல்லி இடையாள்மேல்-கொடிபோன்ற இடையினையுடைய இப்பெண்ணின் மீது, மாரசரம் - மன்மதபாணங்கள், மாரிபொழியப்பெறும்-மழைபோலப்பொழியப்பெற்ற, மனத்தோடு-நெஞ்சுடன், இவள்தானும் உணங்கி - இப்பெண்ணும்வாடி, மெலியப்பெறும் - இளைக்கப்பெறுவாள், இடர்க்கே - (இவளது) துன்பத்தைமிகுவித்தற்கே, அடுத்து - கிட்டி, ஊதை - குளிர்காற்றானது, எரி தூவி - நெருப்புப்பொறிகளைச்சிதறி, உலவப்பெறும் - உலாவப்பெறும், (இவைகட்குக் காரணம்) சடை - சடையானது, அரவோடுபிணங்கி - பாம்போடுமாறுபட்டு, ஆட - ஆடும்வண்ணம், நடம் ஆடும் - திருநடநம் பண்ணுகிற, பித்தர் என-பித்தரென்று, உம் இதயம் - உமதுமனத்தில், இத்தனையும் ஓரீர் - சிறிதும் அறியீர், அணங்கு - தெய்வத்தைநோக்கிச் செய்கிற, வெறி ஆடும் - வெறியாடலையும், மறியாடும் - செம்மறியாட்டையும், அது ஈரும் - அதை அறுக்

கிற, மையலையும் - அறியாமையையும், அல்லலையும் - (இவற்றாலுண்டாகிற) துன்பத்தையும், அல்லது - அன்றி, அறியீர் - மற்றொன்றையறியீர்கள். எ - று.

இது வெறிவிலக்கல் என்னுந்துறை. தோழிகூற்று. அதாவது, தலைமகளது காமநோயின் நிலைமையுணராது இஃது தெய்வத்தான் வந்ததெனத்தாய்மார் வேலனையழைத்து வெறியாடலைச் செய்யவும், மறியாட்டைக் கொலைசெய்யவும் புகாநிற்க, தோழி, இப்படிச்செய்வதிற்பயனில்லை, இது காமநோய், இவள் கருதியிருப்பது இது வென அவர்களைத்தேற்றி, வெறியாடலை விலக்குதல். இறைவன் திருநடனம் பண்ணும்போது, சடையானது அடுத்திருக்கிற பாம்பாடுவதுபோலாடுதலால், "பிணங்கியரவோடு சடையாட நடமாடும் பித்தர்" என்றார். தாய்மாரே, இவட்குள்ளது நடமாடும் பித்தரது பித்தேயன்றி வேறில்லை, ஆதலால் நீங்கள் வெறியாடுதலாலும் மறியாட்டை அறுத்தலாலும் பயனில்லை யென்பது கருத்து.

**நேரிசையாசிரியப்பா.**

**38.** ஈரவேரித்தார்வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கைமதியின் மீதசைய
வண்டிபங்குவளைப்பிணெண்டோட்செல்வ
ஒருபாற்றோடுமொருபாற்குழையும்
இருபாற்பட்டமேனியெந்தை
ஒல்லொலிப்பழனத்தில்லைமூதூர்
ஆடகப்பொதுவினடநவிற்றும்
இமையாநாட்டத்தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந்தாதையானே
மதுமழைபொழியும்புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக்கானகத்தியற்றிய
தெய்வமண்டபத்தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்பவேறிமங்கையர்
இமையாநாட்டத்தமையாநோக்கத்
தம்மார்புபருகச்செம்மாந்திருக்கும்
ஆனச்செல்வத்துவானோரின்பம்
அதுவேயெய்தினுமெய்துகதுமெனத்
தெறுசொலாளருறுசினந்திருகி
எற்றியுமீர்த்துங்குற்றங்கொளீஇ

ஈர்ந்தும்போழ்ந்துமெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்துமதநாய்க்கீந்தும்
செக்குரற்பெய்துந்தீநீர்வாக்கியும்
புழுக்குடையழுவத்தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்காலமழுத்தியின்னு
வரையிறண்டத்துமாறாக்கடுந்துயர்
நிரயஞ்சேரினுஞ்சேர்கவுரையிடை
பனொன்னையானுதுவிரும்பி
நல்லனெனினுமென்கவவரோ
அல்லனெனினுமென்கநில்லாத்
திருவொடுதிளைத்துப்பெருவளஞ்சிதையா
தின்பத்தழுந்தினுமழுந்துகவல்லாத்
துன்பந்துதையினுந்துதைகமுன்பில்
இளமையொடுபழகிக்கழிமூப்புக்குறுகா
தென்றுமிருக்கினுமிருக்கவன்றி
இன்றேயிறக்கினுமிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனேவெறுத்தலுமிலனே
ஆண்டகைக்குரிசினின்னடியரொடுங்குழுமித்
தெய்வக்கூத்துநின்செய்யபாதமும்
அடையவுமணுகவும்பெற்ற
கிடையாச்செல்வங்கிடைத்தலானே,

இ - ள். ஈரம்-குளிர்ச்சிபெருந்திய, வேரி - தேன்மணங்களமைந்த, தார்வழங்கு-கொன்றைமலர் மாலையையணிந்த, சடிலத்து-சடையின்கண், குதிகொள் கங்கை - பாய்தலைக்கொண்ட கங்காநதியானது, மதியின் மீது அசைய - சந்திரன்மேலணியப்பட்டு அசையாநிற்க, வண்டு இயங்குவளைப் பின் - கைவளை விளங்கு மெல்லையாகிய, எண்தோள்செல்வ - எட்டுத்தோள்களையுடைய சீமானே, ஒருபால் தோடும் - ஒருபுறத்தில் தோடும், ஒருபால் குழையும் - ஒருபுறத்தில் குழையுமாக, இருபால் பட்ட - இருபகுதியதாகப்பொருந்திய,மேனி-திருமேனியையுடைய, எந்தையே-எந்தந்தையே, ஒல்ஒலி - ஒல்லென்னுமொலிநிறைந்த, பழனம் - வயல்கள் சூழ்ந்த, தில்லை மூதூர்-தில்லைப்பழம்பதியில், ஆடகப்பொதுவில் - பொன்னம்பலத்தில், நாடகம் நவிற்றும்-நடநம் பண்ணுகிற,இமையாநாட்டத்து-இமையாத கண்களையுடைய, ஒருபெருங்கடவுள்-ஒப்பற்றபெருங்கடவுளே, வானவர்வணங்கும் - தேவர்கள் தொழும், தாதையானே - தந்தையானவனே, ஆண்த

கைக்குரிசில் - ஆண்டன்மையிற் சிறந்த பெரியோனாகிய, நின் அடியரொடும்குழுமி - உன்னடியாரோடுகூடி, தெய்வக் கூத்தும் - தெய்வத்தன்மையமைந்த (உன்) திருநிருத்தத்தையும், நின்செய்யபாதமும் - உன்சேவடியையும், அடையவும் அறுகவும்பெற்ற-அடையவும் கிட்டவும் பெறுகையாகிய, கிடையாச்செல்வம் கிடைத்தலான்-கிடைத்தலருமையாகிய பெருஞ்செல்வம் கிடைத்தமையால், மதுமழைபொழியும் - தேன்மழையைச்சொரிகின்ற, புது - புதிய, மந்தாரத்து - மந்தாரவிருக்ஷத்தினாலியன்ற, தேன் இயங்கு - வண்டுகள் சஞ்சரிக்கிற, ஒருசிறை-ஒருபக்கமாகிய, கானகத்து-காட்டில், இயற்றிய - செய்யப்பட்ட, தெய்வமண்டபத்து - தெய்விகமான மண்டபத்தில், ஐவகை அமளி - பஞ்சசயநத்தை, சிங்கம் சுமப்ப - சிங்கங்கள் தாங்காநிற்க, ஏறி - அதன்மேலேறி, மங்கையர் - தெய்வப்பெண்கள், இமையாநாட்டத்து-இமையாவிழிகளால்,அமையாநோக்கத்து-அமைவுபெருதபார்வையால்,அம்மார்புபருக-அழகியமார்பழகைப்பருகாநிற்க,செம்மாந்திருக்கும்-இறுமாந்திருக்கிற,ஆனுச்செல்வத்து-நீங்காதசெல்வத்தையுடைய, வானோர்-தேவர்களுடைய, இன்பம் அதுவே எய்துக-இன்பமாகிய அதுவே கிடைப்பினும் கிடைப்பதாக, கதுமென - விரைவாக, தெறுசொலாளர் - வருத்துகின்ற சொல்லையுடைய யமபடர், உறுசினம்-மிகுசினத்தால், திருகிமாறுபட்டு, எற்றியும்-அடித்தும், ஈர்த்தும் - இழுத்தும், குற்றம்கொளீஇ - குற்றங்கொண்டு, ஈர்ந்தும் - அரிந்தும், போழ்ந்தும் - பிளந்தும், எற்றுபுகுடைந்தும் - எறிந்து தோண்டியும், வார்ந்தும் - வாரியும், குறைத்தும் - அறுத்தும், மதநாய்க்கு ஈந்தும்-வெறிநாய்க்குக் கொடுத்தும், செக்கு உரல் பெய்தும் - செக்குரலிற்போட்டும், தீநீர்வாக்கியும் - வெந்நீரைமேலேவார்த்தும், புழு குடை - புழுக்கள் குடையும் படியான, அழுவத்து - வழுக்குநிலத்தில், அழுக்கு இயல் சேற்று - அழுக்குப்பொருந்திய சேற்றில், பல் நெடுங்காலம்-மிக்க நெடுங்காலம், அழுத்தி-அழுந்தப்பண்ணி,இன்னு வரை இல்-துன்பம் அளவில்லாத, தண்டத்து-தண்டத்தினால், மாறு-நீங்காத,கடுந்துயர்-கொடியதுயரத்துக்கேதுவாகிய, நிரயம் சேரினும்-நரகத்தையடைந்தாலும்,சேர்க-அடைவதாக, உரையிடை-சொல்லினால், ஏனோர்-அயலவர், என்னை ஆனுதுவிரும்பி-என்னைநீங்காதுவிரும்பி, நல்லன் எனினும் - நல்லவன் என்று சொன்னாலும், என்க-சொல்லுக, அவரோ-அவர்களே,அல்லன் எனினும் - தீயவன் என்றுசொன்னாலும், என்க - சொல்லுக, நில்லா - நின்று, திருவொடுதிளைத்து - செல்வத்தை யநுபவித்து, பெருவளம் சிதையாது - பெருவளம் அழியாமல், இன்பத்து அழுந்தினும் - சுகத்தில் அழுந்தினாலும், அழுந்துக - அழுந்துவதாக, அல்லா - அல்லாத, துன்பம் துதையினும்-துன்பம் மேலிடினும், துதைக-மேலிடுக,முன்பின்-முன்போல, இளமையொடுபழகி-இளமைப்பருவத்தோடு பயின்று,கழிமூப்புக்குறுகாது-மிக்கமுதுமைவராமல், என்றும் இருக்கினும்-எக்காலத்தும் இருந்தாலும், இரு

க்க - இருப்பதாக, அன்றி - அல்லாமல், இன்றே இறக்கினும் - இப்பொழு தேயிறந்தாலும், இறக்க - இறப்பதாக, ஒன்றினும் - இவற்றுள் ஒன்றிலா யினும், வேண்டலும் இலன் - விரும்புதலும் இல்லேன், வெறுத்தலும் இலன் - வெறுத்தலும் இல்லேன், எ - று.

இறைவர்க்குக் கொன்றைமாலை சிறந்தமையால், தார் என்பதற்குக் கொன்றைமலர்மாலையென்றுரைக்கப்பட்டது. "ஒருபாற்றோடு மொருபாற் குழையுமிருபாற்பட்டமேனியெந்தை" என்றது அர்த்த நாரீச்சுரனை. "இமையாநாட்டத்தொருபெருங்கடவுள் வானவர்" என்பதற்கு, இமையாத கண்களையுடைய ஒப்பற்ற பெரிய கடவுட்டன்மை யமைந்ததேவர் என்று ரைத்தலுங் கூடும். ஐவகையமளி என்றது - இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி என்பவைகளாற் செய்யப்பட்ட சயநங் களை.

இறைவனே, உன்னடியாரோடு கூடி, "உன் திருநடநத்தையும், உன் திருவடியையும் காணவும் அணுகவும் பெற்றேனாதலால், இனி, உயர்ந்த வையாகிய சுவர்க்காதிகளில் விருப்பையும், தாழ்ந்தவையாகிய நரகாதிக ளில் வெறுப்பையும் அடையேன் என்பது கருத்து.

வெண்பா.

37. ஆனேறேபோந்தாலழிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினுநன்றன்றே-வானோங்கும்
வாமாண்பொழிற்றில்லைமன்றைப்பொலிவித்த
கோமானையித்தெருவேகொண்டு.

இ - ள். ஆன்ஏறே-இடபமே; வான்ஓங்கும்-ஆகாயமட்டும் உயர்ந்த, வாமம் - அழகுபொருந்திய, மாண் - பெருமையமைந்த, பொழில் - பூஞ் சோலைசூழ்ந்த, தில்லை - திருத்தில்லையின்கண், மன்றை - பொன்னம்பலத் தை, பொலிவித்த - விளங்கச்செய்த, கோமானை - பெருமானை, இத்தெரு வே - இந்தவீதிவழியே, கொண்டுபோந்தால்-(நீ) கொண்டுவந்தால், அழிவு உண்டே - (அதனால் உனக்கு) கெடுதியுண்டோ, அன்பு உடைய - (அவன் மீது) அன்புள்ள, நானே தான்வாழ்ந்திடினும்-நான் தான் உயிர்வாழினும், நன்று அன்றே - நன்மையல்லவோ. எ - று.

இது தலைமகள் கூற்று. துறை ஏற்றையிரத்தல். தில்லை மன்றைப் பொலிவித்த என்றமையால் இறைவனது திருமேனியொளியை வரைய றுத்தல் கூடாதென்பதாயிற்று. "பொன் பணைத்தன்னவிறை" என்றார் திருவாதவூரடிகளும். வாமம் வாம் எனக்குறைந்து நின்றது.

இடபமே, இறைவனை உன்மேற்கொண்டு இந்தத் தெருவழியே வந்தால் உனக்குக் கெடுதியாமோ, அன்றி நான்தான் உயிர்வாழ்ந் திருப்பினும் அது உனக்குக்கெடுதியாமோ வென்பது கருத்து.

கலித்துறை.

38. கொண்டல்வண்ணத்தவனுன்முகனிந்திரன்கோமகுடத்
தண்டர்மிண்டித்தொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக்கென்னினிநானவன்றன் [னே.
தொண்டர்தொண்டர்க்குத்தொழும்பாய்த்திரியத்தொடங்கின

இ - ள். கொண்டல் வண்ணத்தவன் - மேகநிறத்தையுடைய திருமாலும், நான்முகன் - பிரமனும், இந்திரன் - இந்திரனும், கோ மகுடத்து- அழகிய முடியையுடைய, அண்டர் - தேவர்களும், மிண்டி - நெருங்கிநின்று, தொழும் - வணங்குகின்ற, அம்பலக் கூத்தனுக்கு - பொன்னம்பலக் கூத்துடையானுக்கு, அன்புசெய்யா - அன்புசெய்யாத, மிண்டர் - வன்மனத்தோர், மிண்டித்திரிவார் - அடர்ந்து திரிவார்கள், எனக்கு என் - (அதனால்) எனக்கு என்னகுறை, இனி - இனி, நான் - அடியேன், அவன் தன் - அவனுடைய, தொண்டர் தொண்டர்க்கு - அடியார்க் கடியார்க்கு, தொழும்பு ஆய் - அடிமையாகி, திரியத்தொடங்கினன் - திரியத்தொடங்கினேன். எ -று.

திருமால் முதலிய தேவர்கள் வணங்குதற்குரிய தில்லையம்பலக் கூத்தனுக்கு அன்பு செய்யாத வன்மனத்தோர் நெருங்கித் திரிகின்றார்கள், அதனால் எனக்கொருகுறையுமில்லை, நான் அந்தச் சிவபெருமானுடைய அடியார்க் கடியார்க்கு அடிமையாகித் திரியத்தொடங்கினேன் என்பது கருத்து.

கழிநெடில்விருத்தம்.

39. தொடரகளைத்தங்கமுன்புளவாயின
தொழில்கண்மறுத்தொன்றுமொன்றியிடாதொரு
சுளிவுதலைக்கொண்டுபுன்புலைவாரிகள்
துளையொழுகக்கண்டுசெிந்தனையோய்வொடு
நடைகெடமுற்கொண்டபெண்டிர்பொறுவொரு
நடலைநமக்கென்றுவந்தனபேசிட
நலியிருமற்கஞ்சியுண்டிவெறுவிழும்
நரகவுடற்கன்புகொண்டலைவேனினி
மிடலொடியப்பண்டிலங்கையர்கோனெரு
விரலினமுக்குண்டுபெண்பலபாடிய

விரகுசெவிக்கொண்டுமுன்புளதாகிய
வெகுளிதவிர்த்தன்றுபொன்றியிடாவகை
திடமருள்வைக்குஞ்செழுஞ்சுடரூறிய
தெளியமுதத்தின்கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொனம்பலமேவிய
சிவனைநினைக்குந்தவஞ்சதுராவதே.

இ - ள். தொடர - தொடர்ச்சியாக, நரைதங்க - முதுமைவந்து தங்குதலால், முன்பு உளவாயின - முன்னேயுள்ளனவாகிய, தொழில்கள் மறுத்து - தொழில்கள் நிகழாமல் தடைபட்டு, ஒன்றும் ஒன்றியிடாது - ஒன்றுந்தோன்றாமல், ஒருசுளிவுதலைக் கொண்டு-ஒருகோவமே மேலிட்டு, புல்புலைவாரிகள் - அற்பமாகிய புலைநாற்றம் பொருந்திய நீர்கள், துளை ஒழுகக்கண்டு - நவத்துவாரங்களிலும் ஒழுகநோக்கி, சிந்தனை ஓய்வொடு - மனத்தளர்ச்சியோடு, நடைகெட - நடையுங்கெட்டொழிய, முன்கொண்ட பெண்டிர்-முன்னேதாம் கொண்டமனைவியர், பொறா-பொறுக்கக்கூடாத, ஒரு நடலை - ஒரு துன்பம், நமக்கு - நமக்கு நேர்ந்ததே, என்று வந்தனபேசிட - என்றுவாய்க்கு வந்த கடுஞ்சொற்களைப் பேசாநிற்க, நலி - வருத்துகின்ற, இருமற்கு அஞ்சி - இருமலுக்குப்பயந்து, உண்டிவெறா - உணவை வெறுத்து, விழும் - (உயிர்நீங்கி) விழுகின்ற, நரக உடற்கு - மலவுடம்பின் மீது, அன்புகொண்டு - அன்புபூண்டு, அலைவேன் - திரிகின்ற நான், இனி - இனி, மிடல் ஒடிய - வலிகெட, பண்டு - முற்காலத்தில், இலங்கையர் கோன் - இராவணன், ஒருவிரலின் - ஒருவிரலினால், அமுக்குண்டு - அழுத்தப்பட்டு, பண்பலபாடிய விரகு - பலபண்களைப்பாடிய (அவனது) காதவுணர்ச்சியை, செவிக்கொண்டு - செவியிலேற்று, முன்பு உளதாகிய - முன்னே தமக்குண்டாகிய, வெகுளிதவிர்த்து-வெகுளியை விட்டு, அன்று பொன்றியிடாவகை - அப்பொழுது இறவாவண்ணம், திடம் - உறுதியாகிய, அருள்வைக்கும் - அருள்வைத்த, செழுஞ்சுடர் - செழிய சோதியும், ஊறிய - சுரந்த, தெளி - தெளிந்த, அமுதத்தின் கொழுஞ்சுவை - அமிர்தத்தின் வளமாகிய சுவையும் ஆகி, நீடிய-பெரிதாகிய, தில்லைநகரில் - தில்லைநகர்க்கண்ணே, செம்பொன் அம்பலம்மேவிய-பொற்சபையைப் பொருந்தியிருக்கிற, சிவனை-மங்களகரனை, நினைக்கும் - நினைக்கும்படியான, தவம் - தவமே, சதுர்ஆவது - எனக்குச் சதுரப்பாடாவது. எ - று.

அங்கம் நரைத்து எனவைத்து உடம்புமுழுது முள்ளமயிர் வெளுத்து எனினுமமையும். முதுமையில் கோவம் அதிகரிப்பது இயல் பாதலால், "ஒருசுளிவுதலைக் கொண்டு" என்றார், நவத்துவாரங்களாவன - செவித்தொளையிரண்டும், மூக்குத்தொளையிரண்டும், கண்ணிரண்டும், வாயொன்றும், குதமொன்றும், குய்யமொன்றுமாம்.

இந்தப்பொய்யாகிய மலவுடம்பின்மீது அன்புவைத் தலைகின்ற நான், இனி, தில்லைப் பொன்னம்பலவாணனுக்கு அன்பு பூண்டு ஒழுகுதலே சதுரப்பாடாவது என்பது கருத்து.

நேரிசையாசிரியப்பா.

40. சதுர்முகன்றந்தைக்குக்கதிர்விடுகடவுள்
ஆழிகொடுத்தபேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்தவியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டுமொனுப்பெருவளத்
தளகையொன்றுந்தளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்தசெல்வப்போற்றி
தாணிழலடைந்தமாணிக்காக
நாண்முறைபிறழாதுகோண்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப்படிமிசைத்தெறிக்க
உதைத்துயிரளித்தவுதவிபோற்றி
குலைகுலைகுலைந்தநிலையாத்தேவர்
படுபேரவலமிடையின்றுவிலக்கிக்
கடல்விடமருந்தினகருணைபோற்றி
தவிராச்சீற்றத்தவுணர்மூவெயில்
ஒல்லனல்கொளுவியொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்தவீரம்போற்றி
பூமென்கரும்பொடுபொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்தகண்ணுதல்போற்றி
தெய்வயாளிகைமுயன்றுகிழித்தெனக்
கரியொன்றுரித்தபெருவிறல்போற்றி
பண்டுபெரும்போர்ப்பார்த்தனுக்காகக்
கொண்டுநடந்தகோலம்போற்றி
விரற்பதமொன்றில்வெள்ளிமலையெடுத்த
அரக்கனைநெரித்தவாண்மைபோற்றி
விலங்கல்விண்டுவிழுந்தெனமுன்னாட்
சலந்தரற்றடிந்ததண்டம்போற்றி
தாதையையெறிந்தவேதியச்சிறுவற்குப்
பரிகலங்கொடுத்ததிருவுளம்போற்றி

நின்முதல்வழிபடத்தன்மகற்றடிந்த
தொண்டர்மனையிலுண்டல்போற்றி
வெண்ணெயுண்ணவெண்ணுபுவந்து
நந்தாவிளக்கைநுந்துபுபெயர்த்த
தரவுபுல்லெலிக்குமூவுலகாள
நொய்தினிலளித்தகைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப்புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்றசேவகம்போற்றி
வரிமிடற்றெறுழ்வலிமணியுகுபகுவாய்
உரகம்பூண்டவொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங்கலந்துழியொருபால்
திங்கள்சூடியசெஞ்சடைபோற்றி
கடவுளிருவரடியுமுடியும்
காண்டல்வேண்டக்கனற்பிழம்பாகி
நீண்டுநின்றநீளம்போற்றி
ஆலம்பில்குநின்சூலம்போற்றி
கூறுதற்கரியநின்னேறுபோற்றி
ஏகவெற்பன்மகிழுமகட்கிடப்
பாகங்கொடுத்தபண்புபோற்றி
தில்லைமாநர்போற்றிதில்லையுள்
செம்பொனம்பலம்போற்றியம்பலத்
தாடுநாடகம்போற்றியென்றுங்
கென்றும்போற்றினுமென்றனக்கிறைவ
ஆற்றலில்லையாயினும்
போற்றிபோற்றிநின்பொலன்பூவடிக்கே.

இ - ள். சதுர் முகன்தந்தைக்கு - திருமாலுக்கு, கதிர்விடு - கிரணங்களை வீசுகின்ற, கடவுள் - தெய்வத்தன்மையமைந்த, ஆழிகொடுத்த - சக்கரத்தையருளிச்செய்த, பேர் அருள்போற்றி - பெரியகிருபைக்கு நமஸ்காரம், முயற்சியொடுபணிந்த - மனவெழுச்சியோடுதொழுத, இயக்கர் கோனுக்கு-யக்ஷராஜனாகியகுபேரனுக்கு,மாநிதி இரண்டும்-பெரியசங்கநிதிபதுமநிதிகளிரண்டையும்,ஆறு நீங்காத, பெருவளத்து-பெரியவளத்தோடு கூடிய, அளகை ஒன்றும் - அளகாபுரியொன்றையும், தளர்வு இன்றி நிறுவிய செல்வம் - ஒருகாலத்தும் அழிவில்லாமல் நிலைந்த செல்வத்தையும், கொடுத்த -

அருளிச்செய்த, செல்வம்போற்றி - பெருஞ் செல்வத்துக்கு நமஸ்காரம், தாள் நிழல் அடைந்த - திருவடிநிழலைச் சேர்ந்த, மாணிக்காக - மார்க்கண்டனுக்காக, நாள் முறைபிறழாது - ஆயுணாள்களின் முறைவழுவாமல், கோள்முறைவலித்து - கவர்தலாகிய முறைமையில் உறுதிகொண்டு, பதைத்துவரும் கூற்றை-பதைத்துக் கொண்டு வந்தயமனை, படிமிசைத்தெறிக்க-பூமியின் மீது குலைந்துவிழும்படி, உதைத்து - உதைத்து, உயிர் அளித்த - அம்மார்க்கண்டனது உயிரையருள்செய்த, உதவிபோற்றி-உதவியின் பொருட்டுவணக்கம், குலை குலை குலைந்த - மிகவும் நடுங்கின, நிலையாத்தேவர் - நிலையற்ற தேவர்கள், படு - அடைந்த, பேர் அவலம் - பெருந்துன்பத்தை, இடையின்றி விலக்கி - தாழாது நீக்கி, கடல்விடம் அருந்தின - கடனஞ்சையுண்ட, கருணைபோற்றி - கருணைக்கு நமஸ்காரம், தவிரா சீற்றத்து - நீங்காத கோவத்தையுடைய, அவுணர் - அவுணர்களுடைய, மூவெயில் - மும்மதில்களை, ஒல் அனல் கொளுவி - விரைவில் நெருப்புமூட்டி, ஒரு நொடி - ஒரு நொடிப்பொழுதில், பொடிபட-நீறாக, வில் ஒன்றுவளைத்த - ஒரு வில்லைவளைத்த, வீரம்போற்றி - வீரத்தன்மைக்கு வணக்கம், பூமெல் கரும்பொடு - புஷ்பபாணம் மெல்லியகருப்புவில் என்பவற்றோடு, நிலத்து-பூமியில், பொடிபட-நீறாய்விழ, காமனைப்பார்த்த - மன்மதனை நோக்கின, கண்ணுதல் போற்றி - நெற்றிக்கண்ணுக்கு வணக்கம், தெய்வயாளி - தெய்விகமாகிய யாளியானது, கைமுயன்று கிழித்தென - கையினால் முயன்று கிழித்தாற்போல, கரிஒன்று உரித்த - கயமுகாசுரனையுரித்த, பெருவிறல் போற்றி - பெரியவெற்றிக்கு நமஸ்காரம், பண்டு - முற்காலத்தில், பெரும் போர் - பெரும் போர்செய்ய வல்லோனாகிய, பார்த்தனுக்காக - அருச்சுநனுக்காக, கொண்டு நடந்த - பூண்டு நடந்த, கோலம்போற்றி - வேட்டுவக்கோலத்துக்கு வணக்கம், பதவிரல் ஒன்றில் - திருவடிவிரலொன்றினால், வெள்ளிமலையெடுத்த அரக்கனை - இராவணனை, நெரித்த - நெரியப்பண்ணின, ஆண்மைபோற்றி - ஆண்டன்மைக்குவணக்கம், விலங்கல் விண்டு விழுந்தென - மலைபிளவுபட்டு விழுந்தாற்போல, முன்னாள் - முற்காலத்தில், சலந்தரன் தடிந்த - சலந்தராசுரனைக்கொன்ற, தண்டம் போற்றி - சிக்ஷைக்கு நமஸ்காரம், தாதையை எறிந்தவேதியச்சிறுவற்கு - தந்தையை வெட்டின சண்டேசுரநாயனருக்கு, பரிகலங்கொடுத்த - உண்கலம் கொடுத்தருளின, திருவுளம்போற்றி-திருவுளத்துக்கு வணக்கம், நின்முதல் வழிபட - உன் முதன்மையை வழிபடும் பொருட்டு, தன்மகன் தடிந்த - தன்புதல்வனைக் கொன்ற, தொண்டர் மனையில் - சிறுத்தொண்டர் வீட்டில், உண்டல் போற்றி - அமுது செய்தலுக்குவணக்கம், வெள்நெய் உண்ண எண்ணுபு வந்து-வெண்மையாகிய நெய்யையுண்ண நினைத்துவந்து, நந்தா விளக்கை - எரியாதவிளக்கினை, தூண்டுபு பெயர்த்த - தூண்டிப்பெயர்

த்த, தரவு - தருணத்தில், புல் எலிக்கு - அற்பமாகிய எலிக்கு, மூவுலகு ஆள - மூன்று லகங்களையுமாளும்படி, நொய்தினில் அளித்த - விரைவிற் கொடுத்த, கைவளம் போற்றி - கையின் ஔதார்யத்துக்கு வணக்கம், பொங்கு - விளங்குகின்ற, உளை-புறமயிரையும், அழல்வாய் - நெருப்பைக் காலும் வாயையும், புகைவிழி-புகைகின்ற கண்களையும் உடைய,ஒரு தனிச் சிங்கம் கொன்ற-ஒப்பற்ற நரசிங்கத்தைவதைத்த, சேவகம் போற்றி-வீரத் தன்மைக்கு வணக்கம், வரிமிடறு-கீற்றுள்ள கழுத்தையும், எறுழ்வலி-மிக் கவலிமையையும், மணி உகுபகுவாய்-மாணிக்கஞ் சிந்துகின்ற பிளந்தவா யையும் உடைய, உரகம் பூண்ட-சர்ப்பங்களைத்தரித்த,ஒப்பனைபோற்றி-அல ங்காரத்துக்கு வணக்கம், கங்கையும், கங்கையாறும்,கடுக்கையும்-கொன்றை மாலையும், கலந்துழி - சேர்ந்திருக்கு மிடத்தில், ஒருபால் - ஒருபக்கத்தில், திங்கள் சூடிய - சந்திரனையணிந்த, செஞ்சடைபோற்றி - செஞ்சடைக்கு வணக்கம், கடவுளர் இருவர்-இரண்டு தேவர்கள், அடியும் முடியும் காண் டல் வேண்ட-அடியையும் முடியையும் காண்டலை விரும்ப, கனல் பிழம்பு ஆகி - அனற்றிரளாகி, நீண்டு நின்ற - நெடுகிநின்ற, நீளம்போற்றி - நெடு மைக்கு வணக்கம், ஆலம் பில்கும் - விஷத்தைச் சிந்துகின்ற, நின் சூலம் போற்றி - உன்சூலத்துக்கு நமஸ்காரம், கூறுதற்கு அரிய - சொல்லுதற் கரிய, நின் ஏறுபோற்றி - உன்னிடபத்துக்கு வணக்கம், ஏக வெற்பன் - ஒப்பற்ற மலையரையன், மகிழும் - களிக்கும்படி யான, மகள் - புதல்வியா கிய பார்வதிதேவிக்கு, இடப்பாகம் கொடுத்த-இடதுபாகத்தைக் கொடுத்த, பண்புபோற்றி - மங்கள குணத்துக்கு நமஸ்காரம், தில்லை மாநகர் போற்றி- தில்லைப்பெரும் பதிக்கு வணக்கம், தில்லையுள்-தில்லையினுள்ளிருக்கிற, செம் பொன் அம்பலம் போற்றி - பொற்சபைக்கு வணக்கம், அம்பலத்து ஆடும்- பொற்சபையிலாடுகின்ற, நாடகம் போற்றி - நடநத்துக்கு நமஸ்காரம், என்று ஆங்கு என்றும் போற்றினும் - என்று அவ்வாறு எக்காலத்தும் தொழுதாலும், இறைவ - இறைவனே, என்றனக்கு - எனக்கு, ஆற்றல் இல்லை - தணிவுண்டாதலில்லை, ஆயினும் - ஆனாலும், நின்பொலன் பூ அடிக்கு - உன்னழகிய தாமரைமலர்போன்ற திருவடிக்கு, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், எ - று.

மாணி - பிரமசாரி. மும்மதில்களாவன, இருப்பினானும், வெள்ளியினா னும், பொன்னானும் இயன்றமதில்கள். அவுணர் - திரிபுரவாசிகள். யாளி, சிங்கமெனினும் பொருந்தும். யானையுரித்தசெய்தி - சிவபெருமான் காசி யில் கயமுகாசுரனைக் கொன்றுஅவன் தோலைப் போர்த்தருளினனென் பது. சலந்தரனைக்கொன்றசெய்தி - சலந்தரன் திருமால் முதலிய தே வர்களைவென்று சிவபெருமானோடு போராடக் கைலையையணுகியபோ து, அதனை அறிந்த இறைவனும் விருத்தவேதியனாக எதிர்வந்து பூமியில்

ஓர் சக்கரம் கிழித்து, இதனைப் போர்த்தொடுவென்றுசொல்ல, அவ்வாறே போர்க்கையில் அந்நிலமேசக்கரமாய் அச்சலந்தரனைக் கொன்று சென் றதென்பது. பரிகலங்கொடுத்தசெய்தி - சண்டேசுரநாயனார் மண்ணியா ற்றங்கரையில் ஆத்திமரத்தின்கீழ் மணலினால் சிவலிங்கப் பெருமானைப் பிரதிஷ்டைசெய்து, தாம் மேய்த்து வந்த பசுவின்பாலினால் அபிஷேகஞ் செய்துவர, இதைக் கேள்வியுற்றஅவர் பிதா அங்குச்சென்று நாயனார் நிலை யுணராது பிள்ளைத்தனத்தால் விளையாட்டாகப் பாலை மணலில் ஊற்றுகி ன்றனர் என்று கோபங்கொண்டு, திருமஞ்சனப் பாற்குடங்களைக் காலா லிடறிச்சிந்தினர், அதைக்கண்ட நாயனார் மனம்பொறுமல் தம்மருங்கிலிரு ந்த கோலையெடுத்து இடறியபாதங்களில் வீச, அதுவே மழுவாயுதமாக அவனுடைய இரண்டு கால்களையும் தறிக்க மண்மேல் விழுந்தனன், அவ் வாறு பிதாவிழுந்தது கண்டும் சிவார்ச்சனையை விடாது செய்ய, பரமசி வம் ரிஷபவாகனத்துடன் பார்வதிசமேதராய் எழுந்தருளி, தம்மை வண ங்கின அன்பரை எடுத்தணைத்து, தொண்டருக் கெல்லாம் தலைவராகு முறைமையளித்து, தாம் உண்ட உண்கலமும், உடுப்பவைகளும், சூடும் பூமாலைகளும் உனக்கே உரியனவாகக் கடவனவென்று,சண்டீசனென்னும் பதமும் தந்து, சிவலோகத்திற் கெழுந்தருள, சண்டீசநாயனாரும் சிவபெ ருமானைத் தொழுது உடன்சென்றனர் என்பது. எலி மூவுலகாளப்பெற்ற செய்தி - சிவாலயத்தில் அணைந்துபோகும் சமயமாயிருந்த நெய்த்தீபத்திலு ள்ள நெய்யைக்குடிக்கச்சென்ற எலி அதிலுள்ள திரியை எறிடச்செய்து தூண்டிய காரணத்தால் மறுமையில் மகாபலிச்சக்கிரவர்த்தியாகப் பிறந்து திரிலோகாதிபத்தியத்தைப் பெற்றதென்பது. சிங்கங்கொன்றசெய்தி-இர ணியனைக்கொன்று கோபந்தணியாதிருந்த நரசிங்கத்தை பரமசிவன் சர பமாகச்சென்று கொன்றன ரென்பது.

திருமாலுக்குச் சக்கரமளித்தல் முதலாகிய உன் பிரபாவங்களைப் பல கால் புகழ்ந்துரைப்பினும் எனக்கு ஒரு அடைவுண்டாத லில்லையாயினும், உன்திருவடித் தாமரையைவாழ்த்தி வணங்குவதே யெனக்குத் தொழில் என்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.

கோயில்நான்மணிமாலை.

முற்றிற்று.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

# திருக்கழுமலமும்மணிக்கோவை.

இணைக்குறளாசிரியப்பா.

1. திருவளர்பவளப்பெருவரைமணந்த
மரகதவல்லிபோலொருகூற்றின்
இமயச்செல்விபிரியாதுவிளங்கப்
பாய்திரைப்பரவைமீமிசைமுகிழ்த்த
அலைகதிர்ப்பரிதியாயிரந்தொகுத்த
வரன்முறைதிரியாதுமலர்மிசையிருந்தெனக்
கதிர்விடுநின்முகங்காண்டொறுங்காண்டொறும்
முதிராவிளமுலைமுற்றாக்கொழுந்தின்
திருமுகத்தாமரைசெவ்வியின்மலரநின்
தையல்வாணுதற்றெய்வச்சிறுபிறை
இளநிலாக்காண்டொறுமொளியொடும்புணர்தநின்
செவ்வாய்க்குமுதஞ்செவ்விசெய்யநின்
செங்கைக்கமலமங்கைவனமுலை
அமிர்தகலசமமைவினேந்த
மலைமகடனதுநயனக்குவளைநின்
பொலிவினொடுமலரமறையோர்கழுமல
நெறிநின்றுபொலியநாகர்நாடு
மீமிசைமிதந்துமீமிசையுலகம்
கீழ்முதற்றாழ்ந்து
ஒன்றுவந்தகுன்றுவெள்ளத்
துலகமூன்றுக்குங்களைகணாகி
முதலில்காலமினிதுவீற்றிருந்துழித்
தாதையொடுவந்தவேதியச்சிறுவன்

தளர்நடைப்பருவத்துவளர்பசிவருத்த
அன்னையோவென்றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தருளட்டிக்குழைத்த
ஆனந்தவடிசிலருத்தியருள
அந்தணன்முனிந்துதந்தாரியாரென
அவனைக்காட்டுவனப்பவானார்
தோடுடையசெவியனென்றும்
பீடுடையபெம்மானென்றும்
கையிற்சுட்டிக்காட்ட
ஐயநீவெளிப்பட்டருளினையாங்கே.

இ - ள். திருவளர் - அழகுவளராநின்ற, பவளப்பெருவரைமணந்த- பெரிய பவளமலையைச்சேர்ந்த, மரகத வல்லிபோல்-பச்சைக்கொடிபோல, ஒரு கூற்றில் - ஒருபாகத்தில், இமயச்செல்வி-மலைமகளாகிய உமாதேவி, பிரியாது விளங்க - நீங்காமல் விளங்கவும், பாய்திரைப்பரவைமீமிசை - பாய்கின்ற அலைகளையுடைய கடல் முகட்டில், முகிழ்த்த - குவிந்த, அலகதிர் - எறியா நின்ற கிரணங்களையுடைய, பரிதி ஆயிரம் தொகுத்த - ஆயிரம் சூரியர்கள் தொகுக்கப்பட்ட, வரல்முறைதிரியாது - வரன்முறைபிறழாமல், மலர்மிசை இருந்தென - தாமரைமலர் மேலிருந்தாற்போல, கதிர்விடும் நின்முகம் - கிரணங்களைப் பரப்புகின்ற உன் திருமுகத்தை, காண்தொறும் காண்தொறும் - காணுந்தோறும் காணுந்தோறும், முதிரா இளமுலை - முதிராத இளங்கொங்கைகளையுடைய, முற்றாக்கொழுந்தின் - முற்றாத்தளிராகிய உமாதேவியின், திருமுகத்தாமரை செவ்வியில் மலர - திருமுகமாகிய தாமரைமலர் அழகோடுமலரவும், நின் தையல் - உன் திருத்தேவியின், வாள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றியாகிய, தெய்வம் சிறுபிறை - தெய்விகமாகிய சிறியபிறையின், இளநிலா - இளநிலவை, காண்தொறும் - காணுந்தோறும், ஒளியொடும் புணர்ந்த - ஒளியோடுங் கூடிய, நின் செவ்வாய் குமுதம் - உன்செவந்தவாயாகிய குமுதமலர், செவ்விசெய்ய - அழகைச்செய்யவும், நின் செங்கைக்கமலம் உன் செம்மையாகிய கைத்தாமரை, மங்கை - உமாதேவியின், வனம்முலை- அழகியஸ்தநங்களாகிய, அமிர்தகலசம் - அமுதகலசங்களை, அமைவின் ஏந்த - அமைவொடு தாங்கவும், மலைமகள்தனது - மலைமகளது, நயனக்குவளை - நேத்திரோத்பலங்கள், நின்பொலிவினொடு மலர - உன்திருமேனிப்பிரகாசத்தால் மலரவும், மறையோர்-வேதியர்கள் வாழ்கின்ற, கழுமலம் - திருக்கழுமலமானது, நெறி நின்றுபொலிய - நன்னெறிநிலைத்து விளங்கவும், நாகர்நாடு - பாதலம், மீமிசைமிதந்து - மேலேகிளம்பி, மீமி

சை உலகம்-விண்ணுலகம், கீழ்முதல் தாழ்ந்து-பாதலமுதலாகக் கீழ்போய், ஒன்றுவந்த - பொருந்தவந்த, குன்றாவெள்ளத்து-நிறைவெள்ளத்தில், உலகமூன்றுக்கும் - மூன்றுலகங்களுக்கும், களைகண் ஆகி - பற்றுக்கோடாகி, முதல் இல்காலம் - அநாதிகாலம், இனிது வீற்றிருந்துழி - இனிதுவீற்றிருந்த காலத்தில், தாதையொடுவந்த வேதியச் சிறுவன்-தந்தையோடு வந்த அந்தணச்சிறுவன், தளர்நடைப்பருவத்து-தளர்நடைப்பருவத்தில், வளர் பசிவருத்த - மிக்கபசிவருத்தலால், அன்னாய் ஓ என்று அழைப்ப - அன்னையே ஓவென்றழைக்க, முன்னின்று - அவனுக் கெதிர்நின்று, ஞானபோனகத்து - ஞானாமிர்தத்துடன், அருள் - அருள் அமிர்தத்தையும், அட்டிக்குழைத்த-சேர்த்துக்குழைத்த, ஆனாத்திரளை-நீங்காத திரளையை, அவன்வயின் அருள - அவனிடத்துப் பிரசாதிக்க, அந்தணன் முனிந்து - வேதியன் சினந்து, தந்தார்யார் என - உனக்குக் கொடுத்தவர்யாரென்று வினவ, அப்ப - அப்பா, அவனைக்காட்டுவன்-அவனைக்காட்டுவேன், வான் ஆர்-மேன்மைநிறைந்த,தோடுடைய செவியன் என்றும்-தோடுடையசெவியன் எனவும்,பீடுடைய பெம்மான் என்றும்-பீடுடைய பெம்மான் என்வும், கையின் சுட்டிக்காட்ட - கையினால்சுட்டிக்காட்ட, ஐய-ஐயனே, ஆங்கே-அப்பொழுதே, நீ வெளிப்பட்டு அருளினை-நீ வெளிப்படத்தோன்றியருளினாய். எ - று.

இறைவனது திருமேனி பவளமலைபோலவும்,அதினொருபாகத்துக் கலந்திருக்கின்ற வுமாதேவிபச்சைப் பசுங்கொடிபோலவுந் தோன்றுதலால், "திருவளர் பவளப்பெருவரை மணந்த, மரகதவல்லிபோலொரு கூற்றின், இமயச்செல்விபிரியாது விளங்க" என்றும், ஆயிரஞ் சூரியர்போல விளங்குகின்ற இறைவரது திருமுகத்தைக் காணுந்தோறும் உமாதேவி யின் திருமுகத்தாமரை மலர்தலால், "பாய்திரைப்பரவை மீமிசைமுகிழ்த்த, அலைகதிர்ப்பரிதியாயிரந்தொகுத்த, வரன்முறை திரியாது மலர் மிசையிருந்தெனக் கதிர்விடு நின்முகங்காண்டொறுங் காண்டொறும், முதிராவிள முலைமுற்றாக்கொழுந்தின்,திருமுகத்தாமரைசெவ்வியின்மலர" என்றும்,இறைவியின் நெற்றிச்சிறுபிறையின் இளநிலவைக் காணுந்தோறும் இறைவரது செவ்வாய்க்கு முதமலர் சிறிது மலர்ந்தழகு செய்தலால், "நின்றையல் வாணுதற் றெய்வச் சிறுபிறை, இளநிலாக்காண்டொறு மொளியொடும் புணர்ந்த நின் செவ்வாய்க்கு முதஞ் செவ்விசெய்ய" என்றும், இறைவரது கைத்தாமரை இறைவியின் திருத்தனமாகிய பாற்குடத்தைத் தாங்குதலால்,நின் செங்கைக்கமல மங்கைவன முலை அமிர்தகலசமமை வினேந்த" என்றும், இறைவியின் திருக்கண்கள் இறைவரது திருமேனியழகில் பதிந்திருத்தலால்,"மலைமகடனது நயனக் குவளை நின் பொலிவினொடு மலர" என்றும், வேதாத்யயனம் பண்ணுத அந்தணர் திருக்கழுமலத் தில்லையாதலாலும், அத்திருப்பதி

அம்மறையோர்க்கே யுரியதாதலாலும், "மறையோர் கழுமலம்" என்றும், முன்னொருகாலத்து மகாப்பிரளயத்தில், மூன்றுலகங்களுக்கும் ஆதாரமாகி மிதந்திருந்ததனால் திருத்தோணிபுரமெனப் பெயர்பெற்ற இத்திருப்பதியில் வீற்றிருத்தலால், "நாகர்நாடு மீமிசை மிதந்து, மீமிசையுலகங்கீழ் முதற்றாழ்ந்து,ஒன்றாவந்த குன்றாவெள்ளத், துலக மூன்றுக்குங் களைகணாகி, முதலில் காலமினிது வீற்றிருந்துழி" என்றும், அத்திருப்பதியில் பசியினால் வருந்தி அன்னையையழைத்த திருஞானசம்பந்தருக்கு, ஞானாமிர்தத்தை யருளொடு குழைத்தருளினதனால்' "தாதையொடுவந்த வேதியச்சிறுவன், தளர் நடைப்பருவத்து வளர் பசிவருத்த, அன்னாயோ வென்றழைப்ப முன்னின்று, ஞானபோன கத்தருளட்டிக்குழைத்த, ஆனாத்திரளை யவன்வயினருள" என்றும், அதைக்கண்ட அவர் தந்தை முனிந்து, இதை உனக்குக் கொடுத்தார் யாவர் என வினவ, திருஞானசம்பந்தர் அவரைக்காட்டுவேன்வாவென்று தந்தையையழைத்துப்போய், இவர்தாமென்று கையினாற் சுட்டிக் காட்டி, "தோடுடைய செவியன், எனத்தொடங்கித் திருப்பதிகம் பாடி முடித்தமையால், அந்தணன் முனிந்து தந்தார்யாரென, அவனைக்காட்டுவனப்பவரனார், தோ ஒடுடைய செவியனென்றும், பீ இடுடைய பெம்மானென்றும் கையிற்சுட்டிக்காட்ட" என்றும், காட்டின அளவில் இறைவன் வெளிப்பட்டருளினமையால் "ஐய நீ வெளிப்பட்டருளினை" என்றும் கூறினர். அந்தணன் முனிந்தமைக்குக் காரணம் இழிசாதியர் தந்தாரோவென்னும் ஐயம். ஆங்கே ஐய நீ வெளிப்பட்டருளினை என்பதற்கு, ஆங்கு, ஐயனே, நீ வெளிப்பட்டருளினை இஃது என்ன வியப்பு என்றுரைத்தலுமாம். இப்பொருட்கு ஏகாரம் வியப்பிடைச்சொல், "புற்றுமாய் மரமாய்ப்புனல் காலேயுண்டியாயண்ட வாணரும் பிறரும், வற்றியாரு நின் மலரடிகாணார்" எனவும் "என் பெழுந்தியங்கும் யாக்கையர்" எனவும் மேலோர் கூறியபடி வருந்தியுங் காணவொண்ணாத இறைவன் இத்தளர் நடைச் சிறுவற்கு வெளிவந்தருளினமை வியப்புக்குக் காரணமாயிற்று.

திருக்கழுமலத்திறைவனே, திருஞானசம்பந்தருக்கு ஞானாமிர்தத்தை யருள்செய்தாற்போல, இச்சிறியேனுக்கும் அருள்செய்ய வேண்டுமென்பது கருத்து.

இந்தத் திருப்பதிக்குத் திருப்பிரமபுரம், வேணுபுரம், திருப்புகலி, வெங்குரு, திருத்தோணிபுரம், திருப்பூந்தராய், திருச்சிரபுரம், திருப்புறவம், திருச்சண்பை, சீகாழி, கொச்சை, திருக்கழுமலம், எனப் பன்னிரு திருநாமங்களுண்டு.

வெண்பா.

**2.** அருளின் கடலடியேனன்பென் னுமாறு
பொருளின் றிரள்புகலிநாதன் - இருள்புகுதுங்
கண்டத்தானென்பாரைக்காதலித் துக்கைதொழுவார்க்
கண்டத்தார் தாமாரதற்கு.

இ - ள். அருளின்கடல் - அருளாகியகடல், அடியேன் - அடியேனது, அன்பு என்னும் ஆறு - அன்பென்னும் நதி, பொருளின் திரள் - பொற்குவை, புகலிநாதன் - புகலிக்கிறைவன், இருள் புகுதும் கண்டத்தான் - இருள் தங்கிய கண்டத்தையுடையவன், என்பாரை - என்பவரை காதலித்து - விரும்பி, கைதொழுவார்க்கு - கைகூப்பிவணங்குவோரது, அதற்கு - அந்தப்பெருமைக் குரியராக, அண்டத்தார் தாம் ஆர் - விண்ணுலகத்தார் தாம் யாவர். எ - று.

திருப்புகலிநாதனது அடியாரைக் கைதொழுவார்க் குண்டாகும் பெருமை தேவர்க்கு மில்லை யென்பது கருத்து. இறைவரது பேரருட் பரப்புக்கு எல்லையில்லையாதலால், "அருளின்கடல்" என்றும், அடியாரிடத் தன்புபெருகிப்பாய்தலால் "அன்பென்னுமாறு" என்றும், "அடியார்க்குப் பொற்குவைபோலுதலால்" "பொருளின் திரள்" என்றும் கூறினர். இருள்புகுதும் கண்டத் தான் என்றது தேவரிடுக் கண் தீர்க்க நஞ்சுண்டு கறுத்திருத்தலை.

கலித்துறை.

3. ஆரணநான்கிற்குமப்பாலவனறியத்துணிந்த
நாரணனான்முகனுக்கரியானடுவாய்நிறைந்த
பூரணனெந்தைபுகலிப்பிரான்பொழிலத்தனைக்கும்
காரணனந்தக்கரணங்கடந்தகருப்பொருளே.

இ - ள். ஆரணம் நான்கிற்கும் - நான்கு வேதங்களுக்கும், அப்பாலவன் - அப்பாற்பட்டவனும், அறியத்துணிந்த - (தன்னிலையை) உணர நிச்சயித்த, நாரணன் நான்முகனுக்கு - திருமாலுக்கும் பிரமனுக்கும், அரியான் - அருமையானவனும், நடுவாய் நிறைந்த பூரணன் - பொதுவாகி நிறைந்த பரிபூர்ணனும், எந்தை - எந்தையும் ஆகிய, புகலிப்பிரான் - புகலிப்பதிக்கிறைவனே, பொழில் அத்தனைக்கும் - உலகங்கள் எல்லாவற்றுக்கும், காரணன் - மூலகாரணனும், அந்தக் கரணம் கடந்த கருப்பொருள்-மனத்துக் கெட்டாத பெரிய பொருளுமாயிருப்பவன். எ-று

இறைவன் சொல்லானறியப் படாதவன் ஆதலால் "ஆரண நான்கிற்குமப்பாலவன்" என்றும், பண்டு தேடிய விண்டு பிரமர்களுக்கு அரியவனுதலால், "அறியத்துணிந்த நாரணனான் முகனுக்கரியான்" என்றும், "எவ்விடத்தும் நீக்க மறநிறைந் திருப்போனுதலால், "நடுவாய் நிறைந்த பூரணன்" என்றும், உயிர்களுக்கெல்லாம் முதற்றந்தையாதலால், "எந்தை" என்றும், வேதாந்தமுதலிய இடங்களைவிட்டு அன்பர்க் கெளியனாய் இத்திருப்பதியிலெழுந் தருளியிருத்தலால், "புகலிப்பிரான்" என்றும், எல்லாவுலகங்களுக்குங்காரணன் ஆதலால், பொழிலத்தனைக்குங் காரணன்" என்

றும், மனாதிக்கெட்டாதவனுதலால், "அந்தக் கரணங்கடந்த" என்றும், இவனிற் பெரியபொருளில்லையாதலால், "கருப்பொருள்" என்றும் கூறினர், பிரான், உபகாரசீலன். கருமை-பெருமை. திருப்புகலிப்பிரானே உலககாரணனும் மனமுதலியவைகளுக்கு எட்டாதவனுமாயிருப்பவன் என்பது கருத்து.

இணைக்குறளாசிரியப்பா.

4. கருமுதற்றொடங்கிப்பெருநாளெல்லாம்
காமம்வெகுளிகழிபெரும்பொய்யெனும்
தூய்மையில்குப்பைதொலைவின்றிக்கிடந்ததை
அரிதினகழ்ந்துபோக்கிப்பொருதிறன்
மையிருணிறத்துமதமுடையடுசினத்
தைவகைக்கடாவும்யாப்பவிழ்த்தகற்றி
அன்புகொடுமெழுகியருள்விளக்கேற்றித்
துன்பவிருளைத்துறந்துமுன்புற
மெய்யெனும்விதானம்விரித்துநொய்ய
கீழ்மையிற்றொடர்ந்துகிடந்தவென்சிந்தைப்
பாழறையுனக்குப்பள்ளியறையாக்கிச்
சிந்தைத்தாமரைச்செழுமலர்ப்பூந்தவி
செந்தைநீயிருக்கவிட்டனனிந்த
நெடுநிலவளாகமுமடுகதிர்வானமும்
அடையப்பரந்தவாதிவெள்ளத்து
நுரையெனச்சிதறியிருசுடர்மிதப்ப
வரைபறித்தியங்குமாருதங்கடுப்ப
மாலும்பிரமனுமுதலியவானவர்
காலமிதுவெனக்கலங்காநின்றுழி
மற்றவருய்யப் பற்றியபுணையாய்
மிகநனிமிதந்தபுகலிநாயக
அருணனிசுரக்கும்பிரளயவிடங்கநின்
செல்வச்சிலம்புமெல்லெனமிழற்ற
அமையாக்காட்சியிமயக்
கொழுந்தையுமுடனேகொண்டிங்
கெழுந்தருளத்தகுமெம்பெருமானே.

இ - ள். கருமுதல் தொடங்கி - கர்ப்பமுதலாய்த்தொடங்கி, பெருநாள் எல்லாம் - நெடுங்காலமெல்லாம், காமம் - அவா, வெகுளி—கோவம், கழிபெருப்பொய் - மிகுதியாகிய பெரும்பொய், என்னும் - என்று சொல்லப்படுகிற, தூய்மை இல்குப்பை - பரிசுத்த மற்ற குப்பைகள், தொலைவு இன்றி கிடந்ததை, தொலையாமற் கிடைந்ததை, அரிதின் அகழ்ந்து போக்கி-வருந்திக் கிளைத் தெறிந்து, பொருதிறல்-பொருதற்குரிய வலியமைந்த, மை இருள் நிறத்து - மிக்ககருநிறத்தையும், மதம் - மதத்தையும், உடை - உடைய, அடுசினத்து - கொல்லும் கோவத்தோடுகூடிய, ஐவகைக் கடாவும் - ஐவகைப்பட்ட கடாக்களையும், யாப்பு அவிழ்த்து அகற்றி - கட்டவிழ்த்து நீக்கி, அன்புகொடுமெழுகி - அன்பென்னும் கோமயத்தால்மெழுகி, அருள்விளக்கு ஏற்றி - உன் திருவருளாகிய தீபத்தையேற்றி, துன்ப இருளைத்துறந்து - துன்பமாகிய அந்தகாரத்தையோட்டி, முன்பு உற - முன்னே பொருந்த, மெய் என்னும்-சத்தியமென்கிற, விதானம் விரித்து - மேற்கட்டியை விரித்து, நொய்ய - அற்பமாகிய, கீழ்மையில் தொடர்ந்து கிடந்த-கீழானகாரியங்களிற் பற்றிக்கிடந்த, என்சிந்தை - என்மனமாகிய, பாழ் அறை-பாழ் வீட்டை, உனக்குப்பள்ளி அறைஆக்கி - உனக்குச் சயநக்ருஹமாகச்செய்து, சிந்தைத்தாமரைச்செழுமலர்-இருதயமாகிய செழிய தாமரைமலராகிய, பூதவிசு - அழகிய ஆசநத்தை, எந்தை - எந்தையாகிய, நீ இருக்க - நீ வீற்றிருக்கும்படி, இட்டனன் - அமைத்தேன், இந்தநெடுநிலவளாகமும் - இந்தநெடிய நிலவுலகினும், அடுகதிர்வானமும் - இருளையழிக்கின்ற ஒளி யுள்ள விண்ணுலகினும், அடையப்பரந்த - முழுதும் பரவிய, ஆதிவெள்ளத்து - பூர்வவெள்ளத்தில், நுரை எனச்சிதறி - நுரைபோலச்சிதறுண்டு, இருசுடர் மிதப்ப - இருசுடர்களும் மிதக்கவும், வரை பறித்து இயங்கும் - மலைகளைவேரோடு பிடுங்கிச் சஞ்சரிக்கிற, மாருதம் - சண்டமாருதம், கடுப்ப - வேகத்தைச் செய்யவும், மாலும் - திருமாலும், பிரமனும் - நான்முகனும், முதலிய - முதலாகிய, வானவர் - தேவர்கள், காலம் இது எனகலங்காநின்றுழி - எங்களைக்காக்கவேண்டுங் காலம் இது வென்று சொல்லிக் கலங்கிகின்றபொழுது, அவர் உய்ய - அவர்கள் பிழைக்கும்படி, பற்றிய - பிடித்துக்கொள்ள, புணைஆய் - தெப்பமாகி, மிகநனிமிதந்த - மிகவும் மிதந்திருந்த, புகலிநாயக - புகலிப்பதிக்கிறைவனே, அருள் நனிசுரக்கும் - மிக்க அருளைச்சுரக்கின்ற, பிரளயவிடங்க - பிரளய விடங்கனே, நின்செல்வச்சிலம்பு - உன்பொற்சிலம்பு, மெல்லெனமிழற்ற - மெல்லென்றொலிக்க, அமையாகாட்சி - சேவித்தமைவு பெறாத சேவையைத்தருகின்ற, இமயக்கொழுந்தையும் - இமயச்செல்வியையும், உடனே கொண்டு - உடன்கொண்டு, இங்கு எழுந்தருளத்தகும் - இவ்விடத்திற் கெழுந்தருளுதல் உனக்குத்தகுதியாகும், எம்பிரானே - எம் பெருமானே. எ - று.

காலம் இது என்பதற்கு யுகாலந்த கால மிது எனவுரைப்பினுமமையும். பிரளய விடங்கன் - பிரளயகாலத்து மழியாத அழகன். கல்லிலிருக்கு முனக்கு மலரிலிருப்பது மிகுசுகமாமெனக் கருதி, என்மனமாகிய தாமரையை உனக்கிடமா யமைத்தேன், அதனிடத்துப் பிராட்டியாரோடு நீ யெழுந்தருளியிருத்தல் வேண்டு மென்பது கருத்து.

வெண்பா.

5. மானுமழுவுந்திருமிடற்றில்வாழுமிருள்
தானும்பிறையுமேதாங்கிநிற்கும்-வானவர்க்கு
வெள்ளத்தேதோன்றிக்கழுமலத்தேவீற்றிருந்தென்
உள்ளத்தேநின்றவொளி.

இ - ள். வானவர்க்கு - தேவர்கள் பொருட்டு, வெள்ளத்தே தோன்றி-முதற்பிரளயத்தின் கண்ணேயுண்டாகி, கழுமலத்தே வீற்றிருந்து - கழுமலத்தின் கண்ணே வீற்றிருந்து, என் உள்ளத்தே-என்மனத்தின் கண்ணே, நின்ற ஒளி-நின்ற ஒளியானது, மானும்-மானையும்,மழுவும்-மழுவையும்,திருமிடற்றில்வாழும்,அழகிய கண்டத்தில் தங்கிய, இருள்தானும்-இருளையும், பிறையும் - சந்திரனையும், தாங்கிநிற்கும் - தாங்கி நில்லாநிற்கும்.

ஒளிதாங்கி நிற்கும் என இயையும். இறைவன் அடியாரிதயத்தையும் தன் திருப்பதிபோலக்கொண்டு வீற்றிருப்பவனாதலால், "கழுமலத்தே வீற்றிருந்தென் உள்ளத்தே நின்றவொளி" என்றார். "சிறைவான் புனற் றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தை யுள்ளும் உறைவான்" என்றார் திருவாதவூரடிகளும். திருக்கழுமலத்திறைவன் மான்முதலிய வற்றோடு எனக்க்கு காட்சிதந்தருளினான் என்பது கருத்து.

கட்டளைக்கலித்துறை.

6. ஒளிவந்தவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளம்
தெளிவந்தவாவந்துதித்தித்தவாசிந்தியாததொரு
களிவந்தவாவன்புகைவந்தவாகடைசாரமையத்
தெளிவந்தவாநங்கழுமலவாணர்தம்மின்னருளே.

இ - ள். நம்கழுமலவாணர்தம் இன் அருள் - நம்கழுமலவாணரது இனிய அருளானது, பொய்மனத்திருள் நீங்க - பொய்யாகிய மனவிருள் நீங்கும்படி, ஒளிவந்த ஆறு-பிரகாசித்தவாறென்னே, என் உள்ளவெள்ளம்-என்மனமாகிய நீர், தெளிவந்த ஆறு-தெளிவடைந்த வாறென்னே, வந்து தித்தித்தஆறு-வந்து இனித்தவாறென்னே, சிந்தியாதது ஒருகளிவந்தஆறு-நினைக்கப்படாததோர் மகிழ்ச்சியுண்டானவாறென்னே,அன்புகைவந்த ஆறு-

அன்பின் பயன்கைகூடிய வாறென்னே, கடை சார் அமையத்து-அவனது திருவாயிலிற் சேருஞ் சமயத்தில், எளிவந்தஆறு - எளிதிற்கிடைத்தவா றென்னே. எ - று.

திருக்கழுமலத்திறைவன், அடியேன் தன் திருவாயிலின் முகப்பைக் கடவாமுன்னமே எனக்கு எளிதிற்காட்சிதந்தருளினனென்பது கருத்து.

ஒளிவந்தவா என்பதற்கு சூரியனுதித்தவாறு எனவுரைப்பினுமமையும். இறைவனருள் தோன்றுதலும் முன்புகலங்கிக் கிடந்தமனம், தெளிவடைந்ததாதலால், "என்னுள்ளவெள்ளம் தெளிவந்தவா" என்றும், மனத்திருள் நீங்கிற்றுதலால், "பொய்மனத்திருணீங்க" ஒளிவந்தவா என்றும், மனத்துக்கினிதாயிருத்தலால்,"வந்துதித்தித்தவா" என்றும், "முன்னொருகாலத்துங் கண்டறியாத பெருமகிழ்ச்சியுண்டாயிற்றுதலால்" "சிந்தியாததொருகளிவந்தவா" என்றும், "அன்புசெய்ததற்குப் பயன் கைகூடிற்றுதலால்" "அன்புகைவந்தவா" என்றும் கூறினர்.

இணைக்குறளாசிரியப்பா.

7. அருள்பழுத்தளிந்தகருணைவான்கனி
ஆராவின்பத்தீராக்காதல்
அடியவர்க்கமிர்தவாரிநெடுநிலை
மாடக்கோபுரத்தாடகக்குடுமி
மழைவயிறுகிழிக்குங்கழுமலவாணநின்
வழுவாக்காட்சிமுதிராவிளமுலைப்
பாவையுடனிருந்தபரமயோகி
யானென்றுணர்த்துவனெந்தைமேனாள்
அகிலலோகமுமனந்தயோனியும்
நிகிலமுந்தோன்றநீநினைந்தநாடொடங்கி
எனைப்பலயோனியுநினைப்பரும்பேதத்
தியாரும்யாவையுமெனக்குத்தனித்தனித்
தாயராகியுந்தந்தையராகியும்
வந்திலாதவரில்லையானவர்
தந்தையராகியுந்தாயராகியும்
வந்திராததுமில்லைமுந்து
பிறவாநிலனுமில்லைபவ்வயின்
இறவாநிலனுமில்லைபிறிதில்
எனைத்தினுயிர்களுமில்லையானவை

தமைத்தினுதொழிந்ததுமில்லையனைத்தே
காலமுஞ்சென்றதியானிதன்மேலினி
இளைக்குமாறிலனேநாயேன்
அந்தரச்சோதிநின்னஞ்செழுத்துநவிலும்
தந்திரம்பயின்றதுமிலனேதந்திரம்
பயின்றவர்ப்பயின்றதுமிலனேயாயினும்
இயன்றதோர்பொழுதினிட்டதுமலராச்
சொன்னதுமந்திரமாகவென்னையும்
இடர்ப்பிறப்பிறப்பெனுமிரண்டின்
கடற்படாவகைகாத்தலின்கடனே.

இ-ள். அருள் - அருளென்னும் மரத்தில், பழுத்து அளிந்த-பழுத்துக் கனிந்த, கருணைவான்கனி-கருணையென்கிற மேன்மையாகிய கனியே, ஆரா இன்பம் - வெறுக்காத இன்பத்தைக்கொடுக்கிற, தீராக்காதல் - நீங்காவிருப்பமுள்ள, அடியார்க்கு - அடியார்களுக்கு, அமிர்தவாரி - அமுதசாகரமே, நெடு நிலைமாடம் கோபுரத்து - நெடிய நிலைகளையுடைய மாளிகைகளின் கோபுரத்தின் மேலுள்ள, ஆடகம்குடுமி - பொற்சிகரங்கள், மழைவயிறு கிழிக்கும் - மேகத்தின் வயிற்றைக் கிழியாநிற்கிற, கழுமலவாண - கழுமலவாணனே, நின்வழுவாக்காட்சி-உன்தவறாத சேவையால், முதிரா இளமுலை - முதிராத இளமுலையையுடைய, பாவையுடன் இருந்த- உமாதேவியோடு கூடியிருந்த, பரமயோகி - மேலானயோகியே, யான் ஒன்று உணர்த்துவன் - நான் ஒன்றை விண்ணப்பம் பண்ணுகிறேன் (என்னெனின்) எந்தை - எந்தையே, மேல் நாள் - முன்னாளில், அகில லோகமும் - எல்லாவுலகங்களும், அனந்த யோனியும் - முடிவற்ற யோனிபேதங்களும், நிகிலமும் - மற்றெல்லாப் பொருள்களும், தோன்ற - உண்டாகும்படி, நீ நினைந்த நாள் தொடங்கி - நீ சங்கற்பித்த நாள் தொடங்கி, எனைப்பலயோனியும் - மற்றைய பலயோனிகளும், நினைப்பரும் பேதத்து- நினைத்தற் கரிதாகிய வேறுபாடுள்ள, யாவரும் - எல்லாரும், யாவையும் - எல்லாப்பொருள்களும், எனக்குத் தனித் தனி - எனக்குப் பிரத்தியேகப் பிரத்தியேகமாய், தாயர் ஆகியும் - தாய்மாராகியும், தந்தையர் ஆகியும் - தந்தைமார் ஆகியும், வந்திலாதவர் இல்லை - வராதவர்கள் இல்லை, யான் - நான், அவர்தந்தையர் ஆகியும் - அவர் தந்தைமாராகியும், தாயர் ஆகியும் - தாய்மாராகியும், வந்திராததும் இல்லை - வந்திராததும் இல்லை, முந்து - முன்பு, பிறவாநிலனும் இல்லை - பிறவாத பூமியும் இல்லை, அவ்வயின்-அவ்விடத்து, இறவா நிலனும் இல்லை - இறவாத பூமியும் இல்லை, பிறிதில் - வேறுயிர்களுள், என்னைத்தின்று-என்னைத்தின்னாத, உயிர்களும் இல்லை,

சிவர்கருமில்லை, யான்-நான், அவைதம்மை-அவைகளை, தின்றுது ஒழிந்ததுமில்லை - தின்றுது விட்டதுமில்லை, அனைத்தே - அவ்வளவே, காலமும் சென்றது - காலமுங்கழிந்தது, யான் - நான், இதன்மேல் இனி - இனிமேல், இளைக்கும் ஆறு இலன் - இளைக்கும் வகையில்லேன், நாயேன் - அடியேன், அந்தரச்சோதி - சிதாகாயத்தில் விளங்கு மொளியே, நின் அஞ்சு எழுத்து நவிலும் - உன்னைந்தெழுந்தை யுச்சரிக்கின்ற, தந்திரம் பயின்றதும் இலன் - உபாயத்தைப் பயின்றதும் இல்லேன், தந்திரம் பயின்ற வர்ப்பயின்றதும் இல்லேன்,உபாயம் பயின்றவர்களைப் பயின்றதும் இல்லேன், ஆயினும் - ஆனாலும், இயன்றது ஓர்பொழுதின் - இயன்றதாகிய ஒருகாலத்தில், இட்டது - அருச்சித்ததை, மலர் ஆ - மலர்களாகவும், சொன்னது மந்திரம் ஆக - நான் சொன்னதை மந்திரங்களாகவும் (கொண்டு), என்னையும்-அடியேனையும், இடர் - துன்பத்தை விளைக்கின்ற, பிறப்பு இறப்பு என்னும் இரண்டின் கடல் படாவகை - பிறப்பு இறப்பு என்கிற இரண்டாகிய கடலின் கண் அகப்படாதவகை, காத்தல் - காப்பாற்றுதல், நின்கடன் - உன் கடன்மையாகும். எ - று.

திருக்கழுமலவாணனே, நான் பிறந்த பிறவிகளுக்கோ றெல்லையில்லை. இனியாயினும், நான்முன்னொருகாலத் தருச்சித்த மலர்களையே இப்பொழுதருச்சித்த மலர்களாகவும், நான் சொன்னதையே மந்திரமாகவும் திருவுளம் பற்றி என்னைப்பிறப்பிறப் பென்னும் பெருங்கடலினின்று எடுத்து முத்திக்கரையிலேற்றிக் காத்தருளுதல் உன் கடன் என்பது கருத்து.

வெண்பா.

8. கடலானகாமத்தேகாலாழ்வர்துன்பம்
அடலாமுபாயமறியார்—உடலாம்
முழுமலத்தையோர்கிலார்முக்கட்பெருமான்
கழுமலத்தைக்கைதொழாதார்.

இ - ள். முக்கண்பெருமான் - முக்கட்பிரானது, கழுமலத்தை-திருக்கழுமல மென்னுந்திருப்பதியை, கை தொழாதார் - கை கூப்பிவணங்காதவர்கள், கடலான காமத்தே-காமக்கடலின் கண்ணே, கால் தாழ்வர்-காலாழ்வார்கள், துன்பம் அடல் ஆம் - துன்பத்தை வெல்லலாம் யடியான, உபாயம் - உபாயத்தையும், அறியார் - உணரார்கள், உடல் ஆம் - உடம்பாகிய, முழுமலத்தை - முழுமலக் கூட்டினது நிலைமையையும், ஓர்கிலார்- ஆராய்ந்தறியார்கள். எ - று.

இறைவனது திருப்பதியாகிய திருக்கழுமலத்தைக் கைதொழாதவர்க்கு, காமமும் அதனாலுண்டாகுந் துன்பமும் அவைகட் கேதுவாகிய பிறவியும் ஒழியாவென்பது கருத்து.

கட்டளைக்கலித்துறை.

9. தொழுவாளிவள்வளைதோற்பாளிவளிடர்க்கேயலர்கொண்
டெழுவாளெழுகின்றதென்செயவோவென்மனந்திருந்துங்
கழுவாமணியைக்கழுமலவாணனைக்கையினிற்கொள்
மழுவாளனைக்கண்டுவந்ததென்றாலோர்வசையில்லையே.

இ - ள். இவள் - இந்தப்பெண்ணானவள், தொழுவாள் - வணங்கு வாள், வளைதோற்பாள் - வளையலையிழப்பாள், இவள் - இவள், இடர்க்கே - துன்பத்தின் பொருட்டே, அலர் கொண்டு எழுவாள் - பழிமொழியைக் கொண்டெழுவாள், எழுகின்றது - இப்படியிவள் எழாநிற்பது, என்செய யவோ - என்செய்தற்கோ (அறியோம்), என்மனம் திருந்தும் - என்மனம் திருந்துதற் கேதுவாகிய, கழுவாமணியை - கழுவாதமுழுமணியை, கழும லவாணனை-கழுமலப்பதியில் வாழ்பவனை, கையினில் கொள்மழுவாளனை- கையிற் கொண்டிருக்கிற மழுவுடையவனை, கண்டுவந்தது என்றால்-கண்டு (அதனால்) இத்தசை இவளுக்கு வந்ததென்றால், ஓர்வசையில்லை - ஒரு நிந்தையில்லை. எ - று.

இது தலைமகனது திருவுரு முதலியவைகளைக் காணாமல் கேள்விமாத் திரத்தால் மையல்கொண்ட தலைமகளது நிலைமையைக் கண்ட தோழி தாயர்முதலியோர் கூறுவதாகக் கூறுவது. இவள் தொழுதல் முதலிய வற்றை இறைவனைக் கண்டு செய்வளாயின் ஒரு வசையாயிரா தென்பது கருத்து.

"தொழுந்துதிக்கைக்குப்புகலூாதுவெனுஞ்சொன்னவப்போ
தெழுந்துதிக்கைக்குறித்தெங்கள்பிரானென்னுமீசனென்னும்
விழுந்துதிக்கைக்குன்றமொன்றுரித்தோனென்னும்வெண்ணெருப்பின்
கொழுந்துதிக்கைக்குப்பகல்போனதென்னுமென்கோமளமே"

என்றார் பிறரும்.

இணைக்குறளாசிரியப்பா.

10. வசையில்காட்சியிசைநனிவிளங்க
முன்னுணிகழ்ந்தபன்னீருகத்து
வேறுவேறுபெயரினூறின்றியன்ற
மையறுசிறப்பிற்றெய்வத்தன்மைப்
புகலிநாயகவிகல்விடைப்பாக
அமைநாண்மென்றோளுமையாள்கொழுந
குன்றுகுனிவித்துவன்றோளவுணர்
மூவெயிலெரித்தசேவகத்தேவ

இளநிலாமுகிழ்க்கும்வளர்சடைக்கடவுளின்
நெற்றியிற்சிறந்தவொற்றைநாட்டத்துக்
காமனைவிழித்தமாமுதலேவ
வானவரறியாவாதியானே
கல்லாவுளத்திற்புல்லறிவுதொடர
மறந்துநோக்கும்வெறுந்தண்ணாட்டத்துக்
காண்டொறுங்காண்டொறுமெல்லாமியாண்டை-
யாயினும்பிறவுமென்னதும்பிறரதும்
ஆவனபலவுமழிவனபலவும்
போவதும்வருவதுநிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத்திரண்டமணலினும்
எண்ணில்கோடியெனைப்பலவாகி
இல்லனவுளவாயுள்ளனகாணாப்
பன்னாளிருள்வயிற்பட்டேனன்னதும்
அன்னதாதலினடக்குமதென்னெனின்
கட்புலன்றெரியாதுகொட்புறுமொருவற்குக்
குழிவழியாகிவழிகுழியாகி
ஒழிவின்றோன்றிஞான்றுதயோமி
வந்தாற்போலவந்ததெந்தைநின்
திருவளர்நாட்டக்கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப்பொய்யெனத்தோன்றி
மேவருநீயேமெய்யெனத்தோன்றினை
ஓவியப்புலவன்சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்பமெல்லாமொன்றில்
தவிராதுதடவினர்தமக்குச்
சுவராய்த்தோன்றுந்துணிவுபோன்றனவே.

இ - ள். வசை இல்காட்சி - குற்றமற்ற சேவையின், இசை - கீர்த்தியானது, நனிவிளங்க - மிகவும் விளங்க, முன்னாள் நிகழ்ந்த - முற்காலத்து நடந்த, பன்னீர் உகத்து - பன்னிரண்டு யுகங்களில், வேறு வேறு பெயரின் - வெவ்வேறு பெயர்களால், ஊறு இன்றி இயன்ற - இடையூறின்றியிருந்த, மை அறு சிறப்பின் - குற்றமற்ற சிறப்பமைந்த, தெய்வத்தன்மை - தெய்வத்தன்மையுள்ள, புகலிநாயக - புகலிக்கிறைவனே, இகல்-

வலியுள்ள, விடைப்பாக - இடபவாகநனே, அமைநாண் - மூங்கிலும் நாணு ம்படியான, மெல்தோள் - மெல்லிய தோள்களையுடைய, உமையாள் - உமாதேவிக்கு, கொழுந - நாயகனே, குன்று - மேருமலையை, குனிவித்து - வளைவித்து, வல்தோள் - வலிய தோள்களையுடைய, அவுணர்-அவுணர்களுடைய, மூன்று எயில் எரித்த - மும்மதிலையெரித்து நீறாக்கிய, சேவகத்தேவ - வீரத்தன்மையுள்ள தேவனே, இளநிலாமுகிழ்க்கும் - இளம்பிறையடங்குகின்ற, வளர்சடைக்கடவுள் - நீண்டசடையையுடைய கடவுளே, நின்நெற்றியில் சிறந்த-உன்நெற்றியில் மிக்கொளிர்கின்ற, ஒற்றை நாட்டத்து - ஒற்றைக்கண்ணினால், காமனை விழித்த - காமனைவிழித்தெரித்த, மாமுது தலைவ - மிகப்பெருந்தலைவனே, வானவர் அறியா - தேவர்களாலும் அறியப்படாத, ஆதியானே-முதன்மையுடையானே, கல்லாவுள்ளத்தில் - கல்லாமனத்தில், புல்லறிவுதொடர - அற்பவுணர்வுதொடர்தலால், மறந்து நோக்கும் - மறந்து நோக்குகின்ற, வெறும் - வெறுமையாகிய, தண்நாட்டத்து - குளிர்ந்தபார்வையால், காண்தொறும் காண்தொறும் எல்லாம் - பலகால் காணுமிடங்களிலெல்லாம், யாண்டை ஆயினும் - எவ்விடத்திலாயினும், பிறவும் - பிறபொருள்களும், என்னதும் பிறரதும் - என்னதும் பிறரதுமே, ஆவனபலவும் - உண்டாவன பலவும், அழிவனபல்வும் - அழிவனபலவும், போவதும் வருவதும் நிகழ்வதும் ஆகி - இறப்பதும் எதிர்வதும் நிகழ்வதும் ஆகி, தெள் நீர்ஞாலத்து - தெளிந்த நீரையுடைய கடலாற் சூழப்பட்ட உலகத்தின்கண், திரண்டமணலினும் - ஒருங்கு கூடிய மணலினும், எண் இல் கோடி - அளவற்றகோடிகளும், எனைப்பல ஆகி - மற்றும்பலவாகி, இல்லன உள ஆய்-இல்லாதனவுள்ளனவாய், உள்ளனகாணு - உள்ளனகாணப்பெறுமல், பன்னாள்-பலநாள், இருள்வயின்பட்டேன் - அஞ்ஞான விருளில் அகப்பட்டிருந்தேன், அன்னதும் - அவ்விருளும், அன்னது ஆதலின் - அத்தன்மைத்தேயாதலால், அடுக்குமது என் எனின் - செய்யவடுப்ப தென்னையோ என்றால், கண்புலன் தெரியாது - கண்ணாகிய புலன் தெரியாமல், கொட்பு உறும் ஒருவற்கு - சுழல்கின்ற ஒருவனுக்கு, குழிவழி ஆகி - குழியே வழியாகி, வழிகுழியாகி - வழியே குழியாகி, ஒழிவு இன்று - ஒழிவில்லாமல், ஒன்றின் ஒன்று - ஒன்றைப்போலவே மற்றொன்று, தடுமாறிவந்தாற்போல - தடுமாறிவந்ததுபோல, வந்தது - வந்தது, எந்தை நின் - எந்தையாகிய உனது, கருணையின் - கருணையால், திருவருள் நாட்டப் பெறலும் - திருவருளையென்னிடத்துப்பதிக்கப் பெற்றவளவில், யாவையும் - எல்லாம், எனக்குப் பொய்யெனத்தோன்றி - எனக்குப் பொய்யாய்க்காணப்பட்டு, மேவு அரு நீயே - பொருந்தற்கரிய நீ யொருவனுமே, மெய் எனத்தோன்றினை - மெய்ப்பொருளாகக் காணப்பட்டனை, ஓவியப்புலவன் - சித்திரித்தற் புலமையுள்ளவன், சாயல் பெறஎழுதிய - சாயையாக வெழுதின, சிற்பவிகற்

பம் எல்லாம்-சிற்பவேறுபாடுகளெல்லாம், ஒன்றில்-ஒன்றினிடத்து, தவிராது - நீங்காமல், தடவினர் தமக்கு - தடவினவர்களுக்கு, சுவர் ஆய்த் தோன்றும் - சுவராகவேகாணப்படுகின்ற, துணிவு போன்றன - நிச்சயம் போன்றன. எ - று.

திருக்கழுமலவாணனே, உன்திருவருணோக்கத்தால் இந்தப்பிரபஞ்சமெல்லாம் சித்திரவுருவம் போலப் பொய்யாகவும் நீயொருவனே மெய்யாகவும் எனக்குத் தோன்றுநின்றதென்பது கருத்து.

வெண்பா.

11. எனவேயெழுந்தாளென்செய்கிற்பாளின்னம்
சினவேறுகாட்டுதிரென்னு—மினவேகப்
பாம்புகலியாநிமிரும்பன்னுச்சடைமுடிநம்
பூம்புகலியானிதழிப்போது.

இ - ள். இனம் - கூட்டமாகிய, வேகம்-வேகத்தையுடைய, பாம்பு-சர்ப்பம், கலியா - இரைந்து, நிமிரும் - நிமிர்தற்கிடமாகிய, பன்னு - புகழ்ந்தளவிடப்படாத, சடைமுடி - சடைமுடியையுடைய, நம் - நமது, பூம்புகலியான் - திருப்புகலிப்பதியையுடையானது, இதழிப்போது - கொன்றைமலர், எனவே - என்று சொல்லவே, எழுந்தாள் - எழுந்தனள், என்செய்கிற்பாள் - என்செய்யவல்லளாவள், இன்னம்-இன்னமும், சின ஏறு காட்டுதிர் - கோவத்தையுடைய இடபத்தைக் காட்டாநிற்கிறீர், என்னும்-என்று சொல்லாநிற்பள். எ - று.

இது தலைமகனது பவனியைக்கண்டு வருந்துந் தலைமகளது நிலைமையைத் தோழிமுதலானோர் கண்டிரங்கிக் கூறுவதாகக் கூறுவது. இறைவனது இடபவாகநச் சேவையைக்கண்டு மோகித்து, அவனது கொன்றைமலர் மாலையை விரும்பிக் கிடந்தாள், இவளது துன்பந்தணியுமெனக் கருதிக்கொன்றை மலர் என்றேம்,என்றவளவில் தெளிந்தெழுந்து கொன்றைமலர் மாலை கிடைக்கப்பெறுமையால், மாலை கொண்டுவராது இன்னமும் அவனது இடபத்தைக் காட்டா நின்றீர்; என நம்மைச் சினவாநின்றாள், யாமென்செயவல்லோம், இவள் தான் என்செயவல்லள், இறைவனது திருவருளுண்டாயினன்றே கிடைக்கும் என்பது கருத்து.

**கட்டளைக்கலித்துறை.**

**12.** போதும்பெறாவிடிற்பச்சிலையுண்டுபுனலுண்டெங்கும்
ஏதும்பெறாவிடினெஞ்சுண்டின்றேயிணையாகச்செப்பும்
சூதும்பெறாமுலைப்பங்கர்தென்றோணிபுரேசர்வண்டின்
தாதும்பெறாதவடித்தாமரைசென்றுசார்வதற்கே.

இ - ள். செப்பும் - பொற்செப்பும், சூதும்-சொக்கட்டான் காயும், இணையாகப்பெறா - உவமையாகப்பெறாத, முலை - தனங்களையுடைய உமாதேவியை, பங்கர் - ஒருபாகத்திலுடையவர், தென்றோணிபுரேசர் - தென்தோணிபுரத்துக்கிறைவர்,வண்டு இன்தாதும் பெறாத-வண்டானது இனிய தாதும் பெறவொண்ணாத, அடித்தாமரை-பாததாமரையை, இன்றே-இப்பொழுதே, சென்றுசார்வதற்கு - போய் அடைதற்கு, போதும் பெறாவிடின் - புஷ்பத்தையும் பெறாவிட்டால், பச்சிலை உண்டு - பச்சிலைகளுண்டு, எங்கும் புனல் உண்டு - எவ்விடத்தும் நீருண்டு, ஏதும் - இவற்றுள் ஒன்றாயினும், பெறாவிடின்-கிடையாவிட்டால், நெஞ்சு உண்டு-என்மனமுண்டு. எ-று.

திருக்கழுமலவாணனது திருவடியடைவதற்கு, மலர்முதலியவை கிடையாவிடின், என்மனமேயமையும், அதனையே பூசனைக்குரிய எல்லாப் பொருள்களாகப் பாவித்து மானதமாகப் பூசிப்பேனென்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.

திருக்கழுமல - மும்மணிக்கோவை.

முற்றிற்று.

உ
கணபதிதுணை.

# மூன்றாவது
# திருவிடைமருதூர்
# மும்மணிக்கோவை.

---

திருச்சிற்றம்பலம்.

இணைக்குறளாசிரியப்பா.

1. தெய்வத்தாமரைச்செவ்விதின்மலர்ந்து
வாடாப்புதுமலர்த்தோடெனச்சிவந்து
சிலம்புங்கழலுமலம்பப்புனைந்து
கூற்றின்ற்றன்மாற்றிப்போற்றாது
வலம்புரிநெடுமாலேனமாய்கிலம்புக்
காற்றலினகழத்தோற்றாதுகிமிர்ந்து
பத்தியடியவர்பச்சிலையிடினு
முத்திகொடுத்துமுன்னின்றருளித்
திகழ்ந்துளதொருபாற்றிருவடியகஞ்சேர்ந்து
மறுவில்கற்பகத்துறுதளிர்வாங்கி
செய்யிற்றோய்த்தசெவ்வித்தாகி
நூபுரங்கிடப்பினுநொந்துதேவர்
மடவரன்மகளிர்வணங்குபுவீழ்த்த
சின்னப்பன்மலர்தீண்டிடச்சிவந்து
பஞ்சியுமனிச்சமுமெஞ்சவெஞ்சாத்
திருவொடும்பொலியுமொருபாற்றிருவடி
நீலப்புள்ளிவாளுகிர்வேங்கைத்
தோலின்கலிங்கமேல்விரித்தசைத்து
நச்செயிற்றரவக்கச்சையாப்புறுத்துப்
பொலிந்துளதொருபாற்றிருவிடையிலங்கொளி
யரத்தவாடைவிரித்துமீதுறீஇ
யிரங்குமணிமேகலையொருங்குடன்சாத்திய
மருங்கிற்றாகுமொருபாற்றிருவிடை
செங்கணரவும்பைங்கணுமையுங்

கேழற்கோடும்வீழ்திரளக்கு
நுடங்குநூலுமிடங்கொண்டுபுனைந்து
தவளநீறணிந்ததோர்பவளவெற்பென்ன
வொளியுடன்றிகழுமொருபாலாகம்
வாரும்வடமுமேர்பெறப்புனைந்து
செஞ்சாந்தணிந்துகுங்குமமெழுதிப்
பொற்றாமரையின்முற்றாமுகிழென
வுலகேழீன்றுநிலையிற்றளரா
முலையுடன்பொலியுமொருபாலாக
மயில்வாயரவம்வயின்வயினணிந்து
மூவிலைவேலும்பூவாய்மழுவுந்
தமருகப்பறையுமமர்தரத்தாங்கிச்
சிறந்துளதொருபாற்றிருக்கரஞ்செறிந்த
சூடகம்விளங்கியவாடகக்கழங்குட
ஞெம்மென்பந்துமம்மென்கிள்ளையுந்
தரித்தேதிகழுமொருபாற்றிருக்கர
மிரவியுமெரியும்விரவியவெம்மையி
னொருபால்விளங்குந்திருநெடுநாட்ட
நவ்விமானின்செவ்விதாகிப்
பாலிற்கிடந்தநீலம்போன்று
குண்டுநீர்க்குவளையிற்குளிர்ந்துநிறம்பயின்
றெம்மனோர்க்கடுத்தமம்மர்க்கிரங்கி
யுலகேழ்புரக்குமொருபானாட்ட
னொச்சிப்பூவும்பச்சைமத்தமுங்
கொன்றைப்போதுமென்றுணர்த்தும்பையுங்
கங்கையாறும்பைங்கட்டலையு
மரவுமதியமும்விரவித்தொடுத்துச்
சூடாமாலைசூடிப்பீடுகெழு
நெருப்பிற்றிரித்தனையவுருக்கிளர்சடிலமொடு
நான்முகங்கரந்தபானிறவன்னங்
காணுவண்ணங்கருத்தையுங்கடந்து
சேணிகந்துளதேயொருபாற்றிருமுடி
பேணிய

கடவுட்கற்பின்மடவரன்மகளிர்
கற்பகவனத்துப்பொற்பூவாங்கிக்
கைவைத்துப்புனைந்ததெய்வமாலை
நீலக்குழன்மிசைவளை இமேனிவந்து
வண்டுந்தேனுங்கிண்டுபுதிளைப்பத்
திருவுடன்பொலியுமொருபாற்றிருமுடி
பிணையவண்ணத்துகிலைவருங்காட்சி
யிருவயினுருவுமொருவயிற்றாகி
வலப்பானுட்டமிடப்பானோக்க
வாணுதல்பாகநாணுதல்செய்ய
வலப்பாற்றிருக்கரமிடப்பால்வனமுலை
தைவந்துவருடமெய்ம்மயிர்பொடித்தாங்
குலகமேழும்பன்முறையீன்று
மருதிடங்கொண்டவொருதனிக்கடவுணின்
றிருவடிபரவுதும்யாமேநெடுநா
ளிறந்தும்பிறந்துமிளைத்தனமறந்துஞ்
சிறைக்கருப்பாசயஞ்சேரா
மறித்தும்புகாஅவாழ்வுபெறற்பொருட்டே.

இ - ள். தெய்வத்தாமரை - தெய்விகமான தாமரைமலரின், செவ்வின் - அழகுபோல, மலர்ந்து - விகசித்து, வாடா - வாடாத, புதுமலர் - புதியமலரின், தோடு என - இதழ்போல, சிவந்து - செவப்பாகி, சிலம்பும் - நூபுரத்தையும், கழலும் - வீரகண்டையையும், அலம்பப்புனைந்து - ஒலிக்கும்படிதரித்து, கூற்றின் ஆற்றல் மாற்றி-யமனதுவெற்றியை மாறுபடுத்தி, போற்றாது - வணங்காமல், வலம்புரிநெடுமால் - பாஞ்சஜந்யத்தையுடைய திருமால், ஏனம் ஆய்-வராஹாவதாரங்கொண்டு, நிலம்புக்கு - மண்ணிற்புகுந்து, ஆற்றலின் - தனது சாமர்த்தியத்தால், அகழ - தோண்ட, தோற்றாது - (அவனுக்குக்) காணப்படாமல், நிமிர்ந்து - நெடுகி, பத்தி அடியவர் - பத்தியையுடைய அடியார்கள், பச்சிலைபிடினும் - பச்சிலையைக் கிள்ளியர்ச்சித்தாலும், முத்திகொடுத்து - (அவர்களுக்கு) மோக்ஷத்தைக் கொடுத்து, முன்னின்றருளி-(அவர்களுக்குப்) பிரத்தியக்ஷமாய் நின்றருளி, ஒரு பால்திருவடிதிகழ்ந்துளது-ஒருபக்கத்துத் திருவடி விளங்காநின்றது, அகம் சேந்து - உள்ளிடம்செவந்து, மறுஇல்-குற்றமில்லாத, கற்பகத்து - கற்பகவிருக்ஷத்தின், உறுதளிர்வாங்கி - மிக்கதளிரையெடுத்து, நெய்யில் தோய்த்த - நெய்யில் நனைத்த, செவ்வித்தாகி - அழகுடைத்தாகி, நூபுரம்

கிடப்பினும் - சிலம்புகிடந்தாலும், நொந்து - நோவடைந்து, தேவர் - தேவர்களுடைய, மடவரல்மகளிர்-இளமைபொருந்திய பெண்கள், வணங்குபு-பணிந்து, வீழ்த்த - அருச்சித்த, சின்னம் - பராகத்தையுடைய, பல்மலர் - பலமலர்கள், தீண்டிட - படுதலால், சிவந்து - செவந்து, பஞ்சியும் - பஞ்சும், அனிச்சமும் - அனிச்சப்பூவும், எஞ்ச - தாழ்வடைய, எஞ்சா - குறையாத, திருவொடும் - அழகுடனே, ஒருபால் திருவடி - ஒருபக்கத்துத்திருவடி, பொலியும் - விளங்காநிற்கும், நீலப்புள்ளி - நீலநிறப்புள்ளிகளையும், வாள் உகிர் - ஒளியுள்ள நகங்களையுமுடைய, வேங்கைத்தோலின் - புலித்தோலாகிய, கலிங்கம் - வஸ்திரத்தை, மேல்விரித்து - மேலே பரப்பி, அசைத்து-கட்டி, நச்சு எயிறு-நஞ்சுள்ள பற்களையுடைய, அரவக்கச்சை - பாம்பாகியகச்சையை, யாப்புறுத்து - கட்டி, ஒருபால் திருவிடை - ஒருபக்கத்து இடையானது, பொலிந்துளது - பிரகாசியாநின்றது, இலங்கு ஒளி - விளங்குகின்ற ஒளியுள்ள, அரத்தஆடை - செவந்த ஆடையை, விரித்து - பரப்பி, மீது உறீஇ - மேலேதரித்து, இரங்கும் - சத்தியாநின்ற, மணி - மணிகள்பொதிந்த, மேகலை-மேகலையை, ஒருங்கு உடன் சாத்திய - ஒருமிக்கத்தரித்த, மருங்கிற்று ஆகும்-பக்கத்தையுடையதாகும், ஒருபால் திருவிடை - ஒருபக்கத்து இடை, செங்கண் அரவும் செவந்த கண்களையுடைய பாம்பும், பைங்கண் ஆமையும் - பசுமையாகிய கண்களையுடைய ஆமையும், கேழல்கோடும்-பன்றிக்கொம்பும், வீழ்-சிந்திய, திரள் - திரண்ட, அக்கும் - சங்குமணியும், நுடங்கும் நூலும் - அசையாநின்ற முப்புரிநூலும், இடம்கொண்டு புனைந்து-இடப்பக்கத்திற்றரித்து, தவள நீறு அணிந்தது-வெண்பொடியை யணிந்ததாகிய, ஓர்பவளவெற்பு என்ன-ஒருபவளமலைபோல, ஒளியுடன் திகழும் - ஒளியோடுகூடிவிளங்கும், ஒருபால் ஆகம்-ஒருபக்கத்துத்திருமேனி, வாரும்-கச்சும்,வடமும்-முத்துமாலைகளும், ஏர்பெறப்புனைந்து - அழகுண்டாகத்தரித்து, செஞ்சாந்து அணிந்து - செஞ்சந்தனம் பூசப்பெற்று, குங்குமம் எழுதி-குங்குமக்கோலம் எழுதப்பெற்று, பொன்தாமரையின் - பொற்றாமரையினது, முற்றா-முதிராத, முகிழ் என - அரும்புபோல, உலகுஎழ் ஈன்றும்-ஏழுலகங்களைப் பெற்றும், நிலையிற்றளரா - திறுமாந்த நிலையினின்றும்சாயாத, முலையுடன் - தனத்தோடு, ஒருபால் ஆகம் - ஒருபக்கத்துத் திருமேனி, பொலியும் - விளங்காநிற்கும், அயில்வாய் அரவம் - அழகுபெற்ற பாம்புகளை, வயின் வயின் அணிந்து - இடமிடந்தோறுமணிந்து, மூவிலைவேலும் - மூன்றிலைகளையுடைய வேலையும், பூவாய்மழுவும்-அழகுவாய்த்த மழுவையும், தமருகப்பறையும் - தமருகவாத்தியத்தையும், அமர்தரத்தாங்கி - அமையும்படியேந்தி, ஒருபால் திருக்கரம் - ஒருபக்கத்துத் திருக்கையானது, சிறந்துளது - சிறப்புற்றிராநின்றது, செறிந்த - நெருங்கிய, சூடகம் விளங்கிய ஆடகக் கழங்குடன் - கைவளை, பிரகாசியாநின்ற பொற்கழங்கு ஆகிய இவற்றோடு, ஓம் என்பக்

தும்-ஓம்மென்னும் ஒலியையுடைய பந்தையும் அம் மெல்கிள்ளையும்-அழகிய மென்மையாகிய கிளியையும், தரித்து-அணிந்து, ஒருபால் திருக்கரம்-ஒரு பக்கத்துத்திருக்கையானது, திகழும்-விளங்காநிற்கும், இரவியும்-சூரியனும், எரியும் - அக்கினியும், விரவிய-கலந்த, வெம்மையின்-வெப்பத்தோடு, ஒருபால்-ஒருபக்கத்திலுள்ள, திருநெடுநாட்டம் - திருநெடுங்கண், விளங்கும் - விளங்காநிற்கும், நவ்விமானின் செவ்வித்தாகி - பெண்மானின் அழகினையுடைத்தாகி, பாலில்கிடந்த நீலம்போன்று - பாலின் கண்கிடந்த நீலரத்நம்போன்று, குண்டு நீர் - ஆழமாகியநீரிலுள்ள, குவளையின் - குவளைமலர்போல, குளிர்ந்து - குளிர்ச்சியடைந்து, எம்மனோர்க்கு அடுத்த - எம்மையொத்தவர்களுக்கு நேர்ந்த, மம்மர்க்கு இரங்கி - பிறவித்துன்பத்துக்கு இரக்கப்பட்டு, உலகு ஏழ் - ஏழுலகையும், ஒருபால் நாட்டம்- ஒருபக்கத்துத் திருக்கண், புரக்கும் - காக்கும், நொச்சிப்பூவும் - நொச்சிமலரையும், பச்சைமத்தமும் - பச்சை உன்மத்தை மலரையும், கொன்றைப்போதும் - கொன்றைமலரையும், மெல்துணர்-மெல்லிய கொத்துக்களையுடைய, தும்பையும் - தும்பை மலரையும், கங்கையாறும்-கங்காநதியையும், பைங்கண் தலையும் - பசியகண்களோடு கூடிய தலைகளையும், அரவும் - சர்ப்பத்தையும், மதியமும் - சந்திரனையும், விரவிதொடுத்து - கலந்துதொடுத்து, சூடாமாலை சூடி - தலைமாலையாயணிந்து, பீடுகெழு-பெருமைபொருந்திய, நெருப்பின் திரித்தனைய -நெருப்பைக்கொண்டு திரித்தாற்போன்ற, உருக்கிளர் - நிறம்விளங்குகின்ற, சடிலமொடு - சடையுடன், நால்முகம் கரந்த-நான்குமுகங்களை மறைத்த, பால்நிற அன்னம் - வெண்ணிறத்தையுடைய அன்னம், காணுவண்ணம் - காணுவகையாக, கருத்தையும் கடந்து - மனத்தையுங்கடந்து, ஒருபால்-ஒருபுறத்துள்ள, திருமுடி-திருமுடியானது, சேண் இகந்துளது-ஆகாயத்தையுங் கடந்து நின்றது, ஒருபால்திருமுடி-ஒருபுறத்துத் திருமுடியானது, பேணிய-விரும்பப்பட்ட, கடவுள்-தெய்வத்தன்மைபொருந்திய, கற்பின் - கற்பினையுடைய, மடவரல் மகளிர் - இளமைபொருந்திய பெண்கள், கற்பகவனத்து - கற்பகச்சோலையிலுள்ள, பொன்பூவாங்கி - அழகாகிய மலர்களைப்பறித்து, கைவைத்துப் புனைந்த - ஒப்பனையமைத்துத்தொடுத்த, தெய்வமாலை - தெய்விகமான மாலையை, நீலக்குழல் மிசைவளைஇ - நீலக்கூந்தலின்மேல் வளைத்துச்சுற்றி, மேல்நிவந்து-மேலேயுயர்ந்து, வண்டும் தேனும் - கருவண்டுகளும் தேன்வண்டுகளும், கிண்டுபுதிளைப்ப - கிண்டித்தேனை யநுபவிக்க, திருவுடன்பொலியும்-அழகோடுகூடிவிளங்கும், இனையவண்ணத்து - இவ்வண்ணமாகிய, நினைவு அருகாட்சி - நினைத்தற்கரியசேவை, இருவயின் உருவும் - இருபக்கத்துருவங்களும், ஒருவயிற்று ஆகி - ஒரு இடத்தனவாகி, வலப்பால் நாட்டம்- வலப்பக்கத்துக்கண், இடப்பால் நோக்க - இடப்பக்கத்தைநோக்க, வாணுதல்பாகம் - பெண்பாகம், நாணுதல்செய்ய - நாணத்தையடைய, வலப்

பால் திருக்கரம் - வலப்பக்கத்துத்திருக்கை,இடப்பால் வனமுலை-இடப்பக்கத்தழகிய தனத்தை, தைவந்துவருட - தடவிவருடலால், மெய்ம்மயிர் பொடித்து — மெய்ம்மயிர்சிலிர்த்து, ஆங்கு-அப்பொழுதே, உலகம் எழும்-ஏழுலகத்தையும், பல்முறை ஈன்று - பலதரம் பெற்று, மருது இடம் கொண்ட - மருதூரை இடமாகக்கொண்ட, ஒரு தனிக்கடவுள்-ஒரு ஒப்பற்றகடவுளே,யாம்-நாம், நெடுநாள் - நெடுங்காலம், இறந்தும் பிறந்தும் - மாண்டும் தோன்றியும் இளைத்தனம் - இளைத்தோம், மறந்தும் - மறந்தாயினும், சிறை - சிறைபோன்ற, கருப்பாசயம் சேரா-கர்ப்பாசயத்தையடையாமல், மறித்தும் - மீட்டும், புகா - அதனுள்பிரவேசியாத, வாழ்வு - நித்தியவாழ்வை, பெறற்பொருட்டு - அடையும் பொருட்டு, நின் திருவடி பரவுதும் - உன்திருவடிகளை வணங்காநின்றோம். எ - று.

தெய்வத்தாமரை-மலர்தலுங் குவிதலுமின்றி எக்காலத்தும் ஒருதன்மைத்தாய்விளங்குதலாகிய தெய்விகமமைந்த தாமரை. மறு இல்கற்பகம்-தளிர்த்தல் செழித்தல் முதிர்தல் உதிர்தல் முதலிய கால வேறுபாடுகளானுண்டாகுங் குற்றங்களின்றி என்று மொருதன்மைத்தாய் விளங்குங்கற்பகம். வாள்உகிர் - வாள்போன்ற நகம் எனினுமாம். அயில்வாய் அரவம்-அயில்போன்ற பற்களுள்ள வாயையுடைய பாம்பெனினு மமையும். வயின் வயின் - திருமுடி, திருத்தோள், திருமார்பு, திருக்கை, திருவரைமுதலிய இடங்கள். மூவிலைவேல் - முத்தலைச்சூலம். கருப்பாசயம் - கருப்பை. கருப்பாசயம்சேரா, மறித்தும்புகா என்னும் இரண்டு பெயரெச்சங்களும் வாழ்வுஎன்னும் பெயரைக்கொண்டு முடிந்ததெனினு மமையும். வாழ்வு - என்றுமழியாத மோக்ஷவாழ்வு. "தெய்வத்தாமரை என்பதுமுதல் "ஒருபாற்றிருவடி" என்னுமளவும் இறைவனது திருவடியையும், "அகம்சேர்ந்து என்பதுமுதல் 'ஒருபாற்றிருவடி" என்னுமளவும் இறைவியின்திருவடியையும்,"நீலப்புள்ளி என்பதுமுதல்"ஒருபாற்றிருவிடை"என்னுமளவும் இறைவனது திருவிடையையும், "இலங்கொளி என்பதுமுதல் "ஒருபாற்றிருவிடை" என்னுமளவும் இறைவியின் திருவிடையையும், "செங்கணரவும்" என்பதுமுதல் 'ஒருபாலாகம்' என்னுமளவும் இறைவனது திருமார்பையும்,"வாரும்வடமும்" என்பதுமுதல்"ஒருபாலாகம்"என்னுமளவும் இறைவியின் திருமார்பையும், "அயில்வாயரவம்" என்பதுமுதல் "ஒருபாற்றிருக்கரம்"என்னுமளவும் இறைவனது திருக்கையையும்,"செறிந்தசூடகம்"என்பதுமுதல்"ஒருபாற்றிருக்கரம்" என்னுமளவும் இறைவியின் திருக்கையையும், "இரவியும்" என்பதுமுதல் "நாட்டம்" என்னுமளவும் இறைவனது திருக்கண்ணையும், "நவ்வி" என்பதுமுதல் "ஒருபானாட்டம்" என்னுமளவும் இறைவியின் திருக்கண்ணையும், "கொச்சிப்பூவும்" என்பதுமுதல் 'ஒருபாற்றிருமுடி" என்னுமளவும்இறைவனதுதிருமுடியையும்,"பேணிய" 'என்பதுமுதல் " ஒருபாற்றிருமுடி" என்னுமளவும் இறைவியின் திருமுடி

யையும், புகழ்ந்துரைத்தனராதலால் இது திருவிடைமருதூரென்னுந் திருப்பதியில் அர்த்தநாரீச்சுரனாய் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானைப்பாதாதிகேசமாக அனுபவித்தமையை விளக்கி நின்றது. திருவிடைமருதூர் என்பதற்கு வடநூலார் மத்யார்ஜுநமென்பர். பாதாதிகேசம், கேசாதிபாதம் என்னும் இரண்டனுள் ஆன்மாக்களுக்குப் புகலிடமாவது திருவடியாதலால் பாதாதிகேசம் சிறந்தமையின் இவர் திருவடியிற் கண்வைத்தார்.

## நேரிசைவெண்பா.

2. பொருளுங்குலனும்புகழுந்திறனு
மருளுமறிவுமனைத்து-மொருவர்
கருதாவென்பார்க்குங்கறைமிடற்றாய்தொல்லை
மருதாவென்பார்க்குவரும்.

இ - ள். ஒருவர்கருதா - ஒருவரும் கருதவொண்ணாத, என்பு ஆர்க்கும் - எலும்புமாலைகளையணிந்த, கறைமிடற்றாய் - விஷகண்டத்தையுடையவனே, தொல்லை - பழமையாகிய, மருதா - மருதூரீசனே, என்பார்க்கு - என்றுதுதிப்பவர்க்கு, பொருளும் - பொருளும், குலனும் - உயர்குலமும், புகழும் - கீர்த்தியும், திறனும் - ஆற்றலும், அருளும் - கிருபையும், அறிவும் - ஞானமும் ஆகிய, அனைத்தும் - எல்லாம், வரும் - உண்டாகும், எ-று.

ஒருவர்கருதா என்பு - பிரமன்முதலியோரது எலும்பு. பொருளில்லாவிடத்து இக்குலன்புகழ்முதலியவும் விளங்காஎன்பதுதோன்றப்பொருளும் என அதனை முதற்கட்கூறினர். "வறியார் இருமை அறியார்" எனவும், "முனிவருமன்னரும் முன்னுவபொன்னான்முடியும்" எனவும் "வடுவிலா வையத்து மன்னிய மூன்றனுள் நடுவணதெய்த விருதலையு மெய்தும்" எனவும், மேலோர்களாலும் இப்பொருள் சிறப்பித்துக்கூறப்படுதல்காண்க. குலன்புகழ்முதலியஇம்மைக்குரியனவும், அருள், அறிவுமுதலிய மறுமைக்குரியனவும்,பொருளா னமையுமென்றாராயிற்று. திருவிடைமருதூர்ச் சிவபெருமானே என்று துதிப்பவர்க்குப் பொருள்முதலியயாவும் உளவாம் என்பது கருத்து.

## கட்டளைக்கலித்துறை.

3. வருந்தேனிறந்தும்பிறந்துமயக்கும்புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற்புகுகின்றிலேன்புகழ்மாமருதிற்
பெருந்தேன்முகந்துகொண்டுண்டுபிறிதொன்றிலாசையின்றி
யிருந்தேனினிச்சென்றிரவேனொருவரையாதொன்றுமே.

இ - ள். இறந்தும் பிறந்தும் வருந்தேன் - மாண்டும் தோன்றியும் வருந்தேன், மயக்கும் - மயங்கச்செய்கின்ற, புலன்வழிபோய் - ஐம்புல வழியிற்போய், பொருந்தேன் - சேரேன், நரகில் - நரகத்தில், புகுகின்றிலேன் - பிரவேசிக்கமாட்டேன், புகழ் - கீர்த்தியைக்கொண்ட, மா - அழகிய, மருதில் - மருதூர்க்கண்ணுள்ள, பெருந்தேன் - பெரியதேனை, முகந்துகொண்டு - மொண்டுகொண்டு, உண்டு - பருகி, பிறிது ஒன்றில் ஆசை இன்றி-வேறொன்றில் ஆசையில்லாமல், இருந்தேன் - இருந்து விட்டேன், இனி-இனி, சென்று-போய்,ஒருவரை-ஒருவரை, யாதொன்றும் இரவேன்-யாதொருபொருளையும் யாசியேன், எ - று.

பிறப்பிறப்புக்கள் உளவாயின் ஐம்புலவாசையிற் செல்லுதலும் உளதாம் என்பார் "வருந்தேன் இறந்தும்பிறந்தும்" என்பதை யடுத்து மயக்கும் புலன்வழிபோய்ப் பொருந்தேன் என்றும், புலன்வழிபோய்ப் பொருந்தாமை நரகிற்புகாமைக்குக் காரணமாதலால் மயக்கும் புலன்வழி போய்ப் பொருந்தேன் என்றதையடுத்து நரகிற்புகுகின்றிலேன் எனவும், இவைகளெல்லாவற்றிற்கும் காரணம் திருவிடைமருதூர்ப் பெருந்தேனை முகந்து பருகுதலாதலால் இவைகளையடுத்துப் புகழ்மாமருதிற் பெருந்தேன் முகந்துகொண்டுண்டெனவும்.இத்தேனைப் பெறுகைக்குக்காரணம் நிராசையாதலால் பிறிதொன்றிலாசையின்றி யிருந்தேன் எனவும்,பிறப்பிறப்பற்று முத்தியடைதலினும் சிறந்தபொருள் மற்றொன்றுமில்லையாதலால் "இனிச் சென்றிரவேன் ஒருவரையாதொன்றுமே" எனவும் கூறினர். "மருதிற் பெருந்தேன்"என்றது சிவபெருமானை.மருதமரத்திற் கட்டிய பெருந்தேன் என்பது சொன்னயம். சுவைமிகுதி பற்றி சிவபிரானைப் பெருந்தேன் என்பாராயினர்.

நேரிசையாசிரியப்பா.

4. ஒன்றிஞெடொன்றுசென்றுமுகிறடவி
யாடுகொடி நுடங்கும்பீடுகெழுமாளிகை
தெய்வக்கம்மியர்கைம்முயன்றுவகுத்த
வோவநூற்செம்மைப்பூவியல்வீதி
குயிலெனமொழியுமயிலியற்சாயன்
மான்மாறவிழிக்குமானர்செல்வத்
திடைமருதிடங்கொண்டிருந்தவெந்தை
சுடர்மழுவலங்கொண்டிருந்ததோன்ற
லாரணந்தொடராப்பூரணபுராண
நாரணனறியாக்காரணக்கடவுள்
சோதிச்சுடரொளியாதித்தனிப்பொரு

ளேகநாயகயோகநாயக
யானொன் றுணர்த்துவதுளதேயான்முன்
னனந்தலையுலகத்தனந்தயோனியிற்
பிறந்துழிப்பிறவாதுகறங்கெனச்சுழன் றுழீஇத்
தோற்றும்பொழுதினீற்றுத்துன்பத்
தியாயுறுதுயரமுமியானுறுதுயரமு
மிறக்கும்பொழுதினறப்பெருந்துன்பமு
நீயலதறிகுநர்யாரோயதனு
லியானினிப்பிறத்தலாற்றேனஃதான்
றுற்பவந்துடைத்தனிற்பிடித்தல்லது
பிறிதொருநெறியினில்லையந்நெறிக்கு
வேண்டலும்வெறுத்தலுமாண்டொன்றிற்படரா
வுள்ளமொன்றுடைமைவேண்டுமஃதன்றி
யைம்புலனேவலாணைவழிநின்று
தானலதொன்றைத்தானெனநினையு
மிதுவெனதுள்ளமாதலினிதுகொடு
நின்னைநினைப்பதெங்ஙனமுன்னங்
கற்புணையாகக்கடனீர்நீந்தின
ரெற்பிறருளரோவிறைவகற்பங்
கடத்தல்யான்பெறவும்வேண்டுங்கடத்தற்கு
நினைத்தல்யான்பெறவும்வேண்டுநினைத்தற்கு
நெஞ்சுநெறிநிற்கவும்வேணடுநெஞ்சுபொதி
யுறையெயிற்றுரகம்பூண்ட
கறைகெழுமிடற்றெங்கண்ணுதலோயே.

இ - ள். ஒன்றினொடு ஒன்று - ஒன்றோடொன்றுகூடி, சென்று - போய், முகில்தடவி - மேகத்தைத்தீண்டி, ஆடுகொடி நுடங்கும் - ஆடுங் கொடிகள் துவளாநிற்கிற, பீடுகெழுமாளிகை-பெருமைபொருந்திய மாளி கைகள், தெய்வக்கம்மியர்-தெய்வத்தச்சர், கைம்முயன்று வகுத்த - கைம் முயன்றுபடைத்த, ஓவநூல் செம்மை-சிற்பநூலின் செம்மையமைந்த, பூ இயல்வீதி - அழகுபொருந்திய தெருக்களில், குயில் எனமொழியும் - குயில் போலப் பேசுகின்ற, மயில் இயல்சாயல், மயிலியலாகிய சாயலையுடைய, மான்மாறவிழிக்கும் - மான் அஞ்சும்படிவிழித்து நோக்குகின்ற, மானார் - மாதர்நெருங்கிய, செல்வத்து-செல்வமிக்க, இடைமருது-திருவிடைமருதூ

ளை, இடம்கொண்டிருந்த - இடமாகக்கொண்டிருந்த, எந்தை - எந்தையே, சுடர் - ஒளிசெய்கின்ற, மழு-மழுப்படையை, வலம்கொண்டு இருந்த-வலப்பக்கத்திற்கொண்டிருந்த,தோன்றல் - பெரியோனே, ஆரணம்தொடரா-வேதங்களும் தொடரப்பெறாத, பூரண - நிறைவுடையவனே, புராண - பழையோனே, நாரணன் அறியா - திருமாலும் அறியாத, காரணக்கடவுள்-மூலகாரணனாகிய கடவுளே,சோதிசுடர் ஒளி - சோதிச்சுடரொளியே, ஆதி தனிப்பொருள்-முதன்மையாகிய ஒப்பற்றபொருளே, ஏகநாயக - ஏகநாயகனே, யோகநாயக - யோகநாயகனே, யான் ஒன்று உணர்த்துவது உளது - நானொன்றுவிண்ணப்பித்துக்கொள்ள வேண்டியதுண்டு, (என்னெனின்,) யான் - நான், முன் - முன்னே, நனந்தலை உலகத்து - உலகினிடையில், அனந்தயோனியில் - முடிவற்றயோனிபேதங்களில், பிறந்துழி - ஒருகாற்பிறந்த இடத்தில், பிறவாது - மற்றொருகாற்பிறவாமல், கறங்கு என்ச்சுழன்றுழி இ - காற்றாடிபோலச்சுழன்றபோது, தோற்றும் பொழுதின்-பிறக்கும்பொழுதில், ஈற்றுத்துன்பத்து - பிரசவவேதனையால், யாய் உறுதுயரமும் - தாயடையுந் துன்பத்தையும், யான்உறுதுயரமும் - நானடையுந்துன்பத்தையும்,இறக்கும் பொழுதின் - இறக்கும்போது நேரிடுகிற,அறப்பெருந்துன்பமும் - மிகப்பெரியதுன்பத்தையும், நீ அல்லது-நீயேயன்றி, அறிகுநர்யார் - அறியவல்லார்யார், அதனால் - ஆதலால், யான் இனிப்பிறத்தல் ஆற்றேன் - நான் இனிப்பிறத்தற்றொழிலைத் தாங்கமாட்டேன், அஃதான்று - அதன்றி, உற்பவம் - பிறவியை, துடைத்தல் - நீக்குதல், நிற்பிடித்தல்லது - உன்னைப்பற்றியன்றி, பிறிது ஒரு நெறியின் இல்லை - வேறொருமார்க்கத்தான் முடியாது, அந்நெறிக்கு - அந்தமார்க்கத்துக்கு, வேண்டலும் வெறுத்தலும்-விருப்பும் வெறுப்பும், ஆண்டு ஒன்றில் படரா - அவ்விடத்தொருபொருளில் செல்லாத, உள்ளம் ஒன்று உடைமைவேண்டும் - மனமொன்றுடைத்தாதல் வேண்டும், அஃதன்றி-அதுவல்லாமல், ஐம்புலன் ஏவல் ஆணைவழிநின்று-ஐம்புலன்கள் ஏவுகின்ற ஆக்கினையின் நெறியில் நின்று - தான் அல்லது ஒன்றை - தானல்லாததாகிய ஒருபொருளை, தான் எனநினையும் - தானென்று கருதும், இது எனது உள்ளம் - இது தான் என்மனத்தினது நிலைமை, ஆதலின் - ஆதலால், இது கொடு - இந்தமனத்தைக்கொண்டு, நின்னை நினைப்பது எங்ஙனம்-உன்னை நினைப்பதெவ்வாறு, முன்னம் - முற்காலத்தில், கல்புணையாக - கல்லையே தெப்பமாகக்கொண்டு, கடல் நீர்நீந்தினர் - கடல் நீரை நீந்திச்சென்றவர்கள், எற்பிறர் உளரோ - என்னைப்போலப்பிறருண்டோ, இறைவ - தலைவனே, யான்-நான், கர்ப்பம்கடத்தல் பெறவும் வேண்டும் - கர்ப்பவேதனையைக்கடத்தல் பெறவும்வேண்டும், கடத்தற்கு-கடப்பதற்கு, யான் நினைத்தல்பெறவும் வேண்டும்-நான் உன்னை நினைத்தல் பெறவும் வேண்டும், நினைத்தற்கு - நினைப்பதற்கு, நெஞ்சு - என்மனமானது, நெறிநிற்கவும் வேண்

டும்-என் ஆணை நெறியில் நிற்கவும் வேண்டும், நஞ்சுபொதி-விஷம்பொருந்தியிருத்தற்கு, உறை - இடமாகிய, எயிறு-பற்களையுடைய, உரகம் பூண்ட-சர்ப்பத்தையாபரணமாகப்பூண்டருளிய, கறைகெழுமிடறு-விஷம்பொருந்திய கண்டத்தையுடைய, எம்கண்ணுதலோயே-எமது கண்ணுதலே. எ-று

நனைந்தலை - நடு. பிறந்துழிப்பிறவாது என்றது-ஒரு யோநியிற் பிறந்த சீவன்அதிற்றானேமற்றொருகாற்பிறவாமையை.இது பற்றியே கறங்கெனச் சுழன்றுழி என்றார்.ஈன்றுஎன்பதுஈற்று எனவலித்தல் பெற்றது.யாய் உறு துயரம் - பத்துமாதஞ் சுமத்தல், ஈனுங்கால்வயாவு நோயாற்றல்முதலியன. யானுறுதுயரம் என்றது - கருப்பாசயப்பையுறுத்தல், அதிற்சலம் பூரித்தல், உதராக்கிநியால்வேதல், பிரசூதவாயுமூரித்துத் தள்ளுதல், யோநித்துவாரத்தில் நெருக்குண்டல்முதலியன. இதற்கு உதாரணம். சிவதருமோத்தரம்."என்றென்றெண்ணியிருக்குமுயிரிடர்ப் பட்டழியுமெழில்வளைக்கீழ், ஒன்று மொருவன்றனைப்போலக் கருப்பாசயப்பையுறுத்துதலால், மன்றவுததிமறிந்தாழ்வான் வருத்தமென்னவருந்தியிடும், நின்ற கருப்பாசயவுதக வெள்ளங் கொள்ள நிறையழிந்தே" எனவும், "அங்கியதனிற்றங்கியிடுமயோமயத்தகும் பத்திற், றங்குமொருவன்ற பகம்போற்றபனமெய்துந் தாயுதரத்,தங்கிசுடவேயழலனை யருசியதனுலாகத்தைப்,பங்கித்திடவே படுமிடரினிருநாற் குணிதம் பட்டழுங்கும்" என்றும், "கருப்பாசயமே கட்டமதாமதனினதிகங் கடுங்காலு, மூரிக்கமிகவுமோக முறமுன்னை யுணர்வு மந்நிலையே,மரிக்கவாலைக் கரும்பெனவே யோனிவழியின் வலிதொலைய, நெருக்கப்பட்டு நிலமிசையே தோன்று முயிருநிலையுடனே." எனவும்,வருவன. "இறக்கும் பொழுதினறப் பெருந்துன்பமும்" என்றது-ஐயம் மேலிடுதல், அறிவு பொறி புலன்கள் நிலைமாறல், அந்தக்கரணங்கள் தத்தம்தொழில் மாறல், அறியாமைமேலிடல், நாவுலர்ந்தடங்கல் முதலியன. இதற்கு உதாரணம். "பரணமாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதங்கையிற்றந்த, விரணமானவைகொண்டிட விவளைவிட்டியம் பிடாதிவனேகு,மரணவேதனை யாவராலறியலாமயங்கிவைம் புலனைந்தக், கரணமியாவையுங் கலங்கிடவருந்துயர் கடவுளே யறிகிற்பான்." என்றும், "வந்திடுமரணத் துன்பமறித்துணைசெய்யப்போமோ,வுந்திமேலையும் பித்து முணர்வொடுபொறிகலங்கி, நந்திடாவிருளே மூடிநாவுலர்ந்தலமந்தென்னே, யிந்தமாவிறப்பிற்றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே"எனவும் வருவன. திருவிடைமருதூர்ச் சிவபெருமானே, யான் இவ்வுலகத்தில் அநந்தயோனிபேதங்களில் சென்று பிறந்தும் இறந்தும் பட்டதுன்பத்திற் கோரெல்லையில்லை, அதனை அறியும் ஆற்றலையுடையார் நீயேயன்றி வேறுயாவருளர், ஆதலால் யான் இனி பிறத்தலை ஆற்றேன், அதுவன்றி அப்பிறவியை நீக்குதல் உன்னைக்கொண்டன்றி வேறுவழியைக்கொண்டன்று, அவ்வழிக்கு விருப்பும் வெறுப்பும் அற்றுயாதொருவிடயத்தினும் செல்லாத மனத்தையுடையேனாதல் வேண்

டும், என்மனமோ ஐம்புலன் வழியேசென்று தானல்லாத தொன்றைத்தா னெனக்கருதுவது, இத்தன்மைத்தாகிய மனத்தைக்கொண்டு உன்னை யான் கருதுவது எவ்வாறு, அப்படிக் கருதுவேனாயின் கல்லைப் புணையாகக் கொண்டு கடலை நீந்தினேனாவேன். ஆதலால் இப்பிறவியையான் கடத்தலும் வேண்டும், கடத்தற்கு உன்னை நினைத்தலும் வேண்டும். நினைத்தற்கு என்மனம் என் ஆணைவழிநிற்றலும் வேண்டும் என்பது கருத்து.

## நேரிசைவெண்பா.

5. கண்ணென்றுநந்தமக்கோர்காப்பென்றுங்கற்றிருக்கு
மெண்ணென்றுமூலவெழுத்தென்று—மொண்ணே
மருதவப்பாவென்றுமுனைவாழ்த்தாரோன்மற்றுங்
கருதவப்பாலுண்டோகதி.

இ - ள். கண் என்றும் - விழிகளென்றும், நந்தமக்கோர்காப்பு என்றும் - நமக்கொருகாவலென்றும், கற்றிருக்கும் எண் என்றும் - கற்றிருக்கிற தர்க்கநூலென்றும், மூல எழுத்து என்றும்-பாஷா மூலமாகிய வியாகரணநூலென்றும், ஒள் ஐ - ஒட்பமும் அழகு முள்ள, மருத அப்பா என்றும் - மருதப்பாவென்றும், உன்னைவாழ்த்தாரேல் - உன்னைத் துதியாராயின், மற்றும் கருத-பின்னும் ஆலோசிக்கு மிடத்தில், அப்பால்-அதற்குமேல், கதி உண்டோ-(அப்படி உன்னைவாழ்த்தாதார்க்கு) நற்கதியுளதோ.

மருதூரிறைவா,உன்னைத்தமக்குக் கண்களாகவும் காவலாகவும்தருக்கநூலாகவும் வியாகரணநூலாகவும் கருதிவாழ்த்தாதவர்கள் நற்கதியடைவதுண்டோ என்பது கருத்து.

இறைவன் நன்மை தீமைகளைப்பகுத்துணர்த்தலால் கண்எனவும், உயிர்களுக்குத்தீமையையொழித்துக்காப்பவனாதலால் காப்பு என்றும்,பிறமதங்களை வெல்லுதற்கேற்ற யூகத்தையுண்டாக்குவோனாதலால் எண் என்றும், எல்லாநூல்களையுங் கற்பதற்குரிய அறிவையுண்டாக்குவோனாதலால் மூல எழுத்தென்றும், கூறினார்.

## கட்டளைக்கலித்துறை.

6. கதியாவதுபிறிதியாதொன்றுமில்லைகளேபரத்தின்
பொதியாவதுசுமந்தால்விழப்போமிதுபோனபின்னர்
விதியாமெனச்சிலர்நோவதல்லாலிதைவேண்டுநர்யார்
மதியாவதுமருதன்கழலேசென்றுவாழ்த்துவதே.

இ - ள். கதியாவது - புகலிடமாவது, பிறிதுயா தொன்றும் இல்லை - வேறுயாதொன்றுமில்லை, களேபரத்தின் பொதியாவது சுமந்தால் - உடம்பாகிய பொதியைச்சுமந்தால், விழப்போம் – (அது) வீழப்போகும், இது போனபின்னர் - இது போனபிறகு,விதி ஆம் என - ஊழாமென்று, சிலர் நோவதல்லால் - சிலர்வருந்துவதல்லது, இதைவேண்டுநர்யார் - இதனைவிரும்புவோர்யாவர், சென்று மருதன்கழல் வாழ்த்துவதே - போய்மருதன் திருவடியைத் துதிப்பதே, மதியாவது - அறிவாவது. எ - று.

களேபரத்தின் பொதி என்பதில் இன் அல்வழிச்சாரியை. பொதி - சுமை. உயிர்களுக்கு மருதூர்ச் சிவபெருமானையன்றி வேறுபுகலிடமில்லையாதலால் அவனது திருவடியை அத்திருப்பதியிற் சென்று வாழ்த்துதலே அறிவுடையார்க்குஅறிவாவது,இவ்வுடற் சுமைவீழ்ந்தழியுமியல் புடையது, இது அழிந்த பின்னர் ஊழினது நியதி இவ்வளவேயென்று சிலர் வருந்துதலன்றி இதனை விரும்புவார் ஒருவருமில்லை என்பது கருத்து.

இணைக்குறளாசிரியப்பா.

7. வாழ்ந்தனமென்றுதாழ்ந்தவர்க்குதவாது
தன்னுயிர்க்கிரங்கிமன்னுயிர்க்கிரங்கா
துண்டிப்பொருட்டாற்கண்டனவெஃகி
அவியுநர்க்குச்சுவைபலபகர்ந்தே
யாராவுண்டியயின்றனராகித்
தூராக்குழியைத்தூர்த்துப்பாரா
விழுப்பமுங்குலனுமொழுக்கமுங்கல்வியுந்
தன்னிற்சிறந்தகன்மூதாளரைக்
கூஉய்முன்னின்றுதன்னேவல்கேட்குஞ்
சிறாஅர்த்தொகுதியினுறாஅப்பேசியும்
பொய்யொடுபுன்மைதன்புல்லர்க்குப்புகன்று
மெய்யுமானமுமேன்மையுமொரீஇத்
தன்னைத்தேறிமுன்னையோர்கொடுத்த
நன்மனைக்கிழத்தியாகியவந்நிலைச்
சாவுழிச்சாஅந்தகையளாயினு
மேவுழிமேவல்செல்லாதுகாவலொடு
கொண்டோளொருத்தியுண்டிவேட்டிருப்ப
வெள்ளுக்கெண்ணெய்போலத்தள்ளாது
பொருளினளவைக்குப்போகம்விற்றுண்ணு

மருளின்மடந்தையராகத்தோய்ந்து
மாற்றல்செல்லாதுவேற்றோர்மனைவயிற்
கற்புடைமடந்தையர்பொற்புநனிகேட்டுப்
பிழைவழிபாராதுநுழைவழிநோக்கியு
நச்சிவந்தநல்கூர்மாந்தர்தம்
விச்சையிற்படைத்தவெவ்வேறுகாட்சியி
னகமலர்ந்திவார்போலமுகமலர்ந்
தினிதுமொழிந்தாங்குதவுதலின்றி
நாளுநாளுநாள்பலகழித்தவர்
தாளினூற்றலுந்தவிர்த்துக்கேளிகழ்ந்
திகழும்பரமுமில்லையென்று
பயமின்றொழுகிப்பட்டிமைபயிற்றி
மின்னினனையதன்செல்வத்தைவிரும்பித்
தன்னையுமொருவராகவுன்னு
மேனையோர்வாழ்வும்வாழ்க்கையுநனைமலர்ந்
திபோசனைகமழுமுற்பலவாவியிற்
பாசடைப்பரப்பிற்பானிறவன்னம்
பார்ப்புடன்வெருவப்பகுவாய்வாளைகள்
போர்த்தொழில்புரியும்பொருகாவிரியு
மருதமுஞ்சூழ்ந்தமருதவாண
சுருதியுந்தொடராச்சுருதிநாயக
பத்தருக்கெய்ப்பினில்வைப்பெனவுதவு
முத்தித்தாளமூவாமுதல்வநின்
றிருவடிபிடித்துவெருவரல்விட்டு
மக்களுமனைவியுமொக்கலுந்திருவும்
பொருளெனநினையாதுன்னருளினைநினைந்
திந்திரச்செல்வமுமெட்டுச்சித்தியும்
வந்துழிவந்துழிமறுத்தனரொதுங்கிச்
சின்னச்சீரைதுன்னற்கோவண
மறுதற்கீளொடுபெறுவதுபுனைந்து
சிதவலோடொன்றுதவுழியெடுத்தாங்
கிடுவோருளரெனினிலையினின்றயின்று
படுதரைப்பாயலிற்பள்ளிமேவி

யோவாத்தகவெனுமரிவையைத்தழீஇ
மகவெனப்பல்லுயிரனைத்தையுமொக்கப்
பார்க்குநின்
செல்வக்கடவுட்டொண்டர்வாழ்வும்
பற்றிப்பார்க்கினுற்றநாயேற்குக்
குளப்படிநீருமளப்பருந்தன்மைப்
பிரளயச்சலதியுமிருவகைப்பொருளு
மொப்பினுமொவ்வாத்துப்பிற்றுதலி
னின்சீரடியார்தஞ்சீரடியார்க்
கடிமைபூண்டுநெடுநாட்பழகி
முடலையாக்கையொடுபுடைபட்டொழுகியவர்
காற்றலையேவலென்றுய்த்தலையேற்றுக்
கண்டதுகாணினல்லதொன்
றுண்டோமற்றெனக்குள்ளதுபிறிதே.

இ - ள். வாழ்ந்தனம் என்று - யாம்இல்வாழ்வு வாழ்ந்தோமென்று, தாழ்ந்தவர்க்கு உதவாது, பணிந்து கேட்டவர்க்கு உதவாமலும், தன்னுயிர்க்கு இரங்கி - தன்னுயிர்க்கிரக்கஞ்செய்து, மன்னுயிர்க்கு இரங்காது - நிலைபெற்றவுயிர்களுக்கிரக்கஞ் செய்யாமலும், உண்டிப் பொருட்டால் - உணவின்பொருட்டாக, கண்டனவெஃகி - கண்டவற்றை விரும்பி, அவி அடுநர்க்கு - சோறுசமைப்பவர்க்கு, சுவைபலபகர்ந்து - சுவையான வுண்டிகள் பலவற்றையுஞ்சொல்லி, ஆராவுண்டி அயின்றனர் ஆகி - தெவிட்டாவுணவை யுண்டு, தூராகுழியை தூர்த்து - வயிற்றைநிரப்பி, விழுப்பமும் - மேம்பாட்டினுனும், குலனும் - குலத்தானும், ஒழுக்கமும் - ஒழுக்கத்தானும், கல்வியும் - கல்வியானும், தன்னின் சிறந்த - தன்னினுஞ் சிறந்த. நல் - நல்ல, மூதாளரை - பெரியோரை, பாரா - பார்த்து, கூஉய் - கூவி, முன்னின்று - எதிரில் நின்று, தன் ஏவல்கேட்கும் - தன்னேவலைச் செய்யக்கேட்கிற, சிறார் தொகுதியின் - சிறுவர் கூட்டம் போல், உறாபேசியும் - பொருந்தாமொழிகளைப் பேசியும், பொய்யொடுபுன்மை - பொய்யோடுகூடிய அற்பமொழிகளை, தன்புல்லர்க்குப்பு கன்றும் - தனக்குரியரான கீழ்மக்களுக்குச் சொல்லியும், மெய்யும் - சத்தியத்தையும், மானமும் - மானத்தையும், மேன்மையும் - மேமபாட்டையும், ஒரீஇ - நீங்கி, தன்னைத்தேறி - தன்னையாராய்ந்து, முன்னையோர்கொடுத்த - பழையோர் கொடுத்த, நன்மனைக் கிழத்தியாகிய - நல்லமனைமாட்சிக்குரியளாகிய, அந்நிலை - அந்த நிலையினின்றும், சாவுழிசாம் - சாகுங்காற்சாதற்குரிய, தகையள் ஆயினும்-தகுதியையுடையளாயினும், மேவுழி

மேவல் செல்லாது-பொருந்தற்குரிய காலத்துப் பொருந்தாமல், காவலொடு-காவலோடு, கொண்டோள் ஒருத்தி - கொள்ளப்பட்டாளொருத்தி; உண்டிவேட்டு இருப்ப-உணவைவிரும்பியிருக்க, எள்ளுக்கு எண்ணெய்போல-எள்ளிலெண்ணெய்போல, தள்ளாது - நீக்காமல், பொருளின் அளவைக்கு-பொருளளவுக்கேற்க, போகம்விற்று-சுகத்தைவிற்று, உண்ணும்-(அதனால்வரும் வருவாயைக்கொண்டு) உண்டுவாழ்கின்ற, மருளின்மடந்தையர்-மயக்கத்தைத்தருகின்ற (பொது) மாதரது, ஆகம் தோய்ந்தும் - மார்பிற்படிந்தும், ஆற்றல் செல்லாது - வல்லமை செல்லாமல், வேற்றோர் மனைவயின் - பிறர்மனையிலுள்ள, கற்பு உடை மடந்தையர் - கற்புடைய மாதரது, பொற்பு - அழகை, நனிகேட்டு - மிகவும் கேள்விப்பட்டு, பிழைவழிபாராது-தவறுநெறியென்றும் நோக்காமல், நுழைவழிநோக்கியும்-புகும் நெறிபார்த்தும், நச்சிவந்த - விரும்பி வந்த, கல்கூர்மாந்தர் - வறிய மாக்கள், தம் விச்சையின்-தம் வித்தையினால், படைத்த - பெற்ற, வெவ்வேறுகாட்சியின் - வெவ்வேறுவகையாகிய அறிவுக்கு, அகமலர்ந்து - மனமகிழ்ந்து, ஈவார்போல - கொடுப்பவர்போல, முகமலர்ந்து - முகமலர்ச்சியுடையராய், இனிதுமொழிந்தாங்கு - இன்சொற்சொன்னதுபோல, உதவுதல் இன்றி - கொடுத்தலின்றி, நாளும் நாளும்-ஒவ்வொருநாளாக, பலநாள் கழித்து - பலநாள் கழியப்பண்ணி, அவர் - அவர்களுடைய, தாளின் ஆற்றலும் தவிர்த்து - கால்வலிமையுங்குறைத்து, கேள் இகழ்ந்து - உறவினரையிகழ்ந்து, இகமும் பரமும் இல்லையென்று-இம்மையும் மறுமையும் இல்லையென்று சொல்லி, பயம் இன்று ஒழுகி - அச்சமில்லாமல் நடந்து, பட்டிமைபயிற்றி - வஞ்சத்தோடு தம்மைப்பழகச்செய்து, மின்னின் அனைய - மின்னலையொத்த, தம்செல்வத்தைவிரும்பி-தமது செல்வத்தை இச்சித்து, தம்மையும் ஒருவராக உன்னும்-தம்மையும் ஒருவராகநினைக்கிற,ஏனையோர் வாழ்வும் - மற்றையோர்வாழ்வையும், வாழ்க்கையும் - வாழ்க்கையையும், நனைமலர்ந்து - பூவரும்புகள் அலர்ந்து, யோசனை கமழும் - யோசனை தூரம் பரிமளிக்கிற, உற்பலவாவியில்-தாமரைத்தடாகத்தில், பாசு அடை பரப்பில் - பச்சையிலைகளடர்ந்த பரப்பில், பால் நிற அன்னம் - வெண்ணிறத்தையுடைய அன்னப்பறவைகள்,பார்ப்புடன் வெருவ-தம்குஞ்சுகளோடு அஞ்ச, பகுவாய்வாளைகள்-பிளந்தவாயையுடையவாளைகள்,போர்த்தொழில் புரியும் - போர்த்தொழிலைச்செய்கிற, பொரு-அலைகள்மோதுகின்ற, காவிரியும்-காவிரியாறும், மருதமும்-மருதநிலமும், சூழ்ந்த-வளைந்திருக்கிற, மருதவாண - மருதூரில் வாழ்வோய், சுருதியும் தொடரா - வேதங்களும் தொடர்ந்தறியாத,சுருதிநாயக-வேதநாயகனே,பத்தருக்கு-அடியார்களுக்கு, எய்ப்பினில் - இளைத்தகாலத்தில், வைப்பு என-நிதியைப்போல, உதவும் - உதவுகின்ற, முத்தித்தாள - முத்தியைக் கொடுக்கிற திருவடியையுடையோய் மூவாமுதல்வ - மூத்தலில்லாத முதல்வனே, நின்திருவடி பிடித்து-

உன் திருவடியைப்பற்றி, வெருவரல்விட்டு - அச்சம் விட்டு, மக்களும்-புதல்வரும், மனைவியும்-மனையாளும், ஒக்கலும்-உறவினரும், திருவும் - செல்வமும், பொருள் என நினையாது - உறுதிப்பொருளென்று நினையாமல், உன் அருளினை நினைந்து-உன்னருளைநினைத்து, இந்திரச் செல்வமும்-இந்திரனது செல்வமும், எட்டுச்சித்தியும்-அஷ்டசித்திகளும்,வந்துழிவந்துழி-கிடைக்குந்தோறும் கிடைக்குந்தோறும், மறுத்தனர்-மறுத்து,ஒதுங்கி-விலகி,சின்னச்சீரை-கந்தைத்துணியும்,துன்னல்கோவணம்-தைத்தகோவணமும்,அறுதற்கீளொடு-அறுதலையுடைய கீளுடன்,பெறுவதுபுனைந்து-பெறுவதை யணிந்து, சிதவல்ஓடுஒன்று-பழுதாகிய ஓடொன்றை, உதவுழி எடுத்து-உதவுமிடத்தெடுத்து, ஆங்கு-அப்பொழுதே, இடுவோர் உளர்எனின் - இடுவோருளரானால்,நிலையின்நின்று அயின்று-நின்றபடியே யுண்டு,படு-பொருந்திய, தரைபாயலில்-தரையாகியபடுக்கையில்,பள்ளிமேவி-படுத்து,ஓவா-நீங்காத,தகவு என்னும்-தகுதியென்கின்ற,அரிவையைத்தழீஇ-மங்கையைத்தழுவி, பல்லுயிரனைத்தையும்-பலவேறுவகைப்பட்டஉயிர்களெல்லாவற்றையும்,ஒக்க-ஒப்பாக,மகஎன பார்க்கும்-குழந்தைகள்போல்நோக்குகின்ற,நின்-உன்னுடைய, செல்வம் - திருவருட்செல்வத்தையுடைய, கடவுள் - தெய்வத்தன்மையமைந்த,தொண்டர்வாழ்வும்-அடியார் வாழ்க்கையையும், பற்றிப்பார்க்கின்-பற்றிப்பார்க்குமிடத்து, உற்றநாயேற்கு - அடைந்த நாயினேனுக்கு, குளப்படிநீரும்-குளப்படி நீரும், அளப்பு அருதன்மை-அளவிடலரிய தன்மையையுடைய, பிரளயச்சலதியும் - பிரளயசமுத்திரமும் ஆகிய, இருவகைப்பொருளும்-இருவகைப்பொருள்களும், ஒப்பினும்-ஒப்பனவாங்காலத்தும், ஒவ்வா - ஒப்பனவாகாமல், துப்பிற்று ஆதலின் - குற்றமுடைத்தாதலால், நின்சீரடியார்தம் - உன்சீரடியாருடைய, சீரடியார்க்கு - சீரடியார்களுக்கு, அடிமை பூண்டு - தொண்டுபூண்டு, நெடுநாள் பழகி - நெடுங்காலம் பழகி, முடைலையாக்கையொடு - நாற்றமுள்ளவுடம்போடு, புடைபட்டு ஒழுகி - ஒதுங்கி நின்றொழுகி, அவர்-அவர்களுடைய, கால் தலை ஏவல்-காலினால் ஏவுங்காரியத்தை, என் - எனது, நாய்த்தலை யேற்று-நாய்த்தலையிலேற்றுக்கொண்டு, கண்டது - (அதனால்) அடைந்த தாகியபேற்றை, காணின் - காணப்பெறுவேனாயின், எனக்கு - அடியேனுக்கு, நல்லது ஒன்று - அதினும் நல்லதாகிய ஒன்று, பிறிது உண்டோ - வேறுயுளதோ. எ - று.

மருதவாணனே, செல்வம் வந்தகாலத்து யாம்மிகப் பெரிய வாழ்வினையுடையேம் என்று செருக்கடைந்து, வறியார்க்கு உதவிசெய்தல் முதலிய நன்மைகளைச் செய்யாமல், தன்னுயிர்போல மன்னுயிர்க் கிரங்காமை முதலிய தீமைகளைச்செய்து, இம்மை மறுமைகள் இல்லை என்று நாஸ்திகராய் ஒழுகுவாரது வாழ்க்கையையும், உன் திருவடியை அடைந்து மனைவி மக்கள் முதலியோரைப்பொருளென நினையாது உன்னருளையே பொருளாக

மதித்து இந்திரபதமும் எட்டுச்சித்தியும்கிடைக்கப்பெறினும் அவைகளைவெறுத்து,கோவணவுடை புனைந்து, பழுதுபட்ட ஓடொன்றைக்கையிற்றாங்கி, ஐயமிடுவார் உளரெனின் ஏற்று, அந்நிலையில் நின்றருந்தி, பூமியாகிய சயனத்தைப் பொருந்தி, தகுதியென்னும் மனைவியைத் தழுவி,பல்லுயிராகிய மக்களை அருளொடு நோக்குகின்ற உனது தொண்டரது வாழ்வையும் ஆராய்ந்து பார்க்கின், முறையே குளப்படி நீரையும் பிரளயவெள்ளத்தையும் நிகர்க்குமாதலால், யான் உனது அடியார்க்கடியார்க்கு அடிமை பூண்டொழுகி அவர்கள் ஏவியதொழிலைஎன் தலையாலியற்றி அறிஞர்கண்டமெய்ப்பொருளைக்காண்பதன்றிஎனக்குவேறோர்உறுதிப்பொருளுண்டோஎன்பதுகருத்து

ஆராவுண்டி - இதுவரையில் தாம் உண்ணாத உண்டி எனினுமமையும். நாடோறும் முப்பொழுது புசிப்பினும் நிரம்பாமையால் வயிற்றைத்தூராக்குழியென்றார். "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்-ஏதில் பிணந்தழீஇ யற்று" என்றவாறே தம்மை நோக்கிவரும் ஆடவர் அளவற்ற பொருளைத் தம்பொருட்டு இழப்பினும் அவர்களிடத்துச் சிறிதும் அன்பின்றி இருட்டறையில் அயலாரது பிணத்தை மன அருவருப்போடு தழுவுதல்போல அவரைத் தழுவுதலால் பொதுமாதரை "அருளில் மடந்தையர்" என்றார். "தாளினாற்றலுந்தவிர்த்து" என்றது கால்கள் நடந்து வலிகுறைந்து நடவாதிருக்கச் செய்து என்றபடி. சித்தி எட்டாவன - அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம். இடுவோர் என்றது உள்ளன்போடு இடுதற்குரியாரை. தகுதி - நடுவுநிலைமை. அதாவது எல்லாச் சீவர்மீதும் ஒப்பநிகழும் அருள். குளப்படி என்பதை குளம்பு அடி எனப்பிரிக்க. பசுவின் காற்குளம் பினால் உண்டாகிய பள்ளத்தில் நிற்கும் நீர் என்பது பொருள். இதனை "வெட்புதல் போய்த்தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகவியாபாரங்கள், செம்புகர் வேழத்தினுக்கான் குளப்படி போற்றோன்று மாற்றீன லெஞ்சுக், கம்புவியிற் றொழில் சிறிதேயாயினு நீந்தரிதாகு மாவின்பாதப், பைம்புனலுங் கிழக்கொதுக்குக் கெல்லைகாணாத பரவையன்றே" என்பதனாற்காண்க.

### நேரிசைவெண்பா.

3. பிறிந்தேனரகம்பிறவாதவண்ண
மறிந்தேனனங்கவேளம்பிற்—செறிந்த
பொருதவட்டவிற்பிழைத்துப்போந்தேன்புராணன்
மருதவட்டந்தன்னுளே வந்து.

இ - ள். புராணன்-பழையோனது,மருதவட்டம் தன்னுள்ளேவந்து-மருதூரெல்லைக் குள்ளேவருகையால், நரகம் பிறிந்தேன் - நரகத்தை நீங்கினேன், பிறவாத வண்ணம் அறிந்தேன் - பிறவாமைக் குரிய உபாயத்தை

யும் அறிந்துகொண்டேன், அனங்கவேள் - உருவிலியாகிய மன்மதனது அம்பின் செறிந்த - அம்புகளோடு பொருந்திய, பொருத - போர்செய்தற் குரிய, வட்டம் - வட்டவடிவாகிய, வில் - கருப்பு வில்லுக்கு, பிழைத்துப் போந்தேன் - தப்பிவந்தேன். எ - று.

முன்னேனாகிய மருதவாணனது எல்லையை யான்அடைந்துநரகத்தை நீங்கினேன், இனிப்பிறவாவகையை யறிந்தேன், மன்மத பாணம் என் மீது செல்லாதிருக்கப் பெற்றேன் என்பது கருத்து.

பொருதவட்ட என்பதை பொருத அட்ட எனப்பிரித்து போர்செய் தற்குரிய, யாவரையும் வென்ற எனப்பொருளுரைத்தலுமாம்.

கட்டளைக்கலித்துறை.

9. வந்திக்கண்டாயடியாரைக்கண்டான்மறவாதுநெஞ்சே
சிந்திக்கண்டாயரன்செம்பொற்கழறிருமாமருதைச்
சந்திக்கண்டாயில்லையாயினமன்றமர்தாங்கொடுபோ
யுந்திக்கண்டாய்நிரயத்துன்னைவிழ்த்தியுழக்குவரே.

இ - ள். நெஞ்சே - மனமே, அரன் அடியாரைக்கண்டால் - சிவ பெருமானுடைய தொண்டரைக்கண்டால்,வந்தி-துதிசெய்,அரன்-சிவபெரு மானது, செம்பொன்கழல் - செம்பொற்கழலை யணிந்த திருவடியை, மற வாது சிந்தி - மறவாமல் சிந்தனைசெய், திருமாமருதை-(அவனது) அழகிய பெரிய மருதூரை, சந்தி-அடை, இல்லையாயின்-(அப்படிச்செய்தல்) இல்லை யாயின், உன்னை நமன்தமர் கொடுபோய்-உன்னை யமபடர் கொண்டுபோய், நிரயத்துஉந்திவீழ்த்தி-நரகத்தில் தள்ளிவிழுத்தி,உழக்குவர்-கலக்குவார்கள்.

மனமே மருதூரீசனடியாரைக் கண்டால் துதிசெய்; அவனது பொன் னடியைக் கருது; அவனது திருப்பதியாகிய மருதூரைச் சென்றடை, இங் ஙனஞ் செய்திலையாயின் காலதூதர் உன்னைத் தள்ளிக்கொண்டுபோய் நரக கூபத்தில் வீழ்த்தி வருத்துவர் என்பது கருத்து.

இணைக்குறளாசிரியப்பா.

10. உழப்பின்வாராவுறுதிகளுளவோ
கழப்பின்வாராக்கையறவுளவோ
அதனால்
நெஞ்சப்புனத்துவஞ்சக்கட்டையை
வேரறவகழ்ந்துபோக்கித்தூர்வைசெய்
தன்பென்பாத்திகோலிமுன்புற
மெய்யெனுமெருவைவிரித்தாங்கையமில்

பத்தித்தனிவித்திட்டுசித்தலு
மார்வத்தெண்ணீர்பாய்ச்சிநேர்நின்று
தடுக்குநர்க்கடங்காதிடுக்கண்செய்யும்
பட்டியஞ்சினுக்கஞ்சியுட்சென்று
சாந்தவேலிகோலிவாய்ந்தபின்
ஞானப்பெருமுளைநந்தாதுமுளைத்துக்
கருணையிளந்தளிர்காட்டவருகாக்
காமக்குரோதக்களையறக்களைந்து
சேமப்படுத்துழிச்செம்மையினோங்கி
மெய்ம்மயிர்புளகமுகிழ்த்திட்டம்மெனக்
கண்ணீரரும்பிக்கடிமலர்மலர்ந்து
புண்ணிய
அஞ்செழுத்தருங்காய்தோன்றிநஞ்சுபொதி
காளகண்டமுங்கண்ணொருமூன்றுந்
தோளிருநான்குஞ்சுடர்முகமைந்தும்
பவளநிறம்பெற்றுத்தவளநீறுபூசி
யறுசுவையதனினுமுறுசுவையுடைத்தாய்க்
காணினுங்கேட்பினுங்கருதினுங்களிதருஞ்
சேணுயர்மருதமாணிக்கத்தீங்கனி
பையப்பையப்பழுத்துக்கைவர
வெம்மனோர்களினிதினிதருந்திச்
செம்மாந்திருப்பச்சிலரிதின்வராது
மனமெனும்புனத்தைவறும்பாழாக்கிக்
காமக்காடுமூடித்தீமைசெய்
யைம்புலவேடராறலைத்தொழுக
வின்பப்பேய்த்தேரொட்டாதோடக்
கல்லாவுணர்வெனும்புல்வாயலமர
விச்சைவித்துதிர்த்துழியானெனப்பெரிய
நச்சுமாமரநனிமிகமுளைத்துப்
பொய்யென்கவடுகள்போக்கிச்செய்யும்
பாவப்பஃறழைபரப்பிப்பூவெனக்
கொடுமையரும்பிக்கடுமைமலர்ந்து

துன்பப்பல்காய்தூக்கிப்பின்பு
மரணம்பழுத்துநரகிடைவீழ்ந்து
தமக்கும்பிறர்க்குமுதவா
திமைப்பிற்கழியுமியற்கையோருடைத்தே.

இ-ள். உழப்பின்-முயற்சியினால், வாரா - உண்டாகாத, உறுதிகள் உளவோ - உறுதிப் பொருள்கள் உண்டோ, கழப்பின்-சோம்பலால்,வாரா- உண்டாகாத, கையறவு உளவோ - துன்பங்கள் உண்டோ, (இல்லை) அதனால் - ஆதலால், நெஞ்சம்புனத்து-மனமாகிய புனத்திலுள்ள, வஞ்சக் கட்டையை - வஞ்சகமென்கிற கட்டையை, வேர் அற அகழ்ந்து போக்கி - வேரறத்தோண்டியெறிந்து, தூர்வைசெய்து - தூர்த்தலைச்செய்து, அன்பு என் பாத்திகோலி-அன்பென்னும் பாத்திவளைத்து, முன்பு உற-முன்பாக, மெய்என்னும்-சத்திய மென்கிற, எருவை விரித்து-எருவைத்தூவி, ஆங்கு - அதில், ஐயம் இல் - ஐயமற்ற, பத்தி - பத்தியென்கிற, தனி - ஒப்பற்ற, வித்து இட்டு-விதை நட்டு, நித்தலும் - நாடோறும், ஆர்வம்-ஆசையாகிய, தெள் நீர்பாய்ச்சி - தெளிந்த நீரைப்பாய்ச்சி, நேர் நின்று தடுக்குநர்க்கு - செம்மையாகிய நெறியில் நின்று தடுப்பவர்களுக்கு, அடங்காது - அடங்காமல், இடுக்கண்செய்யும் - துன்பத்தைச்செய்கின்ற, பட்டி அஞ்சினுக்கு - ஐந்து இந்திரியப் பட்டிகளுக்கு, அஞ்சி - பயந்து, உள்சென்று - உள்ளடங்கி, சாந்தவேலிகோலி - சாந்தமாகியவேலியைவளைத்து, வாய்ந்தபின்-பதப்பட்டபின்பு, ஞானம்-ஞானமென்கிற, பெருமுளை-பெரியமுளை, நந்தாது முளைத்து-கெடாதுமுளைத்து, கருணை-கருணையென்கிற,இளந்தளிர் காட்ட-இளந்தளிர்தோன்ற,அருகா-சமீபத்தில்,(உடனே),காமக்குரோதம்- காமக்குரோதங்களென்கிற,களை அறக்களைந்து-களைகளை நிர்மூலமாகக் களைந்தெறிந்து, சேமப்படுத்துழி - காவற்படுத்துங்கால், செம்மையின் ஓங்கி - செவ்வையாய் வளர்ந்து, மெய்மயிர் புளகம்முகிழ்த்திட்டு - மெய்ம்மயிர்ப் புளகமாகிய முகிழெடுத்து, அம்மென - அம்மென்று, கண்ணீர் அரும்பி - கண்ணோட்டமாகிய அரும்புவிட்டு, கடிமலர் மலர்ந்து - முகமலர்ச்சியாகிய மலர் மலர்ந்து,புண்ணிய அஞ்செழுத்து-தர்மரூபமாகிய ஐந்தெழுத்தென்கிற, அரு காய் தோன்றி - அருமையாகிய காயுண்டாகி, நஞ்சுபொதி - விடம் பொதிந்த, காளகண்டமும் - நீலகண்டமும், கண் ஒரு மூன்றும் - மூன்று கண்களும், தோள் இரு நான்கும் - எட்டுத்தோள்களும், சுடர் முகம் ஐந்தும் - ஒளிபொருந்திய முகங்களைந்தும், பவளநிறம் பெற்று - பவள நிறத்தையடைந்து, தவளநீறுபூசி - வெண்பொடி பூசி, அறுசுவையதனினும் - அறுசுவையினும், உறுசுவையுடைத்தாய் - மிக்க சுவையையுடைத்தாகி, காணினும் கேட்பினும்-கண்டாலும்கேட்டாலும், கருதினும்-நினைத்தாலும், களிதரும்-களிப்பைத்தருகிற,சேண் உயர்-மிகவுமுயர்ந்த,மருதம்-மருதூரின்

கண்ணதாகிய, மாணிக்கம் - மாணிக்கமென்கிற, தீங்கனி-மதுரமாகியகனி, பையப்பைய - மெல்லமெல்ல, பழுத்துக்கைவர - பழுத்துக்கைவர, எம்மனோர்கள்-எம்போல்வார், இனிது இனிது அருந்தி - இனிமை இனிமையாயுண்டு, செம்மாந்திருப்ப - இறுமாந்திருக்க, சிலர்-சிலர், இதின்வராது-இந்நெறிக்குவராமல், மனம் என்னும் புனத்தை - மனமென்கிற புனத்தை, வறும்பாழ் ஆக்கி - மிக்க பாழ்நிலமாகச் செய்து, காமக்காடு மூடி - காமக்காடுகவிந்து, தீமைசெய்-தீங்குசெய்கின்ற, ஐம்புலவேடர்-ஐம்புலன்களாகிய வேடர்கள், ஆறலைத்துஒழுக - வழிபறித் தொழுகாநிற்க, இன்பம் - இன்பத்தைத்தருகிற, பேய்த்தேர்-கானல் நீர், எட்டாது ஓட-எட்டாத தூரத்தில் ஓட, கல்லா உணர்வு என்னும்-கல்லாத அறிவு என்கிற, புல்வாய் அலமரகலைமான் சுழலாநிற்க, இச்சைவித்து உதிர்த்துழி-இச்சையாகிய விதையை உதிர்த்த இடத்தில், யான் எனப்பெயரிய - நான் எனப்பெயர்பெற்ற, நச்சுமாமரம் - பெரிய எட்டிமரம், நனிமிகமுளைத்து - மிகவும் உற்பத்தியாகி, பொய் என்கவடுகள் போக்கி - பொய்யென்கிற கிளைகள்விட்டு, செய்யும் - செய்யப்படுகிற, பாவம் - பாவமாகிய, பல்தழை - பல இலைகளை, பரப்பி - பரவச்செய்து, கொடுமை - கொடுமையை, பூ என அரும்பி-மலராயரும்பி, கடுமை மலர்ந்து - வன்மை யலர்ந்து, துன்பம் - துன்பமாகிய, பலகாய் தூக்கி - பலகாய்களைத் தொங்கவிட்டு, பின்பு - பிறகு, மரணம் பழுத்து - மரணமாகிய பழம் பழுத்து, நரகு இடைவீழ்ந்து - நரகத்தில் விழுந்து, தமக்கும் பிறர்க்கும் உதவாது - தமக்கும் பிறருக்கும் உதவாமல், இமைப்பில் - இமைப்பொழுதில், கழியும் - ஒழிந்துபோகின்ற, இயற்கையோர் உடைத்து - இயற்கையையுடையாரை இவ்வுலகமானது உடைத்தாயிருக்கின்றது. எ - று.

"முயற்சிதிருவினையாக்கு முயற்றின்மை, யின்மை புகுத்திவிடும்" எனப்பெருநாவலர் கூறுதலானும், பிரத்தியக்ஷமாய் அநுபவத்திற்காணப் படுதலானும் "உழப்பின்வாராவுறுதிகளுளவோ, கழப்பின் வாராக்கையறவுளவோ" என்றார். இதற்கு மார்க்கண்டர் சாட்சியாதல் காண்க,

பட்டி - கள்வன். நாவொன்றற்கே யினிமையைத் தருகின்ற ஏனைய கனிகளையிழித்தற்கு, "காணினுங் கேட்பினுங் கருதினுங்களிதருஞ், சேணுயர் மருதமாணிக்கத் தீங்கனி" என்றார். எனவே, ஏனையகனிகள் நாவொன்றற்கே யினிமையைத்தரும், மருதமாணிக்கத் தீங்கனி கண்ணுக்கும் செவிக்கும் மனத்துக்கும் இனிமையைத் தருமென்றதாயிற்று. முயற்சி திருவினையாக்கு மென்பதைக்கடைப்பிடித்து, நெஞ்சப்புலத்து வஞ்சக்கட்டையை வேரறவகழ்ந்து போக்குதல் முதலியன செய்து எம்மனோர் மருதமாணிக்கத் தீங்கனியையினிதாயருந்தி இறுமாந்திருக்க, "முயற்றின்மை

இன்மை புகுத்திவிடும்" என்றதற் கேற்பச்சிலர், மனமெனும் புனத்தைவறும் பாழாக்கல் முதலியனசெய்து,நரகிடை வீழ்ந்து வருந்துகின்றார்களே, இதென்னபாவம் என்பது கருத்து.

நேரிசைவெண்பா.

11. உடைமணியினோசைக்கொதுங்கியரவம்
படமொடுங்கப்பையவேசென்றங்—கிடைமருத
னையம்புகுவதணியிழையார்மேலனங்கன்
கையம்புகவேண்டிக்காண்.

இ - ள். இடைமருதர் - திருவிடை மருதூரீசர், உடைமணியின் ஓசைக்கு - உடைமணியின் சத்தத்துக்கு, அரவம்-பாம்பானது, ஒதுங்கி-விலகி,படம் ஒடுங்க-படமவிய,பையவேசென்று-மெல்லவேபோய், ஐயம் புகுவது - பிச்சையேற்றல், அணியிழையார்மேல் - மாதர்கள்மேல், அனங்கன்-மன்மதனது, கைஅம்பு-கையிலுள்ள புஷ்பபாணங்கள், உகவேண்டி-சிந்தும் பொருட்டே. எ - று.

பாம்பு மணியோசைக் கஞ்சுதலியற்கையாதலால் "உடைமணியினோசைக்கொதுங்கி யரவம்படமொடுங்கப்பையவே சென்று" எனவும், இவர் பிக்ஷாடநவேடந்தரித்து ஐயம்புகுந்தபோது தாருகாவனத் திருடிபத்திநிகள் இவரைக்கண்டு மோகித்துக்கற்பிழந்தமை பிரசித்தமாதலால்,"இடைமருதனையும் புகுவதணியிழையார் மேலனங்கன்கையம்புகவேண்டிக்காண்" எனவும் கூறினார். இடைமருதர் ஐயம் புகுவது மாதர்மேல் மன்மதபாணங்கள் செல்லுதற்கே யென்பது கருத்து.

"பண்டங்கன் வந்து பலிதாவென்றான் பகலோற்கிடென்றேன்
அண்டங்கடந்தவனன்னமென்றானைய னூர்தியென்றேன்
கொண்டிங்குனையம்பெய்யென்றான்கொடித்தேரனங்கனென்றேன்
உண்டிங்கமைந்ததென்றாற்கதுசொல்லுணர்வுற்றதே"

என்றற்றொடக்கத்தனவாகிய மேலோர்திருவாக்கானுமிது இனிது விளங்கும்.

கட்டளைக்கலித்துறை.

12. காணீர்கதியொன்றுங்கல்லீரொழுக்கஞ்சும்வல்லவண்ணம்
பேணீர்திருப்பணிபேசிரவன்புகழாசைப்பட்டுப்
பூணீருருத்திரசாதனநீறெங்கும்பூசுகிலீர்
வீணீரொளிதோமருதப்பிரான்கழன்மேவுதற்கே.

இ - ள். கதி ஒன்றும் காணீர் - நற்கதியைச் சிறிதும் காண்கிலீர், எழுத்து அஞ்சும் கல்லீர் - ஸ்ரீபஞ்சாக்கரத்தையும் கற்கிலீர், திருப்பணி - திருப்பணியை, வல்ல வண்ணம் - உமக்கியைந்த வண்ணமாக, பேணீர் - செய்திலீர், அவன் புகழ் - அவனது திருப்புகழை, பேசீர் - பேசுகிலீர், ஆசைப்பட்டு-விரும்பி, உருத்திர சாதநம்-உருத்திராக்கத்தை, பூணீர்-பூணகிலீர், நீறு - திருவெண்ணீற்றை, எங்கும் - உடம்பு முழுதினும், பூசுகிலீர், பூசகிலீர், வீணீர்-(இவ்வாற்றான்) வீணராயினீர், மருதப்பிரான் கழல்மேவுதற்கு-மருதூர்ப்பெருமானது திருவடியை யடைதற்கு, எளிதோ-(உமக்கு) எளிதாமோ. எ - று.

கதியொன்றுங் காணாமை முதலிய வற்றால் வீணராயினோரே, உமக்கு மருதப்பிரானது திருவடியை யடைதல் எளிதாமோ வென்பது கருத்து.

வல்ல வண்ணம் திருப்பணிபேணுதலாவது, பொருளளவுக்கேற்பத் திருப்பணியை யேற்றுக்கோடல்.

இணைக்குறளாசிரியப்பா.

13. மேவியபுன்மயிர்த்தொகையோவம்மயிர்
பாவியதோலின்பரப்போதோலிடைப்
புகவிட்டுப்பொதிந்தபுண்ணோபுண்ணிடை
யூறுமுதிரப்புனலோகூறுசெய்
திடையிடைநிற்குமெலும்போவெலும்பிடை
முடைகெழுமூளைவிழுதோவழுவழுத்
துள்ளிடையொழுகும்வழும்போமெள்ளநின்
றூரும்புழுவினொழுங்கோநீரிடை
வைத்தமலத்தின்குவையோவைத்துக்
கட்டியநரம்பின்கயிறோவுடம்பிற்குட்
பிரியாதொறுக்கும்பிணியோதெரியா
தின்னதியானென்றறியேனென்னை
யெங்குந்தேடினன்யாதிலுங்காணேன்
முன்னம்
வரைத்தனிவில்லாற்புரத்தையழலூட்டிக்
கண்படையாகக்காமனையொருநா
ளுண்பொடியாகநோக்கியண்டத்து
வீபாவமரர்வியவந்தெழுந்த
தீவாய்நஞ்சைத்திருவமுதாக்கி

யிருவர்தேடிவெருவரநிமிர்ந்து
பாலனுக்காகக்காலனைக்காய்ந்து
சந்தனசரளசண்பகவகுள
நந்தனவனத்திடைஞாயிறுவழங்காது
நவமணிமுகிழ்த்தபுதுவெயிலெரிப்ப
வெண்ணருங்கோடியிருடிகணங்கட்குப்
புண்ணியம்புரக்கும்பொன்னிசூழ்ந்த
திருவிடைமருதபொருவிடைப்பாக
மங்கைபங்க கங்கைநாயகநின்
றெய்வத்திருவருள்கைவந்துகிடைத்தலின்
மாயப்படலங்கீறித்தூய
ஞானநாட்டம்பெற்றனன்பெற்றபின்
நின்பெருந்தன்மையுங்கண்டேன்காண்டலு
மென்னையுங்கண்டேன்பிறரையுங்கண்டே
னின்னிலையனைத்தினுங்கண்டேனென்னை
நின்னைக்காணுமாந்தர்
தன்னையுங்காணுந்தன்மையோரே.

இ - ள். மேவிய - பொருந்திய, புன்மயிர்த்தொகையோ - புல்லிய மயிர்த்தொகுதியோ, அம்மயிர்பாவிய - அம்மயிர்பரவிய, தோலின் பரப்போ - தோற்பரப்போ, தோலிடை, அத்தோலினிடத்து, புகவிட்டுப் பொதிந்த - நுழையவிட்டுப் பொதிந்த, புண்ணோ-மாமிசமோ, புண்ணிடை - அந்தமாமிசத்தில், ஊறும் - சுரக்கின்ற, உதிரப்புனலோ - குருதிநீரோ, கூறு செய்து - பாகிக்கப்பட்டு, இடை யிடைநிற்கும் - இடையிடையே நிற்கிற, எலும்போ - எலும்புகளோ, எலும்பிடை - அவ்வெலும்புகளில் உள்ள, முடைகெழு - முடை நாற்றமுள்ள, மூளைவிழுதோ - மூளைக்கொடியோ, வழு வழுத்து - வழு வழுப்பாகி, உள்ளிடை ஒழுகும்-உள்ளிடத் தொழுகாநின்ற, வழுப்போ – நிணமோ, மெள்ளநின்று - மெல்லநின்று, ஊரும் - நெளியாநின்ற, புழுவின் ஒழுங்கோ - புழுவின்வரிசையோ, நீரிடைவைத்த - நீரில்வைக்கப்பட்ட, மலத்தின் குவையோ - மலக்குவியலோ, வைத்துக்கட்டிய - அதைவைத்துப் பிணித்த, நரம்பின் கயிறோ-நரம்பாகிய கயிறுதானோ, உடம்பிற்குள்-உடம்புக்குள்ளே நின்று, பிரியாது ஒறுக்கும் பிணியோ - நீங்காது வருத்துகிற நோய்தானோ, இன்னது-(இவற்றுள்) இன்னபொருள், யான் என்று - நான்என்று, தெரிதரல் அறியேன் - தெரிந்துகொள்ளல அறியேன், என்னை - என்னை, எதினும்

தேடினன் - எதிலும் தேடினேன், யாதினும் காணேன் - எதினும் கண்டிலேன், முன்னம் - முற்காலத்தில், வரை - (மேரு) மலையாகிய, தனிவில்லால் - ஒப்பற்ற வில்லைக்கொண்டு, புரத்தை அழல் ஊட்டி - திரிபுரங்களை நெருப்புக்கிரையாக்கி, கண்படை ஆக-கண்ணையே பாணமாகக்கொண்டு, காமனை - மன்மதனை, ஒரு நாள் - ஒருதினம், நுண்பொடி ஆகநோக்கி - நுண்ணிய நீறும்படிபார்த்து, அண்டத்து-வானுலகிலுள்ள, வீயா-இறவாத, அமரர் - தேவர்கள், வீப - மடியும்படி, வந்து எழுந்த - வந்துண்டாகிய, தீவாய் நஞ்சை - சுடுந்தொழிலமைந்த விஷத்தை, திரு அமுது ஆக்கி - திருவமுதாக்கிக்கொண்டு, இருவர்தேட - பிரமவிஷ்ணுக்களாகிய இருவரும் தேட, வெருவர - (காணமையால்) அஞ்சும்படி, நிமிர்ந்து - (நெருப்புமலையாக) உயர்ந்து, பாலனுக்காக - பாலனாகிய மார்க்கண்டனைக் காக்கும் பொருட்டு, காலனைக்காய்ந்து-யமனைக்கோபித்து, சந்தனம்-சந்தனமரங்களும்,சரளம்-தேவதாரமரங்களும்,சண்பகம்-சண்பகமரங்களும், வகுளம்-மகிழமரங்களும் உள்ள, நந்தனவனத்திடை—நந்தனவனத்தில், ஞாயிறு வழங்காது - சூரியகிரணமும் நுழையப்பெறாது, நவமணி - நவரத்நங்கள், முகிழ்த்த - தம்முளடக்கியிருந்த, புதுவெயில் எறிப்ப - புதிய வொளியைவீச, எண் அருகோடி-கணக்கிடல்அருமையாகியகோடியென்னுந்தொகைபெற்ற, இருடிகணங்கட்கு - ரிஷிகணங்களுக்கு, புண்ணியம் புரக்கும் - (அவர்கள் செய்யும்) புண்ணிய கிருத்தியங்களுக்குதவிசெய்து காக்கின்ற, பொன்னிசூழ்ந்த - காவேரிநதிசூழ்ந்த, திருவிடைமருத - திருவிடைமருதூர்க்கிறைவனே, பொருவிடைப்பாக - பொருதற்குரிய இடபவாகநனே, மங்கைபங்க - நாரிபாகனே, கங்கை நாயக - கங்காநாதனே, நின்-உனது, தெய்வம் - தெய்விகமான, திருவருள்-திருவருளானது,கைவந்துகிடைத்தலின்-கைகூடிக்கிடைத்தலால், மாயப்படலம் கீறி-மாயைத்திரையைக்கிழித்து, தூய - பரிசுத்தமான, ஞானநாட்டம் பெற்றனன் - ஞானக்கண்ணைப் பெற்றேன், பெற்றபின்-பெற்றபிறகு, நின்பெருந்தன்மையும் கண்டேன் - உன்பெருந்தன்மையையும் பார்த்தேன், காண்டலும் - பார்த்த அளவில், என்னையும் கண்டேன் — என்னையும்பார்த்தேன், பிறரையுங்கண்டேன் - பிறரையும் பார்த்தேன், நின்நிலையனைத்தினும்—உன்னிலையெல்லாவற்றினும், என்னைக்கண்டேன்—என்னைப்பார்த்தேன், நின்னைக்காணுமாந்தர் — உன்னைப்பாராத மக்கள், தன்னையும் காணுந்தன்மையோரோ - தம்மையுங் காணுந தன்மையரோ. எ - று.

உடம்பின் மேற்புறத்தில் முன்னர்க்காணப்படுவது மயிராதலால் "மேவியபுன் மயிர்த்தொகையோ" என்றும், அந்த மயிர்பாவியிருத்தற்கிடம் தோற்பரப்பாதலால், "அம்மயிர்பாவிய தோலின்பரப்போ" என்றும், அதனுட் பொதியப்பட்டிருப்பது மாமிசமாதலால், "தோலிடைப் புகவிட்டுப் பொ

நிந்தபுண்ணே" என்றும், "இரத்தம் அதன் கண்ணூறுவதாதலால்" "புண்ணிடையூறு முதிரப்புனலோ" என்றும், இதனிடையிடையே பகுக்கப்பட்டுப் பொருந்தி நிற்பது எலும்பாதலால், "கூறு செய்திடையிடை நிற்குமெலும்போ" என்றும், அதனுள்ளீடாயிருப்பது மூளையாதலால், "எலும் பிடைமுடைகெழுமூளைவிழுதோ" என்றும், அதனிடைச்சாரமாயொழுகுவது நிணநீராதலால், "வழுவழுத்துள்ளிடை யொழுகும் வழும்போ" என்றும், இவ்வாறு ஈரித்தவிடத்தில் புழுக்களுண்டாகி நெளிவதியற்கையாதலால், "மெள்ளநின்றூரும் புழுவினெழுங்கோ" என்றும், அவை மிகப்பயிலுமிடமாதலால, "மலத்தின் குவையோ" என்றும், அது சற்றிறுகக்கட்டிவையாவிடின் சரியும்பொருளாதலால், "வைத்துக்கட்டிய நரம்பின்கயிறோ" என்றும், உடம்பு கருவிடைப்பட்ட வொருநாட்டொடங்கிப் பலபிணிகளுக்கிடமாகியிருப்பதாதலால், "உடம்பிற் குட்பிரியாதொறுக்கும் பிணியோ" என்றும் கூறினர். வீயா அமரர் - மங்கலம். நந்தனவனத்திடை ஞாயிறு வழங்காது என்றது அதனிடத்துள்ள மிக்க மரச் செறிவையுணர்த்தற்கு. "நீரின்றமையாதுலகு" ஆதலால் "இருடிகணங்கட்குப் புண்ணியம் புரக்கும் பொன்னியெனப்பட்டது. பொன்னி - காவேரி. (கவேரன் என்னும் அரசன் மகள்)."தன்னையுங் காணுத்தன்மையோர்"என்றது எதுகை நோக்கி வந்த பால்வழுவமைதி.

திருவிடைமருதூர்ச் சிவபெருமானே, இவ்வுடம்பின் கூறுகிய மயிர், தோல், தசை, உதிரம் முதலிய பொருள்களுள் யான் எந்தப்பொருளென்றாராய்ந்து இவற்றுள் ஒன்று மல்லேன் என்றுணர்ந்தேன், அவ்வுணர்ச்சிக்குதவியாக உன்திருவருள் வாய்த்தமையால் ஞானக்கண்ணைப்பெற்றேன், பெறவே, அதனைக்கொண்டு உன்னிலையையும் என்னிலையையும் ஒருங்கே காணப்பெற்றேன், உன்னைக்காணுத மாந்தர் தம்மையுங் காணுதவரேயாவர் என்பது கருத்து.

### நேரிசைவெண்பா.

14. ஓராதேயஞ்செழுத்துமுன்னுதேபச்சிலையு
நேராதேநீருநிரப்பாதே—யாராயோ
வெண்ணுவாருள்ளத்திடைமருதர்பொற்பாத
நண்ணுவாமென்னுமதுநாம்.

இ - ள். (மனமே) ஓராதே - ஆராயாமலே, அஞ்சு எழுத்தும் உன்னுதே - பஞ்சாக்ஷரத்தையும் நினையாமலே, பச்சிலையும் நேராதே - பச்சிலையிடாமலே, நீரும் நிரப்பாதே - நீரையும் அபிஷேகம் பண்ணுமலே, எண்ணுவார் உள்ளத்து - நினைப்போர் நெஞ்சத்தில் வீற்றிருக்கும் பல்பமைந்த, இடைமருதர் பொற்பாதம் - திருவிடைமருதூச் சிவபெருமானது திருவ

டியை, நாம் - யாம், யார்ஆய்ஓ - (நம்மை) யாராக நினைத்தோ, நண்ணு வாம் என்னும் அது - அடைகுவாம் என்னும் அவ்வெண்ணமுடையராயி ருத்தல். எ - று.

மனமே, திருவிடைமருதூர்ச் சிவபெருமானது திருவடியைஆராய்தல் முதலிய வொன்றுஞ் செய்யாமல் யாம் எவ்வாறு அதனை யடைந்துய்வே மென்பது கருத்து.

## கட்டளைக்கலித்துறை.

15. நாமேயிடையுள்ளவாறறிவாமினிநாங்கள்சொல்ல
லாமேமருதன்மருதவனத்தன்னமன்னவளைப்
பூமேலணிந்துபிழைக்கச்செய்தாரொருபொட்டுமிட்டார்
தாமேதளர்பவளைப்பாரமேற்றுதறக்கதன்றே.

இ - ள். நாமே இடை உள்ளவாறு அறிவாம் - இடையினது உண் மையையறிவோம் சிலர்நாமேயோ, இனி நாங்கள் சொல்லலாமே - இனி நாங்கள் சொல்லலாமோ, மருதன் - மருதீசனது, மருதவனத்து - மருதவ னத்திலிருக்காநின்ற, அன்னம் அன்னவளை - அன்னம்போல்வாளை, மேல் - சிரமீது, பூ அணிந்து - மலரையணிந்து, பிழைக்கச் செய்தார் - உயிர்வாழச் செய்தனர், (தோழியர்) ஒரு பொட்டும் இட்டார் - ஒரு பொட்டு மிட்டார்கள், தாமே தளர்பவளை-தாமாகவே தளருமியல் புடை யார்மேல், பாரம் ஏற்றுதல் - சுமை யேற்றுதல், தக்கது அன்று - தக்க காரியமல்ல. எ - று.

இது தலைமகளது இடைச்சிறுமை நோக்கிய தலைமகன் தன்னெஞ்சிற் குச் சொல்லியதாகக் கூறுவது. துறை-நயப்பு. அன்றி நலம் பாராட்ட லெனினுமமையும். நெஞ்சே, மருதீசரது மருதவனத்தின் கண் அன்னம் போல்வாளை அவரது தோழியர் பூவணிந்து பிழைக்கச் செயதார்கள், அது வேயுமன்றி நெற்றியின்கண் ஒரு பொட்டு மிட்டார்கள், இவ்வாறு செய் தல் தாமாகவே தளர்வார்மேல் பின்னும் பாரமேற்றலை நிகர்த்திராநின்றது, இனியிவரதிடை நில்லாது முறியும், இவரும் இறந்துபடுவர், இத்தன்மைத் தாகிய சிற்றிடையின் உண்மையைச் சில ஏதுக்களைக்கொண்டறிவதன்றி நாமே யெவ்வாறறிய வல்லேம் என்பது கருத்து.

இக்கருத்தேபற்றி, "அகல்கின்ற வல்குற்றடமது கொங்கையவைய வநீ-புகல்கின்றதென்னைநெஞ்சுண்டேயிடையடையார்புரங்க-ளிகல் குன்ற வில்லிற் செற்றோன் றில்லை யீசனெம்மானெதிர்ந்த-பகல்குன்றப் பல்லுகுத் தோன்பழனம் மன்னபல்வளைக்கே" எனவும், "பொட்டணிபானுதல் போ யிறு மென்று பொய்போலிடை பூ-ணிட்டணியான்றவிசின்மலரின்றி மிதி

ப்பக்கொடான் - மட்டணிவார் குழல்வையான் மலர்வெண்டுறுதல்ஞ்சிக் - கட்டணிவார் சடையோன் றில்லை போலிசன் காதலனே'' எனவும், ''அறந்திகழ் தவமுமகிலமுமிதனாலழியுமென்றயன்படைத்திலனோ-சிறந்தவேல்விழியை முன்படைத்தயர்ந்து செங்கரஞ் சோர்ந்ததோதிகைத்து - மறந்ததோகரந்துவைத்ததோ களபவனமுலைப் பொறைசுமந்துருகி-யிறந்ததோவுளதோவில்லையோ வினிமேலெய்து மோவறியொணாதிடையே'' எனவும், ''கோலத்தனிக் கொம்பரும்பர் புச்கஃதேகுறைப்பவர்தஞ்-சீலத்தனகொங்கைதேற்றகிலேஞ் சிவன்றில்லையன்ன - ஞாலொத்த நேரிடை நொய்ம்மையெண்ணாது நுண்டேனசையாற்-சாலத்தகாது கண்டீர்வண்டுகாள்கொண்டைசார்வதுவே'' எனவும், ''மன்னிசை வெங்கையுடையபிரான் வரைமானுசுப்பைப் - பொன்னிசை கொங்கையொடித்தாலுநிற்றை பொருந்துநுமை-மின்னிசை மென்குழலேறன் மின்னீவிர் விளங்கிவிரோ-இன்னிசை வண்டினங்காள் காகதாலிய மென்பதுவே'' எனவும், ''மெய்கூறிடும் வரைமங்கைமணாளர்தம் வெங்கையிலே-பொய்கூறிலஞ் சிலர் போலிலையே யெனப் புல்லிழையைச்-செய்கூறதிலொன்றளவுளதே யிவள்சிற்றிடை தான்-மைகூர்குழலில் வெறிகொண்டு லாவுமதுகரமே'' எனவும், ''அனிச்சப் பூக்கால் களையாள் பெய்தாணு சுப்பிற்கு - நலலபடாஅ பறை'' எனவும், அறிஞர் பலருங் கூறுதல்காணக.

நேரிசையாசிரியப்பா.

16. அன்றினர்புரங்களழலிடையவியக்
குன்றுவளைத்தெய்தகுன்றாக்கொற்றவ
நுண்பொடியணிந்தவெண்டோட்செல்வ
கயிலைகடந்தனையவுயர்கிலைநோன்றாட்
பிறைசெறித்தன்னவிருகோட்டொருதிமிற்
பானிறச்செங்கண்மால்விடைப்பாக
சிமையச்செங்கோட்டிமயச்செல்வன்
மணியெனப்பெற்றவணியியலன்னம்
வெள்ளைச்சிறுநகைக்கிள்ளைப்பிள்ளை
குயிலெனப்பேசுமயிலிளம்பேடை
கதிரொளிநீலங்கபலத்துமலர்ந்தன
மதரரிநெடுங்கண்மானின்கன்று
வருமுலைதாங்குந்திருமார்புவல்லி
வையமேழும்பன்முறையீன்ற
வையதிருவயிற்றம்மைபிராட்டி
மறப்பருஞ்செய்கையறப்பெருஞ்செல்வி

யெமையாளுடையவுமையாணங்கை
கடவுட்கற்பின்மடவரல்கொழுந
பவளமால்வரைப்பனைக்கைபோந்தனைய
தழைசெவியெண்டோட்டலைவன்றந்தை
பூவலர்குடுமிச்சேவலம்பதாகை
மலைதுளைபடுத்தகொலைகெழுகூர்வே
லமரர்த்தாங்குங்குமரன்றாதை
பொருதிடங்கொண்டபொன்னிபுரக்கு
மருதிடங்கொண்டமருதவாண
நின்னதுகுற்றமுளதோநின்னினைந்
தெண்ணருங்கோடியிடர்ப்பகைகளைந்து
கண்ணுறுசீற்றத்துக்காலனைவதையா
திறப்பையும்பிறப்பையுமிகழ்ந்துசிறப்பொடு
தேவராவின்கன்றெனத்திரியாப்
பாவிகடமதேபாவம்யாதெனின்
முறியாப்புழுக்கன்முப்பழங்கலந்த
வறுசுவையடிசிலட்டினிதிருப்பப்
புசியாதொருவன்பசியால்வருந்துத
லயினியின்குற்றமன்றுவெயிலின்வைத்
தாற்றியதெண்ணீர்நாற்றமிட்டிருப்ப
மடாஅதொருவன்விடாஅவேட்கை
தெண்ணீர்க்குற்றமன்றுகண்ணகன்று
தேன்றுளிசிதறிப்பூந்துணர்துறுமி
வானுகங்கிடந்த சோலைகிடப்ப
வெள்ளிடைவெயிலிற்புள்ளிவெயர்பொடிப்ப
வடிபெயர்த்திடுவானொருவ
னெடிதுவருந்துதனிழற்றீங்கன்றே.

இ - ள். அன்றினர் புரங்கள்-பகைத்தாரது புரங்கள், அழலிடை அவிய - நெருப்பிடைப்பட்டு நீறாக, குன்றுவளைத் தெய்த - மேருமலையை வில்லாக வளைத்து எய்த, குன்றா - அழியாத, கொற்றவ - இறைவனே, நுண்பொடி அணிந்த-நுண்ணிய திருவெண்ணிறணிந்த, எண்தோள்செல்வ- எட்டுத்தோள்களையுடைய செல்வனே, கயிலைநடந்தனைய - கயிலாயமலை நடந்தாற்போன்ற, உயர்நிலை-உயர்வாகிய நிலையினையும், நோன்தாள்-பெரி

கால்களையும், பிறைசெறித்தன்ன - பிறைகளைப் பொருத்திவைத்தாற்போன்ற, இருகோடு - இரண்டுகொம்புகளையும், ஒருதிமில் - ஒப்பற்ற திமிலையும், பால் நிறம் - வெண்ணிறத்தையும், செங்கண் - செவந்த கண்களையும் உடைய, மால்-பெரிய, விடைப்பாக-இடபவாகநனே, சிமயச்செங்கோட்டு-உச்சியாகிய செவ்வியசிகரங்களையுடைய, இமயச்செல்வன்-இமயமலையென்கிற செல்வன், மணிஎனப்பெற்ற - மாணிக்கம் போலீன்ற, அணி இயல் அன்னம் - அழகுவாய்ந்த அன்னமும், வெள்ளைச் சிறுநகை - வெண்சிறுமுரலையுடைய, கிள்ளைப் பிள்ளை - கிளிப்பிள்ளையும், குயில் எனப்பேசும்-குயில்போலமொழியாகின்ற, மயில் இளம்பேடை - மயிலினது இளம் பேடும், கதிர் ஒளி நீலம் - சுடரொளியையுடைய நீலமலர்கள், கமலத்து மலர்ந்தன்ன-தாமரைமலரின்மேல் மலர்ந்தாற் போன்ற, மதர் - மதர்த்த, அரி - இரேகைகள் பொருந்திய, நெடு கண் - நெடியகண்களையுடைய, மானின்கன்று - மான்கன்றும், வரும் - வளராநின்ற, முலை - தனங்களை, தாங்கும் - ஏந்துகின்ற, திருமார்பு-திருமார்பையுடைய, வல்லி-கொடியும், வையம் ஏழும் - ஏழுலகையும், பன்முறை ஈன்ற-பலமுறைபெற்ற, ஐய - அழகிய, திருவயிற்று அம்மை-திருவயிற்றையுடைய தாயும், பிராட்டி - இறைவியும், மறப்பருஞ்செய்கை-மறத்தல் அருமையாகிய செய்கையென்கிற, அறம்-எண்ணான் கறத்தையும் நிகழ்வித்த, பெருஞ்செல்வி - மஹாதைசுவரியசம்பந்நையும், எம்மை ஆளுடைய உமையாள் - எம்மை, யடிமை யாகவுடைய உமையவளும், நங்கை - பூர்ணகுணவதியும் ஆகிய, கடவுள் கற்பின் - தெய்விகமாகிய கற்பினையுடைய, மடவரல் கொழுந - பார்வதிநாதனே, பவளமால்வரை - பெரியபவளமலையின்மீது, பனைக்கை போந்தனைய - யானைநடந்தாற்போன்ற, தழைசெவி - தழைத்தசெவிகளையும், எண்தோள் - எட்டுத்தோள்களையும் உடைய, தலைவன் தந்தை - விநாயகமூர்த்திக்குத்தந்தையே, பூ அலர் குடுமி - பூவைப்போன்றலர்ந்த உச்சியையுடைய, சேவல் அம்பதாகை - அழகிய கோழிக்கொடியையும், மலைதுளைபடுத்த - மலையைத்தொளைத்த, கொலைகெழுகூர்வேல் - கொலைத் தொழிலமைந்த கூரிய வேற்படையையும் உடையவனும், அமரர்த்தாங்கும் - தேவர்களைக்காக்கின்ற, குமரன்தாதை-முருகக்கடவுளுக்குப்பிதாவே, பொருது - அலைமோதி, இடம்கொண்ட - இடம் அமைத்துக்கொண்ட, பொன்னிபுரக்கும் - காவேரிநதியாற்காக்கப்பெற்ற, மருது - மருதூரை, இடம் கொண்ட - இடம் ஆகக் கொண்டிருக்கிற, மருதவாண - மருதவாணனே, நின்னது குற்றம் உளதோ - உன்குற்றமுண்டோ, நின்நினைந்து - உன்னை நினைத்து, எண் அருகோடி-எண்ணற் கரியகோடித்தொகைபெற்ற, இடர்ப்பகைகளைந்து - துன்பம்செய்கிற பகைவரைக்களைந்து, கண்ணுறு சீற்றத்து-பெருமையமைந்த சீற்றத்தையுடைய, காலனை வதையா - யமனை வதைத்து, இறப்பையும் பிறப்பையும் இகழ்ந்து - இறப்பினையும் பிறப்பினை

யும் வெறுத்து, சிறப்பபாடு - சீர்மையுடன், தேவர் ஆவின் கன்று எனத்திரியா - காமதேநுவின கன்று போலத்திரியாத, பாவிகள் தமதேபாவம் - பாவிகளுடையதே பாவம், யாதெனின் - என் எனின், முறியா புழுக்கல் - முனைமுறியாத புழுங்கற்சோறும், முப்பழம் கலந்த — முக்கனிகலந்த, அறுசுவை அடிசில் - அறுசுவையுண்டியும், அட்டு இனிது இருப்ப - நன்கு சமைக்கப்பட்டிருக்க, புசியாது - புசிக்காமல், ஒருவன் பசியால் வருந்துதல் - ஒருவன்பசியால் துன்புறுதல், அயினியின் குற்றம் அன்று - சோற்றின்குற்றம் அல்ல, வெயிலின்வைத்து - வெயிலினிடத்திட்டு, ஆற்றிய தெள்நீர் - சூடுதணித்த தெளிந்தநீரானது, நாற்றம் இட்டு இருப்ப - பரிமளமூட்டியிருக்க, மடா ஒருவன் - பருகாத ஒருவனது, விடாவேட்கை - நீங்காத நீர்வேட்கையானது, தெள்நீர் குற்றம் அன்று - தெளிந்த நீரின் குற்றம் அல்ல, கண் அகன்று - இடமகன்று, தேன் துளிசிதறி - தேன் துளிகள் சிந்தி, பூந்துணர் துறுமி-பூங்கொத்துக்கள் நிறைந்து, வாலுகம் கிடந்த-வெண்மணல்பரவிய, சோலைகிடப்ப - சோலையிருக்க, வெள்ளிடைவெயிலில் - வெற்றிடத்து வெயிலில், புள்ளி - புள்ளிகளாய், வெயர் பொடிப்ப-வெயர்வையரும்ப, அடிபெயர்த்திடுவோனொருவன் - அடிபெயர்த்து நடப்பவனொருவன், நெடிது வருந்துதல் - மிகவும் வருந்துதல், நிழல் தீங்கு அன்றே - நிழலின் குற்றமல்லவே, எ - று.

மருதவாணனே, ஒருவன் முப்பழங்கலந்த அறுசுவையுண்டியிருக்க, அதையுண்ணாது பசியால் வருந்துதல் அவன் குற்றமே யன்றி அவ்வுணவின் குற்றமன்று, ஒருவன் வெதுப்பி யாற்றித் தெளிவித்த நீரிருக்க, அதனையுண்டு தாகந்தணியாமை அவன் குற்றமேயன்றி அந்நீரின் குற்றமன்று, ஒருவன் வெண்மணல் பரந்ததண்பொழிலிருக்க, அதனை விட்டு வெள்ளிடைவெயிலில் வெயர்வையரும்ப அடிபெயர்த்திட்டு வருந்துதல் அவன் குற்றமேயன்றி அப்பொழில்நிழலின் குற்றமன்று, அது போலச்சிலபாவிகள் வேண்டிய வெல்லாமொருங்கே யருள்செய்ய வல்ல காம தேனுவை நிகர்ப்பகவஞ்சிய நீயிருக்க, உன்னைக் கன்றுபோலப் பற்றித்திரியாமல், வேறுசில தேவர்களைவழிபட்டு வருந்துதல் அவர்குற்றமேயன்றி உன் குற்ற மன்று என்பது கருத்து.

### நேரிசைவெண்பா.

17 அன்றென்றுமாமென்றுமாறுசமயங்க
ளொன்றொன்றொடொவ்வா துரைத்தாலு—மென்று
மொருதனையேநோக்குவாருள்ளத்திருக்கு
மருதனையேநோக்கிவரும்.

இ - ள். ஆறுசமயங்கள் - ஆறுசமய நூல்களும், அன்று என்றும் - அல்ல என்றும், ஆம் என்றும் - ஆகும் என்றும், ஒன்றொடு ஒன்று ஒவ்வாது - ஒன்றோடொன்று பொருத்த மில்லாமல், உரைத்தாலும் - சொன்னாலும், (அவைகளெல்லாம்) என்றும் - எக்காலத்தும், ஒரு - ஒப்பற்ற, தன்னையே நோக்குவார் - தன்னையே நோக்கும் அறிஞரது, உள்ளத்து இருக்கும் - மனத்தில் வீற்றிருக்கின்ற, மருதனையே நோக்கிவரும் - மருதூர்ப்பிரானையே நோக்கிவந்து முடியும். எ - று.

ஆறுசமய நூல்களும் ஒன்றோடொன்றொவ்வாத விடயங்களைச்சொல்லுமாயினும், அவற்றின் கருத்தெல்லாம் முடிவில் மருதவாணனையே கூறுவதாகும் என்பது கருத்து. சமயம் ஆறாவன - வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. இவ்வாறன்றி, உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம் எனினுமமையும்.

## கட்டளைக்கலித்துறை.

18. நோக்கிற்றுக்காமனுடல்பொடியாகநுதிவிரலாற்
றாக்கிற்றரக்கன்றலைகீழ்ப்படத்தன்சுடர்வடிவா
ளோக்கிற்றுத்தக்கன்றலையுருண்டோடச்சலந்தரனைப்
போக்கிற்றுயிர்பொன்னிசூழ்மருதாளுடைப்புண்ணியமே.

இ - ள். பொன்னிசூழ் - காவேரிசூழ்ந்த, மருது ஆள் உடை புண்ணியம் - மருதூரை யாளுதலையுடைய புண்ணியவுருவம், காமன் உடல் - மன்மதனுடம்பை, பொடியாக நோக்கிற்று - நீறுபட நோக்கிற்று, அரக்கன் தலை கீழ்ப்பட-இராவணனது தலை கீழேயகப்பட, நுதிவிரலால் தாக்கிற்று-விரல் நுனியால் அழுத்திற்று, தக்கன் தலை உருண்டு ஓட - தக்கன் சிரம் (அறுபட்டு) உருண்டோடும்படி, தன் - தனது, சுடர் - ஒளிர்கின்ற, வடி - வடித்த, வாள் - வாட்படையை, ஓக்கிற்று - ஓங்கிற்று, சலந்தரனை - சலந்தராசுரனை, உயிர் போக்கிற்று - உயிர் நீக்கிற்று. எ - று.

புண்ணியம்-தருமவுருபியாகிய சிவபிரான். புண்ணியம்எனச்சொல்லால் அஃறிணையா யிருத்தல்பற்றி நோக்கிற்று, தாக்கிற்று, ஓக்கிற்று, போக்கிற்று, என அஃறிணையானே முடிந்தது. "பருங்கண்கவர்கொலை வேழப் படையோன் படப்படர்நீத், தருங்கண்ணுதற்றில்லை யம்பலத்தோன்"எனவும், "தேரைநிறுத்தி மலையெடுத்தான்சிர-மீரைந்துமிற்றவா றுந்தீபற, இருபதுமிற்றவா றுந்தீபற"எனவும், "அன்றிலங்கையர் கோன் மலைக்கீழ்விழச் செற்ற சிற்றம்பலவர்" எனவும், "தக்கனூரன்றே தலையிழந்தார் தக்கன்மக்களைச்சூழ்ந்தின் றுந்தீபற, மடிந்தது வேள்வியென் றுந்தீபற" எனவும், "தம்

பஞ்சிவந்த சலந்தரனுகங் கறுத்ததில்லை நம்பன்" எனவும் மேலோர் கூறுதலுங்காண்க. திருவிடைமருதூரி லெழுந்தருளியிருக்கும் புண்ணியரூபம், காமனுடல்பொடியாக நோக்கிற்று, இராவணன் தலைநெரிய விரலூனியால் தாக்கிற்று, தக்கன் தலையுருள வோக்கிற்று, சலந்தரனை யுயிர்போக்கிற்று என்பது கருத்து.

நேரிசையாசிரியப்பா.

19: புண்ணியபுராதனபுதுப்பூங்கொன்றைக்
கண்ணிவேய்ந்தகைலைநாயக
காளகண்டகந்தனைப்பயந்த
வாளரிநெடுங்கண்மலையாள்கொழுந
பூதநாதபொருவிடைப்பாக
வேதகீதவிண்ணோர்தலைவ
முத்திநாயகமூவாமுதல்வ
பத்தியாகிப்பணைத்தமெய்யன்பொடு
நொச்சியாயினுங்கரந்தையாயினும்
பச்சிலையிட்டுப்பரவுந்தொண்டர்
கருவிடைப்புகாமற்காத்தருள்புரியுந்
திருவிடைமருததிரிபுராந்தக
மலர்தலையுலகத்துப்பலபலமாக்கண்
மக்களைமனைவியையொக்கலையொரீஇ
மனையும்பிறவுந்துறந்துவினைவருங்
காடுமலையும்புக்குக்கோடையிற்
கைம்மேனிமிர்த்துக்காலொன்றுமுடக்கி
யைவகைநெருப்பினழுவத்துநின்று
மாரிநாளிலும்வார்பனிநாளிலு
நீரிடைமூழ்கிநெடிதுகிடந்துஞ்
சடையைப்புனைந்துதலையைப்பறித்து
முடையைத்துறந்துமுண்ணாதுழன்றுங்
காயுங்கிழங்குங்காற்றுதிர்சருகும்
வாயுவுநீரும்வந்தனவருந்தியுங்
களரிலுங்கல்லிலுங்கண்படைகொண்டுந்
தளர்வுறுமியாக்கையைத்தளர்வித்தாங்கவ

ரம்மைமுத்தியடைவதற்காகத்
தம்மைத்தாமேசாலவுமொறுப்ப
ரீங்கிவைசெய்யாதியாங்களெல்லாம்
பழுதின்றுயர்ந்தவெழுநிலைமாடத்துஞ்
செந்தாதுதிர்ந்தநந்தாவனத்துந்
தென்றலியங்குமுன்றிலகத்துந்
தண்டாச்சித்திரமண்டபமருங்கிலும்
பூவிரிதரங்கவாவிக்கரையிலு
மயிற்பெடையாலக்குயிற்றியகுன்றிலும்
வேண்டுழிவேண்டுழியாண்டாண்டிட்ட
மருப்பினியன்றவாளரிசுமந்த
விருப்புறுகட்டின்மீமிசைப்படுத்த
வைவகையமளியணைமேற்பொங்கத்
தண்மலர்கமழும்வெண்மடிவிரித்துப்
பட்டினுட்பெய்தபதநுண்பஞ்சி
னெட்டணையருகாக்கொட்டைகள்பரப்பிப்
பாயன்மீதுபரிபுரமிழற்றச்
சாயலன்னத்தின்றளர்நடைபயிற்றிப்
பொற்றோரணத்தைச்சுற்றியதுகிலென
வம்மென்குறங்கினும்மென்கலிங்கங்
கண்ணுமனமுங்கவற்றிப்பண்வர
விரங்குமணிமேகலையொருங்குடன்கிடந்த
வாடரவல்குலரும்பெறனுசுப்பு
வாடவீங்கியவனமுலைகதிப்ப
வணியியல்கமுகையலங்கரித்ததுபோன்
மணியியலாரங்கதிர்விரித்தொளிர்தர
மணிவளைதாங்குமணிகெழுமென்றோள்
வரித்தசாந்தின்மிசைவிரித்திட்ட
வுத்தரியப்பட்டொருபாலொளிதர
வள்ளைவாட்டியவொள்ளிருகாதொடு
பவளத்தருகாத்தரளநிரைத்தாங்
கொழுகிநீண்டகுமிழொன்றுபதித்துக்

காலன்வேலுங்காமபாணமு
மாலகாலமுமனைத்துமிட்டமைத்த
விரண்டுகோட்டமும்புரண்டுகடைமிளிர்தர
மதியெனமாசறுவதனம்விளங்கப்
புதுவிரையலங்கல்குழன்மிசைப்பொலியு
மஞ்சொன்மடந்தையராகந்தோய்ந்துஞ்
சின்னம்பரப்பியபொன்னின்கலத்து
மறுசுவையடிசில்வறிதிருந்தருந்தா
தாடினர்க்கென்றும்பாடினர்க்கென்றும்
வாடினர்க்கென்றும்வரையாதுகொடுத்துப்
பூசுவனபூசியும்புனைவனபுனைந்துந்
தூசினல்லனதொடையிற்சேர்த்தியு
மைந்துபுலன்களுமாரவார்ந்து
மைந்தருமொக்கலுமனமகிழ்ந்தோங்கி
யிவ்வகையிருந்தோமாயினுமவ்வகை
மந்திரவெழுத்தைந்தும்வாயிடைமறவாது
சிந்தைநின்வழிச்செலுத்தலினந்த
முத்திபுமிழந்திலமுதல்வவத்திற
மின்னதுபெருமையன்றேவென்னெனின்
வல்லானொருவன்கைம்முயன்றெறியினு
மாட்டாவொருவன்வாளாவெறியினு
நிலத்தின்வழாஅக்கல்லேபோ
னலத்தின்வழார்நின்னுமவின்றோரே.

இ - ள். புண்ணிய - புண்ணியனே, புராதந - பழையோனே, புது- புதிய, கொன்றைப்பூ கண்ணிவேய்ந்த-கொன்றைமலர் மாலையையணிந்த, கைலைநாயக - கைலைநாயகனே, காளகண்ட - நீலகண்டனே, கந்தனைப்பய ந்த - குகனையீன்ற, வாள் - வாள்போன்ற, அரி - செவ்வரிபடர்ந்த, நெடுங் கண் - நெடியகண்களையுடைய, மலைபாள் கொழுந - மலைமகள் கணவனே, பூதநாத - பூதநாதனே, பொரு - பொருதற்குரிய, விடைப்பாக - இடப வாகனனே, வேதகீத - வேதமாகிய கீதத்தையுடையவனே, விண்ணோர் தலைவ - தேவர்கட் கிறைவனே, முத்திநாயக-முத்திநாதனே, மூவாமுதல்வ, முதுமையடையாத முதல்வனே, பத்தி ஆகி - பத்தியுண்டாகி, பணைத்த - மிகுந்த, மெய்யன்பொடு - மெய்யன்புடன், நொச்சி ஆயினும் - நொச்சிப்

பூவையாயினும், கரந்தை ஆயினும் - கரந்தைப்பூவை யாயினும், பச்சிலை (ஆயினும்) - பச்சிலையை யாயினும், இட்டு - தூவி, பரவும் - துதிக்கின்ற, தொண்டர் - தொழும்பர்கள், கரு இடை புகாமல் - கர்ப்பத்திற் புகாவண்ணம், காத்து அருள்புரியும் - காத்தருள்செய்கிற, திருவிடைமருத - திருவிடைமருதூரீசனே, திரிபுர அந்தக - முப்புரநாசனே, மலர்தலை - பரந்த இடத்தையுடைய, உலகத்து - உலகின்கண், பலபலமாக்கள் - அநேக மானுடர், மக்களை - புதல்வரையும், மனைவியை - மனையாட்டியையும், ஒக்கலை - சுற்றத்தையும், ஒரீஇ - நீங்கி, மனையும் - வீட்டையும், பிறவும் - பிறபொருள்களையும், துறந்தும் - விட்டும், நினைவு அரு - நினைத்தற்கு அரிதாகிய, காடும் மலையும்புக்கு - காட்டினும் மலையினும் பிரவேசித்து, கோடையில் - வெய்யிலில், கைமேல் நிமிர்த்து - கைகளை மேலேயுயர்த்தி, கால் ஒன்று முடக்கி - ஒருகாலை முடக்கி, ஐவகை நெருப்பின் அழுவத்து நின்றும் - பஞ்சாக்நியின் திரளில் நின்றும், மாரிநாளிலும் - மழைக்காலத்திலும், வார் பனிநாளிலும் - (பனிநீர்) ஒழுகாநின்ற பனிக்காலத்திலும், நீர் இடை மூழ்கி - நீரிற் குளித்து, நெடிது கிடந்தும - நெடுநேரம் தங்கியும், சடையைப்புனைந்தும் - சடையைத் தரித்தும், தலையைப்பறித்தும் - தலைமயிரைக்களைந்தும், உடையைத்துறந்தும் - ஆடையை யொழித்தும், உண்ணாது உழன்றும் - உண்ணாமல் திரிந்தும், காயும் - காய்களும், கிழங்கும் - கிழங்குகளும், காற்று உதிர் சருகும் - காற்றினால் உதிர்கின்ற சருகும், வாயுவும் - காற்றும், நீரும் - ஜலமும், (ஆகிய இவற்றுள்) வந்தன - கிடைத்தவற்றை, அருந்தியும் - உண்டும், களரிலும் - களர் நிலத்திலும், கல்லிலும் - மலை நிலத்திலும், கண்படைகொண்டும் - படுத்துக் கண்ணுறங்கியும், தளர்வுறும் யாக்கையை - (இயற்கையாகவே) தளர்ச்சியடைகின்ற வுடம்பை, தளர்வித்து - தளர்ச்சி யடையப்பண்ணி, ஆங்கு - அவ்வழியாக, அவர் - அவர்கள், அம்மை - வருபிறப்பில், முத்தி அடைவதற்காக - மோக்ஷமடைவதற்காக, தம்மை - தங்களை, தாமே - தாங்களே, சாலவும் - மிகவும், ஒறுப்பர் - வருத்துவார்கள், யாங்கள் எல்லாம் - நாங்களெல்லாம், ஈங்கு இவைசெய்யாது - இவ்விடத்துக்கூறிய இவைகளைச் செய்யாமல், பழுது இன்று - பழுதில்லாமல், உயர்ந்த - ஓங்கிய, எழுநிலை மாடத்தும் - எழுநிலைகளையுடைய மாளிகைகளின்மீதும், செந்தாது உதிர்ந்த - செம்மையாகிய மகரந்தமுதிர்ந்த, நந்தாவனத்தும் - நந்தவனத்திலும், தென்றல் இயங்கும் - தென்றல் வழங்குகின்ற, முன்றில் அகத்தும் - முற்றத்தினிடத்தும், தண்டா - கெடாத, சித்திரமண்டப மருங்கிலும் - சித்திரமண்டபத்தின் அருகிலும், பூவிரி - மலர்கள்விரிகின்ற, தரங்கம் - அலைகளோடுகூடிய, வாவிக்கரையிலும் - தடாகக்கரையிலும், மயில்பெடை ஆல - பெண்மயில்கள் நடனஞ்செய்ய, குயிற்றிய குன்றிலும் - நெருங்கிய மலையிலும் (ஆக) வேண்டுழிவேண்டுழி - வேண்டியவேண்டிய இடங்களாகிய, ஆண்டு ஆண்டு -

அவ்வவ்விடங்களில், இட்ட-அமைக்கப்பட்ட, மருப்பின் இயன்ற-யானைத் தந்தங்களாற் செய்யப்பட்டனவும், வாள் அரிசுமந்த - ஒளிபொருந்திய சிங்கங்களால் சுமக்கப்பட்டனவுமாகிய, விருப்புறு கட்டில் மீமிசை-விரும்புதற்குரிய கட்டிலின்மேல், படுத்த-பரப்பிய, ஐவகை அமளி அணைமேல்-ஐவகையாகிய படுக்கையணைமேல், பொங்க - விளங்கும்படி, தண்மலர்கமழும்-தண்ணிய மலர்கள் மணவாநின்ற, வெண்மடி விரித்து-வெள்ளாடையை விரித்து, பட்டினுள்பெய்த-பட்டுறையிலிட்ட, பதம்-அழகாகிய, நுண்பஞ்சின்-நுண்ணிய பஞ்சினாற் செய்யப்பட்ட, நெட்டணை அருகா - நீண்ட அணையினருகே, கொட்டைகள் பரப்பி - கொட்டைகளைப்பரப்பி, பாயல் மீது-சயனத்தின்மேல், பரிபுரமிழற்ற-நூபுரமொலிக்க, சாயல்-ஒளியுள்ள, அன்னத்தின்-அன்னத்தினது, தளர்நடைபயிற்றி-தளர் நடையைப்பழக்கி, பொன்-பொன்னினாற்செய்த, தோரணத்தை-தோரண கம்பத்தின்மேல், சுற்றிய-சுற்றப்பட்ட, துகில் என - ஆடைபோல, அம் - அழகாகிய, மெல்-மெல்லிய, குறங்கின்-தொடையின்மீது, ஓம்மெல்கலிங்கம்-பெறுமையமைந்த மெல்லியஆடை, கண்ணும் மனமும் கவற்றி-கண்களையும் மனத்தையுங் கவலுறுத்து, பண்வர - அலங்கார மமைந்திருக்க, இரங்கும்- ஒலியாநின்ற, மணி - ரத்நங்களாற்செய்யப்பட்ட, மேகலை ஒருங்கு உடன்கிடந்த - மேகலாபரணத்துடன் ஒருங்குகிடந்த, ஆடு - ஆடுகின்ற, அர - பாம்பின் படம்போன்ற, அல்குல் - அல்குலும், அரும்பெறல் நுசுப்புவாட - பெறுதற்கரிய இடைதளர, வீங்கிப - பருத்த, வனமுலை கதிப்ப-அழகிய தனங்கள்விம்ம, அணி இயல் கமுகை - வரிசையாய்ப் பொருந்திய கமுகமரத்தை, அலங்கரித்ததுபோல் - அலங்காரஞ் செய்ததுபோல், மணி இயல் ஆரம் - மணிகளானியன்ற ஆரங்கள், கதிர்விரித்து ஒளிர்தர - கிரணங்களைப் பரப்பிப் பிரகாசிக்க, மணிவளை தாங்கு - அழகாகிய சங்கவளைய லணியப்பெற்ற, அணிகெழு மெல்தோள் - ஆபரணமணிந்த மெல்லிய தோளின்மீது, வரித்த சாந்தின்மிசை - பூசிய சந்தனத்தின்மேல், விரித்திட்ட - பரப்பிய, உத்தரியப்பட்டு - உத்தரியமாகிய பட்டாடை, ஒருபால் - ஒருபக்கத்தில், ஒளிதர - ஒளியைச்செய்ய, வள்ளைவாட்டிய - வள்ளைத்தண்டை வாட்டமடைவித்த, ஒள் இருகாதொடு - ஒட்பமாகிய இரண்டு செவிகளோடு, பவளத்து அருகா - பவளத்தினயலில், தரளம் நிரைத்து - முத்துக்களை வகைசைப்படவைத்து, ஆங்கு - அவ்விடத்து, ஒழுகி நீண்ட - அழகொழுகி நீண்டிருக்கிற, குமிழ் ஒன்று பதித்து-ஒரு குமிழம்பூவைப்பதித்து, காலன் வேலும் - யமனது கைவேலும், காமபாணமும் - மன்மதபாணமும், ஆலகாலமும் - ஆலாகலவிடமும் (ஆகிய), அனைத்தும் இட்டு அமைத்த - எல்லாவற்றையுஞ் சேர்த்துச் செய்யப்பட்ட, இரண்டு நாட்டமும் - இரண்டு கண்களும், கடைபுரண்டு மிளிர்தர - கடைபிறழ்ந்து ஒளிசெய்ய, மாசு

அறுவதனம்-குற்றமற்ற முகம், மதி என விளங்க-பூர்ண சந்திரன்போலப் பிரகாசிக்க, புது-புதிய, விரை - பரிமளமுள்ள, அலங்கல்-மலர்மாலை, குழல் மிசை - கூந்தலின்மேல், பொலியும் - விளங்கப்பெற்ற, அம்சொல் - அழகிய சொற்களையுடைய, மடந்தையர் - இளம்பெண்டிர்களுடைய, ஆகம் தோய்ந்தும் - மார்பிற்படிந்தும், சின்னம்பரப்பிய - நுண்டொழில் பரவிய, பொன்னின் கலத்தும் - பொன்னினாற்செய்த உண்கலங்களிலும், அறுசுவை அடிசில் - அறுசுவை யுண்டியை, வறிது இருந்து அருந்தாது-சும்மா விருந்துண்ணாமல், ஆடினர்க்கு என்றும்-ஆடினோர்க்கெனவும், பாடினர்க்கு என்றும் - பாடினோர்க்கெனவும், வாடினர்க்கு என்றும் - பசியினால் வாட்டமடைந்தார்க்கெனவும், வரையாது கொடுத்தும் - வரையாதளித்தும், பூசுவன பூசியும் - பூசுவதற்குரியவற்றைப் பூசியும், புனைவன புனைந்தும்-அணிதற்குரியவற்றை யணிந்தும், தூசின்-ஆடைகளுள், நல்லன-நல்லவற்றை, தொடையின் சேர்த்தியும் - வரிசையாய்த்தரித்தும், ஐந்து புலன்களும் - ஐம்புலங்களையும், ஆர ஆர்ந்தும் - நிறையத்துய்த்தும், மைந்தரும் - மக்களும், ஒக்கலும் - உறவினரும், மனமகிழ்ந்து ஓங்கி, மனங்களித்துயர்ந்து, இவ்வகை இருந்தோம் ஆயினும்-இவ்வண்ணமிருந்தேமாயினும், அவ்வகை-அவ்வகையாகிய, மந்திரம் - மந்திரம் என்று சொல்லப்படுகிற, எழுத்து ஐந்தும் - ஐந்தெழுத்தையும், வாயிடை - வாயினால் (உச்சரித்து), மறவாது சிந்தை நின்வழி செலுத்தலின்-மறவாமல் மனத்தை நின்வழியிற் செலுத்தலால், அந்த முத்தியும் இழந்திலம் - அந்த மோக்ஷலாபத்தையும் இழந்திலேம், முதல்வ - முதல்வனே, அத்திறம்-அவ்வகை, நினது பெருமை அன்றே என்னின்-உன்பெருமை யன்றேவெனின், வல்லான் ஒருவன் - வல்லவன் ஒருவன், கைமுயன்று எறியினும் - கைவலித்தெறிந்தாலும், மாட்டா ஒருவன் (அவ்வாறு எறிய) மாட்டாத வொருவன், வாளா எறியினும் - சும்மாவெறிந்தாலும், நிலத்தின்வழா - நிலத்தில்விழுதல் தவறாத, கல்லேபோல் - கல்லைப்போல, நின் நாமம் நவின்றோர் - உன்திருநாமத்தை யுச்சரித்தவர்கள், நலத்தின்வழார் - நன்மையடைதல் தவறமாட்டார்கள். எ - று.

ஐவகைநெருப்பு - தவஞ்செய்வோர் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் நாற்றிசையினும் தம்மைச்சூழமூட்டின நெருப்பும், மேலேசூரியனும்; இவற்றை வடநூலார் "பஞ்சாக்நி" என்பர். பத்திவலையிற்படுவோனாதலால், "பத்தியாகிப் பணைத்தமெய்யன்பொடு, நொச்சியாயினுங் கரந்தையாயினும், பச்சிலையிட்டுப் பரவுந்தொண்டர், கருவிடைப்புகாமற் காத்தருள்புரியுந்,திருவிடைமருத"என்றார். மருதவாணனே, முத்தியின்பத்தை யடையும்பொருட்டு, அறிஞர் பலர், இல்வாழ்க்கை யின்பத்தைவிடுத்துக் காட்டினுமலையினுங் கடுந்தவம்புரிந்து தம்முடம்பை வருத்துவர், யாம் அங்

ஙகஞ்செய்யாது, எழுநிலைமாடத்து ஜவகையமளிமேல், மயிலியன்மடந்தையர்மார்புதோய்ந்து, புதல்வர்ப்பேறுமுதலிய இம்மையின்பத்தை நுகராநின்றேம். உன்னைநெஞ்சத்தை யெஞ்சிந்தையிலிருத்தி மறவாதிருத்தலானும், "கைவலியுள்ளான் கைம்முயன் றெறியினுங், கைவலியில்லான் கைதளர்ந்தெறியினும், இவராறெனெறியப்பட்ட கற்களிரண்டும் நிலத்தைப்பிழையா தடைந்தவாறுபோல, உன்திருநாமத்தை யுச்சரிப்போர் எவ்வாறிருப்பினும், முத்தியையடைதல் திண்ணமாதலானும், மறுமையில் யாமும் முத்தியின்பத்தையும் அடைதற்குரியேமாயினேம், ஆதலால், அவரினும் யாமே சதுரர் என்பது கருத்து.

நேரிசைவெண்பா.

20. நாமநவிற்றாய்மனனேநாரியர்கடோடோய்ந்து
காமநவிற்றிக்கழிந்தொழியலாமோ
பொருதவனத்தானையுரிபோர்த்தருளுமெங்கண்
மருதவனத்தானைவளைந்து.

இ - ள். மனனே-மனமே, பொருத-போர்செய்த, வனத்து-வனத்தின் வாழ்வையுடைய, ஆனை-யானையின், உரி-தோலை, போர்த்தருளும்-போர்த்தருளிய, எங்கள்-எங்களுக்குத் தேசியனாகிய, மருதவனத்தானை - மருதவனத்தையுடைய சிவபெருமானை, வளைந்து - சூழ்ந்துநின்று, நாமம் - அவனது திருநாமத்தை, நவிற்றாய் - சொல்லாயாகி, நாரியர்கள்-மாதர்களுடைய, தோள்தோய்ந்து - தோளைப்புணர்ந்து, காமம் நவிற்றி - காம நூல்களையே விரித்துப்பேசி, கழிந்து ஒழியல் ஆமோ - (அதனால் நமது ஆயுளெல்லாம்) கழிந்தொழிதல் தகுமோ. எ - று.

மனமே, மருதவனத்திறைவனைச் சூழ்ந்துநின்று அவனது திருநாமத்தை யுச்சரியாமல், மாதர் காமமயக்கில் மயங்கிக்கிடந்து, நம் வாணாட்கள் வீணாட்களாய்க்கழிதல் தகுதியாமோ என்பது கருத்து.

கட்டளைக்கலித்துறை.

21. வளையார்பசிபின்வருந்தார்பிணியின்மதனனைப்புக்
கிளையார்தனங்கண்டிரங்கிலிலாரிப்பிறப்பினில்வந்
தளையார்நரகிலுக்கென்கடவார்பொன்னலர்ந்தகொன்றைத்
தளையானிடைமருதன்னடியாரடிசார்ந்தவரே.

இ - ள். பொன் அலர்ந்த - பொன்போலமலர்ந்த, கொன்றைத்தளையான் - கொன்றை மலர்மாலையையணிந்தவனாகிய, இடைமருதன் - திருவிடைமருதூர்ச் சிவபெருமானது, அடியார் - அடியார்களுடைய, அடி-சீர்பாதங்களை, சார்ந்தவர் - அடைந்தவர்கள், பசியின் வளையார் - பசியினால்

தளரார்கள், பிணியின்வருந்தார் - பிணியினால் வருந்தமாட்டார்கள், மதனன் அம்புக்கு இளையார் - மன்மதபாணத்துக்கு மெலியார்கள், தனம் கண்டு - (நிலையற்ற) பொருளைப்பார்த்து, இரங்கிநில்லார் - இரங்கிநில்லார்கள், இப்பிறப்பினில்வந்து அளையார் - இந்தப்பிறவியில்வந்து கலவார்கள், நரகினுக்கு - நரகநீக்கத்துக்கு, என்கடவார் - என்னவுபாயம் செய்யக்கடவராயிருப்பர், (ஒன்றும்செய்யவேண்டியவரல்லர்) எ - று.

மதனன் அம்புக்கு இளையார் தனம்கண்டு இரங்கிநில்லார் என்பதற்கு-மதனனது அம்பினால் மாதர்தனங்கண்டு இரங்கிநில்லார் எனவுரைப்பினுமமையும். மருதூரீசனது அடியாரடியையடைந்தவர் பசிமுதலியவற்றால் வருந்தாமல் நரகவேதனையையுங்கடந்து முத்தியின்பத்தையடைவர் என்பது கருத்து.

## நேரிசையாசிரியப்பா.

22. அடிசார்ந்தவர்க்குமுடியாவின்ப
நிறையக்கொடுப்பினுங்குறையாச்செல்வ
மூலமுநடுவுமுடிவுமின்றிக்
காலமூன்றுங்கடந்தகடவு
ளுளக்கணுக்கல்லாதூன்கணுக்கொளித்துத்
துளக்கறநிமிர்ந்தசோதிச்சுடரொளி
யெறுப்புத்துளையினிருசெவிக்கெட்டா
துறுப்பினின்றெழுதருமுள்ளத்தோசை
வைத்தநாவின்வழிமறித்தகத்தே
தித்தித்தூறுந்தெய்வத்தேற
லுண்டத்துளையிற்பண்டைவழியன்றி
யறிவினூறுநறியநாற்ற
மேனையதன்மையுமெய்தாதெவற்றையுந்
தானேயாகிநின்றதற்பரன்
தோற்றுவவெல்லாந்தன்னிடைத்தோற்றித்
தோற்றம்பிறிதிற்றோற்றாச்சுடர்முளை
விரிசடைமீமிசைவெண்மதிகிடப்பினு
மிருள்விரிகண்டத்தேகநாயக
சுருதியுமிருவருந்தொடர்ந்துநின்றலமர
மருதிடங்கொண்டமருதமாணிக்க
வுமையாள்கொழுநவொருமூன்றாகிய
விமையாநாட்டத்தென்றனிநாயக

வடியேனுறுகுறைமுளியாதுகேண்மதி
நின்னடிபணியாக்கன்மனக்கயவரொடு
நெடுநாட்பழகியகொடுவினையீர்ப்பக்
கருப்பாசயமெனுமிருட்சிறையறையிற்
குடரொன்சங்கிலிபூண்டுதொடர்பட்டுக்
கூட்டுச்சிறைப்புழுவினீட்டுமலத்தழுந்தி
யுடனேவருந்திநெடுநாட்கிடந்து
பல்பிணிப்பெயர்பெற்றல்லற்படுத்துந்
தண்டனாளர்மிண்டிவந்தலைப்ப
வுதரநெருப்பிற்பதைபதைபதைத்தும்
வாதமத்திகையின்மோதமொத்துண்டுங்
கிடத்தனிற்றனடத்தல்செல்லா
திடங்குறைவாயிலின்முடங்கியிருந்துழிப்
பாவப்பகுதியிலிட்டுக்காவற்
கொடியோனவனையேவிநெடிய
வாசைத்தளையிலென்னையுமுடலையும்
பாசப்படுத்திப்பையெனவிட்டபின்
யானும்போந்துதீதினுக்குழன்றும்
பெரியோர்ப்பிழைத்தும்பிறர்பொருள்வெளவியும்
பரியாதொழிந்தும்பல்லுயிர்செகுத்தும்
வேற்றோர்மனைவியர்தோற்றம்புகழ்ந்தும்
பொய்பலகூறியும்புல்லினம்புல்லியு
மைவருங்கடுப்பவவாவதுகூட்டி
யீண்டினகொண்டுமீண்டுவந்துழி
யிட்டுழியிடாதுபட்டுழிப்படாஅ
திந்நாளிடுக்கணெய்திப்பன்னாள்
வாடுபுகிடப்பேன்வீடுநெறிகாணே
னின்னையடைந்தவடியாரடியார்க்
கென்னையுமடிமையாகக்கொண்டே
யிட்டபச்சிலைகொண்டொட்டியறிவித்
திச்சிறைபிழைப்பித்தினிச்சிறைபுகாமற்
காத்தருள்செய்பவேண்டுக்
தீத்திரண்டன்னசெஞ்சடையோனே.

இ - ள். அடிசார்ந்தவர்க்கு-அடியடைந்தவர்க்கு, முடியா இன்பம்-அழியாத இன்பத்தை, நிறையக் கொடுப்பினும் - நிரம்பக்கொடுத்தாலும், குறையா செல்வ-குறையாத செல்வமுடையானே, மூலமும் நடுவும் முடிவும் இன்றி - ஆதியும் இடையும் அந்தமுமில்லாமல், காலம்மூன்றும்கடந்த கடவுள் - முக்காலத்தையுங்கடந்த கடவுளே, உள்ளக் கண்ணுக்கு அல்லாது - மனக்கண்ணுக்கேயன்றி, ஊன்கண்ணுக்கு ஒளித்து - மாமிசநேத்திரத்துக்கு மறைந்து, துளக்கு அற நிமிர்ந்த - சலநமற்றோங்கிய, சோதிச்சுடர் ஒளி - சோதிச்சுடரொளியே, எறும்புதுளையின் - எறும்புபோன்ற சிறு துவாரத்தையுடைய, இருசெவிக்கு எட்டாது - இருசெவிகளுக் கெட்டாது, உறுப்பினின்று எழுதரும் - அவயவத்தினின் றுண்டாகின்ற, உள்ளத்து ஓசை - உள்ளிடத்தொலியே, வைத்த நாவின் வழிமறித்து - (ஏற்படுத்தி) வைத்த நாவின் வழியைத்தடுத்து, அகத்தே - உள்ளத்தின் கண்ணே, தித்தித்து ஊறும் - இனித்துச் சுரக்கின்ற, தெய்வத்தேறல் - தெய்விகமாகிய தேனே, துண்டத்துளையின் - மூக்குத்தொளையாகிய, பண்டை வழி அன்றி - பழையவழியி லல்லாமல், அறிவில் நாறும்-அறிவினிடத்து மணக்கின்ற, நறியநாற்றம் - சுகந்தமே, ஏனைய தன்மையும் எய்தாது - மற்றைத் தன்மைகளையும் அடையாமல், எவற்றையும் - எவைகளினிடத்தும், தானேஆகி நின்ற தற்பர - தானேயாய்நின்ற தற்பரனே, தோற்றுவ எல்லாம் - உண்டாவனவெல்லாம், தன்னிடைத்தோற்றி - தன்னிடத்துண்டாக்கி, தோற்றம் பிறிதில்தோற்ற - தன்னுற்பத்தி பிறிதொன்றிற் காணப்படாத, சுடர்முளை - ஒளிமுளையே, விரிசடைமிமிசை-பரந்த சடையின்மேல், வெண்மதி கிடப்பினும்-வெள்ளிய சந்திரன் தங்கியிருந்தாலும், இருள்விரிகண்டத்து - இருள்பரந்த கண்டத்தையுடைய, ஏகநாயக - தனிநாயகனே, சுருதியும் இருவரும் - வேதங்களும் பிரமவிஷ்ணுக்களாகிய இருவரும், தொடர்ந்து நின்று - (காணவேண்டுமென்று) தொடர்ந்து நின்று, அலமர - (காணாமையால்) மயங்க, மருது இடம்கொண்ட - மருதாரையிடமாகக்கொண்ட, மருதமாணிக்க - மருதமாணிக்கமே, உமையாள் கொழுந - உமாநாயகனே, ஒருமூன்று ஆகிய - ஒருமூன்றென்னுந் தொகைபெற்ற, இமையா நாட்டத்து - இமையாத விழிகளையுடைய, என் தனிநாயக - எனது ஒப்பற்ற தலைவனே, அடியேன்உறுகுறை-அடியேன் குறையிரத்தலை, முனியாதுகேள் - வெறுக்காமல்கேட்டருளவேண்டும், நின்அடிபணியா-உன்னடிவணங்காத, கல்மனக்கயவரொடு-கன்னெஞ்சினையுடைய கீழ்மக்களுடன், நெடுநாள்பழகிய-நெடுங்காலம் பழகிய, கொடுவினை ஈர்ப்ப-தீவினையிழுக்க, கருப்பாசயம் என்னும் - கர்ப்பாசய மென்கிற, இருள் - இருள் திணிந்த, சிறை அறையில் - காவலறையில், குடர் என் சங்கிலி பூண்டு - குடல் என்னும் சங்கிலி பூட்டப்பெற்று, தொடர்ப்பட்டு-(அதில்) அகப்பட்டு, கூட்டு - சேர்தலையுடைய, சிறைப்புழுவின் - சிறைப்புழுக்க

ளால், ஈட்டும்-சேர்க்கப்பட்ட, மலத்து அழுந்தி-மலத்திலமிழ்ந்து, உடனே வருந்தி - கூடவே வருத்தப்பட்டு, நெடுநாள் கிடந்து - நெடுங்காலங்கிடந்து, பல்பிணிப்பெயர் பெற்று - பலநோய்கள் என்று பெயர்பெற்று, அல்லற்படுத்தும் - துன்பப்படுத்துகின்ற, தண்டலாளர் - சிக்ஷிப்போர், மிண்டி வந்து அலைப்ப - நெருங்கிவந்து வருத்த, உதரநெருப்பில்-உதராக்கினியில், பதைபதைபதைத்தும் - மிகப்பதைத்தும், வாதம்-பிரகுதவாயுவானது, மத்திகையின்மோத - சம்மட்டிபோல மோத, மொத்து உண்டும் - அறையுண்டும், கிடத்தல் - கிடத்தலும், நிற்றல் - நிற்றலும், நடத்தல் - நடத்தலும், செல்லாது - செய்ய வியலாமல், இடம் குறைவாயிலில் - இடம் குறைவாயிலிலிருப்பதுபோல, முடங்கி இருந்துழி - முடங்கி யிருந்தகாலத்தில், பாவப்பகுதியில் இட்டு - பாவப்பகுப்பிலமைத்து, காவல்-காவலாக, கொடியோர் ஐவரை ஏவி-கொடியோர் ஆகிய ஐவரைத்தூண்டி, நெடிய-பெரிய, ஆசைத்தளையில் - ஆசைப்பிணிப்பில், என்னையும் உடலையும் - என்னையும் உடம்பையும், பாசப்படுத்தி - கட்டுப்படுத்தி, பையென விட்டபின் - மெல்லென விட்டபிறகு, யானும் போந்து - அடியேனும்வந்து, தீதினுக்கு உழன்றும் - தீவினையைச் சேகரிக்க அலைந்தும், பெரியோர்ப்பிழைத்தும் - பெரியோருக்குப் பிழைசெய்தும், பிறர்பொருள் வவ்வியும் - பிறர்பொருளைக் கவர்ந்தும், பரியாது ஒழிந்தும் - (அதற்காக) இரங்காதொழிந்தும், பல் உயிர் செகுத்தும் - பலவுயிர்களைக்கொன்றும், வேற்றோர் மனைவியர்-பிறர் மனைவியரது, தோற்றம் புகழ்ந்தும் - அழகைச் சிறப்பித்தும், பொய்பல கூறியும் - பலபொய்களைச் சொல்லியும், புல் இனம் புல்லியும் - சிற்றினத்தைச்சேர்ந்தும், ஐவரும் கடுப்ப-ஐவரும்விரைந்துசெல்ல, அவாவதுகூட்டி-ஆசைப்பட்டதை யீட்டி, ஈண்டினகொண்டு-மிக்க விடயங்களைக்கொண்டு, மீண்டுவந்துழி-மீண்டுவந்தவிடத்து, இட்டுழி இடாது-இட்டவிடத்திடாமலும், பட்டுழிப்படாது-பட்டவிடத்துப் படாமலும், இந்நாள்-இந்நாளளவும், இடுக்கண் எய்தி - துன்பமடைந்து, பல் நாள் - பலநாளும், வாடுபு கிடப்பேன் - வாடிக்கிடப்பேன், வீடுநெறிகாணேன் - வீட்டுநெறியைக்கண்டிலேன், நின்னை அடைந்த - உன்னையடைந்த, அடியாரடியார்க்கு - அடியவரது அடியவர்களுக்கு, என்னையும் அடிமையாகக்கொண்டு - என்னையும் அடிமையாகக்கொண்டு, இட்ட பச்சிலைகொண்டு - நானிட்ட பச்சிலையையேற்று, ஒட்டி அறிவித்து - என் அறிவோடு (கூடியிருந்து) அறிவித்து, இச்சிறை பிழைப்பித்து - இந்தச்சிறையினின்றும் தப்புவித்து, இனிச் சிறைபுகாமல் - இனிச் சிறையிற் பிரவேசியாமல், காத்து அருள் செய்யவேண்டும் - காத்தருளல் வேண்டும், தீ திரண்டன்ன - நெருப்புத்திரண்டாற்போன்ற, செஞ்சடையோனே - செம்மையாகிய சடையையுடையானே, எ - று.

மருதமாணிக்கமே, உன்திருவடிபணியாத வலிய மனத்தாரதுநட்புமுத லாகப் பலதீமைகள்செய்து வாடிக்கிடந்தேனன்றி வீட்டுநெறியைச் சிறிது மறியேன், ஆயினும், உன்னடியாரடியார்க்கு என்னையு மடிமையாக்கி இப் பிறவியொழித்து இனிப்பிறவிவாராமல் என்னைக் காத்தருளல் வேண்டு மென்பது கருத்து.

## நேரிசை வெண்பா.

23. சடைமேலொருத்திசமைந்திருப்பமேனிப்
புடைமேலொருத்திபொலிய-விடையேபோய்
சங்கேகலையேமருதற்குத்தான்கொடுப்ப
தெங்கேயிருக்கவிவள்.

இ - ள். மருதற்கு - மருதப்பிரானுக்கு, சடைமேல் ஒருத்தி சமைந்து இருப்ப - சடையின்மீது ஒருபெண் அமைந்திருக்கவும், மேனிப்புடைமேல் - திருமேனியின்மேல் ஒருபக்கத்தில், ஒருத்திபொலிய - ஒருபெண் விளங்கவும், இவள் - இந்தப்பெண்ணானவள், இடையேபோய் - அவர்களுக் கிடையேசென்று, எங்கே இருக்க - எங்கேயமைந்திருத்தற்பொருட்டோ, சங்கு - சங்கவளையலையும், கலை - ஆடையையும், தான்கொடுப்பது - தான் (அவனுக்குக்) கொடுப்பது. எ - று.

இது மருதப்பிரானது திருப்பவனிகண்டு தன்வளையும் கலையுமிழந்து வருந்துந் தலைமகளைக்கண்ட தாய் தோழிமுதலாயினோர் கூறியிரங்குவதாகக்கூறியது. இது இரங்கல் என்னுந் துறையின்பாற்படும். திருமருதப்பிரானது சடைமீதொருபெண்ணும் திருமேனியினொருபாகத்தில் ஒருபெண்ணும் அமர்ந்திருக்கச்செய்தே, இவளிருக்க இடம்பெறலருமை, இதையுணராமல், தன்கைவளையுங் கட்டுடையு மிழந்திரங்குதல் அறியாமையின் காரியமேயன்றி வேறன்றென்பது கருத்து.

"எட்டொருமா வெண்காணி மீதே யிருந்தகலை
பட்டொருமா நான்மாவிற் பாய்ந்ததே - சிட்டர்தொழும்
தேவாதி தேவன் திருவொற்றி யூருடையான்
மாவேறி வீதிவரக் கண்டு" என்றற் றொடக்கத்தனவும் இக் கருத்தே குறித்தன.

## கட்டளைக்கலித்துறை.

24. இருக்குமருதினுக்குள்ளிமையோர்களுநான்மறையு
நெருக்குநெருக்கத்துநீளகத்துச்சென்றுமீளவொட்டாத்
திருக்குமறுத்தைவர்தீமையுந்தீர்த்துச்செவ்வேமனத்தை
யொருக்குமொருக்கத்தினுள்ளேமுளைக்கின்றவொண்சுடரே.

இ-ள். மீளவொட்டா - திரும்பவொட்டாத, திருக்கும் அறுத்து - குற்றங்களையும் சேதித்து, ஐவர்தீமையுந்தீர்த்து - ஐவரால்உண்டாகிற தீங்கையும்நீக்கி, மனத்தை - மனதை, செவ்வே - செவ்வையாக, ஒருக்கும் - ஒடுக்குகின்ற, ஒருக்கத்தின் உள்ளே - ஒடுக்கத்துக்குள்ளே, முளைக்கின்ற - தோன்றுகின்ற, ஒள்சுடர் - ஒள்ளியஒளி, இமையோர்களும் - தேவர்களும், நான்மறையும் - நான்குவேதங்களும், நெருக்கும்நெருக்கத்து - நெருக்குகின்ற நெருக்கத்தினையுடைய, நீள் அகத்துசென்று - பெரிய இடத்திற்போய், மருதினுக்குள்இருக்கும் - மருதூரின்கண்ணேவீற்றிருக்கும், எ-று.

ஐவர் - ஐம்புலன்கள். அவராலுண்டாகுந் தீமை - பிறவித்துன்பம். மனத்தையொருக்கு மொருக்கம் - மனமொடுங்கினவிடம். "உள்ளத்தழிவிலடிக்குந்தேன்" என்றார் பிறரும். மனவொடுக்கத்தின் கண்ணேதோன்றுகின்ற ஞானசூரியன், தேவர்களும் நான்குவேதங்களும் நெருங்கிநின்று வழிபடுதற்கிடமாகிய திருவிடைமருதூரின் கண்ணேவீற்றிருக்கும், ஆதலால் யாமெல்லாரும் எளிதில் வழிபட்டுய்யலாமென்பது கருத்து.

### நேரிசையாசிரியப்பா.

25. சுடர்விடுசூலப்படையினையென்றும்
விடையுகந்தேறியவிமலவென்று
முண்ணாநஞ்சமுண்டனையெனவுங்
கண்ணாற்காமனைக்காய்ந்தனையென்றுந்
திரிபுரமெரித்தசேவகவென்றுங்
கரியுரிபோர்த்தகடவுளென்று
முரகம்பூண்டவுரவோயென்றுஞ்
சிரகஞ்செந்தழலேந்தினையென்றும்
வலந்தருகாலனைவதைத்தனையென்றுஞ்
சலந்தரனுடலந்தடிந்தனையென்று
மயன்சிரமொருநாளரிந்தனையென்றும்
வியந்தவாளரக்கனைமிதித்தனையென்றுந்
தக்கன்வேள்விதகர்த்தனையென்று
முக்கிரப்புலியுரியுடுத்தனையென்று
மேனமுமன்னமுமெட்டாதலமா
வானங்கீழ்ப்படவளர்ந்தனையென்றுஞ்
செழுநீர்ஞாலஞ்செகுத்துயிருண்ணு

மழல்விழிக்குறளேயமுக்கிணையென்று
மிணையனவிணையனவெண்ணில்கோடி
நிணைவருங்கீர்த்திநின்வயிற்புகழ்த
றுளக்குறுசிந்தையேன்சொல்லளவாதலி
னளப்பருபெருமைநின்னளவலதாயினு
மொன்றிணையாப்புன்மொழிகொண்டு
நின்ணைநோக்குவனுதலினென்ணை
யிடுக்கண்களேயாவல்லற்படுத்தா
வெழுநிலைமாடத்துச்செழுமுகிலுறங்க
வடித்துத்தட்டியெழுப்புவபோல
நுண்டுகிற்பதாகைகொண்டுகொண்டுகைப்பத்
துயிலினீங்கிப்பயிலும்வீதித்
திருமருதமர்ந்ததெய்வச்செழுஞ்சுட
ரருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்த
கல்லினெறிந்தபொல்லாப்புத்த
னின்னிணைந்தெறிந்தவதனு
லன்னவன்றனக்குமருள்பிழைத்தின்றே

இ - ள். சுடர்விடு - ஒளியைவீசுகின்ற, சூலப்படையினே என்றும்- சூலாயுதத்தையுடையை எனவும், விடை உகந்து ஏறிய - இடபத்தைவிரு ம்பி அதன்மீதேறிய, விமல என்றும்-நிர்மலனே எனவும், உண்ணுநஞ்சம்- ஒருவரானு முண்ணவொண்ணுதநஞ்சிணை, உண்டணை என்றும் - உண்டாய் எனவும், கண்ணுல் - நெற்றிக்கண்ணினுல், காமணைக்காய்ந்தணை என்றும் - மன்மதணை எரித்தாய் எனவும், திரிபுரம் எரித்த - முப்புரங்களைச்சுட்டு நீரு க்கின, சேவக என்றும் - வீரத்தன்மையுள்ளவனே எனவும், கரி உரிபோர் த்த - யாணைத்தோலைப்போர்த்தருளின, கடவுள் என்றும் – கடவுளே என வும், உரகம்பூண்ட-சர்ப்பங்களையணிந்த, உரவோய் என்றும் - வலியானே எனவும், சிரகம்செந்தழல் - கபாலத்தையும் செந்தழலையும், ஏந்திணை என் றும் - கையினிடத்துத்தாங்கிணை எனவும், வலம்தருகாலணை - வெற்றியை யுடைய யமணை, வதைத்தணை என்றும் - வதைத்தாய் எனவும், சலந்தரன் உடலம் - சலந்தரன் என்னும் அசுரனது உடம்பை, தடிந்தணை என்றும் - வெட்டிணுய் எனவும், அயன்சிரம் - பிரமன்தலையை, ஒருநாள் - ஒருகால த்தில், அரிந்தணை என்றும் - அறுத்தாய் எனவும், வியந்தவாள் அரக்கணை - துதித்தவாளேந்திய (ராவணனென்னும்) அரக்கணை, மிதித்தணை என்றும் - மிதித்தாய்எனவும், தக்கன் வேள்வி-தக்கன் யாகத்தை, தகர்த்தணைஎன்றும்-

அழித்தாய் எனவும், உக்கிரம் - கொடுமையுள்ள, புலி உரி-வியாக்கிரத்தின் தோலே, உடுத்தனை என்றும்-தரித்தாய் எனவும், ஏனமும் - (திருமாலாகிய) வராகமும், அன்னமும் - (பிரமனாகிய) அன்னமும், எட்டாது அலமர - காணக்கூடாமல்;மயங்கும்படி, வானம்கீழ்ப்பட - ஆகாயமும்தாழ, வளர்ந்தனை என்றும்-வளர்ந்தாய்எனவும், செழுநீர்ஞாலம்-செழுமையாகிய கடனீராற்சூழப்பட்ட உலகத்தை, செகுத்து - அழித்து, உயிர் உண்ணும் - அதிலுள்ள சீவர்களையுண்ணுகின்ற, அழல்விழி - சுடுகின்ற கண்களையுடைய, குறளை - (முயலகன் என்னும்) பூதத்தை, அமுக்கினை என்றும் - அமுக்கினாய் எனவும், இனையன இனையன - இத்தன்மையன இத்தன்மையனவாகிய, எண் இல்கோடி - அளவற்ற கோடித்தொகைபெற்ற, நினைவு அருசீர்த்தி - நினைதற்கரிய சீர்த்திகளை, நின்வயின்புகழ்தல் - நின்னிடத்தமைத்துப் புகழ்வது, துளக்குறுசிந்தையேன் - சலித்தலையுடைய மனத்தினேனது, சொல் அளவு ஆதலின் - சொல்லளவேயாதலால், அளப்பு அருபெருமை - அளவிடற்கரிய பெருமையுள்ள, நின் அளவு அலது ஆயினும் - உன்னளவினையுடைத்தன்றாயினும், ஒன்றின் ஏயா - ஒன்றினும் பொருந்தாத, புன்மொழிகொண்டு-புன்சொற்களைக்கொண்டு, நின்னை நோக்குவன் ஆதலின்-உன்னைநோக்குவேனாதலால், ஐயா-ஐயனே, என்னை-அடியேனை, இடுக்கண்கள்-பிறவித்துன்பங்கள் அல்லற்படுத்தா-வருத்தப்படுத்தமாட்டா, எழுநிலைமாடத்து - ஏழ்நிலைகளையுடையமாடத்தின்மீது, செழுமுகில்உறங்க-செழுமையாகிய மேகங்கள் நித்திரைசெய்ய, அடித்துத்தட்டி எழுப்புவபோல - (அவற்றை) அடித்துத்தட்டி எழுப்புவனபோல, நுண் துகில் பதாகை - நுண்ணிய கொடியாடைகள், கொண்டு கொண்டு உகைப்ப - எழுந்தெழுந்து மேலேதாவ, துயிலின் நீங்கி - நித்திரை நீங்கி, பயிலும்-சஞ்சரிக்கின்ற, வீதி - தெருக்களையுடைய, திருமருது அமர்ந்த - திருவிடைமருதூரின்கண் அமர்ந்திருக்கின்ற, தெய்வம் - தெய்விகமான, செழுசுடர்-செழுஞ்சுடரோ, அருள் சுரந்து அளிக்கும் - அருள்பெருகி எம்மைக்காத்தருள்கின்ற, அற்புதக்கூத்த - அற்புதத்தாண்டவத்தை யுடையானே, கல்லின் எறிந்த - கல்லைக்கொண்டுவீசின, பொல்லாபுத்தன் - பொல்லாத பௌத்த சமயத்தானாகிய சாக்கியநாயன், நின் நினைந்து எறிந்த அதனால் - உன்னை மனத்துக்கொண்டு வீசியதனால், அன்னவன்தனக்கும் - அவனுக்கும், அருள்பிழைத்தின்றே - உன்திருவருட்சித்தி தவறினதில்லையே,எ-று.

சிரகம் - இருபெயரொட்டு, திருமருதமர்ந்த தெய்வச்செழுஞ்சுடரோ சுடர்விடு குலப்படையனே, விடையுகந்தேறிய விமலனே, என்றிவ்வாறுனைப் பலபடப்புகழ்ந்துயாா நின்றேனாதலானும், உன்னை நினைத்துக் கல்லாலெறிந்த சாக்கியநாயனாரும் உன்திருவருள் பெற்றனராதலானும், இனியான் பிறவித்துன்பத்தால் வருந்தேனென்பது கருத்து.

### நேரிசைவெண்பா.

**26.** இன்றிருந்துநாளையிறக்குந்தொழிலுடைய
புன்றலையமாக்கள்புகழ்வரோ-வென்றிமழு
வாளுடையான்றெய்வமருதுடையானாயேனை
யாளுடையான்செம்பொனடி.

இ - ள். வென்றிமழு வாள் உடையான் - வெற்றியுள்ள மழுவாகிய வாளையுடையவனும், தெய்வம் மருது உடையான்-தெய்வத்தன்மையுள்ள மருதூரை யிடமாகவுடையவனும், நாயேனை ஆள் உடையான் - நாயினேனையாளுந் தொழிலையுடையவனுமாகிய சிவபெருமானது, செம்பொன் அடி - செம்பொன்போலுந் திருவடிகளை, இன்று இருந்து - இன்று உயிரோடிருந்து, நாளை இறக்கும் தொழில் உடைய - நாளை இறந்துபோம் தொழிலையுடைய,புல் தலைய மாக்கள் - புல்லிய குடியிற் பிறத்தலையுடைய மனிதர், புகழ்வரோ - துதிப்பரோ, எ - று.

மழுவாள் - இருபெயரொட்டு. மருதுரீசன் பொன்னடியை, இன்றிருந்து நாளை மாய்ந்தொழியுந் தொழிலுள்ள சிழ்மக்கள் துதியார் என்பது கருத்து.

### கட்டளைக்கலித்துறை.

**27.** அடியாயிரந்தொழிலாயிரவாயிரமாயிரம்பேர்
முடியாயிரங்கண்கண்மூவாயிரமுற்றுநீறணிந்த
தொடியாயிரங்கொண்டதோளிரண்டாயிரமென்றுநெஞ்சே
படியாயிராப்பகற்றென்மருதாளியைப்பற்றிக்கொண்டே.

இ - ள். நெஞ்சே - என்மனமே, தென்மருது ஆளியை - தென்மருதூரின் கண்ணதாகிய சிங்கத்தை, பற்றிக்கொண்டு-உறுதியாய்ப் பிடித்துக்கொண்டு, அடி ஆயிரம் - கால்களாயிரம், தொழில் ஆயிரஆயிரம் - செயல் ஆயிரவாயிரம், பேர்ஆயிரம் - திருநாமங்களாயிரம், முடிஆயிரம் - திருமுடிகளாயிரம், கண்கள்மூவாயிரம் - விழிகள்மூவாயிரம், முற்றும் நீறு அணிந்த - முழுதும் வெண்பொடிதரித்த, தொடி ஆயிரம்கொண்ட - ஆயிரம் கைவளையையணிந்த, தோள் இரண்டு ஆயிரம் - தோள்கள் இரண்டாயிரம், என்று - என்றுசொல்லி, இராப்பகல் - இரவும்பகலும், படியாய் - (அவனதுபுகழை) ப்படிப்பண்ணுவாய். எ - று.

ஆயிரம் என்றது எண்டேப் பன்மைகுறித்து நின்றது. இவ்வாறிருப்பது இறைவனது விராட்டுருவத்தில். மனமே, திருமருதாளியை இரவும் பகலும் இடையீடின்றிப் பற்றி நின்று அவனது திருவடிமுதலாயினவற்றைப் படம்பண்ணக்கடவை, அப்படிச்செய்வதே நாமுய்தற்குரிய நெறியென்பது கருத்து.

நேரிசையாசிரியப்பா.

28. கொண்டலினிருண்டகண்டத்தெண்டோட்
செவ்வானுருவிற்பையரவார்த்துச்
சிறுபிறைகிடந்தநெறிதருபுன்சடை
மூவாமுதல்வமுக்கட்செல்வ
தேவதேவதிருவிடைமருத
மாசறுசிறப்பின்வானவராடும்
பூசத்தீர்த்தம்புரக்கும்பொன்னி
யயிராவணத்துறையாடுமெப்ப
கைலாயவாணகௌரிநாயக
நின்னைவணங்கிப்பொன்னடிபுகழ்ந்து
பெரும்பதம்பிழையாவரம்பலபெற்றோ
ரிமையாநெடுங்கணுமையாணங்கையு
மழைக்கட்கடத்துப்புழைக்கைப்பிள்ளையு
மமரர்த்தாங்குங்குமரவேளுஞ்
சுரிசங்கேந்தியதிருநெடுமாலும்
வான்முறைபடைத்தநான்முகத்தொருவனுந்
தாருகற்செற்றவீரக்கன்னியும்
நாவின்கிழத்தியும்பூவின்மடந்தையும்
பீடுயர்தோற்றத்துக்கோடியுருத்திரரு
மானப்பெருந்திறல்வானோர்தலைவனுஞ்
செயிர்தீர்நாற்கோட்டயிராவதமும்
வாம்பரியருக்கர்தாம்பன்னிருவருஞ்
சந்திரனொருவனுஞ்செந்தீக்கடவுளு

நிருதியுஞ்சமனுஞ்சுருதிகளுன்கும்
வருணனும்வாயுவுமிருநிதிக்கிழவனு
மெட்டுநாகமுமட்டவசுக்களு
மூன்றுகோடியான்றமுனிவரும்
வசிட்டனுங்கபிலனுமகத்தியன்றானுந்
தும்புருநாரதனென்றிருதிறத்தரும்
வித்தகப்பாடன்மூத்திறத்தடியருந்
திருந்தியவன்பின்பெருந்துறைப்பிள்ளையு
மத்தகுசெல்வத்தவமதித்தருளிய
சித்தமார்சிவவாக்கியதேவரும்
வெள்ளைநீறுமெய்யிற்கண்டு
கள்ளன்கையிற்கட்டவிழ்ப்பித்து
மோடும்பன்னரியூளைகேட்டரனைப்
பாடினவென்றுபடாம்பலவளித்துங்
குவளைப்புனலிற்றவளையரற்ற
வீசன்றன்னையேத்தினவென்று
காசும்பொன்னுங்கலந்துதூவியும்
வழிபடுமொருவன்மஞ்சனத்தியற்றிய
செழுவிரையெள்ளைத்தின்னக்கண்டு
பிடித்தலுமவனிப்பிறப்புக்கென்ன
விடித்துக்கொண்டவனெச்சிலைநுகர்ந்து
மருதவட்டத்தொருதனிக்கிடந்த
தலையைக்கண்டுதலையுறவணங்கி
யும்மைப்போலவெம்மித்தலையுங்
கிடக்கவேண்டுமென்றடுத்தடுத்திரந்துங்
கோயின்முற்றத்துமீமிசைக்கிடப்ப
வாய்த்ததென்றுநாய்க்கட்டமெடுத்துங்
காம்பவிழ்த்துதிர்ந்தகனியுருக்கண்டு
வேம்புகட்கெல்லாம்விதானமமைத்தும்

விரும்பினகொடுக்கைபரம்பரற்கென்று
புரிகுழற்றேவியைப்பரிவுடன்கொடுத்த
பெரியவன்பின்வரகுணதேவரு
மினையதன்மையரெண்ணிறந்தோர்க
ளனைவருநிற்கயானுமொருவன்
பத்தியென்பதோர்பாடுமின்றிச்
சுத்தனுயினுந்தோன்றுக்கடையே
னின்னை
யிறைஞ்சிலனுயினுமேத்திலனுயினும்
வருந்திலனுயினும்வாழ்த்திலனுயினுங்
கருதியிருப்பன்கண்டாய்பெரும
நின்னுலகனைத்துநன்மைதீமை
யானவைநின்செயலாதலி
ஞனேயனமயுநலமில்வழிக்கே.

இ - ள். கொண்டலின் இருண்ட - மேகம்போலிருண்ட, கண்டத்து - கண்டத்தையும், எண்தோள் - எட்டுத்தோள்களையுமுடைய, செவ்வான் உருவில் - செவ்வானம்போன்ற திருமேனியில், பை அர ஆர்த்து - படத்தையுடைய சர்ப்பத்தையணிந்து, சிறுபிறைகிடந்த - சிறுபிறைதங்கிய, நெறிதருபுன்சடை-நெறிதலையுடைய புல்லியசடையையுடைய, மூவா முதல்வ - மூப்படையாத முதல்வனே, முக்கண்செல்வ - மூன்றுகண்களையுடைய செல்வனே, தேவதேவ - தேவர்களுக்குந்தேவனே, திருவிடைமருத - திருவிடைமருதூரனே, மாசுஅறு - குற்றமற்ற, சிறப்பின் - மேன்மையையுடைய, வானவர் ஆடும் - தேவர்கள் மூழ்குகின்ற, பூசத்தீர்த்தம் - பூசத்தீர்த்தத்தை, புரக்கும் - காக்கின்ற, பொன்னி - காவிரிநதியின், அயிராவணத்துறை - அயிராவணத்துறையில், ஆடும் - ஆடுகின்ற, அப்ப - அப்பனே, கயிலாயவாண - திருக்கைலாயத்தில் வாழ்வோனே, கௌரிநாயக - கௌரிநாதனே, நின்னைவணங்கி - உன்னைப்பணிந்து, பொன் அடி புகழ்ந்து - உன் பொன்னடியைத் துதித்து, பெரும்பதம் - பெரியபதவிகளையும், பிழையாவரம் - தவறுதவரங்களையும், பல - பலவாக, பெற்றோர் - பெற்றவர்கள், இமையாநெடுங்கண் - இமையாத நெடியகண்களையுடைய, உமை

யாள் நங்கையும் - உமாதேவியும், மழைக்கண்கடத்து - மேகம்போலப் பெரிதாகியமதநீரையும், புழைக்கை - தொளையோடுகூடிய துதிக்கையையுமுடைய, பிள்ளையும் - மூத்தபிள்ளையாரும், அமரர்த்தாங்கும் - தேவர்களைக் காக்கும், குமரவேளும் - முருகக்கடவுளும், சுரிசங்கு ஏந்திய - சுரிக்கின்ற இயல்பமைந்த சங்கத்தைத்தாங்கிய, திருநெடுமாலும் - அழகியநெடுமாலும், வான்முறைபடைத்த - மேலாகிய முறைமையோடு உலகைப்படைத்த, நான்முகத்து ஒருவனும் - நான்குமுகங்களையுடைய பிரமனும், தாருகன்செற்ற - தாருகனைக்கொன்ற, வீரக்கன்னியும் - வீரகாளியும், நாவின்கிழத்தியும் - சரசுவதியும், பூவின்மடந்தையும் - திருமகளும், பீடு உயர்தோற்றத்து - பெருமையாலுயர்ந்த தோற்றத்தையுடைய, கோடி உருத்திரரும்- கோடியுருத்திரர்களும், ஆறு-நீங்காத, பெருந்திறல் - பெரியவலியமைந்த, வானோர்தலைவனும் - இந்திரனும், செயிர்தீர்-குற்றம்நீங்கிய, நாற்கோட்டு - நான்கு கொம்புகளையுடைய,அயிராவதமும் - ஐராவதமும், வாம்-தாவிச்செல்லுகின்ற, பரி - குதிரைகள்பூண்ட, அருக்கர் பன்னிருவரும் - பன்னிரண்டு சூரியரும், சந்திரன் ஒருவனும் - ஒருசந்திரனும், செந்தீக்கடவுளும்- அக்கினிதேவனும், நிருதியும் - நைருதியும், சமனும் - யமனும், சுருதிகள் நான்கும் - வேதங்கள்நான்கும், வருணனும் - வருணனும், வாயுவும் - வாயுவும், இரு - பெரிய, நிதிக்கிழவனும் - குபேரனும், எட்டுநாகமும் - அஷ்டநாகங்களும், அட்டவசுக்களும் - அஷ்டவசுக்களும், மூன்றுகோடி ஆன்றமுனிவரும் - மூன்றுகோடித் தொகைபெற்ற பெரியமுனிவோரும், வசிட்டனும் கபிலனும் அகத்தியன்தானும்-வசிஷ்டகபில அகஸ்தியர்களும், தும்புருநாரதர் என்ற இருதிறத்தரும் - தும்புருநாரதர் என்று சொல்லப்பட்ட இருதிறத்தாரும், வித்தகப்பாடல்-ஞானப்பாடல்களைப்பாடிய, முத்திறத்து அடியரும் - அடியார்மூவரும், திருந்தியஅன்பின் - திருத்தமாகிய அன்பினையுடைய, பெருந்துறைப்பிள்ளையும் - மாணிக்கவாசகரும், அ - அந்த, தகு - தகுதியாகிய, செல்வத்து - செல்வத்தினால், அவமதித்தருளிய - அவமதித்தருளின, சித்தம் ஆர் - மனத்தையுடைய, சிவவாக்கியதேவரும் - சிவவாக்கியரும், வெள்ளைநீறு-வெண்பொடியை, மெய்யில்கண்டு-(கள்ளன்)உடம்பிற்பார்த்து, கள்ளன்கையில்-அத்திருடன்கையிலுள்ள, கட்டுஅவிழ்ப்பித்தும்-கட்டை யவிழ்க்கச்செய்தும், ஓடும்-ஓடுகின்ற, பல்நரி - பலநரிகளின், ஊளைகேட்டு-ஊளையைக்கேட்டு,அரனை-பரமசிவனை, பாடினஎன்று-பாடினவென்று,படாம்பல அளித்தும்-(அவைகட்கு) அநேகவஸ்திரங்களைப் பரிசாகக்கொடுத்தும், குவளைப்புனலில்-குவளைமலர்படர்ந்த நீரில், தவளை அரற்ற- தவளைகள்சத்திக்க, ஈசன் தன்னை ஏத்தின என்று - (அவை) பரமசிவனைத் துதித்தனவென்று, காசும்பொன்னும் - இரத்திநங்களையும் பொன்னையும், கலந்துதூவியும் - கலந்து(அந்நீரில்)எறிந்தும்,வழிபடும் ஒருவன் - வழிபடா

நின்றஒருத்தன், மஞ்சனத்துஇயற்றிய-திருமஞ்சனத்தைலத்தின்பொருட்டு உலரவைத்த, செழுவிதை எள்ளை - செழுமையாகிய எள்ளினை, தின்னக்கண்டு - ஒருவன்தின்னப்பார்த்து, பிடித்தலும்-(அவனைப்) பற்றினவளவில், அவன் இப்பிறப்புக்கென்ன-இவ்வெள்ளைத்தின்பது இப்பாவசன்மம் நீங்கும்பொருட்டென்றுசொல்ல, இடித்துக்கொண்டு - அவன்மென்றுகொடுக்கப்பெற்று, அவன் எச்சிலை நுகர்ந்தும்-அவனெச்சிலையுண்டும், மருதவட்டத்து-மருதூரெல்லையின்கண், ஒருதனிகிடந்த-ஒருதனியேஉருண்டுகிடந்த, தலையைக்கண்டு - தலையைப்பார்த்து, தலையுறவணங்கி - தலையாற் பொருந்தப்பணிந்து, உம்மைப்போல - உம்மைப்போலவே, எம் - எமது, இத்தலையும் - இந்தத்தலையும், கிடக்கவேண்டும்என்று-கிடத்தல்வேண்டுமென்று, அடுத்து அடுத்து இரந்தும் - அடுத்தடுத்துவேண்டியும், கோயில்முற்றத்து மிமிசைக்கிடப்ப வாய்த்ததென்று - திருக்கோயிலின் முற்றத்தில்கிடக்க (கண்டுதிருப்பணி)கிடைத்ததென்று, நாய்க்கட்டம் எடுத்தும்-நாய்மலத்தை வாரியெறிந்தும், காம்பு அவிழ்த்து உதிர்ந்த-காம்புகழன்றுசிந்தின, கனி உருக்கண்டு - கனியினுருவத்தைப்பார்த்து, வேம்புகட்கு எல்லாம் - வேப்பமரங்களுக்கெல்லாம், விதானம் அமைத்தும் - மேற்கட்டிகள் அமைத்தும், பரம்பரற்கு - பரமசிவனுக்கு, விரும்பினகொடுக்கை என்று-விரும்பினவற்றைக்கொடுத்தல் என்று, புரிகுழல்தேவியை-கட்டப்பட்ட கூந்தலையுடைய தன்மனைவியை, பரிவுடன்கொடுத்த - அன்போடுகொடுத்த, பெரிய அன்பின்-பேரன்பையுடைய, வரகுணதேவரும்-வரகுணதேவரும் ஆகிய, இனைய தன்மையர்-இத்தன்மையர், எண்இறந்தோர்கள் - கணக்கற்றவர்கள், அனைவரும்நிற்க - எல்லாரும் நிற்க, யானும் ஒருவன்-நானுமொருவன், பத்தி என்பது-பத்தியெனப்படுவதாகிய, ஓர்பாடும்இன்றி-ஒருகுணமுமில்லாமல், சுத்தன் ஆயினும்-வறுமையனாயினும், கடையேன்தோன்றி - கடையனேன் பிறந்து, நின்னை இறைஞ்சிலனாயினும்-(இதுகாறும்) உன்னைவணங்கிலேனாயினும், ஏத்திலனாயினும்-துதித்திலேனாயினும், வருந்திலன் ஆயினும்-வருந்திலேனாயினும், வாழ்த்திலன் ஆயினும்-வாழ்த்திலேனாயினும், கருதியிருப்பன் நினைந்திருப்பேன், பெரும-பெருமானே, நின்உலகு அனைத்தும் - உன்னுலகமெல்லாம், நன்மை தீமை ஆனவை-நன்மை தீமைகளோடுகூடினவை, (அவை) நின்செயல் ஆதலின் - உன் செயலாகையால், நலம் இல்வழிக்கு - தீவழிக்கு, நானே அமையும் - நானே போதும். எ - று.

வெள்ளைநீறுமெய்யிற்கண்டு கள்ளன்கையிற் கட்டவிழ்ப்பித்தல் முதலியவற்றைச்செய்த வரகுணதேவர் சரித்திரம்.

மதுரையில் அரசாண்டுவந்த சந்திரவமிசத்தரசர்களில் ஒருவராகிய வரகுணதேவர் அரசுசெய்யுங்காலத்தில் ஒருநாள் தேர்ஏறி உலாவரும்

போது முதுவேதியன் ஒருவன் அந்தத்தேர்க்காலில் அகப்பட்டு இறந்தான். அந்தப்பிரமகத்தி அவ்வரசனைப்பற்றிவருந்த, அவன் அஞ்சி அது நீங்கும் பொருட்டுப்பல பரிகாரங்கள் செய்தும் நீங்காமையால், திருவாலவாயுடையார் சந்நிதியிற் சென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபெருமான் திருவுளமிரங்கி, வரகுணனே நீ திருவிடைமருதூரையடைந்தால் இப்பிரமகத்தி நீங்கும் என்று அசரீரியாக அருளிச்செய்தலும், அரசன் திருவிடைமருதூர் அடைந்து, கிழைக்கோபுரவாயிலால் புகுதலும், அந்தப்பிரமசாயை அவனைப்பற்றிச் செல்ல அஞ்சிவெளியே நின்றது. அரசன் பெரும்பாரம் கழியப்பெற்றோன் போன்று ஆலயத்துட்புகுந்து சிவபெருமானை வணங்கி வெளிப்படுகையில், அசரீரியால் கீழைவாயிலில் பிரமசாயை நிற்றலால் மேலைவாயிலாற் செலகவென்று திருஅருளின் ஆணையாதலும், அப்படியே சென்று தமது நகரடைந்து காலங்கள் தோறும் மருதவாணனைத்தரிசித்து வருநாளில், ஒருநாள் கள்ளன் ஒருவன் அரண்மனையில் களவுசெய்யக் காவலர் அவனைப்பற்றி அரசன் முன்விடலும் அரசன் அந்தக் கள்ளன் உடம்பில் திருநீறு விளங்கக்கண்டு இவர் சிவனடியாரென்று கட்டவிழ்ப்பித்து, வணங்கி வேண்டும் பொருளும் கொடுத்தனுப்பினர். மற்றோர் நாள் இரவில் ஊர்ப்புறத்து நரிகள் ஊளையிட அவ்வோசையைச் சிவபெருமானைப் பாடினபாடலோசையாகநினைத்து அவற்றிற்கு ஆடைகள் பரிசாகக்கொடுத்தனர். மற்றோர்நாள் இரவில் மழைபெய்யும்போது தவளைகள் இரைச்சலிட அவ்விரைச்சல் சிவநாமம்போலச் செவிப்பட மனமகிழ்ந்து மணிகளையும் பொன்னையும் கலந்து அந்நீரில் இறைப்பித்தார். ஒருகாலத்தில் சிவபெருமான் திருமஞ்சனத் தைலத்தின்பொருட்டு உலரவைத்த எள்ளைத் திருடித்தின்ற ஒருவனைக் காவலர் பிடித்துக்கொண்டுவந்து அரசன் முன்விட அரசன் இவ்வாறு செய்யலாமோ என்று கேட்க, அவன் நான் இவ்வெள்ளைத்தின்றால் மறுமையில் எருதாகப்பிறந்து சிவாபிஷேக தைலம் அமைக்கும் செக்கை இழுத்தலாகிய திருத்தொண்டைப் பெறலாம் என்னும் விருப்பத்தால் இப்படிச் செய்தேன் என்றுசொல்லக்கேட்டு, அவ்வாறாயின் எனக்கும் அந்தச் செக்கை இழுத்தலாகிய திருத்தொண்டுகிடைக்கும்படி மற்றோர் எருதாகப் பிறக்கும்வண்ணம் உமது வாயிலிருக்கும் எள்ளில் சிறிது கொடும் என்று வாங்கி யுண்டு களித்தார். பின்னொருகால் மருதூரெல்லையில் உருண்டுகிடந்த வெண்டலையைக்கண்டு இது மருதூர் அடைவார் அடிப்பொடியை அணியவன்றோ இவ்வாறு கிடந்து உருளுவது, இப்பேறு எமக்கும் உண்டாகுக என்று அத்தலையைப் பலமுறை இரந்து உவந்தனர். மற்றொருநாள் திருக்கோயில் வலம் வருகையில் சந்நிதியின் ஓர்புறத்தில் நாய்மல மிருக்கக்கண்டு இதனை அப்புறப்படுத்துவார்க்கு என் அரசில் பாதி தருவேன் என்று கருதி, மறுவலம்வருகையில்

ஒருவரும் அதை நோக்காராக, இனி எடுப்பார்க்கு என் அரசு முற்றும் தருவேனென்று கருதிச்சென்று மூன்றுமுறை வலம் வருமளவும் யாரும் எடுக்காமைகண்டு தாம் தமது உத்தரீயத்தால் வாரி எறிந்தார். மற்றொரு நாள் உலாவருகையில் வேப்பங்கனி உதிர்ந்திருக்க அவை சிவலிங்க ரூப மாகத் தோன்றக்கண்டு, அவைகளுக்கு விதானங்கள் சமைப்பித்துக் களித் தனர். இவ்வாறு பலவகைத்திருத்தொண்டு செய்துவருநாளில் விக்கிரமச் சோழன் திருமகளாராகிய காந்திமதியென்னும் பெயரையுடையவரைத் திருமணம்புரிந்து அன்றிரவில் பள்ளியறைக்குச்சென்று மனைவியார்திரு வுருவைநோக்கி இப்பெண்ணரசி நம்மருதவாணருக்கு உரியவளாம் எனக் கருதி,அவர் கைப்பற்றி ஆலயத்துட்புகுதலும் அத்தருணம் அர்த்த யாம பூசைநிறைவேற்றித் திருக்காப்புச்செய்து அகம்படித்தொண்டர் முதலி யோரும் தத்தம் இடங்களுக்குச்சென்ற காலமாகையால் திருவாயிற்புற த்து நின்று மருதப்பாவென்றழைத்துத் திருக்கதவைத்தட்டலும், சிவபெ ருமான் வேந்தனது பத்திவலையிற் பட்டவராதலால் வரகுண வந்தேன் வந்தேன் என்று விரைந்து ஓடிவந்து, திருக்கதவம் திறக்க உட்சென்று எம்பெருமானே இம்மாது தேவரீர் திருவுளப்பாங்கினுக்கு உரியளாமேயெ ன்று கொண்டுவந்தேனென, சிவபெருமானும் அவர் கருத்தினுக்கு இசைய நடித்து சிவலிங்கத்தினிடமாக ஐக்கியஞ்செய்துகொண்டனர். வரகுண தேவரும் மீண்டு தம்மரண்மனைபுகுந்து களிப்புடனிருந்தார். கோயில் முன்போலவே திருக்காப்பமைந்திருந்தது. மறுநாள் வைகறையில் திருவ னந்தலுணர்த்த கோயிற்றுறையாரனைவருந் திருக்காப்பவிழ்த்துஉட்சென்ற போது சிவலிங்கப்பெருமானுக்கு ஓர் புறத்து வளைமுதலிய அணிந்த பெண் கரமொன்று மணிக்கட்டு மட்டும் வெளிப்பட்டிருக்கக்கண்டஞ்சி அனைவரு மொருமுகமாக வரகுணச்செல்வர்பாற் சென்றறிவித்தலும், அவ்வரசர்பெ ருமான் அச்சமுநாணமு மேற்கொண்டு பெருமான் சந்நிதியடைந்து அகம் படித்தொண்டர்கள் தமக்கு அறிவித்தவண்ண மிருக்கக்கண்டு, பெருங்கவ லையும் துன்பமுமேலிட, எம்பெருமானே! பாவியேன்பற்றிய எச்சிலென் றோ அக்கரத்தினையுட்கொள்ளாது விட்டபடியென்றிரங்கி விண்ணப்பித்து நிற்றலும், யாவரும் கேட்கும்படி அசரீரியால் "ஐய வரகுண! உன்பணியை உலகறியச்செய்ய வைத்தபடியன்றி வேறல்ல என்றுபெருமான் கட்டளை யிட்டருளியவுடனே, அங்கிருந்தாரனைவரும் காணும்படி வெளிப்பட்டிரு ந்த அக்கை, சிவலிங்கத்துள் மறைந்தது. தேவர் பூமழைபொழிந்தனர். அந்தரதுந்துபி முழங்கிற்று. அடியவர் அரகரமுழக்கஞ்செய்தனர். எவ்வுயி ரும் பேரின்பவெள்ளத்துள் மூழ்கின.அப்பால் வரகுணதேவரும் பலதிருத் தொண்டுசெய்து பெருமான் திருவடி நீழலை யடைந்தனர்.

நேரிசைவெண்பா.

**29.** வழிபிழைத்துநாமெல்லாம்வந்தவாசெய்து
பழிபிழைத்தபாவங்களெல்லாம் - பொழில்சூழ்
மருதிடத்தானென்றொருகால்வாய்கூப்பவேண்டா
கருதிடத்தாநில்லாகரந்து.

இ - ள். நாம் எல்லாம் - யாமெல்லாம், வழி பிழைத்து - வழிதப்பி, வந்தவாசெய்து-இசைந்தவாறு செய்து, பழிபிழைத்த பாவங்கள் எல்லாம்-பழிதழைத்த பாவங்கள் யாவும், பொழில்சூழ் - சோலைகள்சூழ்ந்த, மருது இடத்தான் என்று - மருதூரை இடமாகக்கொண்டவன் என்று, ஒருகால் வாய்கூப்பவேண்டா - ஒருகால் வாய்குவித்துக் கூறவேணடா, கருதிட - (நாம்) நினைத்த அளவில், தாம் - அப்பாவங்கடாம், கரந்து - மறைந்து, நில்லா - எமக்கு எதிரில் நில்லாதனவாகும், எ - று.

உலகத்தாரே, நாம் மருதிடத்தானேயென்று வாயால் வருந்திக் கூறாமல், மனத்தால் நினைத்த அளவிற்றானே, நமது பாவங்கள் யாவும் நமக்கெதிரில் நில்லாதொழியும் என்பது கருத்து.

கட்டளைக்கலித்துறை.

**30.** கரத்தினன்மாலவன்கண்கொண்டுநின்கழல்போற்றநல்ல
வரத்தினையீயுமருதவப்பாமதியொன்றுமில்லேன்
சிரத்திலுமாயென்றன்சிந்தையுளாகிவெண்காடனென்னுந்
தரத்திலுமாயதுநின்னடியாந்தெய்வத்தாமரையே.

இ - ள். நல்மாலவன் - நல்ல திருமாலானவன், கண்-தன்கண்ணை, கரத்தில்கொண்டு - கையிற்கொண்டு, நின் கழல்போற்ற - உன் திருவடியில் அர்ச்சிக்க, நல்ல வரத்தினை ஈயும் - (அவனுக்கு) நல்ல வரத்தைக் கொடுத்த, மருத அப்பா - மருதூரப்பனே, நின் அடி ஆம் - உன் திருவடியாகிய, தெய்வத்தாமரை-தெய்விகமாகிய தாமரைமலர், மதி ஒன்றும் இல்லேன்-அறிவு சிறிதுமில்லேனது, சிரத்திலும் ஆய்-சிரமீதுமாகி, என்றன் சிந்தையுள் ஆகி-என்மனத்ததாகி, வெண்காடன் என்னும் - வெண்காடன் என்றழைக்கப்படுகிற, தரத்தினும் ஆயது-மேன்மைக்குங் காரணமாயிற்று.

மருதப்பனே,உன்திருவடித்தாமரையானது அறிவுசிறிதுமில்லேனது சிரம் மனம் முதலிய விடங்களிற்பொருந்தி, வெண்காடன் என்னும் பெருமையையு மெனக்கருள்செய்தது, என்பெரும்புண்ணிய மிருந்தவாறென்னை யென்பது கருத்து.

திருவிடைமருதூர்மும்மணிக்கோவை
மூலமும் உரையும்
முற்றிற்று.

உ

கணபதிதுணை.

நான்காவது

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

---

**கட்டளைக்கலித்துறை.**

**1.** மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனென்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே.

**இ - ள்.** மெய்த்தொண்டர் செல்லும் - உன்மெய்யடியார் செல்லுகின்ற, நெறி - வழியை, அறியேன் - அறிந்திலேன், மிகநல்பணிசெய் - மிகவும் நன்மையாகிய உன்திருப்பணியைச் செய்கின்ற, கைத்தொண்டர், தம்மிலும் - ஒடுக்கமுள்ள அடியாரிடத்திலாயினும், நல்தொண்டு உவந்திலன் - நற்றொண்டு செய்தலைவிரும்பிலேன், உண்பதற்கே - (பொய்யுடற்காப்பின் பொருட்டுச் சோற்றை) உண்பதற்காகவே, பொய்த்தொண்டு பேசி - பொய்யடிமைகூறி, புறம்புறமே - புறத்தே புறத்தே, உன்னைப் போற்றுகின்ற - உன்னைவணங்குகின்ற, இத்தொண்டனென் - இத்தொழும்பனேனது, பணி - பணியையும், கொள்ளுதியோ - ஏற்றுக்கொள்வையோ, கச்சி ஏகம்பனே - திருக்காஞ்சிநகரின் கண் எழுந்தருளியிருக்கின்ற ஏகம்பனே, எ - று.

மெய்த்தொண்டர் - முக்கரணங்களானும் இறைவனை வழிபடுந்தொண்டர். நற்பணி - சிவாலயத்திருப்பணி. பொய்த்தொண்டு - மனமொழிமெய்கள் ஒருமியாது செய்யுந்தொண்டு. கச்சியேகம்பனே, உன்மெய்யடியார் செல்லும் நெறியையுமறிந்திலேன், உன்திருப்பணிசெய்யும் அடியார் தொண்டுசெய்திலேன், பொய்த்தொண்டனாகிய அடியேனது பணியையும் ஏற்றுக்கொள்வையோ என்பது கருத்து.

௨. ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப்பொலிவுற்றுநன்னீறணியும்
ஆகம்பொன்மாமலையொப்பவனேயென்பனாதரித்தே.

இ - ள். ஆதரித்து-உன்னைவிரும்பி, ஏகம்பனே-திருவேகம்பமுடையானே, என்னை ஆள்பவனே - என்னையாண்டருள்வோனே, இமையோர்க்குஇரங்கி - தேவர் பொருட்டிரக்கஞ்செய்து, பல்நாளும்-பலநாள்களும், போகம்கொடுக்கின்ற - (அவர்களுக்குவேண்டிய) செல்வங்களை அநுக்கிரகிக்கின்ற, நாயக - இறைவனே, பொங்கும் - சீறுகின்ற, ஐவாய்நாகம் - ஐந்தலைநாகம், பொன் ஆரம் எனபொலிவுற்று - பொன்னாரம்போல விளங்கி, நல்நீறு அணியும் - நன்மையைத்தருகின்ற திருவெண்ணீற்றையணிந்த, ஆகம் - திருமேனி, பொன்மாமலை ஒப்பவனே - பெரிய பொன்மலையை நிகர்த்திருபவனே, என்பன் - என்று துதிப்பேன், எ - று.

ஐவாய் என்பதற்கு அழகுவாய்ந்த எனினும் பொருந்தும் "ஏகம்பனே" என்பது முதல் "ஒப்பவனே' என்பதுவரையில் அடுக்கி இருக்கும் விளிகளுக்குக் காரணம் அன்பு ஆதலால் "ஏகம்பனே மலையொப்பவனே யென்பனாதரித்தே" என்றார். ஏகம்பனே உன்னை விரும்பித்துதிப்பேன் என்பது கருத்து.

3. தரித்தேன்மனத்துன்திகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்பணியாதவரேழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே.

இ - ள். உன் - உனது, திகழ்தருநாமம் - விளங்காநின்ற திருநாமத்தை, மனத்துதரித்தேன் - மனத்திற்பதித்தேன், தடம்பொழில்வாய் - பெரிய பூஞ்சோலைகளிடத்து, வரிதேன்முரல் - இசைபாடுகின்ற வண்டுகள் ஒலிக்கின்ற, கச்சி ஏகம்பனே - கச்சியேகம்பனே, என்றன்வல்வினையை - என்வலியவினைகளை, அரித்தேன் - நாசம்பண்ணினேன், உன்னைப் பணியாதவர் - உன்னைவணங்காதாருடைய, ஏழைமைகண்டு - அறியாமையை நோக்கி, அவரைச்சிரித்தேன் - அவரைநகைத்தேன், உனக்கு அடியார் - உனக்கடியாரானவர்களுடைய, அடி - திருவடிகளை, பூண - சிரமேல்தாங்க, தெளிந்தனன் - தெளிவடைந்தேன், எ - று.

இறைவனது திருநாமத்தைநாவினால் உச்சரிப்பதினும் மனத்திற்பதித்துவைப்பது பெரும்பயன் தருமாதலால் "தரித்தேன் மனத்துன் திகழ்தருநாமம்" என்றும் அந்நாமோச்சாரணத்தால் வல்வினைகள் கெடுமாத

லால் "என்றன் வல்வினையையரித்தேன்" என்றும், இவ்வாறுவினைவென்றார் இறைவனைப் பணியாதவரது அறியாமையைக் கண்டால் சிரித்தற்கிடமாயிருத்தலால் "உன்னைப்பணியாதவ ரேழைமைகண்டவராச் சிரித்தேன்' என்றும், இறைவனது பத்திமையுடையார்க்கு அடியாரடி பேணவினும் சிறந்ததொன்றில்லையாதலால் "உனக்கடியாரடிபூணத் தெளிந்தனனே" என்றும், கூறினார். கச்சியேகம்பனே, உன்திருநாம உச்சாரணத்தால் என்வல்வினைகளற்று உன்னடியாரடிபூணத் தெளிவடைந்தேன் என்பது கருத்து.

4. தெளிதருகின்றதுசென்றென்மனநின்றிருவடிவம்
அளிதருநின்னருட்கையமினியில்லையந்திச்செக்கர்
ஒளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாள்
தளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே.

இ - ள். அந்தி - அந்திக்காலத்துத் தோன்றுகின்ற, செக்கர் - செவ்வானம்போல, ஒளிதரும்மேனி - ஒளியைச்செய்கின்ற திருமேனியையுடைய, எம் ஏகம்பனே - எம் ஏகம்பமுடையானே, என்று - என்று புகழ்ந்து, உகந்தவர் - உன்னைவிரும்பினவர்களுடைய, தாள் - திருவடிகளில், தளிதரு-படிந்த, தூளி- தூளியை, என் தலைமேல்வைத்த தன்மைபெற்று- என்சிரமேல் தரித்துக்கொண்ட தன்மையினால், என்மனம் நின்திருவடிவம் சென்று தெளிதருகின்றது-என்மனமானது உன்திருவுருவின்மீதுசென்று தெளிவடையாநின்றது, அளிதரும் - கிருபைசெய்யுமியல்பமைந்த, நின் அருட்கு - நின்னருள் எனக்கு வாய்க்குமென்பதற்கு, இனி ஐயம் இல்லை - இனிச்சந்தேகமில்லை, எ - று.

ஏகம்பனே என்று துதிக்கும் அடியாரது திருவடித்தூளியை என்தலைமேல்வைத்த தன்மையால் என்மனம் உன்திருவுருவத்தைத் தெளியாநின்றது இனி உன்திருவருள் எனக்குக் கிடைக்குமென்பதற்கு ஐயமில்லை என்பது கருத்து.

5. பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடநாகக்கச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே.

இ - ள். கச்சி ஏகம்பத்தின் பற்று உகந்து - கச்சியேகம்பத்தின் விருப்பம்வைத்து, ஏறும் உகந்தவனே - ஆன்மானையுந்தாங்கினவனே, படநாகக்கச்சின் சுற்று உகந்து - படத்தையுடைய நாகக்கச்சையினாற் சுற்றப்பட்டிருத்தலைவிரும்பி, ஏர்விடைமேல் வருவாய் - அழகிய இடபவாஹநத்

தின் மேல்வருவோய், நின் துணை அடி - உன்னிரண்டுபோதங்களை, என்றும் அர்ச்சனைசெய்யப் பெருகி - எக்காலத்தும் அர்ச்சனைசெய்ய (அன்பு)மிக்கு, பெற்று உகந்தேன் - அடைந்துயர்ந்தேன், என்கருத்து இனிது ஆ - என் மனமினிதாயிருக்க, நின்சீர்கற்று உகந்தேன் - உன்சீர்த்திகளைக் கற்றுயர்ந்தேன், எ - று.

கச்சி ஏகம்பனே, உன்திருவடியைப்பெற்று அர்ச்சனைசெய்யப்பொருந்தினேன், உன்கீர்த்தியை என்கருத்துக்கு இனிதாகக் கற்றுக்களித்தேன் என்பது கருத்து.

**6.** அடிநின்றசூழலகோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழ்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலின்
இடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே.

இ - ள். கார்முகிலின் - கார்காலத்துமேகங்களின், இடிநின்ற - முழக்கம்நிலைக்கப்பெற்ற, சூழ்குரல் - சூழ்ந்தகுரலையுடைய, ஏறு உடை - இடபவாகநத்தையுடைய, ஏகம்ப-ஏகம்பனே, அடிநின்ற சூழல் - உன்திருவடியிருந்த இடம், மாலுக்கு அகோசரம் - திருமாலுக்கு அறியப்படாததாயிற்று, அலரின்முடிநின்ற - பூமாலைநிலைத்திருக்கிற, சூழ்முடி - வளைவாகச் சுற்றிக்கட்டப்பட்ட சடாபாரமானது, அயற்கு - பிரமனுக்கு, காண்பு அரிது ஆயிற்று - காணுதல் அருமையாயிற்று, (இங்ஙனமாக) வடிநின்ற சூலப்படை உடையாயை - கூர்மைதங்கியசூலப்படையையுடைய உன்னை, யாம் எங்ஙன்வணங்குவது - யாங்களெவ்வாறு கண்டுவணங்குவது, எ - று.

ஏகம்பனே, திருமாலுக்கு உன்திருவடியைக்காண்டல்அரிதாயிருந்தது, பிரமனுக்கு உன்திருமுடியைக்காண்டல் அரிதாயிருந்தது, இப்படியிருக்க உன்னையாம் எவ்வாறு கண்டுவணங்குவது என்பது கருத்து.

**7.** வணக்கந்தலைநின் றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன் றிமற்றோரிணக்கறிவோமல்லம்வல்லரவின்
குணக்குன்ற வில்லிகுளிர்கச்சியேகம்பம்பாடினல்லாற்
கணக்கன் றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே.

இ - ள். நின்திருவடிக்கே - உன்திருவடிகளின்பொருட்டே, தலை வணக்கம் செய்யும்-தலைவணங்குதலைச்செய்யும்படியான, மையல் கொண்டோர் - ஆசைகொண்டோரது, இணக்கு அன்றி - நட்பேயன்றி, மற்று ஓர் இணக்கு அறிவோம் அல்லம் - வேறொரு நட்பையறிவேமல்லேம், வல் அரவின்குணம் - வலிய அரவாகிய நாணையுடைய, குன்ற வில்லி-மலையாகிய வில்லையுடையவன், குளிர் கச்சி ஏகம்பம் பாடின் அல்லால்-குளிர்ந்த கச்சி யேகம்பத்தைப் பாடினாலன்றி, மற்றொரு தேவரைப்பாடும் கவி

நலம் - வேறொரு தேவனைப்பாடுங் கவிகளின் நன்மை, கணக்கு அன்று - நன்மையிற் சேர்த்துக் கணக்கிடத்தக்கதன்று, எ - று.

வல் அரவு - வாசுகி, குன்றம் - மேருமலை.

இறைவனது அடியாரது இணக்கம் செய்வதன்றி மற்றொருவனை இணங்கோம் அவனது கச்சியேகம்பத்தைப் பாடாமல் பிறதெய்வங்களைப் பாடுகின்ற கவிகளின் நன்மையானது நன்மைகளுள்சேர்த்து எண்ணப்படுவதன்று என்பது கருத்து.

8. நலந்தரநானொன்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே.

இ - ள். நல்லீர்கள் - நல்லவர்களே, நலம்தர - உங்களுக்கு நன்மையையுண்டாக்க, நான் ஒன்று சொல்லுவன் - நானொன்று சொல்வேன், கேள்மின் - அதனைக் கேளுங்கள், அன்பு கலந்து - அன்புடையீர்களாய், அரனார் - பரமசிவனாரது, கச்சி ஏகம்பம் கண்டு - கச்சி யேகம்பத்தைச் சேவித்து, கனல் - நெருப்பைக் கக்குகின்ற, திகிரி - சக்கரப்படையைத் தாங்கிய, சலந்தரன் ஆகம் ஒழிக்க வைத்தாய் - சலந்தராசுரன் தன் சரீரத்தை விடப்பண்ணினாய், தக்கன் வேள்வி யெல்லாம் - தக்கனது யாகத்தையெல்லாம், நிரந்தரம் ஆகச்செய்தாய் - (யாகஞ்செய்த இடத்தில்) சுவடும் அற்றுப்போம்படி செய்தாய், என்று பூசித்து நில்மின்கள் - என்று பூசித்து நில்லுங்கள், எ - று.

நன்மையுடையவர்களே, உங்களுக்கு நன்மையைச்செய்வதற்கு நான் ஒன்றைச்சொல்லுகிறேன், சிவபெருமானது கச்சி யேகம்பத்தை அன்போடு தரிசித்து, ஜலந்தரனைக் கொன்றவனே தக்கன் யாகமுழுதும் அழியச்செய்தவனே என்று துதித்துப் பூசித்து நில்லுங்கள் என்பது கருத்து.

9. மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிரிந்தறியான்கச்சியேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே.

இ - ள். சடை - சடைகளை, மின்கள் என்றார் - மின்னற்கொடிகள் என்றனர், கண்டம் - கண்டத்தை, கொண்டல் என்றார் - நீலமேகம் என்றனர், மேனிவண்ணம்-திருமேனியின் நிறத்தை, பொன்கள் என்றார்-பொன்னிறங்களென்றனர், வெளிப்பாடு - வெளிப்படையாய், தம்பொன் அடி பூண்டுகொண்ட - தம் திருவடியைப் பூண்டுகொண்டன, என்கள் என்றாலும் - எவைகளென்றாலும், பிரிந்தறியான் - (அவைகளைப்) பிரிந்தறி

யானுதலால், உலகு எல்லாம் நிலைபெற்ற தன்மைகள் - உலகமுழுதும் நிலைபெற்றிருக்குங் குணங்கள், கச்சி ஏகம்பத்தான் தன்கள் - கச்சி யேகம்பத்தான் தன்னவைகளே, என்றார் - என்றனர், எ - று.

அறிஞர் கச்சி யேகம்பத்தானது சடைகள் மின்னற்கொடிகளென்றும், கண்டம் கருமேகமென்றும், திருமேனி நிறம் பொன்னென்றும், உலகமெல்லாம் அவனதேயென்றும் கூறுவர் என்பது கருத்து.

**10.** தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலும்
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே.

இ - ள். தன்மையில் குன்றா-நற்குணத்திற்குறையாத, தவத்தோர்-தவத்தையுடைய முனிவரும், இமையவர் - தேவரும், வணங்கும் - பணியாநின்ற, வன்மையில் குன்றா - வலிமையிற்குறையாத, மதில் - மதில் சூழ்ந்த, கச்சி ஏகம்பர் - கச்சி யேகம்பத்தையுடையவரது, வண் கயிலை-வளவிய கயிலையிலுள்ள, பொன் - திருமகள் போல்வாளது, மயில் சாயலும் - மயிற்சாயலும், சேயரிக்கண்ணும்-செவ்வரிபடர்ந்த கண்களும், புரிகுழலும்-கட்டப்பட்ட கூந்தலும், மென்மையின் - நொய்ம்மையால், சாயும் - தள்ளாடாநின்ற, மருங்குலும்-இடையும், காதல்விளைத்தன-எனக்கு ஆசையையுண்டாக்கின, எ - று.

தன்மை-சத்துவகுணம். இது தவத்தோர்க்கு இன்றியமையாத தாதலால் "தன்மையிற் குன்றாத்தவத்தோர்" என்றார். வன்மை-ஊழிக்காலத்தும் அழியாத உறுதிநிலையுடைமை. இது தலைமகளது அவயவங்கண்ட தலைமகன் கூற்று. கச்சி யேகம்பரது கைலாயமலையிலுள்ள திருமகளையொத்த இம்மாதின் சாயலும் கண்ணும் கூந்தலும் இடையும் எனக்கு விருப்பத்தை யுண்டாக்கின என்பது கருத்து.

**11.** தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்.
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினாவியோர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநம்பூங்கொடியே.

இ - ள். உமை - உமாதேவியானவள், தனம் இட்டுத்தழுவ - தனம் வைத்துத்தழுவுதலால், தழும்பு உற்றவர் - தழும்பைப் பொருந்தினவர், தம் அடியார் - தம்மடியவரது, மனம் விட்டு அகலா - மனத்தைவிட்டு நீங்காத, மதில் - மதில்சூழ்ந்த, கச்சி ஏகம்பர் - கச்சி யேகம்பமுடையார், (அவரது) வான்கயிலை-மேலாகிய கயிலைமலையின்கண், சினம் விட்டுஅகலா-கோவத்தைவிட்டு நீங்காத, களிறு-யானையை, வினாவி-கேட்டு, ஓர்சேய்

அனையார்-ஒப்பற்ற முருகக்கடவுளை யொப்பவர் ஒருவர், பகலாம்பொழுது-பகற்காலமெல்லாம், நம்புனம்விட்டு அகலார் - நம்புனத்தை விட்டுப்பிரியாதவராயிராநின்றார், பூங்கொடியே-பூங்கொம்புபோல்பவளே, எ-று.

தனமிட்டு உமைதழுவத் தழும்புற்றது திருக்கச்சியில்.

இது ஐயுறுதல்-அதாவது-தலைமகன் தழைகொண்டுநின்று கரந்தமொழியாற் றன் கருத்தறிவிக்க, மேனி யொளியிலனாய் இப்புனத்தினின்றும் போகாது யானையோடு ஏனம் வினாவி இவ்வாறு பொய்கூறாநின்ற இவன் யாவனோவெனத் தோழி அவனையையுற்றுக் கூறாநிற்றல். "பல்லிலனாகப் பகலை வென்றோன் றில்லை" என்பது திருக்கோவையார்.

இது களிறு வினாவிவந்த தலைமகனை நோக்கி தோழி தலைமகளோடு கூறுவது. பூங்கொடிபோல்வாளே, கச்சி யேகம்பரது கைலைமலையின்கண் முருகவேளை யொப்பவராகிய வொருவர் களிறு வினாவிவந்து நம்புனத்தை விட்டுப் பகற்போதெல்லாம் நீங்காதவராயிராநின்றார், இவர் யாவரோ என்பது கருத்து.

**12.** பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே

இ - ள். ஆரணங்கே - பெண்ணே, பூங்கொத்து - பூங்கொத்துகளோடுகூடிய, இருதழை ஆர் - பெரிய தழைகள் நிறைந்த, பொழில் - சோலைசூழ்ந்த, கச்சி ஏகம்பர் - கச்சி யேகம்பமுடையாரது, பொற்பு ஆர்-அழகு நிரம்பிய, கோங்கு இருந்த-மணந்தங்கிய, குடுமி-சிகரங்களையுடைய, கயிலை - கயிலைக்கண்ணுள்ள, எம்பொன் ஒருத்தி - எமது திருமகளையொப்பாளொருத்தியின், பாங்கு ஒத்து இருந்தனை - குணங்களெல்லாவற்றினும் ஒத்திருந்தாய், (ஆதலால்) படர் - பரந்த, கல் அருவி - மலையருவியாகிய, ஆங்கு - அவ்விடத்தில், அத்திருந்திழை - அந்தத்திருத்தமாகிய ஆபரணத்தையணிந்தவள், ஆடிவந்தால் - நீராடி வருவளாயின், கண்டு - அவளைப் பார்த்து, (பிறகு) அடிவருத்து - உன்பாதத்தை வருத்துவாயாக, எ - று.

இது வேறுபடுத்துக்கூறல் - அதாவது பிறைதொழாது தலைசாய்த்து நாணி நில்லங்கிளையாநிற்பக்கண்டு, பின்னும் இவள் வழியேயொழுகி இதனையறிவோமென் உட்கொண்டு, நீபோய்ச் சுனையாடிவாவென்ன, அவளும் அதற்கிசைந்துபோய் அவனோடு தலைப்பெய்துவர, அக்குறியறிந்து அவளை வளையணங்காகப்புனைந்து வேறுபடுத்துக்கூறாநிற்றல். "அக்கின்றவாமணி சேர்கண்டன்" என்பது, திருக்கோவையார்.

கோங்கத்து என்பதில் அத்துச்சாரியை. அடிவருத்து என்றது நடப்பாய் என்றவாறு.

13. வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழனினையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
துருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே.

இ - ள். வருத்தம் தரும்மெய்யும் - வருத்தத்தைக் காட்டுகின்றவுடம்பும், கையில்தழையும் - கையில்தழையும், வல்மாவினவும் - வலியயானையை வினவுகின்ற, கருத்து - கருத்தினால், அந்தரிக்கும் - வேறுபடும், நடக்க - (உன்கருத்தின்படியே) நிகழ்க, ஐய - ஐயனே, இன்று - இப்பொழுது, கழல்நினைய - தம்திருவடியைநினையவே, (அந்நினைத்தவர்க்கு)திருதந்தருளும் - நித்தியமாகிய செல்வத்தைக் கொடுத்தருள்கின்ற, திகழ் - விளங்குகின்ற, கச்சி ஏகம்பர் - கச்சியேகம்பமுடையாரது, சீர்கயிலை - சிறப்பமைந்த கயிலையின்கண், இப்புனம் காக்கும்தொழில் எமக்கு - இந்தப்புனத்தைக்காக்குந் தொழிலையுடைய எங்களுக்கு, துருதந்து இருப்பது - (போவதை வருவதை) ஆராய்ந்திருத்தல், அன்று- (தொழில்) அன்றாம், எ - று.

இது எதிர்மொழிகொடுத்தல். அதாவது களிறுமுதலியவற்றை வினவிவந்த தலைமகனுக்குத்தோழி மறுமொழிகூறாநிற்றல்- துரு - ஆராய்ச்சி, முதனிலைத்தொழிற்பெயர். உன்வாடியமேனியும் தழையும் நீ களிறுவினவும் கருத்துக்கு மாறுபடாநின்றன. ஆதலால் நீ இப்புனம்விட்டு நீங்குவாயாக என்பது கருத்து.

14. *எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பனெழிற்கயிலை
யும்மையுமானிடமிப்புனத்தேவிட்டுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றே
வம்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே

15. அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவரையருறுத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வையகத்தே

இ - ள். மருளைத்தருசொல்லி-(கேட்கும் ஆடவர்க்கு) மருட்சியைக் கொடுக்குஞ் சொற்களை யுடையாளே, அருளைத்தருகம்பர் - (அன்பர்கட்கு) அருள்செய்கின்றதிருவேகம்பமுடையாரது, அம்பொன்கயிலையுள்- அழகிய பொற்கயிலைவரைப் பின்கண்ணுள்ள, எம் ஐயர் அம்பு - எம்மையர் தொடுக்கும் அம்பு, இருள் ஐ கரி மறிக்கும் - இருண்ட அழகிய யானையை

* இந்தக்குறியிட்ட செய்யுள்களுக்குப் பொருள் நன்குவிளங்காமையால் இன்னும் சிலபிரதிகளைக்கொண்டாராய்ந்து பின்னர் உரையெழுதப்படும்.

யும் மறித்துநிறுத்தும், இவர் ஐயர் - இவராகிய ஐயர், உறுத்தி எய்ய - உறுத்தியெய்யவே, வெருள் - வெருளுமியல்புள்ள, அக்கலை - அக்கலைமான், ஊனைதன்னொடும்போயின - (இவர் எய்த) அம்புடன் செல்வதற்கேதுவாகிய, வில்லிமைக்கு - விற்றொழிற்கு, இவ்வையகத்து - இவ்வுலகத்தில், எங்கு - எவ்விடத்தில், விலை உண்டு - விலையுள்ளது, எ - று.

இது இறைவனைநகுதல். அதாவது-வேழமுதலியவற்றை வினவிவந்த தலைமகனைத் தோழிசிரித்துத் தலைமகளோடுகூறல். "மைவாளிலங்கு கண் மங்கைநல்லாய் தஞ்சைவாணன்வெற்பில், இவ்வாளி மொய்ம்பரின்றெய்த மெய்ம்மானிளமாந்தளிரின், செவ்வாளியுங்கொண்டு சேட்சென்றதாலன்று சிறைகொண்கன், கைவாளியுங்கொண்டுபோன பொய்ம்மானினுங் கள்ளத்ததே" என்றார் பொய்யாமொழிப்புலர். வில்லிமை - வில்லாளுந்தன்மை.

**16.** வையார்மழுப்படையேகம்பரீங்கோய்மலைப்புனத்து
ஐயார்வருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்தவெம்பூங்கொடிகொங்கைபொறாப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே.

**இ - ள்.** வை ஆர் - கூர்மைபொருந்திய, மழுப்படை - மழுவாயுதத்தையுடைய ஏகம்பர் - ஏகம்பரது, ஈங்கோய்மலைப்புனத்துள் - திருவீங்கோய் மலைப்புனத்தில், ஐ ஆர்வருகலை - அழகுநிரம்பி வருகின்றகலையையும், ஏனம்-பன்றியையும், கரி - யானையையும், தொடர் - தொடர்ந்துவந்த, வேட்டையெல்லாம் - வேட்டைமுழுதும், பொய் ஆன - பொய்யேயாயொழிந்தன, வந்து பரிணமித்து - அவைகளெல்லாம் வந்து வேறுபட்டு, (இப்பொழுது) ஐயர் - இவ்வையரது, மனத்தது - மனத்தின்கண்ணதாயிருப்பது, எம்பூங்கொடி - எமது பூங்கொடிபோல்வாளது, கொங்கை பொறா - தனங்களைப்பொறுக்கமாட்டாத, பை ஆர் அர - படம்பொருந்திய அரவையொத்த, இடை ஆயிற்று - இடையேயாயிற்று, எ - று.

இது அறிவுநாடல், அதாவது - இவன் யாவனோவென்று ஐயுறாநின்ற தோழிபேரா ராய்ச்சியுடையளாதலால், தலைமகன் கூறியவழியே நாடாது வந்து தங்களிடைக்கேமுடிதலின், இவ்வையர் வார்த்தை இருந்தவாற்றான் ஆழமுடைத்தா யிருந்ததென்று அவனது நினைவறிதல் "ஆழமன்றோ" திருக்கோவையார், திருவீங்கோய்மலை - ஓர்திருப்பதி

**17.** பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானை நுதல்பகுந்திட்
டுருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவைவாய்ப்
பொருமுத்தலைவேற்படைக்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தனநகைதன்னசையால்வெற்பசார்வரிதே.

இ - ள். ஓங்கு - உயர்ந்த, வைவாய் - கூரியவாயையுடைத்தாகி, பொரு - பொருதற்குரிய, முத்தலைவேல்படை - முத்தலைவேற்படையைத் தாங்கிய, கம்பர் - திருவேகம்பமுடையாரது, பூங்கயிலை - அழகிய கயிலைவரைப்பின்கண்ணுள்ள, புனத்துள்-புனத்தில்வாழ்கின்ற, தருமுத்துஅன்ன நகை தன்நசையால்-(இப்பிகரிக்கோடுமுதலியவை) தந்த முகத்தையொத்த பற்களையுடையாள் மேல்வைத்தவிருப்பங் காரணமாக, வெற்ப - வெற்பனே, உரு ஒத்த - இடியையொத்த, திண்குரல்-திண்ணியகுரலையுடைய, சீயம் - சிங்கங்கள், பருமுத்து - பெரியமுத்துக்களை, உதிர்த்திடும் - (தன் கொம்பினின்றும்) சிந்துகின்ற, சீர் - சிறப்பையுடைய, மத்தயானை - மதயானையின், நுதல் - நெற்றியை, பகுந்திட்டு - பிளந்திட்டு, திரி - திரியாநின்ற, நெறி - அருநெறியில், சார்வுஅரிது - நீவருதல்அருமையாகிய செய்கையாம், (ஆதலால் நீயிவ்விருளிடைவரற்பாலையல்லை) எ - று.

இது (இரவுக்குறி) நெறியருமைகூறி யிரவரல்விலக்கல். அதாவது, தலைமகன் இரவுக்குறிவேண்டிநிற்ப, இவ்வழி சிங்கங்கள் யானைவேட்டையாடுவது ஆதலால் எமது தலைமகண்மீது நீவைத்தவிருப்பங் காரணமாக இவ்விரவில் வரற்பாலையல்லையெனத் தோழி நெறியருமைகூறி யிரவரல் விலக்கல். "கூளிநிரைக்க" திருக்கோவையார் "மலைமாதுவவ்லவன்" தஞ்சைவாணன்கோவை.

**18.** அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
அரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுகம்பர்
அரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையல்லிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையர்க்கஞ்சுதுமே

இ - ள். அரி - திருமால், தன் - தனது, திருக்கண்இட - அழகிய கண்ணைத் தோண்டியிட, நிரம்பு-தொகைநிரம்பிய, ஆயிரம்போது அணிய- ஆயிரம் தாமரைமலர்களால் அலங்கரிக, அரி - திருமால், தன்திருவடிக்கு - தமது திருவடியின்மேல், அர்ச்சித்தகண்ணுக்கு - அருச்சனைசெய்த கண்ணின்பொருட்டு, அருளுகம்பர் - அருள்செய்த திருவேகம்பரது, அரிதன்- பகையாகிய ராவணனது,திருக்கு-மாறுபாடு, அங்குலியால்-திருவடிப்பெருவிரலால், அழிந்த - அழியப்பெற்ற, கயிலை-கயிலாயத்திலுள்ள, வெற்ப- வெற்பனே, இங்கு எய்பால் அல் இருப்பது - இங்கு எம்மிடத்தில் இராக்காலத்தில் நீயிருப்பது, அரிது என்று - அருமையாமென்று, எம் ஐயர்க்கு அஞ்சுதும் - எமது தந்தைமுதலிய முதியோருக்கு அஞ்சுவோம், எ - று.

இது இராப்பொழுது தங்கிச் செல்லக்கருதின தலைமகனுக்குத் தோழி கூறுங்கூற்று. போது எனவாளா கூறினோனும் "பங்கயமாயிரம் பூவினிலோர் பூக்குறையத் தங்கணிடந்தரன் சேவடிமேற்சாத்தலுமே" என்றதனால் தாமரைமலரென்பது பெற்றாம்.

**19.** *அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுகந்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழநுங்கொம்புய்யக்கும்பமுழ
வெஞ்சரத்தானவோவல்லவோவிவ்வியன்முரசே.

**20.** சேய்தந்தகைம்மையுமைகணவன்திருவேகம்பத்தான்
றய்தந்தையாயுயிர்காப்போன்கயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடும்விரைவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோகைப்பகடுவந்தே.

இ - ள். சேய்தந்தகை - மூங்கில்போன்ற தோள்களையுடைய, மை- கருநிறமுள்ள, உமைகணவன்-உமாதேவிக்குநாயகன், திருவேகம்பத்தான்- திருவேகம்பமுடையான், தாய்தந்தை ஆய் - தாய்தந்தையராகி, உயிர்காப் போன் - சீவர்களைக்காப்பவன், கயிலை - (அவனது) கயிலைவரைப்பின்கண், தயங்கு இருள்வாய் - விளங்குகின்றஇருளில, வேய்தந்ததோளி - மூங்கிலை யொத்ததோள்களையுடையாளே, கைப்பகடுவந்து-ஒருதுதிக்கையையுடைய யானைவந்து, நம் ஊசலொடும் - நமது ஊசலுடன், விரை - மணமுள்ள, வேங்கைதன்னை - வேங்கைமரத்தையும், பாய்தந்து - பாய்ந்து, கொண் டதோ - ஒடித்துக்கைப்பற்றிக்கொண்டதோ, பூசல்உண்டாம் - பேரொலி யுண்டாகாநின்றது, எ - று.

இது (இரவுக்குறி) தாய்துயிலறிதல். அதாவது - தலைமகன் வரவுணர் ந்து தலைவியைக்கொண்டு செல்லக்கருதாநின்ற தோழி, யாம்விளையாடா நின்ற சோலையின்கண் ஒருயானைவந்து எமது ஊசலோடு அதுதொடுக்கப் பட்டிருக்கும் வேங்கைமரத்தையும் தாக்கிக்கைக்கொண்டு முறித்ததோ, பேரொலியுண்டாகா நின்றது, இதற்குயாம் செய்வதியாதெனத் தலைமக ளோடு சொல்லுவாள் போன்று தோழி தாயது துயிலறியாநிற்றல். "கூடா ரரணெரிகூட" திருக்கோவையார்.

**21.** வந்துமணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்தம்
உந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்துமலர்கொய்துதண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைக்கச்சுமிச்சாரற்றிரிதவனே.

இ - ள். மன்னும் ஏகம்பர்தம்-நித்தியமும்நிலைபெற்றிருக்கிற ஏகம்ப முடையாரது, உந்தும் அருவி கயிலைமலை - அருவியாறுகளையுந்தாநின்ற கயிலை மலையின்கண், உயர் - உயர்ந்த, தேன் இழிச்சித்தந்தும் - எமக் குத்) தேன்கூட்டை யிறக்கிக்கொடுத்தும், மலர்கொய்தும், மலர் பறித்துக் கொடுத்தும், தண்தினைமேயும் கிளிகடிந்தும் - தண்ணிய தினைக்கொல்லை

களில் மேய்கின்ற கிளிகளையோட்டியும், சிந்தும் - (மதநீரைச்) சிந்துகின்ற, புகர் - புள்ளிகளையுடைய, மலை - மலைபோலும் யானையை, கச்சும்-கொன்றும், இச்சாரல் - இந்த மலைச்சாரலில், திரிதவன்-திரிந்த தலைமகன், வந்து மணம்பெறின் - வந்து உம்மை மணக்கப்பெறுவீராயின், பொன் அனையீர்-திருமகளையொத்துவாழ்வீர், எ - று.

சிந்தும்புகர் - சிதறிய புள்ளிகளெனினுமாம்.

இது தோழி தலைமகளைநோக்கி, ஏகம்பரது கயிலைமலையின்கண் எமக்குத் தேன்கூட்டை யிறக்கிக்கொடுத்தல் மலர்பறித்துக்கொடுத்தல்முதலிய வுதவிசெய்து திரிந்த தலைவன்வந்து உம்மை மணக்கப்பெறுவீராயின், நீர் திருமகள்போலப்பொலிந்துவாழ்வீர் எனக்கூறியது. இது தோழிவாழ்த்து எனப்படும்.

**22**. *திரியப்புரமெய்தவேகம்பனார்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்திடுதாளம்வினையோம்
விரியச்சுருண்முதலானுமடைந்தோம்விரைவிரைந்து
பிரியக்கதிர்முத்தினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே.

**23**. *பேசுகயாவருமைக்கணியாரொன்றுபித்தரொங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசிலராக்
கூசுகைபாதுமில்லாக்குலவேங்கைப்பெயர்நும்மையே.

**24**. பெயராநலத்தெழிலேகம்பனார்பிறைதோய்கயிலைப்
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருத்திமனமுமிங்கோடித்தொழுதுசென்ற
தயராதுரையும்வெற்பற்கடியற்கும் விடைதமினே.

இ - ள். பெயரா - நிலைபெயராத, நலத்து எழில் - நன்மையாகிய அழகையுடைய, ஏகம்பனார் - திருவேகம்பமுடையாரது, பிறைதோய் - பிறைதவழாநின்ற, கயிலை - கயிலைவரைப்பினின்றும், பெயராது இருக்கப் பெறு - நீங்காதிருக்கப்பெற்ற, கிளிகாள் - கிள்ளைகளே, புனமே - தினைப் புனமே, பிரிவின் துயரால் வருத்தி - பிரிவின்நேரிட்ட துன்பத்தினால் வருத்தப்படுத்தப்பட்டு, மனமும் இங்கு ஓட-மனமும் இவ்விடத்திலோடாநிற்க, தொழுது சென்றது - வணங்கிச்சென்றதை, அயராது - மறவாமல், வெற்பற்கு - பொருப்பனுக்கு, உரையும் - சொல்லுங்கள், அடியற்கும் - அடியேனுக்கும், விடைதம்மின் - விடைகொடுங்கள், எ - று.

(பகற்குறி).

இது தலைமகளது இற்செறிவைத்தோழி அங்குள்ள கிளிபுனம்முதலியவற்றொடுகூறி, தலைமகன்வரின், யான் இப்புனம் நீங்கும்போதுற்ற துன்பத்தையும் அவற்குக்கூறுமின் எனக்கூறுவது. "கணியார் கருத்தின்று" என்பது திருக்கோவையார்.

**25.** நம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்நாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே.

இ - ள். நம்மை - நங்களை, பிறவிக்கடல் கடப்பிப்பவர் - பிறவிக்கடலைத் தாணடுவிப்பவர், நாம் வணங்கும் - நாங்கள்பணிகின்ற, மும்மைத் திருக்கண் - மூன்று திருக்கண்களோடுகூடிய, முகத்துஎழில் - முகத்தழகு வாய்ந்த, ஏகம்பர் - திருவேகம்பமுடையார், (அவரது) மொய்கயிலை - நெருங்கியகைலைவரைப்பில், அம்மைகருங்கண்ணிதன்னொடு-அந்த மையெழுதப்பட்டுக் கருமையாகிய கண்களையுடையாளோடுகூடிநின்று, இன்பம் தரும்-எமக்கு இன்பத்தைக்கொடுக்கின்ற, தண்புனமே-தண்ணிய புனமே, எம்மைக்கவலை செய்யச்சொல்லியோ - எங்களைத் துன்பப்படுத்தச்சொல்லியோ, வல்லி எய்தியது - அவ்வணங்கு சென்றது, எ - று.

(பகற்குறி).

இது. வறும்புனங்கண்டு வருந்தல். அதாவது - தலைமகளுந்தோழியும் புனங்காவலேறிப் போகாநிற்ப, தலைமகன் புனத்திடைச்சென்று நின்று, இப்புனம் யாம் முன்பயின்றதன்றே, இஃதின்றிருக்கின்றவாறென்னேவென்று, அதன்பொலிவழிவுகூறித் தலைமகளைத்தேடி வருந்தாநிற்றல், "பொதுவினிற்றீர்த்து" என்பது திருக்கோவையார். "அல்லைப் பகல்செய்தமால்" என்பது திருவரங்கக்கோவை,

**26.** இயங்குந்திரிபுரமெய்தவேகம்பரொழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காடையலாடருவித்தடங்கா
முயங்குமணியறைகாண்மொழியீரொழியாதுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னூர்சென்றசூழல்வகுத்தெமக்கே.

இ - ள். இயங்கும் - ஆகாயத்தில் உலாவுகின்ற, திரிபுரம் - முப்புரத்தை, எய்த - நெருப்புக்கணையெய்தழித்த, ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, எழில் - அழகமைந்த, கயிலை-கயிலைவரைப்பின்கண், தயங்கும் - விளங்காநின்ற, மலர்ப்பொழில்காள் - பூஞ்சோலைகளே, தையல் - கைபுனையப்பட்டாளாகிய எம்தலைவி, ஆடு - நீராடுகின்ற, அருவி - அருவி

யாறுகளோடு, தடம்காமுயங்கும்-பெரிய சோலையின்கண் சேர்ந்திருக்கிற, மணி அறைகாள் - பளிக்கறைகளே, நெஞ்சம் - எமது மனம், மயங்கும் பரிசு - மயங்கும்வண்ணம், பொன்னூர்சென்ற சூழல் - பொன்போல்வாராகிய எம் தலைவியார்போன இடத்தை, ஒழியாது - வழுவாமல், எமக்கு - எங்களுக்கு, வகுத்து மொழியீர் - வகுத்துச்சொல்வீர், எ - று.

இதுவும் மேலையது. ஏகம்பர் கைலைப்பொழில்களே, அருவிகளே, பளிக்கறைகளே, என்நெஞ்சம் மயங்கும்படி திருமகளை நிகர்ப்பவர் சென்ற இடத்தை எமக்கு வகுத்துக்கூறுமின் என்றவாறு.

**27.** வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிகுப்பார்களாருயிரொன்றாமிருவரைவிள்ளக்கள்வாய்
நெகுப்பான்மலர்கொண்டுநின்றார்கிடக்கநிலாவுகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக்கயிலையிச்சூழ்புனத்தே.

இ - ள். விள்ள - வாய்விண்டவளவில், வாய் - அவ்வாயினின்றும், கள் நெகுப்பான் - தேன் சிந்தும்படி, மலர் கொண்டு நின்றார் - மலரேந்தி நின்றவர், கிடக்க - பணியாநின்று கிடக்க, நிலாவு-விளங்குகின்ற, கம்பர் - திருவேகம்பமுடையாரது, தொகுப்பால் மணிசிந்து-தொகுதிகளால்மணிகளைச் சிதறுகின்ற, அருவி - அருவியாறுகளையுடைய, கயிலை-கயிலைவரைப்பின் கண்ணுள்ள, இச்சூழ்புனத்து - இந்தச்சூழ்ந்த புனத்தில், மணம் தன்னொடு - மணக்குங்காலத்தோடு, இன்பம் மிகுப்பார்கள் - இன்ப மிகுவிப்பார்களாய், ஆர் உயிர் ஒன்று ஆம் இருவரை-அரிய வுயிர் ஒன்றாந்தன்மையுள்ள இருவரை, மணத்துக்கு - மணம் புணர்வித்தற்கு, நாள்வகுப்பார் - நாள்வகுத்துச்சொல்வார், இவர்போன்ம் - இக்கணியாரேபோலும், எ - று

இது, வேங்கையரும்பிப்பூத்துத் தினைகொய்யுநாளுணர்த்தவே, தினை கொய்தற்றது, இனி நம்மையிற்செறிவிப்பார், நம் தலைமகட்குக் கடிமணம் புணருங்கால நேர்ந்தது எனத்தோழி யுவந்து கூறியது. இவர் என்றதற்கு இவ்விடத்துக்கேற்பக் கணியார் என்றுரை யுரைக்கப்பட்டது. கணி-வேங்கைமரம். முதனிலைத்தொழிலாகுபெயராய்க் கணித்தலை யுடையானையு முணர்த்தும். மலர்கொண்டுநின்றார் என்றது பிரமன் இந்திரன் முதலியோரை. விள்ளக்கள்வாய் நெகுப்பான்மலர் என்றது - விரியாதபோதுகளை. போது - விரியும் பருவத்ததாகிய பேரரும்பு. "காலையரும்பிப்பகலெல்லாம் போதாகி - மாலைமலருமிந்நோய்" என்பதனால் இது இனிது விளங்கும்.

**28.** புனங்குழைபாதென்றுமென்றினைகொய்ததும்போகலுற்ற
கனங்குழையாடற்பிரியநமக்குறுங்கையறவால்
மனங்குழையாவருங்கண்கனிபண்பலபாடுந்தொண்டர்
இனங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே.

இ - ள். மனம் குழையா - மனமுருகி, அருகண்கனி - அருமையாகிய கண்கசிந்து, பல பண்பாடும் - பலபண்களைப்பாடுகின்ற, தொண்டர் இனம் - தொழும்பர்கூட்டம், குழையாதொழும் - உடல் குழைந்து வணங்குகின்ற, ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, இக்கயிலாயத்துள்ளே - இந்தக்கயிலாய வரைப்பின்கண், புனம் குழையாது என்று - புனம் வாடாதென்று கருதி, மெல்தினை கொய்ததும் - மெல்லிய தினையைக்கொய்தலும், போகல் உற்ற - செல்லலுற்ற, கனங்குழையாள்-கனவிய குழையையுடையாளாகிய, தன்பிரிய - தன்னைப்பிரியவே, கையறவு - துன்பம், நமக்கு உறும் - நம்மைச்சேரும், எ - று.

இது, தலைமகன்கூற்று. ஏகம்பரது கயிலாயத்தின்கண் இப்புனத்துத் தினைகொய்தலும் போகலுற்ற தலைமகளைப்பிரியவே நமக்குத்துன்பம் வந்துநேரும் என்றவாறு.

**29.** உள்ளம்பெரியரல்லாச்சிறுமானிடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாரடியவர்சார்வதன்றே.

இ - ள். உள்ளம் பெரியர் அல்லா - மனம் பெரியரல்லாத, சிறுமானிடர் - சிறுமனிதர், உற்றசெல்வம் - அடைந்தசெல்வம், கள்ளம்பெரிய-பெருவஞ்சகத்தையுடைய, சிறுமனத்தார்க்கு அன்றி - சிறுநெஞ்சர்க்குப் பொருந்துவதன்றி, கங்கை என்னும் - கங்கையென்கிற, வெள்ளம் - நதி பொதிந்த, பெரியசடை - பெரிய சடையையுடைய, திரு ஏகம்பர் - திருவேகம்பமுடையவர், விண் - ஆகாயத்தில் உலாவுகின்ற, அரணம் - மும்மதில்களை, தள்-அழிக்கவல்ல, அம்பு - ஓரம்பை, எரிகொண்டு அமைத்தார்-நெருப்பைக் கொண்டமைத்தவர், (அவரது) அடியவர் - அடியார், சார்வது அன்று - பொருந்துவதன்று, எ - று.

உள்ளம் பெரியர் உள்ளத்தாற்பெரியவர் எனவிரியும், பெருங்குணத்தையுடையார் என்றபடி "தனஞ்சிறியர்" "மனஞ்சிறியர்" என்றிவ்வாறு பிறவிடங்களில் வருதலுங்காண்க. சிறுமானிடர் - கீழ்மக்கள், இவர் "மைதீர் பசும்பொன் மேன்மாண்டமணியழுத்திச் செய்ததெனினுஞ் செருப்புத் தன்காற்கேயாம், எய்திய செல்வத்தரராயினுங் கீழ்களைச், செய்தொழிலாற் காணப்படும்" என்றதனாலமைந்தவர். அம்புஎனவரையறை கூறுராயினும் ஒருங்கட மூவெயிலொற்றைக் கணைகொள்சிற்றம்பலவன்" எனவும், "ஈரம்புகண்டிலமேகம்பர் தங்கையில், ஓரம்பே முப்புரமுந்தீபற, ஒன்றும் பெருமிகையுந்தீபற" எனவும் மேலோர்கூறுதலால், ஓரம்பென்றுரைக்கப்பட்டது. தீயார்செல்வம் தீயார்க்குப்பயன்படுதலன்றி நல்லார்க்குப் பயன்படாதென்பது கருத்து.

**30.** அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நின்றும்பொலியினுங்கம்பர்நன்னீறுநுதற்கிலரேல்
என்றுமரசுமுரசும்பொலியாவிருநிலத்தே.

இ - ள். அன்றும் - நெருங்குகின்ற, பகை - பகைவரை, அடர்க்கும் - கொல்லுகின்ற, பரிமாவும் - குதிரையும், மதஅருவிகுன்றும் - யானையும், பதாதியும் - காலாளும், தேரும் - இரதமும், குலவி - விளங்கி, குடைநிழற்கீழ்நின்றும் பொலியினும் - வெண்கொற்றக்குடைநிழலின் கண்ணே வீற்றிருந்து பிரகாசிப்பினும், (அவர்) கம்பர்நல்நீறு - திருவேகம்பமுடையாரது வெண்பொடி, நுதற்கு இலரேல் - தமது நுதலின்கண்ணே உடையாரல்லராயின், (அவர்க்கு) என்றும் - எக்காலத்தும், இருநிலத்து - பெரியவுலகத்தின்கண், அரசும் - அரசாட்சியும், முரசும் - முரசவாத்தியமும், பொலியா - விளங்கா. எ - று.

மதவருவி என்னும் விசேடணத்தால் குன்றுயானையையுணர்த்திற்று. என்றும் பொலியா என்றதனால் சின்னாளிருந்தழியுமென்றாராயிற்று. குதிரைமுதலிய நால்வகைப்படைகளையுடைய வேந்தராயினும் கம்பர்திருநீற்றையணியாராயின், அவரது செல்வமுதலாயின பயன்படாதழியுமென்பது கருத்து.

**31.** நிலத்திமையோரிற்றலையாப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமைமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழு
நலத்தமையாதவர்வேட்டுவர்தம்மினடுப்படையே.

இ - ள். நிலத்து இமையோரில் - பூசுரருக்குள், தலையாபிறந்து - முதன்மையாகப்பிறந்து, மறையொடு - வேதங்களோடு, அங்கம் - ஆறங்கங்களையும் கற்று, வலத்து - கற்ற அவ்வலிமையுடையராய், இமைப்போதும் - இமைப்பொழுதும், பிரியார் - நீங்காதவராகி, எரிவளர்த்தாலும் - முத்தீயை வளர்ப்பாராயினும், வெற்பன் குலத்து - மலையரையன் குலத்திலுதித்த, உமை - உமாதேவியை, ஓர் பங்கர் - ஒருபாகத்திலுடையாரது, கச்சியுள் ஏகம்பம் - திருக்கச்சியேகம்பத்தை, கூடி-அடைந்து, தொழும்-தொழாநின்ற, நலத்து - நன்னெறியில், அமையாதவர் - அமைந்திராதவர், வேட்டுவர் தம்மின் - வேடுவரது, நடுப்படையே - நடுப்படையிற்பிறந்தவரேயாவர். எ - று.

நிலத்திமையோர் - அந்தணர். மறை - நான்கு, அவை-இருக்கு,தைத்திரியம், சாமம், அதர்வணம் என்பன. தைத் திரியத்தைய சுர்வேதம் என்றுங் கூறுவர். அங்கம் ஆறு, அவை, சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்

தம், சோதிடம், கற்பம் என்பன. அன்றி, மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம், எனவுங் கூறுவர். இவற்றிற்குப் பொருள் வேறுபாடின்று. முத்தீ - ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்பன. அந்தணராய்ப்பிறந்து வேதமுதலிய வற்றைக் கற்று முத்தீயோம்பு வோராயினும், சிவபெருமானதுகச்சி யேகம்பத்தை யடைந்து அவனை வணங்காதவர், வேட்டுவர் குலத்திற் பிறந்தவர்க்கு நிகரோயாவர், என்பது கருத்து.

**32.** படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநாண்சிறிதின்றிநகுங்குலத்திற்
கடையாப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையா
ளுடையான்கழற்கன்பரேலவர்யாவர்க்குமுத்தமரே.

இ - ள். படையால் - ஆயுதங்களால், உயிர்கொன்று தின்று-உயிர்களை வதைத்துண்டு, பசுக்களைப்போலச் செல்லும் - மிருகங்களைப்போல ஒழுகுகின்ற, நடையால் - தீயொழுக்கத்தால், அறிவு இன்றி - உணர்வில்லாமலும், நாண்சிறிது இன்றி - நாணம் சிறிதுமில்லாமலும், நகும் குலத்தில் - சிரித்தற்குரிய சாதியில், கடை ஆபிறக்கினும் - கடையராய்ப் பிறந்தாலும், கச்சியுள் ஏகம்பத்து - திருக்கச்சியேகம் பத்துள் விற்றிருக்கின்ற, எங்களை ஆளுடையான் - எம்மையாளுடையானது, கழற்கு - திருவடிகளுக்கு, அன்பரேல் - அன்புடையராயின், அவர்-அவர்கள், யாவர்க்கும் உத்தமர் - எல்லாரினும் சிறந்தவர்கள். எ - று.

படை உயிர்கொன்றுந் தலைச் செய்விப்பதாதலால், படையென அதனை முன்வைத்தார். இது "படைகொண்டார் நெஞ்சம் போனன்றூக் காதொன்றன், உடல் சுவையுண்டார் மனம்" என்பதனுலினிது விளங்கும். உலகில் ஒருவர் இழிகுலத்திற் பிறந்தாராயினும், அவர் கச்சியேகம்பன் திருவடிககன்பராயின் அவர் உயர்குலத்தாரெல்லாரினும் சிறந்தவரென்பது கருத்து.

**33.** உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையானவிருபதுஞ்சோர்தரவைத்திலயை
யொத்துங்கையாலவன்பாடக்கயிலையுள்ளோர்நற்கைவா
ளெத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பனே.

இ - ள். உத்துங்கம் - உயர்வாகிய, யானை-யானையினது, உரியார் - தோலையணிந்தவரும், அரக்கன் - ராவணாசுரனது, சென்னிபத்தும் - பத்துத்தலைகளும், கை ஆன இருபதும் - இருபது தோள்களும், சோர்தர - வருந்த, விரலால்வைத்து - கால்விரலால் அழுத்திவைத்து, இலயை

ஒத்தும் கையால் - இலயை ஒத்துகின்றகைகளையுடையவனாய், அவன் பாட - அவன் கானம்பாட, கயிலையுள்ளோர் - திருக்கயிலாயமலையிலெழுந்தருளியிருந்தவரும், எத்தும் கையான் என்று-இவன் எத்தையும் வருத்தமாட்டானென்று, உகந்து - சந்தோஷித்து, நல்கைவாள் - நல்லகைவாளொன்றை, அளித்தார் - அவனுக்குக் கிருபை செய்தவரும், கச்சியேகம்பரோ - கச்சியேகம்ப முடையாரோ. எ - று.

இலயை - தாளவொற்று. கைவாள் - சந்திரகாசம் என்னுங் கத்தி. யானையுரியையுடைமை முதலியவையுள்ளவர் திருவேகம்ப முடையாரோ என்பது கருத்து.

**34.** அம்பரங்காலனனீர்நிலந்திங்களருக்கனணு
வம்பரங்கொள்வதோர்வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளேகம்பத்தானிடையாதடைவா
னம்பரன்றன்னடியாரறிவார்க்குநறுந்துணையே.

இ - ள். அம்பரம் - ஆகாயமும், கால் - காற்றும், அனல் - நெருப்பும், நீர் - நீரும், நிலம் - பூமியும், திங்கள் - சந்திரனும், அருக்கன்-சூரியனும், அணு - ஆன்மாவும், அம் - அழகாகிய, பரம்கொள்வது - கவசமாகக்கொள்ளுதற்குரிய, ஓர் - ஒப்பற்ற, வேழத்து உரி - யானைத்தோலும் ஆகிய இவைகள், அவன் தன்னுரு ஆம் - அவன் தன் திருமேனியாகப் பெற்ற, எம்பரன் - எம்மிறைவன், கச்சியுள் ஏகம்பத்தான் - திருக்கச்சியேகம்பமுடையான், இடையாது அடைவான் - சலிக்காது (அன்பர்) அடையும் பொருட்டு, நம்பு-நம்புகின்ற, அரன்-அரன் என்னும் திருநாமமுள்ளவன், தன் அடியார் அறிவார்க்கு-தன்னடியாராகிய அறிஞருக்கு, நறுந்துணை - நற்றுணையாயிருப்பவன். எ - று.

அம்பரம் முதலிய எட்டும் அட்ட மூர்த்தம் எனப்படும்.

**35.** துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுங்கண்டத்துநீலமுமண்டத்துமின்
பணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரொழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே.

இ - ள். தாமரை - தாமரைமலர்போன்ற, துணை அடியும் - இரண்டு திருப்பாதங்களும், பவளத்திரள் - பவளத்திரட்சிபோன்ற, நன்குறங்கும் - அழகிய தொடைகளும், பணைத்தோள் அகலமும் - பருமையாகிய தோள்களோடு கூடிய திருமார்பும், கண்டத்து நீலமும் - கண்டத்தில் நீலநிறமும், அண்டத்து - ஆகாயத்தில், மின்பணைத்தால் அன்ன - மின்னற்கொடிகள் திரண்டிருந்தாற்போன்ற, சடையும் - சடாபாரமும்.

திரு - அழகிய, முக்கண்ணும் - மூன்றுகண்களும், பெண் - பெண்ணை. ஒருபக்கத்து அணைத்தார் - ஒரு பாகத்தில் அணைத்திருப்பவரும், எழில் கம்பர் - அழகையுடைய திருவேகம்பமுடையவரும் ஆகிய, எங்கள் பிரானுர்க்கு - எம்பெருமானுர்க்கு, அழகிய - அழகுள்ளனவாயமைந்திராநின்றன. எ - று.

“பொலிந்திலங்கும்மின் வண்ணமெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை” எனமேலோர் கூறுதலால், இவரும் “மின்பணைத்தாலனசடை” என்ருர். பிறர்கண்போலாது மூன்ருயிருந்தனவாயினும் அவைதாம் ஓரழகுடைய வென்னுங் கருத்தால் திருமுக்கண் என்ருர். இது, திருக்கோவையார், “நின்னுடை நீர்மையும்” என்னுமுதற்குறிப்புள்ள செய்யுளில், “ஏர்கொண்முக்கண்” என்பதனுலும் அச்செய்யுளுரையாலும் இனிது விளங்கும்.

36. அழகழிவிற்பெரிதாகியவேகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர் பற்றுமன்பின்
குழகறிவேற்பினுளொன்றறியாரறியாமைதெய்வங்
கிழகெறியப்பட்டுலந்தாருலகிற்கிடந்தனரே.

இ - ள். அழகு அழிவுஇல் பெரிது ஆகிய ஏகம்பர் - அழகானது ஒருக்காலும் அழிதலில்லாத திருவேகம்பத்தையுடையவர், அத்தர் - எல்லார்க்கும் தந்தையாயிருப்பவர், (அவரது) கொற்றம்-வெற்றிவிஷயத்தில். பழகு - பழகிய, அறிவின்பெரியோர் தம்மை - அறிவிற்சிறந்தோரை, பற்றலர் - பற்றிலர், பற்றும் அன்பின் - பற்றுதற்குரிய அன்பினது, குழகு அறிவு ஏற்பினுள் - அழகாகிய அறிவென்றேற்றுக் கோடற் குரியவைகளுள், ஒன்று அறியார் - ஒன்றையுமறிந்திலர், அறியாமை - அறியாமை காரணமாக, தெய்வம் - ஊழினல், கிழகு எறியப்பட்டு - கீழுக்கு வீசப்பட்டு, உலந்தார் - அழிந்தவராகி, உலகில் கிடந்தனர்-உலகத்திற் கிடந்தார் (சிலர்). எ - று.

கொற்றம் - பிரபாவம் (புகழ்). உலகில் சிலர் திருவேகம்ப முடையாரதுபுகழ்முதலியவற்றை யுணர்ந்திலராகி,அதோகதிக்கு உரியராகின்றனரே இது என்னபாவம் என்பது கருத்து.

37 கிடக்குமொருபாலிரைக்கின்றபாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந்திரைக்கங்கைசூடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலைவாளான்மலைந்தவெம்போர்
முடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே.

இ - ள். வாளால் மலைந்தவெம்போர் - வாள்கொண்டு பொருத வெவ்விய போர்களை, கடக்கும் - செயித்த, விடை - இடபத்தையுடைய, திருவேகம்பர் - திருவேகம்பமுடையாரது, கற்றைச்சடைமுடி - திரட்சியாகிய சடைமுடியில், ஒருபால் - ஒருபக்கத்தில், இரைக்கின்ற பாம்பு - சீறுகின்றசர்ப்பம், கிடக்கும் - கிடவாநிற்கும், ஒருபால் - ஒருபக்கத்தில், மதியம் தொடக்குண்டு இலங்கும் - சந்திரன் கட்டுண்டு விளங்காநிற்கும், திரைக்கங்கை - அலைகளையுடைய கங்கை, (ஒருபால்) அலங்கும் - ஒரு பக்கத்தில் அசையாநிற்கும்-(ஒருபால்)கொன்றைசூடும்-ஒருபக்கத்தில் கொன்றைமலர்மாலை சூடப்பட்டிருக்கும்; கட்டு-கட்டப்பட்ட, அத்தலை மாலை-அந்தத்தலைமாலைகள், (ஒருபால்) வடக்குண்டு-ஒருபக்கத்தில் அசைதலுண்டு.

38. கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலர்மதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்தத்தரங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்றசூட்டழகாகித்திகழ்தருமே.

இ - ள். ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, வலம் - வலப்பக்கத்தில், கற்றை-திரட்சியாகிய, பவளச்சடை - பவளம்போலுஞ் செவந்த சடையின்கண், பூகமழ் - மலர்கள் மணக்கப்பெற்ற, கொன்றையந்தார் - அழகிய கொன்றைமாலையும், முற்று உற்றிலா-(கலைகள்) நிறையாத, மதியின் கொழுந்து - இளம் பிறையும் (விளங்காநிற்கும்), மற்றைத்திசையில்- மற்றப்பக்கத்தில், மணிப்பொற் கொழுந்து - அழகாகிய பொற்கொழுந்து போல் வாளாகிய உமாதேவியின், மொய்குழல்-நெருங்கிய கூந்தலின் கண், அ - அந்த, தரம் - மேன்மையாகிய, கழுநீர் தெற்றிப்பொலிகின்ற சூட்டு - கழுநீர்மலர்களாற் றொடுக்கப்பட்டு விளங்குகின்ற மாலையானது, அழகு ஆகித்திகழ்தரும் - அழகாகப்பிரகாசிக்கும். எ - று.

மற்றைத்திசையென்றது இடப்பக்கத்தை. பொற்கொழுந்து-பொன்னை வண்ணமாகக்கொண்டெழுதிய கொழுந்து. இது, திருக்கோவையார், "சேணிற்பொலி" என்னும் முதற்குறிப்பையுடைய செய்யுளில், "ஓவியப் பொற்கொழுந்தை" என்பதனாலும், அச்செய்யுளுரையாலும் இனிது விளங்கும். இதில் இறைவனது அர்த்த நாரீச்சரசேவை குறிக்கப்பட்டிருக்கின்றது.

39. தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
றிருமலர்க்கண்பிளவின்றிகழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமதத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்ச்சுழலே.

இ - ள். செல்வம் கம்பர் - செல்வப்பொலிவுள்ள திருவேகம் பரது, வல்ப்பால் - வல்ப்பக்கத்தில், தரும் அருள் தன்மை-அருட்குணங்காட்டுகின்ற, கமலக்கண்-தாமரைமலர்போலுங் கண்ணும், நெற்றியின்மேல்-நெற்றியின்மீது, தழல் பிளவின்திகழும் - நெருப்புப்பிளவுபோலப் பிரகாசியாநின்ற, திருமலர்க்கண் - அழகாகிய மலர்க்கண்ணும் உள்ளன, இடப்பாலது-இடப்பக்கத்ததாகிய, கருமலர்க்கண் - கரிய மலர்க்கண், நீலம் கனிமதத்து வரும் - நீலமலர்போல முற்றிமதர்த்து விளங்கும், நுதல் பொட்டு அணங்குக்கு - நெற்றித்திலகத்தையுடைய பெண்ணுக்கு, மலர்க்குழல் உயர்ந்து ஓங்கும் - மலரையணிந்த கூந்தல் நீண்டு விளங்கும். எ - று.

நீலம் - கருங்குவளை. இதுவும் மேலையது.

40. மலர்ந்தபடத்துச்சியைந்திலுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலக்காதினிலாடிவரும்
நலந்திருநீள்வயிரம்வெயில்பாயுநகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர் காதிடமே.

இ - ள். மலர்ந்த-விரிந்த, படத்து - படத்தோடு கூடிய, உச்சி ஐந்தினும் - ஐந்து உச்சியினும், மாமணி - மாணிக்கங்கள், செஞ்சுடர்விட்டு - செவ்வொளிபரப்பி, அலர்ந்தமணிக்குண்டலம் - விகாசமான ரத்நகுண்டலம், வலக்காதினில் - வலக்காதில், ஆடிவரும் - அசையாநிற்கும், ஏகம்பர்காது இடம் - ஏகம்பரது இடக்காதில், நலம் - நன்மையாகிய, திருநீள் வயிரம் - அழகு மிக்கவயிரமும, வெயில்பாயும் - வெயில் விரிகின்ற, நகுமணிகள் - விளங்குகின்ற ஏனைய மணிகளும, கலந்த - சேர்ந்த, செம்பொன் - செம்பொன்னாலியன்ற, மகரக்குழை - மகரகுண்டலம் அசையாநிற்கும. எ - று.

இதுவும் மேலையது.

41. காதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பனிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பணைத்தோணறுஞ்சாந்தணிந்து
சூதலைக்கும்முலைமார்பிடமேகம்பர்சுந்தரமே.

இ - ள். காது அலைக்கும் - காதுகளால் அலைக்கப்படுகிற, வலத்தோள் - வலப்புயம், பவளக்குன்றம்-பவளமலை, நீற்றின்பொலி அகலம் - திருவெண்ணீற்றாற் பொலியா நின்ற திருமார்பு, அங்கு உயர்ந்து - அவ்விடத்துயர்ந்து, போது அலைக்கும் - மலர்களால் அலைக்கப்படுகிற, பனி - குளிர்ச்சியுள்ள, பொன்மலை - சுவர்ணமலை, தாது - பூம்பொடி, அலைக்கும் - அலைக்கப்படுகிற, குழல் - கூந்தலையுடையாளது, சேர் - சேர்ந்த

பணைத்தோள் - மூங்கில்போன்றதோள், நறுசாந்து அணிந்து - நறுமண முள்ள சந்தநமணிந்து, சூது அலைக்கும் - சூதாடு கருவியையலைக்கின்ற, முலை - தனத்தையுடைய, இடமார்பு - இடத்திருமார்பு, (இதுவே) ஏகம் பர் சுந்தரம் - ஏகம்பரது அழகு. எ - று.

அலைத்தல் - வருத்துதல். இதுவும் மேலையது.

**42.** தரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தரந்தளரா
வுரம்பொற்புடையதிருவயிறும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திடுபூண்முலையு
நிரம்பப்பொறுதுதளரிளவஞ்சியுநேருடைத்தே.

இ - ள். உம்பர் - மேலிடத்துள்ள, மும்மைப்புரம் - முப்புரங்களின் பொற்பு அழித்த - அழகையழித்த,கம்பர்க்கு-திருவேகம்பமுடையார்க்கு, தரம் - மேலாகிய, பொற்பு அழியும் - அழகிழந்த, உலகு அட்டி - உலகத் தையீன்று, எய்த்து - இளைத்து, தரம் தளரா - மேன்மைகுன்றாத, உரம் பொற்பு உடைய - வலியழகுகளையுடைய, திருவயிறு - திருவுதரம், வலம் ஆம் - வலப்பக்கத்துளது, (இடப்பக்கத்து) தரத்து இடு - மேன்மையா யணியப்பட்ட, பூண்முலையும் - ஆபரணங்களையுடைய தனமும், நிரம்ப - (அது) முதிர, பொறுது - பொறுக்கலாற்றாது, தளர் - துவளாநின்ற, இளவஞ்சியும் - இளவஞ்சிக்கொடிபோன்ற இடையும், நேருடைத்து - பொருந்துதல் உளது. எ - று.

மும்மைப்புரம்பொற் பழித்தலாவது - பொடிபடுத்தல். பொற்பழியும் உலகு என்றது - நசித்தவுலகு என்றபடி. இதுவும் மேலையது.

**43.** உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமரைவலமற்றையல்குற்
றொடக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதூநுண்டுகில்
அடற்பொலியேறுடையேகம்பமேயவடிகளுக்கே.

இ - ள். அடல்பொலி - வெற்றிமிக்கு விளங்குகின்ற, ஏறு உடை - இடபவாகநத்தையுடைய, ஏகம்பம் மேய அடிகளுக்கு - திருவேகம்பமுடை யார்க்கு, அரைவலம் - அரையின் வலப்பக்கத்தில், உடை - (தாம்) உடைத் தாயிருக்கிற, புலியாடையின் மேல் - புலித்தோலின்மேல், உரகக்கச்சு வீக்கி - சர்ப்பக்கச்சையைக்கட்டி, முஞ்சிவடத்து-தருப்பைக்கயிற்றோடு, ஒரு கோவணம் தோன்றும் - ஒருகோவணந் தோன்றா நிற்கும், மற்றை - மற்றையிடப்பக்கத்தில், அல்குல் - அல்குற்றடத்தில், தொடக்கு உறு - அணியப்பட்ட, காஞ்சிதொடுத்த-காஞ்சியினால் அலங்கரிக்கப்பட்ட, அர சிலை - அரசிலை மேற்கிடந்த, தூ - பரிசுத்தமாகிய, நுண் துகில் - நுண் ணிய ஆடைதோன்றா நிற்கும். எ - று.

காஞ்சி - எண்கோவைமணி. இதுமாதர் இடையணியின் ஓர்பேதம். அல்குலாகிய அரசிலையென இயைப்பினுமமையும். "தூசகல்ல் குல்வேய்த் தோளிடத்தவனே" என்றார் பிறரும். இதுவும் மேலையது.

**44.** அடிவலப்பாலதுசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரி
னடியிடப்பாலதுபஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவரதருக்கே.

இ - ள். (அடிவலப்பாலது - வலப்பக்கத்துத் திருவடியானது - செந்தாமரை ஒத்து - செந்தாமரைமலர் போன்று, அதிர்கழல் சூழ்ந்து - ஒலிக்கின்ற கழலணியப்பெற்று, இடிகுரல் - இடிபோன்ற குரலையுடைய, கூற்றின் - யமனது, எருத்து இறவைத்தது - பிடர் ஒடியும் படிவைக்கப்பட்டது, இளந்தளிரின் - இளந்தளிர்போன்ற, அடி இடப்பாலது-இடப்பக்கத்துத் திருவடியானது, பஞ்சுஉற - பஞ்சுதீண்ட, அஞ்சும் - அஞ்சாநிற்கும், (மேலும்) சிலம்பு அணிந்த - சிலம்பைத்தரித்த, வடிவு உடைத்து- உருவையுடைத்தாயிராநின்றது, ஆர் - அரிய, கச்சி ஏகம்பம்மேய - கச்சியேகம் பத்தில் வீற்றிருக்கின்ற, அடிகளுக்கு-கடவுளுக்கு), எ - று.

கூற்றினெருத்திறவைத்தது - உதைத்தது என்றபடி. வரதர்-அன்பர் வேண்டும் வரங்களைக் கொடுப்பவர். இதுவும் மேலையது.

**45.** தருக்கவற்றான்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றோடமழுவாள்விசைத்ததுநெற்களென்றும்
பருக்கவற்றாங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின்
றிருக்கயிற்றாலிட்டருளுங்கடகத்திருக்கரமே.

இ - ள். நெற்கள் - நெற்பயிர்கள், என்றும் - எக்காலத்தும், பருக்கவற்று ஆம் - செழிக்கவல்லனவாதற்குரிய, கச்சி - திருக்காஞ்சியிலுள்ள, ஏகம்பர் - திருவேகம்பத்தையுடையவர், அத்தர் - எல்லார்க்கும் தந்தையாயிருப்பவர்,(அவரது) பாம்புகளின் திருக்கயிற்றால் இட்டருளும் - பாம்புகளாகிய அழகிய கயிறுகளான் அமைத்தருளிய, கடகம் - கங்கணத்தையணிந்த, திருக்கரம் - திருக்கையானது, தருக்கு அவற்றால் மிக்க - அகங்காரகுணங்களாகிய அவைகளால் மிகுந்த, முப்புரம் - திரிபுரத்தை, எய்து- அம்பெய்து அழித்து, அயன் தன்தலையை - பிரமன்தலையை, நெருக்கு - நெருக்குந்தொழில்களாகிய, அவற்றோடு - அவைகளுடன், அம் - அழகிய, மழுவாள்விசைத்தது-மழுவின் ஒளியோடு வேகங்கொண்டிருந்தது.எ-று.

மழுவாள் - மழுவாகிய வாள் எனினுமமையும். கச்சியேகம்பர் திருக்கரமானது முப்புரங்களையழிக்க அம்பெய்து பிரமன்றலையையறுத்து மழுவாள் கொண்டிருந்தது என்பது கருத்து.

46. கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவரெல்லியுமாநடமே.

இ - ள். வரத்தைத் தருகம்பர்-(தம்மடியார் விரும்பும்) வரங்களைக் கொடுத்தருள்கின்ற திருவேகம்பமுடையார், கரத்து - தம் திருக்கரத்துள்ள, அத்தமருகத்து ஓசை - அந்தத்தமருகத்தொலியானது, கடுத்து - வேகங்கொண்டெழுந்து, அண்டம்மீபிளப்ப-அண்டமுகடுபிளக்கவும், வரத்து - மேன்மையுள்ள, அத்தபாதம் நெரித்திட்டு - அர்த்த பாதத்தைச் சாய்த்திட்டு, அவனி தலம் நெரிய - பூதலம் நெரியவும், தரத்து - திடத்தையுடைய, அத்திசைகளுக்கு அப்புறம் போர்ப்ப - அந்தத்திக்குகளுக்கு அப்புறத்தும் மூடிக்கொள்ளும்படி, சடைவிரித்து - சடையைவிரித்துக் கொண்டு, எல்லியும் - இராக்காலத்திலும், மாநடம் ஆடுவர் - பெரியநடநம் பண்ணுநிற்பர். எ - று.

எல்லி - சர்வசங்காரகாலத்தைக் குறித்து நின்றது.

47. நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றுநன்மறையோ
ருடன்வந்துமூவாயிரவரிறைஞ்சிநிறைந்தவன்பின்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியா
மிடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே.

இ - ள். எம்பிரான் - எம்பெருமானாகிய, கச்சி ஏகம்பம்மேயாற்கு - கச்சித் திருவேகம்பமுடையானுக்கு, நடன் - திருநடனஞ்செய்வோன், நம்பிரான் - நம்பெருமான், உகந்து உய்யக்கொண்டான் - விரும்பி (நம்மை) உய்யக்கொண்டவன், என்று - என்று சொல்லி, நல்மறையோருடன்-நன்மையைத் தருகின்ற வேதபாரகருடனே, மூவாயிரவர்வந்து இறைஞ்சி - தில்லைமூவாயிரவர்வந்து வணங்கி, நிறைந்த அன்பின் கடன் அன்றி - நிரம்பிய அன்புசெய்தலாகிய கடன்மையல்லது, மற்று அறியா - வேறொன்றையறியாத, தில்லையம்பலம் - தில்லையம்பலமும், காளத்தி - திருக்காளத்தியும், இனியன - இனிமையைத் தருவனவாகிய, இடம் ஆம் - இடங்களாம், எ - று.

திருவேகம்ப முடையார்க்குத் தில்லையம்பலமும் திருக்காளத்தியும் இனிய இடங்களாம் என்பது கருத்து,

48. இனியவரின்றாரவரையொப்பார்பிறரென்னவொண்ணாத்
தனியவர்தையலுடனுமுருவாறம்பணித்த
முனியவரொன்றுமுகந்தமுக்கண்ணவர்தண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே.

இ - ள். இனியவர் - அன்பர் எல்லார்க்கும் இனியவரும், அவனை ஒப்பார் - அவனை நிகர்ப்பார், பிறர் இன்னார் என்னவொண்ணு - பிறர் இன்னார் என்று சொல்லக்கூடாத, தனியவர் - ஒப்பற்றவரும், தையல் உடன் ஆம் உருவர் - பெண்ணுேடுகூடிய திருமேனியுடையாரும், அறம்பணித்த முனியவர் - அறநூல்களைப் பணித்தருளிய அந்தணரும், என்றும் உகந்த முக்கண்ணவர் - எக்காலத்துந் தாம் உடைத்தாயிருக்க விரும்பிய முக்கண்களையுடையவரும், தண்டி அன்புக்கு இனியவர் - தண்டியடிகளது அன்புக்கு இனியரும், காய்மழுவாள்படையார் - சுடுகின்றமழுவாகிய வாட்படையையுடையவரும், (யாவரெனின்) கச்சி ஏகம்பர் - கச்சியேகம்பமுடையார். எ - று.

அறம்பணித்த முனியவர் என்றது சநகாதியர் நால்வருக்கும் கல்லாலின் நிழலில் தக்ஷிணாமூர்த்தியா யெழுந்தருளி உண்மைப்பொருளை யறிவுறுத்தருளினதைக் குறித்தது.

49. பரவித்தனை நினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்கறிந்தேன்முன்னவர்மகனார்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே.

இ - ள். தன்னைப்பரவி - தன்னைத்துதித்து, நினைய - நினையும்வண்ணம், கச்சி ஏகம்பர் - கச்சியேகம்பமுடையார், பண்ணும் - உண்டாக்குகின்ற, மையல்வரவு - மையலின்வருகை, இத்தனை உள்ளது - இவ்வளவுளதென்பதை, முன் எங்கு அறிந்தேன் - பண்டு எங்கேயறிந்தேன், அவர் மகனார் - அவர்புதல்வராகிய முருகக்கடவுளது, புரவிதனை அடிக்க - வாகநமாகிய மயில் தன்னையடித்தலால், கொடிது ஆய் விடியா இரவில் - கொடியதாகி விடியாதிருக்கிற இரவின்கண், அர இத்தனையும் - பாம்பாகிய இதனையும், மடவார்முன்றில் ஆட்டிட - மாதர்முற்றத்தில் ஆட்டும்பொருட்டு, கொண்டனர் - கைக்கொண்டிருக்கின்றனர், எ - று.

இது தலைமகள்கூற்று, அன்றித் தாய்க்கூற்று எனினுமாம். கச்சியேகம்பர், இவ்விரவின் கண்ணும், மாதர்முற்றத்தில் பாம்பாட்டும்பொருட்டுப் பாம்பைக் கைக்கொணடிருக்கின்றனர், இவரது மாயத்தை நான் முன்னே யறிந்திலேன் என்பது கருத்து,

50 இடவஞ்சுறுக்கெனப்பாயுமஞ்சென்னிநகுதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுநாகமினாக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே.

இ - ள். ஏகம்பத்தீர் - திருவேகம்பமுடையீரே, மடவார் - மாதர்கள், இடவம் சுறுக்கெனபாயும் - (உமது) இடபமானது சுறுக்கெனப்பாய்கின்றது, அம்சென்னி - அழகிய தலையினிடத்து, நகுதலைகண்டு - விளங்குகின்ற தலைமாலைகளைப்பார்த்து, இட - பலி இட, அஞ்சுவர் - அஞ்சாநிற்பர், (அன்றியும்) இரிகின்றனர் - ஓடாநிற்பர், படம் அஞ்சுவாயது - படத்தோடுகூடிய அஞ்சுவாயினை யுடையதாகிய, நாகம் இரைக்கும் - நாகம் சீறுநிற்கும், அதனுக்கு முற்பட - அதற்கு எதிரில்வர, அஞ்சுவர் - அஞ்சாநிற்பர், (இவ்வாறுயின்) பலிவந்திடும் பாங்குகள் - (உமக்குப்) பலிவந்திடும் வழிகள், எங்ஙன் - எவ்வாறுளவாகும், எ - று.

சுறுக்கென - விரைவாக. இது விரைவுக்குறிப்பு. நகுதலை - சிரிக்கின்ற தலையெனினுமமையும். இது இறைவர் பலியேற்கவரும்போது பலியிடவரு மடவார் படும்பாட்டைக்கண்ட பெரியோர் கூறுவது.

**51.** பாங்குடைக்கோட்புலியின்னதள்கொண்டீர்நும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சியேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே.

இ - ள். தடம்-தடாகங்கள், கமலம்-தாமரைமலர்களாகிய, பூகுடைகொள்ள - அழகாகிய குடைகளையேந்தி நிற்க, புனல் - நீர்வளமிக்க, கச்சி ஏகம்பம் - திருக்கச்சியேகம்பத்தை, கோயில்கொண்டீர்-திருக்கோயிலாகக் கொண்டிருப்பவரே, பாங்கு - அழகுள்ள, உடை - ஆடையாக, கோள் - துன்பஞ்செய்யு மியல்புள்ள, புலியின் அதள்கொண்டீர் - புலித்தோலைத் தரித்தீர், நும்பாரிடங்கள் - உம்முடைய பூதகணங்கள், குடைகொள்ள - குடையேந்திவர, பலிகொள்ளவந்தீர் -பலியேற்கவந்தீர், இடைக்கும்-இடையான காலத்திலும், இன்று - இப்பொழுது, ஈங்கு - இவ்விடத்து, இடைகொள் அக்கலை கொள்ளவந்தீர் - இடையிற்றரித்த அந்த ஆடையையும் கவரவந்தீர், ஏ - இதென்னவியப்பு, எ - று.

எல்லாவற்றையுங் கோடலே நுமக்குத் தொழிலாயிற்றென்பது கருத்து.

**52.** *இடைக்குமின்றேற்குமிணைமுலையாய்முதிபார்கடஞ்சொற்
கடைக்கணன்றுங்கச்சியேகம்பனையங்கொளக்கடவும்
விடைக்குமுன்றேற்றநில்லேலின்றினியிந்தமொய்குழலார்
கிடைக்குமுன்றேற்றநஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே.

**53.** கிழிபலபேசிச்சதிரானடந்துவிடங்குபடக்
குழிபலபாடிக்குளிர்கச்சியேகம்பனையங்கொள்ள
நெழிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற்
செழிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரே.

இ - ள். கிறிபலபேசி - பலபொய் மொழிகளைப்பேசி, சதிரால் நடந்து - ஒழுங்காகநடந்து, விடங்குபட - அழகுபொருந்த, குறிபலபாடி - பலகருத்தமைந்த பாடல்களைப்பாடி, குளிர் கச்சி ஏகம்பர் - குளிர்ந்த கச்சியேகம்பமுடையார், ஐயங்கொள்ள - பலியேற்க, நெறிபலவார்குழலார் - பலராகிய நெரிந்த நீண்டகூந்தலையுடைய மாதர்கள், மெலிவுற்ற - மெலிவடைந்துநின்ற, நெடுந்தெருவில் - நீண்டதெருக்களில், போயின-(அம்மாதர் கையினின்றும் கழன்று) போயினவாகிய, செறி - நெருங்கிய, பலவெள்வளை - பலவெள்ளிய வளையல்களை, தாயர்கள்தேடுவர் - (அம்மாதருடைய) தாய்மார்கள் தேடாநிற்பர்கள், ஏ - இஃதென்ன பாவம், எ - று.

ஏ - இரக்கப்பொருட்டாகிய இடைச்சொல். இறைவர் பலியேற்கவர அவரது அழகுமுதலியவற்றைக் கண்டு மையல்கொண்ட மாதர்களுடைய வளையல்கள் கழன்று சிந்த, அவற்றை அவர்கள் தாய்மார்கள்தேடாநின்றனர், இதென்னபாவம் என்பது கருத்து.

**54.** தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடுற்றிலகுழல்கொங்கைபொடித்திலகூறுமிவண்
மாடுற்றிலமணியின்மடவல்குலுமற்றிவள்பா
னாடுற்றிலதெழிலேகம்பனார்க்குள்ளநல்கிடற்கே.

இ - ள். நோக்கம் - பார்வை, கள்ளம்தேடுற்றில - கபடத்தைத்தேடத் தொடங்கினவில்லை, சொற்கள் தெரிந்தில - சொற்கள் தெளிந்தனவில்லை, குழல்முடிகூடுற்றில-கூந்தல்முடித்தலைப் பொருந்தினவில்லை, கொங்கைபொடித்தில - தனங்கள் அரும்பினவில்லை, கூறும் - சொல்லப்பட்ட, இவள்மாடு - இவளிடத்து, மணியின்மடம் அல்குலும் உற்றில - அழகையுடைய இளமையாகிய அல்குற்றடங்களும் விருத்தியடைந்தன வில்லை, மற்று - மேலும், இவள்பால் - இவளிடத்து, ஏகம்பனார்க்கு - திருவேகம்பமுடையார்க்கு, நல்கிடற்கு - தலையளிசெய்யும்பொருட்டு, உள்ளம் நாடுற்றிலது - மனம்நாடு தலையடைந்ததில்லை, எ - று.

இதுஇளமைகூறிமறுத்தல். அதாவது-தலைமகளது வடிவுக்கஞ்சிமலர்ந்தறியாவென்றதல்லது மறுத்துக்கூறியவாறன்று, சிறப்பின்மை கூறியவாறெனஉட்கொண்டு, சிறப்புடைத்தழைகொண்டுசெல்ல, அதுகண்டு,குழலும் முலையும் குவியாதகுதலைச்சொல்லிக்கு நீசொல்லுகின்ற காரியம் சிறிதும் இயைபுடைத்தன்றெனத் தோழி அவளது இளமைகூறி மறுத்துரையா நிற்றல், "உருகுதலைச் சென்றவுள்ளத்தும்" என்பது திருக்கோவையார் "களவரும்பா" தஞ்சைவாணன்கோவை "இரண்டுடலொன்ருய்" கல்லாடம்.

55. நல்கும்புகழ்க்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான்
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே.

இ - ள். என்றும் - எப்பொழுதும், மலைமகள்-உமாதேவியானவள், புல்கும் - தழுவுகின்ற, பொழில் - சோலைசூழ்ந்த, கச்சி ஏகம்பம்மேவிய - திருக்கச்சி யேகம்பத்தைப்பொருந்திய, பொன்மலை - பொன்மலையானது, புகழ்நல்கும் - புகழைக்கொடுக்கின்ற, கடவூர் - திருக்கடவூரை, நல்மறையவன்-நன்மையாகிய வேதியச்சிறுவன், உய்ய-உய்யும்பொருட்டு,நண்ணி-அடைந்து, கொல்கின்ற - (அவனைக்) கொல்லாநின்ற, கூற்றை - கூற்றுவனை, குமைத்த - கொன்ற, வெம்கூற்றம் - வெவ்விய கூற்றுவனாயிற்று, குளிர் திரைகள் மல்கும் - குளிர்ந்த அலைகள் நிறைந்த, திருமறைக்காட்டு-திருமறைக்காட்டில், அமிர்து - (அன்பர்க்கு) அமிர்தமாயிற்று, எ - று.

நன்மறையவன் - மார்க்கண்டன். ஏகம்பமேவிய பொன்மலையானது கூற்றுவற்குக்கூற்றுவனும் அன்பர்க்கமிர்தமுமாயிற்று என்பது கருத்து.

56. மலையத்தகத்தியனர்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொன்மதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீ
ரலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே.

இ - ள். நெடுமேரு என்னும்-நீண்ட மேருமலையாகிய, சிலை-வில்லை யேந்திய, அத்தன் - திருக்கையையுடையவன், பைம்பொன்மதில் - பசும்பொன்னினாற்செய்யப்பட்ட மதில்சூழ்ந்த, திருவேகம்பத்தான் - திருவேகம்பமுடையானாகிய, திகழ் நீர் அலை - விளங்குகின்ற நீரலைகளையுடைய, தடம் - பெரிய, பொன்னிசூழ் - காவேரி நதியினால் சூழப்பட்ட, திருவையாற்று - திருவையாறு என்னுந்திருப்பதியில் எழுந்தருளி யிருக்கிற, அருமணி - அருமையாகிய மாணிக்கம்போல்பவன், அகத்தியன் அர்ச்சிக்க - அகத்தியமுனிவன் அருச்சிக்கும்படி, மலயத்துமன்னி - பொதியமலையில் நிலைபெற்று, வடகயிலை நிலயத்து - வடகயிலைக்கோயிலில், அமரர்தொழ - தேவர்கள்வணங்க, இருந்தான் - வீற்றிருந்தான், எ - று.

திருவையாறு - பஞ்சநதம். திருவேகம்பன் பொதிகைமலையின் கண்ணும் வடகயிலைக்கண்ணும் நிலைபெற்றிருந்தான் என்பது கருத்து.

57. மணியாரருவித்தடவிமயங்குடக்கொல்லிகல்லின்
றிணியாரருவியினூர்த்தசிராமலையைவணங்க
ளணியாரருவிகவர்கிளியோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே.

இ - ள். பணிவார் - தொழுவோருடைய, அருவினைதீர்க்கும் (பிற-ரால் தீர்த்தற்கு) அருமையாகிய வினைகளைத்தீர்த்தருள்கின்ற, ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, பருப்பதம் - பர்வதங்கள், மணி ஆர் அருவி - மணிகள் நிறைந்த அருவியாறுகளையுடைய, தடம் - பெரிய, இமயம்-இமய மலையும், குடக்கொல்லி - குடநாட்டுக் கொல்லிமலையும், கல்லின் திணி - கல்லினாற்றிணிக்கப்பட்டு, ஆர் அருவியின் - நிறைந்த அருவியாறுகளால், ஆர்த்த - கோஷித்த, சிராமலை - திரிசிராமலையும், ஐவனங்கள் - மலைநெற் களையும், அணி ஆர்அருவி - அழகுநிறைந்த தினைத்தாள்களையும், கவர்கிளி-கவர்கின்ற கிள்ளைகளை, ஒப்பும் - (குறவியர்) ஒப்பாநின்ற, இன்சாரல் - இனியசாரலையுடைய, விந்தம் - விந்தமலையுமாம், எ - று.

ஒப்புதல் - உரப்புதல். (அதட்டல்.) இது "பணங்களஞ்சாலும்" என் னுந் திருக்கோவைச் செய்யுளானாயால் இனிது விளங்கும். திருவேகம்ப முடையார் வீற்றிருக்கும் பருப்பதங்கள் இமயமலைமுதலாயின வென்பது கருத்து.

58. பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றம்வில்லார்
நெருப்பதங்காகுதிநாறுமயேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகந்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே.

இ - ள். கச்சி ஏகம்பத்து எம்இறை-கச்சியேகம்பத் தெம்மிறைவன், கார் தவழ் - மேகங்கள் தவழ்கின்ற, மந்தரம் பருப்பதம் - மந்தரமலையும், இந்திரநீலம் - இந்திர நீலமலையும், வெள்ளைமருப்பு ஆர் கருங்குன்று இயங் கும் - வெள்ளிய கொம்புகளுள்ள கருமலைகள் சஞ்சரியாநின்ற, பரங்குன் றம் - திருப்பரங்குன்றமும், வில் ஆர் நெருப்பு - ஒளிநிறைந்த நெருப்பு, அங்கு - அவ்விடத்தில், ஆகுதிநாறும் - ஆகுதியோடு கமழ்கின்ற, மயேந்தி ரம் - மஹேந்திரகிரியும், என்ற இவற்றில் இருப்பது ஆ - என்ற இவைக ளில் எழுந்தருளியிருப்பதாக, உகந்தான் - விரும்பினான், எ - று.

கருங்குன்று - கருமையாகியமலை. இது வெள்ளைமருப்பதங்கார் என் னும் விசேடணத்தால் யானையையுணர்த்திநின்றது. கச்சி யேகம்பன் மந் தரமுதலிய பருப்பதங்களைத் தனக்கிருப்பிடமாக வுகந்தருளினன் என்பது கருத்து.

59 *இறைத்தார்புரமெய்தவில்லிமைசல்லிமவான்மகட்கு [ன்ற
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்னற்கு
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே.

60. கூறுமின்றொண்டிர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின்வேள்விக்குடிதிருத்தோணிபுரம்பழன
மாறுமின்போற்சடைவைத்தவனாரூரிடைமருதென்
றேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னிநைந்தே.

இ - ள். தொண்டிர் - தொண்டர்களே, குற்றாலம் - குற்றாலத்தையும், நெய்த்தானம்-திருநெய்த்தானத்தையும், துருத்தி - திருத்துருத்தியையும், அம் - அழகிய, பேர் - திருப்பேரையும், கூறுமின்-புகழுங்கள், வேள்விக்குடி - திருவேள்விக்குடியையும், திருத்தோணிபுரம் - திருத்தோணிபுரத்தையும், பழனம் - திருப்பழனத்தையும், தேறுமின்-தேடிச்செல்லுங்கள், மின்போல்சடை - மின்திரண்டாற்போன்ற சடையினிடத்து, ஆறு வைத்தவன் - நதியைவைத்தவனது, ஆரூர் - திருவாரூர், இடைமருது - திருவிடைமருதூர், என்று - என்று சொல்லிக்கொண்டு, எம்பிரான் - எம்பெருமானது, கச்சி ஏகம்பம் - திருக்கச்சியேகம்பத்தை, உன்னி - நினைத்து, நைந்து - மனம் நைந்து, ஏறுமின் - வெளியேறுங்கள், எ - று.

61. நினைவார்க்கருளும்பிரான்றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன்புகலூர்புறம்பியம்பூவணநீர்
பனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலதிகையென்னு
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே.

இ - ள். நினைவார்க்கு அருளும்பிரான்-தன்னை நினைப்பவர்க்குஅருள் செய்கின்ற பெருமானது, திருச்சோற்றுத்துறை - திருச்சோற்றுத்துறை, நியமம்-திருநியமம், புனை - அலங்கரிக்கப்பட்ட, வார்சடையோன்-நீண்ட சடைமுடியையுடையானது, புகலூர் - திருப்புகலூர், புறம்பியம் - திருப்புறம்பியம், பூவணம்-திருப்பூவணம், நீர்-நீர்மையுள்ள, பனைவார்பொழில்-நெடியபனஞ்சோலைசூழ்ந்த, திருவெண்காடு - திருவெண்காடு, பாச்சில் - திருப்பாச்சில், அதிகை - திருவதிகை, என்னும்-என்கிற, நினைவு ஆர்தரும் நெஞ்சினீர் - நினைவு நிறைந்திருக்கின்ற மனத்தையுடையீர்களே, கச்சி ஏகம்பம் நண்ணுமின் - திருக்கச்சி யேகம்பத்தை யடையுங்கள், எ - று.

62. நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறையேர்கொளெதிர்கொள்பாடி
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே.

இ - ள். திருவாவடுதுறை-திருவாவடுதுறையையும், நல்ல நல்லூர் - நல்ல நல்லூரையும், மண்ணில்பொலி - நிலவுலகிற்பொலியாநின்ற, கடம்பூர் - திருக்கடம்பூரையும், கடம்பந்துறை - திருக் கடம்பந்துறையையும்

மன்னு புன்கூர்-நிலைபெற்ற திருப்புன்கூரையும், எண்ணற்கு அரிய-நினைப்பதற்கரிய, பராய்த்துறை - திருப்பராய்த்துறையையும், ஏர்கொள் - அழகைக்கொண்ட, எதிர்கொள்பாடி-திருவெதிர்கொள்பாடியையும், நண்ணி-அடைந்து, பரவும் - துதியுங்கள், கண்ணிப்பிறைச்சடையோன்-மதிமாலை மிலைந்த சடையையுடையானது, கச்சி ஏகம்பம்-திருக்கச்சி யேகம்பத்தை, சென்று காண்மின் - சென்று சேவியுங்கள், எ - று.

**63.** சென்றேறிவிண்ணுறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேறல்பாய்திருமாற்பேறுபாசூரொழிலழுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும்பேறுமதிலொற்றியூர்
நின்றேர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே.

இ - ள். சென்று ஏறி விண் உறும் - உயர்ந்துபோய் ஆகாயத்தைத் தீண்டுகின்ற, அண்ணுமலை-திருவண்ணுமலை, திகழ்-விளங்குகின்ற, வல்லம்-திருவல்லம், மெல்பூவின் தேறல்பாய் - மெல்லிய மலர்த்தேன் பெருகிப் பாயாநின்ற, திருமாற்பேறு - திருமாற்பேறு, பாசூர்-திருப்பாசூர், எழில் அழுந்தூர் - அழகிய திருவழுந்தூர், வன்தேரவன்-வலிய தேரையுடையவனை சூரியன் பூசித்த, திருவிற்பெரும்பேறு-திருவிற்பெரும்பேறு, மதில் ஒற்றியூர்-மதில்சூழ்ந்த திருவொற்றியூர், (என்னும் இத்திருப்பதிகளெல்லாம்) நின்று ஏர்தரு - நிலைபெற்று அழகைத்தருகின்ற, ஏகம்பம்மேயார்-திருவேகம்பமுடையார், நிலாவியவே - நிலைபெற்ற திருப்பதிகளே, எ-று.

**64.** நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம்வில்வலம்கொச்சைதொண்டர்
குலாவுந்திருப்பனங்காடுநன்மாகறல்கூற்றம்வந்தா
லலாயென்றடியார்க்கருள்புரியேகம்பராலயமே.

இ - ள். நிலாவுபுகழ் திருவோத்தூர் - நிலைபெற்ற புகழையுடைய திருவோத்தூர், திருவாமாத்தூர் - திருவாமாத்தூர், நிறைநீர்சுலாவு - நிறைந்த நீரினால்சூழப்பட்ட, சடையோன் - சடைமுடியை யுடையோனது, புலிவலம் - திருப்புலிவலம், வில்வலம் - திருவில்வலம், கொச்சை-சீகாழி, தொண்டர்குலாவு - அடியார்கள் சூழ்ந்துவிளங்குகின்ற, திருப்பனங்காடு-திருப்பனங்காடு, நல்மாகறல் - நல்லதிருமாகறல், (இவைகள்) கூற்றம்வந்தால்-யமன்வந்தால், அலாய் என்று - ஏடாவென்றுரப்பி, அடியார்க்கு அருள்புரி - அடியார்க்கருள்செய்கின்ற, ஏகம்பர் ஆலயம் - திருவேகம்பமுடையாரது ஆலயங்களாம், எ - று.

அலாயென்று - அகலாயென்று எனினுமாம்.

65. ஆலையங்கார்கருகாவைகச்சூர்திருக்காரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறல்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே.

இ - ள். ஆலை - ஆலைகள், அங்கு - அவ்விடத்து, ஆர் - நிறைந்த, கருகாவை - திருக்காவை, கச்சூர் - திருக்கச்சூர், திருக்காரிகரை - திருக்காரிகரை, வேலை அங்கு ஏறு - கடலானது அவ்விடத்துக் கரையேறிவருகின்ற, திருவான்மியூர் - திருவான்மியூர், திருவூறல் - திருவூறல், மிக்க சோலை அங்கு ஆர்திருப்போந்தை - மிகுதியாகிய சோலைகள் நிறைந்த திருப்போந்தை, முக்கோணம் - திருமுக்கோணம், தொடர் - தொடைசெய்யப்பட்ட, கடுக்கைமாலையன் - கொன்றைமாலையை யணிந்தவனாகிய சிவபெருமான், வாழ் - வாழ்கின்ற, திருவாலங்காடு - திருவாலங்காடு, ஏகம்பம் - திருவேகம்பம், (இத்திருப்பதிகளை) வாழ்த்துமின்-வாழ்த்துங்கள், எ-று.

66. வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றாத்தளிரடிப்பூங்குழலெம்
ஏழைக்கிடையிறுக்குங்குயபாரமியக்குறினே.

இ - ள். வாழ - நித்தியவாழ்வுபெற்றுவாழும்படியாக, எமக்கு - எங்களுக்கு, பெரிது - மிகவும், இன் அருள்செய்யும்-இனியஅருளைப்புரிகின்ற, மலர்க்கழலோர் - தாமரைமலர்போலுந் திருவடிகளையுடையவரும், தாழ் - நீண்ட, அ - அந்த, சடை - சடையையுடைய, திருவேகம்பர்தம்மை - திருவேகம்பமுடையாருமாகிய அவரை, தொழாதவர் போய்வாழ் - வணங்காதவர் போய்வாழ்தற்குரிய, அப்பரல்சுரம் - அந்தப்பருக்கைக் கற்கள்நிறைந்த பாலைநிலத்தை, தளிர் அடி ஆற்றா - தளிர்போலும் பாதங்கள் சகிக்கப்பெறாத, பூங்குழல் எம் ஏழைக்கு - மலரையணிந்த கூந்தலையுடைய எமது பெண்ணுக்கு, குயபாரம் இயக்குறின் - தனபாரம் அசைதலுறின், இடை இறுக்கும் - (அவை) இவளது நுண்ணிடையை முறித்தேவிடும், (ஆதலால்) இனியிவளைவிரும்புவோர்க்கு எம்மன்னை கொடுக்கவுங்கூடும். எ-று.

ஆற்றாதளிர் அடியெனவைத்து சகியாத்தளிரடியையுடைய வென்றுரைப்பினுமமையும்.

இதுதாயச்சங்கூறிவரைவு கடாதல். அதாவது - வருத்தங்கூறிவரைவு கடாயதோழி, எம்முடையஅன்னை அவள்முலை முதிர்வுகண்டு இவள் சிற்றிடைக்கு ஒருபற்றுக் கண்டிலேமென்று அஞ்சாநின்றாள் இனிமகட்பேசுவார் மறாதுகொடுக்கவுங்கூடுமெனத்தாயச்சங்கூறிவரைவு கடாவாநிற்றல். ,,பனித்துண்டஞ்சூடும்'' என்பதுதிருக்கோவையார். ''அமுதமுந்தருவும்''என்பது கல்லாடம்.

67. உறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையினலையபேருளேகம்பனர் [ர்
துறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளையோ
குறுகின்றபூங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொளே.

இ - ள். ஐய - ஐயனே, உறுகின்ற வெவ்வழல் - ஒருகாலைக்கொருகால் மிகாநின்ற வெவ்வியநெருப்பையுடைய, அக்கடம் - அந்தப்பாலைநிலமும், இக்கொடிக்கு - இந்தப்பெண்ணுக்கு, உன் பின்வரப்பெறுகின்ற வண்மையினல் - உன்பின்னே தொடர்ந்துவரப் பெறுகின்றவண்மையினல், பேர் அருள் ஏகம்பனர் - பெருங்கருணையையுடைய திருவேகம்பமுடையாரது, துறுகின்ற - நெருங்குகின்ற, மெல்மலர் - மெல்லியமலர்களை யுடைமையால், தண் - தட்பமாயுள்ள, பொழில் - சோலைசூழ்ந்த, கச்சியைச்சூழ்ந்து - கச்சியைவளைந்து, இளையோர் குறுகின்ற - இளைஞர் நெருங்குகின்ற, பூக்குவளைக்குறும் - பொலிவாகிய குவளைமலர்கள் மிக்கு விளங்குகின்ற, தண்பணை என்று - தண்ணியவயல்சூழ்ந்த மருதநிலமே யாமென்று, கொள் - நீ உன்மனத்தகத்துக் கொள்வாயாக, எ - று.

இது ஆதரங்கூறல். அதாவது-போக்கருமைகூறிய தலைமகனுக்கு, நின்னோடு போகப்பெறின், அவளுக்கு வெஞ்சுரமும் தண்சுரமாம், நீயருமைகூருது அவளைக்கொண்டு போவெனத் தோழி தலைமகளது ஆதரங்கூறுநிற்றல். "பிணையுங்கலையும்"[1]என்பது திருக்கோவையார். "நெடுவெணப்பொங்கர்" என்பது கல்லாடம்.

68. கொள்ளுங்கடுங்கதிரிற்கள்ளித்தீச்சிலவேயுலர்ந்து
விள்ளும்வெடிபடும்பாலையென்பாலன்விடலைபின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளுமதுமறந்தாரெனப்போவதுரைப்பரிதே.

இ - ள். கொள்ளும் கடுங்கதிரின் - தன்மேலேற்றுக்கொண்ட கடுமையாகிய சூரியவெப்பத்தால், சிலகள்ளி - சிலகள்ளிச்செடிகளும், தீ - நெருப்பைத் தன்னிடத்தேயுடைய, சிலவேய் - சிலமூங்கில்களும், உலர்ந்து - உலர்ந்து, விள்ளும்வெடிபடும் - பிளப்பதும் வெடிப்பதுமாகிய தொழில்கள் நிகழப்பெறுகின்ற, பாலை - பாலைநிலத்தில், என்பாலன் - என்பாலகன், தெள்ளும்புனல் - தெளிந்த நீர்வளஞ்செறிந்த, கச்சியுள் - கச்சியிலுள்ள, திருவேகம்பர் சேவடியை - திருவேகம்பமுடையாரது திருவடிகளை, உள்ளுமது மறந்தார் என - நினைத்தலை மறந்தவர்போல, விடலைபின்னே - ஒருகாளைபின்னே, போவது - போவதைக்குறித்து, உரைப்பு அரிது - சொல்லுதல் அருமையாம், எ - று.

இது (சாம்போக்கு) அடிநினைந்திரங்கல். அதாவது-பாலைநிலத்தேதலைமகன் பின்போனதலைமகளது மென்மையையும் அந்நிலத்து வெம்மையையும் நினைந்து செவிலியிரங்காநிற்றல். "தாமேதமக்கொப்பு" என்பது திருக்கோவையார். பாலன் என்பது குட்டன் என்முற்போலப் பிள்ளையெனப் பொருள்பட்டுநின்றது. இது, திருக்கோவையாரில், "மயிலெனப்பேர்ந்து" என்னுஞ் செய்யுளானும் அதன் உரையானுமினிதுவிளங்கும்.

69. பரிப்பருந்திண்மைப்படையதுகானரெனிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாக்கும்வெய்யேனஞ்சலஞ்சடைமேற்
றரிப்பருந்திண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலையேயுமராயின்மறைகுவனே.

இ - ள். பரிப்பு அரு - பகைவர் தாங்குதற்கரிய, திண்மை - வலிமையுள்ள, படை அது - அத்தோன்றுகின்ற படை, கானர் எனின் - வேடராயின், (அவர்களை) சிறகுவிரி - சிறகுவிரித்தலையுடைய, பருந்துக்கு - பருந்துக்கூட்டத்துக்கு, இரையாக்கும் – இரையாக்குதற்குரிய, வெய்யேன் - கொடியேன், (ஆதலால்) அஞ்சல் - நீ அஞ்சவேண்டா, அம்சடைமேல் - அழகிய சடாபாரத்தின்மீது, தரிப்பு - தரிக்கப்பெற்ற, அரு - அருமையாகிய, திண் - திண்ணிய, கங்கையார் - கங்கையையுடையவரது, திருவேகம்பம் அன்ன-திருவேகம்பத்தையொத்த, பொன்னே-பொன்போல்வாளே, வரி - கட்டமைந்த, பரு - பெரிய, திண்சிலைஏய்-திண்ணியவில்லையுடைய, உமர் ஆயின் - உமராயின், மறைகுவன் - மறைந்துபோகிறேன், எ - று.

இது, தலைமகன்கூற்று. அதாவதுதலைமகன் தலைமகளையுடன் கொண்டு சுரத்தின் கண்ணேசெல்ல, அவள் தமர்பின்றொடர்ந்து வருவதைத் தலைமகள் கண்டு தலைமகனுக்குணர்த்த அவன் மறுமொழிகூறுவது.

70. வனவரித்திண்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவருபொன்னணங்கென்னணங்கிற்கெனெழிற்கழங்குந்
தனவரிப்பந்துங்கொடுத்தெனைப்புல்லியுமிற்பிரிந்தே
யினவரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே.

இ - ள். ஒல்கும் - தளராநின்ற, ஏழை நெஞ்சே - அறியாமையாகிய மனமே, வனம்வரிதிண் - அழகாகியகோடுகளையும் திண்மையையும்உடைய, புலியின் அதள்-புலித்தோலையுடைய, ஏகம்பன்-திருவேகம்பமுடையாரது, அருளே எனவரு - திருவருளேயென்று சொல்லும்படிவந்த, பொன் அணங்கு - (கண்ட) திருமகள் (அழகுக்குத்தோற்று) வருந்துதற்குரிய, என் அணங்கிற்கு - என்தையலுக்கு, என் எழில்கழங்கும் - எனது அழகிய அம்மனைக்காயையும், தனவரிபந்தும்-தன்னுடைய வரிந்துபுனைந்த பந்தையும்,

கொடுத்து - தந்து, என்னை புல்லியும் - என்னைத்தழுவியும், இல்பிரிந்து - மனையைநீங்கி, இனம் அரிக்கல் அதர் - கூட்டமாகிய பருக்கைக்கற்கள் செறிந்தபாலைநிலத்தில், செல்வது எங்கே - போவது யாண்டையது. எ-று.

தனம் - பொன்னுனியன்ற எனினுமாம்.

இது குறிப்புரைத்தல். அதாவது - வருத்தங்கூறிப் போக்குணர்த்தி அது வழியாகநின்று, என்னைப் புல்லிக்கொண்டு, தன்னுடைய பூவையை யும், பந்தையும், பாவையையும், கிளியையும் இன்றென்கைத்தந்தாள் அது நின்னோடுடன் போதலைக் கருதிப்போலுமெனத் தோழி தலைமகனுக்குத் தலைமகளது குறிப்புரையாநிற்றல். "மாலைவவந்தாண்ட" என்பது திருக் கோவையார்.

**71.** நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவட்பெற்றெடுத்த
வெஞ்சார்வொழியத்தன்பின்செலமுன்செல்வெடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே.

இ - ள். நெஞ்சு ஆர் தர - மன மநுபவிக்கும்படி, இன்பம் செய் - சுகத்தைச்செய்கின்ற, கழல் - திருவடிகளையுடைய, ஏகம்பர் - திருவேகம்ப முடையாரது, கச்சி அன்னாள் - கச்சி நகரையொப்பாள், பஞ்சு ஆர் அடி வைத்தபாங்கு இவை - பஞ்சின் றன்மையமைந்த பாதங்களைவைத்த பக்க ங்கள் இவை, ஆங்கு - அதுபோலவே, அவள்பெற்றெடுத்த - அவளையீன் றெடுத்த, எம்சார்வு ஒழிய - எமது சார்புகெட, தன்பின்செல்ல - தன்பின் னேதொடர்ந்துசெல்ல, முன்செல்-முன்னேசென்ற, அஞ்சாஅடுதிறல்காளை - அஞ்சாமையும் பகைவனைக் கொலைசெய்யும் வலிமையும் உள்ளவிடலையின், வெடு வெடு என்றபோக்கு இவை-வெடுவெடென்று நடந்த அடிச்சுவடுகள் இவை, அந்தத்திலே - முடிவிலே, எ - று.

இது சுவடுகண்டறிதல. அதாவது-சோதிடம்பெற்றுச் செல்லாநின்ற வள்; இம்முரம்பின் கட்கிடந்த இவை தீவினையேனெடுத்து வளர்த்தமாணி ழைசிறடி, உவை அக்கள்வனடியாமெனச் சுவடுகண்டறியாநிற்றல். "தெள் வன்புனற்சென்னியோன்" என்பது திருக்கோவையார். "நிணமுயிருண்ட" என்பது கல்லாடம்.

**72.** இலவவெங்கானுனையல்லாற்றெழுஞ்சர்ணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
னுலவுங்கதிர்தணிவித்தருள்செய்யுன்னுறுதுணைக்கே.

இ - ள். தொழும் - யாவரும் வணங்குதற்குரிய, சரண்-திருவடியை யுடைய, ஏகம்பனார் - திருவேகம்பமுடையாரது, நிலவும் - விளங்குகின்ற, சுடர் ஒளி - ஒளிபோலும் ஒளியையுடைய, வெய்யவனே - சூரியனே, பருக்கை - பருக்கைக்கற்கள், தண்மலர்மிதித்துச் செல்லக்குளிரவும் - தண்ணியமலர்மீது மிதித்துச்செல்லுதல் போலச் செல்லும்படிக் குளிர்ந்திருக்கவும், தளிர் அடி செல்சுரத்து - தளிர்போலும் பாதங்களையுடைய எமது பெண் நடாவாநின்ற சுரத்தின்கண், இலவம் - இலவம்பூப்போன்ற, வெம் - (கண்டார்க்கு) விருப்பத்தைத்தருகிற, கால்நுனை அல்லால் - கால் நுனிக்கேயன்றி, உன் உறுதுணைக்கு - உன் உற்றதுணைக்கு, உன் உலவும் கதிர் - உனது வீசுகின்றகிரணங்களை, தணிவித்தருள்செய்-தணிவித்தருள்வாயாக.

இது சுடரோடிரத்தல். அதாவது-தளிர்போலும் பாதங்களையுடைய எமதுபெண்,பருக்கைக்கல்லடர்ந்துபரந்த சுரத்தின்கட்சென்றனளாதலால் அவளடி வருந்தாதிருக்க, உன்வெங்கதிர் தண்கதிராமாறு அருள்செய்வாயாக வெனச்செவிலி சுடரையிரந்து கூறுகிற்றல். "பெற்றேனொடுங்கிள்ளை வாட" என்பது திருக்கோவையார். உறுதுணை - தாமரைமலர், அது இவ்விடத்துப் பர்தத்தையுணர்த்தி நின்றது.

73 துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலுமுன்
னிணையொத்தகொங்கையொடேயொத்தகாதலொடேகினரோ
யணையத்தரேறொத்தகாளையைக்கண்டனமற்றவரோற்
பிணையொத்தநோக்குடைப்பெண்ணிவடன்றொடும்பேசுமினே.

இ - ள். துணை ஒத்தகோவை - சமானமாகிய ஒரு ஈடுள்ள, உம்போல் - உம்மைப்போல, எழில் - அழகுள்ள, பேதையும் தோன்றலும் - தலைவியும்தலைவனும், உன் இணை ஒத்த-உனது இரண்டும் ஒன்றற்கொன்று ஒத்த, கொங்கையொடே ஒத்த - தனங்களுக்கு நிகரான, காதலொடு - ஆசையோடு, ஏகினரோ - போயினரோ (உரைமின்) எ - று. அணை - (உமாதேவியைத்) தழுவுகின்ற, அத்தர் - சிவபெருமானது, ஏறு ஒத்த - இடபத்தை நிகர்த்த, காளையைக்கண்டனம் - கட்டிளமையோனைக் கண்டோம், மற்றவரோல் - மற்றவரோவென்றால், (அவரைக்குறித்து) - பிணை ஒத்த நோக்கு உடைபெண் - பெண்மானின் பார்வைபோன்ற பார்வையை யுடைய பெண்ணாகிய, இவள் தன்றொடும்-இவளோடும், பேசுமின்-பேசுங்கள், எ - று.

இச்செய்யுள் வினாவிடையாய் இரண்டுமுடிபாய் முடிந்தது. முன்னையது செவிலிவினா, பின்னையது புணர்ந்துடன்வருவோர் விடை. இது புணர்ந்துடன் வருவோரைப் பொருந்திவினாவல். அதாவது - வேதியரை வினாவி, அதுவழியாகச் செல்லாநின்ற செவிலி, நும்மைக்கண்டு, என்றால்

தேடப்படுகின்றூர் மீண்டாரெனக்கருதி மகிழ்ந்தேன், அதுகிடக்க, இவ்வாறு நும்மோடொத்த வொழுக்கத்தினராய் முன்னே யிருவரைப்போகக் கண்டீரோவெனப் புணர்ந்துடன் வருவோரைப்பொருந்தி வினவாநிற்றல். "மீண்டாரெனவுவந்தேன்" என்பது திருக்கோவையார். இதுவும் இரண்டுமுடிபாய் முடிந்தமைகாண்க.

**74.** மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளியையு
நென்னலிப்பாக்கைவந்தெய்தினிரோலெம்மனையிற்கண்டீர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
மன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரே.

இ - ள். மின் - மின்கொடியை, நலிக்கும் - வருத்துகின்ற, வணக்கத்து - துவட்சியையுடைய, இடையாளையும் - இடையையுடையாளையும், மீளியையும் - விடலையையும், நென்னல் - நேற்று, வந்து இப்பாக்கை எய்தினிரோல்-வந்துஇந்தச் சிற்றூரை யடைந்திருப்பீராயின், எம்மனையில்கண்டீர்-எம்வீட்டில் கண்டேயிருப்பீர், பின்னர் - பிறகு, அவர் - அவர்கள், இ- இந்த, போக்கு அரு - செல்லுதற்கரிய, குன்றுகடந்து - மலையைக்கடந்து, இன்று - இன்று, கம்பர் - திருவேகம்பமுடையாரது, மன் - நிலைபெற்ற, அரிதேர்ந்துதொழும்-திருமால் ஆராய்ந்துவணங்குகின்ற, கச்சிநாட்டிடை வைகுவர் - திருக்கச்சி நாட்டின்கண் தங்கியிருப்பார்கள், எ - று.

இது மீளவுரைத்தல். அதாவது - இவைபெடுத்துரைத்தவர், அவ்விருவரும் ஓரிடுக்கணின்றிப்போய்த் திருவேகம்பமுடையாரது கச்சிநாட்டிடைத்தங்குவர், இனி நீ செல்வதன்று, மீள்வதேகாரிய மெனத்தேடிச் செல்லாநின்ற செவிலியை மீளக்கூறுதல். "மீள்வது செல்வதன்று" என்பது திருக்கோவையார்.

**75.***உவரச்சொல்வேடுடைக்காடுகேந்தாடியவேகம்பனூர்
அவரக்கன்போனவிமானத்தையாயிரமுண்மைசுற்றுந்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவிண்மேல்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்கார்மயிலே.

**76.** கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யோர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசெங்கெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னெலியேயொக்குநேரிழையே.

இ - ள். நேரிழையே - நேரிய ஆபரணங்களையணிந்த பெண்ணே, கார்மிக்க கண்டத்து எழில் - கருமைமிகுந்த கண்டத்தழகையுடைய, திருவேகம்பர் - திருவேகம்பமுடையாரது, கச்சியின்வாய்-திருக்கச்சியின்கண்,

ஏர்மிக்க சேற்று - அழகுமிகுந்த சேற்றின்கண், எழில் - அழகாகிய, நெல் நடுவோர் ஒலி - நெல்லினது நாற்றை நடுவோரது ஓசையும், பொன்மலை போல் - மேருமலைபோல, போர்மிக்க செந்நெல்குவிப்போர் ஒலி - மிகுதியாகிய செந்நெற்களைப் போர்களாகக் குவிப்போரது ஓசையும், கருப்பு ஆலை ஒலி - கருப்பாலையின் ஓசையும், நீர்மிக்க - நீர்மிகுந்த, யா - பெரிய, கடலின் ஒலியே ஒக்கும் - கடலோசையையே ஒத்திராநின்றது, (அதனை நீயுற்றுக்கேள்) எ - று.

இது நகரணிமைகூறல். அதாவது தலைமகளை யுடன்கொண்டு செல்லாநின்ற தலைமகன், தன்னகரணிமையை அவளுக்குக்கூறுகிற்றல். நெல்லினது நாற்றைநடுவோரது ஓசைமுதலாயின கடலோசைபோலக் கேட்கின்றது, ஆதலால், திருவேகம்பரது கச்சியம்பதி சமீபித்தது, நீ தளர வேண்டாவென்பது கருத்து.

**77.** நேர்த்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமையாலிமைதீந்தகண்பொன்னேபகட்டுரிவை
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுட்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே.

இ - ள். நேர்த்து அமையாமை-(பகைவர்) எதிர்த்து அமையாமைக் கேதுவாகிய, விறல் - வலிமையுள்ள, கொடுவேடர் - கொடிய வேடர்வாழ்கின்ற, நெடுசுரத்தை - நெடுமையாகிய பாலைநிலத்தை, பார்த்தமையால் - நோக்கினமையால், இமைதீந்தகண் - இமைகரிந்தகண்கள், பொன்னே - பொன்போல்வாளே, பகடு உரிவை போர்த்தமையால் - யானையின் தோலைப்போர்த்தமையால், உமை நோக்கு அரு - உமாதேவியார் (அச்சத்தால்) பார்த்தற்கரிய, கம்பர் - திருவேகம்பர், கச்சிப்பொழிலுள் - தமது கச்சியிலுள்ள சோலையில், சேர்த்தமையால் - சேர்த்ததனால், இமைப்போது - இமையளவில், அணி - அழகிய, சீதம் சிறந்தன - குளிர்ச்சியை யடைந்தன, (இனி நீ யஞ்சவேண்டாம்.) எ - று.

இது சுரங்கடந்துசென்ற தலைமகன் தலைமகளுக்குத்தாமடைந்த வெப்பந்தணிந்ததைக் குறித்துக்கூறல். உண்டென்ன வுயிர்நிற்குமாதலாலும், சுரவெப்பத்தில் பொன்னுருகியோடு மாறுபோல வுருகின ளாதலாலும் பொன்னேயென்றான். அன்றித் திருமகளையொப்பவளே யெனினுமமையும். இப்பொருளில் மலரிற்சிறந்த தாமரைமலர்மீதிருக்கு முனக்கு இப்பாலைநிலவெப்பமடாதே யென்றிரங்கினானாகக்கொள்க.

**78.** சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிவைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலவைதீங்கனியின் [ர்
பொறைகொண்டவாழைப்பொதும்புவைபுன்சடையேகம்பனா
நறைகொண்டபூங்கச்சிகாடெங்குமிவ்வண்ணநன்னுதலே.

இ - ள். நன்னுதலே-அழகிய நெற்றியையுடையாளே, சிறைவண்டு பாடும் - சிறைகளையுடைய வண்டுகள்பாடுகின்ற, கமலக்கிடங்கு இவை - கமலத்தடங்களிவை, செம்பழுக்காய் - செவந்த பழுத்த காய்களை, நிறை கொண்ட - நிறையக்கொண்ட, பாளை-பாளைகளையுடைய, கமுகின்பொழில் அவை - கமுகஞ்சோலைகள் அவை, தீங்கனியின் பொறைகொண்ட - மதுரமாகிய கனிகளின் பாரத்தைத்தாங்கிய, வாழைப்பொதும்பு உவை-வாழைச்சோலைகள் உவை, புன்சடை யேகம்பனூர் - புல்லிய சடையையுடைய திருவேகம்பமுடையாரது, நறைகொண்ட - மணங்கொண்ட, பூ - மலர்ச் செறிவுள்ள, கச்சிநாடு எங்கும் - கச்சிநாட்டின் எவ்விடத்தும், இவ்வண்ணம் - இவ்வண்ணமேயுள்ளது, எ - று.

இது நகர்வளங்கூறல். அதாவது - தலைமகளை யுடன்கொண்டு சென்று தன்னகரையடைந்த தலைமகன், அவளுக்குத்தன்னகர்வளங்கூறிமகிழ்தல்.

**79.** நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
யென்னவெலாமொப்புக்காதென்றுவீறிடுமேகம்பனூர்
பொன்னுதலார்விழியார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே.

இ - ள். ஏகம்பனூர் - திருவேகம்பமுடையாராகிய, பொன் நுதல் ஆர் விழியார் - அழகிய நெற்றியிற்பொருந்திய கண்ணையுடையாரது, கச்சி நாட்டுள் - கச்சிநாட்டில், இப்பொய்கை உள்ளே - இந்தப்பொய்கையின் கண், நன்னுதலார் கருங்கண்ணும்-மாதரது கருங்கண்களும், செவ்வாயும்- செவந்தவாயும், இவ்வாறு என - இப்படியாமென்று சொல்லும்வண்ணம், மன் - நிலைபெற்ற, இதழ் ஆர் - இதழ்கள் நிறைந்த, திருநீலமும் - அழகிய நீலப்பூக்களும், ஆம்பலும் - செவ்வல்லிப்பூக்களும், போய்பூப்ப - சென்று மலர, எல்லாம்-எல்லாவகையானும், காது-காதுக்கு, வள்ளை ஒப்பு என்ன- வள்ளைத்தண்டு ஒப்பாமென்று சொல்லும்படி, என்று - எக்காலத்தும், வீறிடும் - மேன்மையடைந்திருக்கும், எ - று.

இதுவும் மேலையது.

**80.** உள்வார்குளிரநெருங்கிக்கடுங்கிடங்கிட்டந்னீர்
வள்வாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொள்வார்பிறவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
கள்வார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே.

இ - ள். எங்களை ஆள்கொள்வார்-எம்மையாட்கொள்ளும்பொருட்டு, பிறவிகொடாத - பிறவிகளை யெமக்குக்கொடாத, ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, குளிர் குவளை - குளிர்ந்த குவளைகளின், கள்வார்தரு - கள்

ளொழுகாநின்ற, கச்சிநாட்டு - கச்சிநாட்டின்கண், எழில் - அழகாகிய, ஏரிகளப்பரப்பு - ஏரிகளின் இடப்பரப்புகளில், உள் - உள்ளனவாய், வார் குளிரநெருங்கி-நீர் குளிரநெருங்கி, கடுங்கிடங்கு இட்ட-ஆழமாகிய பள்ளங்களில் நிறைந்துள்ள, நல்நீர் - நல்லநீரில், வள் - வளவிய, வாளைகளொடு - வாளைமீன்களோடு, செங்கயல் மேய்கின்ற-செங்கல்கள்மேய்கின்றன,எ-று.

இதுவும் மேலையது.

௮௧. பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
தரப்பாசிகண்மிகுபண்பொடுசேம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரெருமைமலர்தின்னத்துன்னுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே.

இ - ள். பொலி நுதலாய் - விளங்குகின்ற நெற்றியையுடையாளே, செல்வக்கம்பர்தம் பூங்கச்சி - செல்வப்பொலிவுள்ள திருவேகம்பரது அழகிய கச்சியில், பரப்பு ஆர் விசும்பில் படிந்த - பரப்புநிறைந்த ஆகாயத்திற் படிந்த, கருமுகில் அன்ன - கருமேகங்களையொத்த, நல் நீர் - நல்ல நீர்மையுள்ள, தரம் - மேன்மையாகிய, பாசிகள்-பாசிகள், மிகுபண்பொடு - மிக்கிருக்கும் குணத்தோடு; சேம்பு அடர் - சேப்பஞ்செடிகள் அடர்ந்த, தண் பணைவாய் - குளிர்ந்தவயல்களில், சுரப்பு ஆர் எருமை - பாற்சுரப்புள்ள எருமைகள், மலர்தின்ன-மலர்களையுண்ண, துன்னு-நெருங்கிய, கரா ஒருத்தல் - ஆண்முதலைகள், பொரப்பார் - (அவற்றோடு) பொருதலைப்பார்ப்பாயாக, எ - று.

இதுவும் மேலையது.

௮௨. கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணான்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமறா
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே.

இ - ள். கச்சு ஆர்முலை - கச்சையணிந்த தனங்களையுடைய, மலைமங்கை - மலைமடந்தையாகிய, மகிழ்திருவேகம்பர் தேவி - மகிழாநின்ற திருவேகம்பரது தேவியார், கண் ஆர - பெருமைநிரம்ப, எண்ணான்கு அறமும் வைச்சார் - முப்பத்திரண்டறங்களையும் பரிபாலிக்கவைத்து, மகிழ - மகிழும்படி, விண்ணோர் - தேவர்களும், விச்சாதரர் - வித்தியாதரரும், தொழும் - வணங்குகின்ற, விமானமும் - விமானமும், தன்மம் அறா - அறங்கள் நீங்காது நிகழ்கின்ற, அச்சாலையும் - அந்த அறச்சாலையும், பரப்பு ஆங்கு - பரப்புக்களாகிய அவ்விடங்களில், அணிமாடங்கள் - அழகிய மாளிகைகளும், ஓங்கின - உயர்ந்திராநின்றன, எ - று.

இதுவும் மேலையது. முப்பத்திரண்டறமாவன - ஆதுலர்க்குச் சாலை முதலாயின, இவற்றை அடியில்வரும் பாடல்களாலுணர்க.

வண்ணான்புன்னவிதன்காதோலைசோலைமடந்தடம்வெண்
சுண்ணம்பறவைப்பிணஞ்சுடற்றூரியஞ்சோறளித்தல்
கண்ணாடியாவிற்குரிஞ்சுகல்வாயுறைகண்மருந்து
தண்ணீர்ப்பந்தல்தலைக்கெண்ணெய்பெண்போகந்தராலயமே. (௯)

மேதகுமாதுலர்க்குச்சாலையேறுவிடுத்தல்கலை
யோதுவர்க்குண்டிவிலங்கிற்குணவோடுயர்பிணிநோய்க்
கீதன்மருந்துசிறைச்சோறளித்தலியல்பிறரின்
மாதுயர்காத்தனற்கன்னியர்தானம்வழங்கலுமே. (உ)

கற்றவறுசமயத்தோர்க்குணவுகருதும்விலை
யுற்றதளித்துயிர்மீட்டல்சிறுருக்குதவனற்பால்
மற்றுமகப்பெறுவித்தல்சிறுரைவளர்த்தலெனப்
பெற்றவிவற்றினையெண்ணான்கறமெனப்பேசுவரோ. (௩)

83.* ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகந்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாயிழையே.

84. இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியதின்னபிறங்கலுன்னு
நுழையாவருதிரிசூலத்தணோக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலுதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே.

இ - ள். பொன்னே - பொன்போல்வாளே, இன்னபிறங்கல்-இந்த மலை, ஆர்அரவு இழைஅணி - அரிய சர்ப்பாபரணத்தையணிந்த, ஏகம்பர்- திருவேகம்பரது, நெற்றிவிழியின்வந்த - நெற்றிக்கண்ணினின்றும்வந்த, பிழையா அருள் - பிழையாத அருளையுடைய, நம்பிராட்டியது - நம்பெருமாட்டியது, உது - உது, உன்னும் - நினைத்தற்குரிய, நுழையாவரு - நுழைந்துவருகின்ற, திரிசூலத்தள்-திரிசூலத்தையுடையாளது, நோக்குஅரு-பார்த்தற்கரிய, பொன்கடுக்கை - பொன்போலுங் கொன்றையினது, தழை ஆர்- செழித்தல்பொருந்திய, பொழில் - சோலையாம், (ஆதலால் இனி) நமக்குத் தளர்வு இல்லை - நமக்குத் தளர்ச்சியில்லை, எ - று.

இது நகரணிமைகூறல்.

85. தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றிதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே.

இ - ள். உமை - உமாதேவியானவள், மிகுவெள்ளம்கண்டு - அதிகரித்துவரும் கம்பையாற்றுப் பெருக்கைக்கண்டு, தளரா ஓடி - மனந்தளர்ந்தோடி, தம்மைத்தழுவ - தம்மைத்தழுவிக்கொள்ள, கிளை ஆர்வளைக்கை - தளிர்போன்ற வளையலேயணிந்த கையினது, வடுபடும் - தழும்புபொருந்தும் படியாக, ஈங்கு ஓர்கிறிபடுத்தார் - இவ்விடத்தோர் வழியையுண்டாக்கினவரது, வளம்மாபொழில் - வளமாகிய பெரியசோலைசூழ்ந்த, திருவேகம்பம் - திருவேகம்பம் என்னுந் திருப்பதியாகிய, இது - இதனை, வந்து இறைஞ்சி - வந்துதொழுது, மடவாய் - பெண்ணே, இவ்வுலகத்துள்ளே - இந்தவுலகத்துக்குள், உளர் ஆவது படைத்தோம் - பிறந்துளேம் என்னுந் தன்மையை அடைந்தோம், எ - று.

இதுவும்மேலயது. பெண்ணே, திருவேகம்பத்தையடைந்து நாம்பிறவிப் பயனைப்பெற்றோம் என்பது கருத்து.

86.*உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கி
வலவியமாமதம்பாய்முகிலியானைகள்வானில்வந்தாற்
சுலவியவார்குழல்பின்னரொன்பாரிரொனநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே.

87.*நீரொன்னிலும்மழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலையென்
றூரொன்னிலுந்தமராயுரைப்பாரமராபதிக்கு
நேரொன்னிலுந்தருங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேரொன்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானன்பர்தேர்வரவே.

88. வரங்கொண்டிமையோர்நலங்கொள்ளுமேகம்பர்கச்சியன்னாய்
பரங்கொங்கைதூவன்மினீர்முத்தமன்பர்தந்தேரின்முன்னே
தரங்கொண்டுபூக்கொண்டுகொன்றைபொன்னாகத்தண்காந்தள்கொத்தின், கரங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்தன கார்முகிலே.

இ - ள். இமையோர் - தேவர்கள் வரங்கொண்டு - வரம்பெற்று, நலம்கொள்ளும் - நன்மையையடைகின்ற, ஏகம்பர் - திருவேகம்பரது, கச்சி அன்னாய் - கச்சியையொப்பவளே, நீர்முத்தம் - கண்ணீராகிய முத்தத்தை, பரம்கொங்கை - பெரியதனங்களின்மேல், தூவல்மின் - தூவாதீர்கள், அன்பர் தம்தேரின்முன்னே - அன்பரது தேர்வருமுன்னமே, கார்முகில் - கார்காலத்து மேகங்கள், தரம்கொண்டு - மேன்மையைக்கொண்டு, கொன்றைப்பூ பொன்னாகக்கொண்டு - கொன்றைமலர்களைப் பொன்னாகக்கொண்டு, தண்காந்தள் - தண்ணியகாந்தள், கொத்து - பூங்கொத்துக்களை, இன் கரம்கொண்டு - இனியகையிற்கொண்டு, பொற்சுண்ணம் ஏந்தவும் - பொற்பராகத்தைத்தாங்கவும், போந்தன - வந்தன, எ - று.

இதுதலைவிகூற்று. தலைமகள் கார்ப்பருவங்கண்டு தோழியொடுகூறல். தோழீ, அன்பர் தேர்வருமுன்னமே கார்காலமேகங்கள்வந்தன, இனியாம் செய்யவடுப்பது யாது என்பது கருத்து,

89. கார்முகமாரவண்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச்சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டுசுரந்ததுநேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்துதும்வெய்துயிர்ப்பே.

இ - ள். நேரிழை - நேரிழாய், கார்முகம் - (மேரு)வில்லை, ஆர-பொருந்த, வண்கைகொண்ட - வளவியகையிற்கொண்ட, கம்பர் - திருவேகம்பமுடையாரது, கழல்தொழுது - திருவடியைவணங்கி, போர்முகம் மாபகை வெல்லச்சென்றார் - யுத்தமுகத்தில் பெரும்பகையை வெல்லச்சென்ற நந்தலைவர், புணரி நீர்முகமாக இருண்டுசுரந்தது - கடல் நீர்தன்னிடத்ததாக (மேலும்) இருண்டுபெருகினதை, நினையார் - நினையாராயினர், (இனி) நாம் - யாம், ஆர்முகம் ஆக - யாவர்வாயிலாக, வினைக்கடல் நீந்துதும் - வினைக்கடலைக்கடப்போம், வெய்துயிர்ப்பே - (கடத்தற்கு வாயிலின்மையால்) நெட்டுயிர்ப்பே நமக்குள்ளது, எ - று.

கார்-முகம் ஆரஎன்பதற்கு, மேகத்தின்றன்மை தன்னிடத்திற்பொருந்த எனினும், வண்கையென்பதற்குக் கொடைக்கையெனினும் அமையும். இது தலைமகன் பகைமேற்சென்றகாலத்தில் கார்ப்பருவம் வரக்கண்ட தலைமகள் வருந்தித் தோழியொடுகூறியது. வினை இவ்விடத்துத் துன்பத்தைக் குறித்து நின்றது.

90. உயிராயினவன்பர்தேர்வரக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல்வளைபான்மைகளாந்
தயிரார்பானெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போற்
கயிராவளையழுந்தக்கச்சிறுத்தனகார்மயிலே.

இ - ள். கார்மயிலே - கார்காலத்து மயிலையொப்பவளே, உயிர் ஆயின அன்பர் தேர்வரக்கேட்டு - உயிர்போன்ற நந்தலைவரது தேர்வருமோசையைக்கேட்டு, முன்வாட்டம் உற்ற - முன்னே வாட்டமடைந்திருந்த, பயிர்-பயிர்கள், ஆர் புயல்பெற்றதென்ன - நிறைந்த மேகநீரைப் பெற்றாற்போல, நம்பல்வளை - நம்மாதினது, பான்மைகள் ஆம் - தன்மைகள் வேறுபட்டன, (என்னெனின்) தயிர் ஆர் பால் நெய்யொடும் - தயிர் அரிய பால் நெய் இவற்றுடன், ஆடிய திருமஞ்சனமாடிய, ஏகம்பர் தம் அருள்போல் - திருவேகம்பமுடையாரது அருள்போல, கய் இரா - கையிலிராது கழன்றுசிந்தின, வளை அழுந்த-வளையழுந்தாநிற்க, கச்சு இறுத்தன - கச்சிறுக்கப்பட்டன, எ - று.

இதுதலைமகனது தேர்வருமோசைகேட்ட தலைமகள் பூரித்துத் தோழியொடுகூறல். தலைமகன் பிரிவாற்றாது மெலிந்தபோது கையினின்றுங்கழ

ன்று சிந்தினவளையல்கள். இப்பொழுது அவனது தேர்வருமோசைகேட்டு உடல்பூரித்தமையால் "கய் இரா வளையழுந்த" என்றும், அவன் பிரிவில் தளர்ந்தகொங்கைகள் இப்பொழுது உடற்பூரிப்பால் விம்மிக் கச்சைக்கிழித்தமையால், "கச்சிறுத்தன" என்றும் கூறினள். தயிர்முதலிய பஞ்சகவ்வியங்களுமுகந்தான் என்றற்கு "தயிரார் பானெய்யொடுமாடிய வேகம்பர்" என்றார். இதற்குதாரணம், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த திருவையாற்றுத் திருத்தாண்டகம் ௪ - ம்பாட்டு. "வானுற்ற அ - ம், பாட்டு, "ஆவினிலைந்தும்" என்றற்றொடக்கத்தன. ஆடுதல் - திருமஞ்சன திரவியமாக ஏற்றுக்கோடல்.

91. கார்விடைவண்ணத்தனன்றேழ்தழுவினுமின்றுதனிப் [ர்
போர்விடைப்பெற்றெதிர்மாண்டாரெனவண்டர்போதவிட்டா
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைத்தம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே.

இ - ள். கார்விடைவண்ணத்தன் - மேகத்தை முடுக்குகின்ற நிறத்தையுடைய கண்ணன், அன்று - அக்காலத்தில், ஏழ்தழுவினும் - ஏழிடபங்களைத்தழுவினும், இன்று - இப்பொழுது, தனிபோர் விடைப்பெற்று - ஒப்பற்ற போரின்கண் விடுகையைப்பெற்று, எதிர் - எதிர்ந்து, மாண்டார் - பலர்மடிந்தார், என - என்றுசொல்லும்படி, அண்டர் - ஆயர்கள், மழவிடை - இளவேற்றை, போதவிட்டார் - வெளியேறவிட்டார்கள், (இவ்வேற்றைத்தழுவினவர்கள்) தார்விடை ஏகம்பர்-கிங்கிணிமாலையையணிந்த இடபவாகநத்தையுடைய ஏகம்பரது, கச்சிப்புறவிடை - கச்சியைச்சார்ந்த முல்லைநிலத்தின்கண், தம்பொன் - தமது பொன்னை யொப்பவளாகிய பெண்ணினது, நன்பூண் - அழகிய ஆபரணங்களையணிந்த, மார்விடை - மார்பில், வைகல் - நாடோறும், தழுவப்பெறுவார் - தழுவப்பெறுவார்கள்,

வள் நத்தன் அன்று ஏழ்கார்விடைதழுவினும் எனநிறுத்தி, வளமையாகிய சங்கத்தையுடைய கண்ணன் அக்காலத்தில் ஏழாகிய பெரிய இடபங்களைத் தழுவினனும் எனவுரைப்பினுமமையும். இது நப்பின்னையை மணந்தபோது நிகழ்ந்தது. அண்டர்தம்பொனன்பூண் மார்விடைவைகல் பெறுவார்தழுவ மழவிடைபோதவிட்டார் என இயைத்துரைப்பினும் பொருந்தும். வைகல்பெறுவார் - தழுவுதலைப்பெறவிரும்புவோர். இது ஏறுகோள்கூறி வரைவுகடாதல். அதாவது, எதிர்கோள்கூறி வரைவுகடாய தோழி, எம்முடைய ஐயன்மார், அவளுடைய முலைப்பெருமையும் இடைச்சிறுமையுங்கண்டு, எம்மூர்க்கண் விடையின்மருப்பைத் திருத்திவிட்டார். இனி அடுப்பன அறியேனென ஏறுகோள்கூறி வரைவுகடாதல். இவ்விடத்துக்கூறக்கருதுகின்றது முல்லைத் திணையாதலால், அதற்கு மரபாவது, ஓரிடத்து ஒருபெண்பிறந்தால், அப்பெண்ணைப்பெற்றவர் தம்தொழுவில்

அன்று பிறந்த சேங்கன்றுள்ளனவெல்லாம் தன்னூட்டியாக விட்டுவளர்த்து, அவ்வாறுவளர்ந்த ஏறுகளைத்தழுவினனொருவனுக்கு அப்பெண்ணைக் கொடுப்பது, "படையார்கருங்கண்ணி" என்பது திருக்கோவையார்.

**92.** விடைபாய்கொடுமையெண்ணாதுமேலாங்கன்னிவேற்கருங்கட்
கடைபாய்மனத்திளங்காளையர்புல்கொலிகம்பர்கச்சி
மடைபாய்வயலிளமுல்லையின்மான்கன்றொடான்கன்றினங்
கடைபாய்தொறும்பதிமன்றிற்கடல்போற்கலந்தெழுமே.

இ - ள். விடைபாய் கொடுமை எண்ணாது - இடபம் பாய்கின்ற கொடுமையை நினையாமல், மேலாம் கன்னி - மேன்மையையுடைய பெண்ணினது, வேல்கருங்கண் கடைபாய்மனத்து - வேல்போலுங் கண்ணின் கடையானது பாயப்பெற்ற மனத்தினையுடைய, இளங்காளையர் - இளைய விடலையர், புல்கு ஒலி - (அவற்றைத்) தழுவுமோசை, கம்பர் கச்சி - திருவேகம்பமுடையாரது கச்சியின்கண், மடைபாய் வயல் - மடைகளில் நீர் பாய்கின்ற வயனிலத்திலும், முல்லையில் - முல்லைநிலத்திலும் உள்ள, மான் கன்றொடு ஆன்கன்று இனம் - மான்கன்றுடன் பசுக்கன்றின் கூட்டம், கடைபாய்தொறும்-வாயில்களில் பாயுந்தோறும், பதிமன்றில்-முல்லை நிலத்தின் வெள்ளிடையில், கடல்போலக்கலந்து எழும் - கடல்போலக்கலந்து மிக்கொலிக்கும், எ - று.

விடைபாய் கொடுமையெண்ணாது என்றமையால், கன்னிவேற்கருங்கட்கடைபாய்ந்த கொடுமைமிக்க தென்றவாறாயிற்று. வயலிளமுல்லையின் மான்கன்றொ டான்கன்றினம் என்றது எதிர் நிரனிறையாதலால் வயலில் ஆன்கன்றும் முல்லையில் மான்கன்றும் எனக்கொள்க. ஏகம்பர் கச்சியில் ஏற்றைத்தழுவுமோசையும் ஆன்கன்று மான்கன்றுகள் பாயுமோசையும் கலந்து கடல்போல் வொலிக்குமென்பது கருத்து.

**93** எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைத்துணர்மணற்குன்றிற்பரதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பினேரிரண்டாலுமுகத்தெனவே.

இ - ள். எழுமலர் - உண்டாகின்ற மலர்களால், தண்பொழில் - தண்ணிமையமைந்த சோலைசூழ்ந்த, ஏகம்பர்-திருவேகம்பத்திலுள்ளாரது, கச்சி - கச்சியைச்சார்ந்த, இருங்கடல்வாய் - பெரிய கடற்கரையின்கண், கொழுமணம் - கொழுவிய மணமுள்ள, புன்னைத்துணர் - புன்னைப்பூங்கொத்துகள்பரவிய, மணற்குன்றில் - மணற்குன்றின்மீதுள்ள, பரதர் கொம்பே - பரதர்மாதே, செழுமலர் சேல் அல்ல - செழுமையாகிய தாமரைமலர்மேலுள்ள சேல்மீன்களல்ல, வாள் அல்ல - வாள்களல்ல, வேல் அல்ல - வேல்கள் அல்ல, நீலம் அல்ல - நீலமலர்கள் அல்ல, முகத்து - உன்முகத்தின்கண், முழுமலர்க் கூர்அம்பின்-முழுமலரின்மேலுள்ள கூரிய

அம்புகள்போல, ஓர் இரண்டு ஆலும் - ஓரிரண்டசையாகின்றன, என்ன - (அவை) யாவை, எ - று.

முழுமலர்-தாமரைமலர். அவ் என்னவைத்து அவையாவை யெனினுமாம். கொம்பு - பூங்கொம்பு. இது பெண்ணுக்கு உவமையாகுபெயர். இதுகட்கொடுமையுரைத்தல். தலைமகன்கூற்று. கொல்லுங்கணையாகிய நீலமும் அல்ல எனவே இக்கண்ணின்கொடுமை சொல்லவேண்டாவாயிற்று.

94.* முகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
யுகம்பார்த்திரோலென்னலமுயரோகம்பர்கச்சிமுன்னீ
ரகம்பாகவார்வினளவில்லையென்னின்பவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவர்கொள்கான்மயலே.

95.* மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ்சுறவொடெழிமகர
மியக்கத்திடுசுழியோதங்கழிகிளரக்கழித்தார்
துயக்கத்தவர்க்கருளாக்கம்பர்கச்சிக்கடலபொன்னூன்
முயக்கத்தகல்வுபொருள்கொண்கநீர்வருமூர்க்கஞ்சுமே.

96.* மேயிரைவைக்கக்குருகுணராமதுவுண்டுபுன்னை
மீயிரைவண்டோதமர்புகடியவிரிகடல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றாரறிவார்நந்துறைவர்பொய்யே.

97. பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவணைகின்றதே.

இ - ள். பொய்வரும் நெஞ்சினர் - பொய்யமைந்த மனத்தையுடையவராகிய, வஞ்சனையாரையும் - வஞ்சகரையும், போகவிடா - (நழுவிப்) போகவிடாமல் வளைக்கின்ற, மெய்வரும் - உண்மையமைந்த, பேர்அருள் - பேரருளையுடைய, ஏகம்பர் - திருவேகம்பமுடையாரது, கச்சி - கச்சியின் கண், விரையினவாய் - விரைந்தனவாகி, கைவரும் - இருபுறத்தும் வருகின்ற, புள்ளொடு - பறவைகளோடு, சங்கு இனம் ஆர்ப்ப - சங்குக்கூட்டங்கள் சத்திக்கவும், அவ்வருதாமங்கள் இனம்வந்து ஆர்ப்ப - அந்தப் பெருகுகின்ற ஒளியின் தொகுதிவிளங்கவும், நம்சேர்ப்பர் - நம்சேர்ப்பரது. திண்தேர் - திண்ணிய தேரானது, அணைகின்றது - வந்தடையாநின்றது, எ - று.

இது தலைமகனது தேர்வரவுகேட்ட தோழி தலைமகட்குக்கூறியது.

98. இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவரோ.

**99.** காட்டிவைத்தார்தம்மையாங்கடிப்பூப்பெய்யக்காதல்வெள்ள
மீட்டிவைத்தார்தொழுமேகம்பரேதுமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவர்பாதங்களே.

இ - ள். ஆங்கு - அவ்விடத்து, அடி - திருவடியில், பூபெய்ய-மலர்களையர்ச்சிக்க, தம்மைக்காட்டிவைத்தார் - தம்மையெமக்குக் காட்டிவைத்தவர், காதல்வெள்ளம் ஈட்டிவைத்தார் - ஆசைப்பெருக்கைச் சேகரித்துவைத்தவராகிய அடியார், தொழும் - வணங்குதற்குரிய, ஏகம்பர் - திருவேகம்பமுடையார், ஏதும் இல்லாத எம்மை - நல்லொழுக்கம் சிறிதுமில்லாத ஏங்களை, தமக்கு அன்பது பூட்டிவைத்தார் - தம்மிடத்தன்பைப் பொருத்திவைத்தார், அதுபெற்று-அதனைப்பெற்று, பதிற்றுப்பத்து-நூறு பாடலை, பாட்டிவைத்தார் - பாடுவித்தார், (ஆதலால்) அவர்பாதங்கள் - அவரது திருவடிகளை, பரவித்தொழுவாம் - துதித்துவணங்குவோம், எ-று.

**100** பாதம்பரவியோர்பித்துப்பிதற்றிலும்பல்பணியு
மேதம்புகுதாவகையருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும் [ரே.
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர்மெய்த்தொண்ட

இ - ள். மெய்த்தொண்டரே - மெய்யன்பரே, பாதம்பரவி-திருவடியைத்துதித்து, ஓர் பித்துப்பிதற்றிலும் - ஒருபைத்தியவாசகத்தைப்பிதற்றினும், ஏத்து எனவே - (அதனையும்) நல்லதுதியென்றேகொண்டு, பல் பணியும் - (அப்படிப் பிதற்றினருடைய) பல் அடிமைத்தொழில்களையும், ஏதம் புகுதாவகை-குற்றமுண்டாகாதவண்ணம், அருள் - அருள்புரிகின்ற, ஏகம்பர் - திருவேகம்பர், பொருளால் - பொருளினால், போதம்பொலியாத - ஞானம்விளங்குதலில்லாத, புன்சொல் - (என்) புல்லியசொற்களைக் கொண்டு தொடுத்த, பனுவல்களும்-நூல்களையும், வேதம்பொலியும் - வேதத்தில் விளங்குகின்ற, பொருள் ஆம் என - பொருளேயாமென்று, கொள்வர் - ஏற்றுக்கொள்வர், ஏ - று.

மெய்யன்பரே, திருவேகம்பர் என்புன்சொன்மாலைப்பொருளையும் வேதப்பொருளேயாமெனக்கொண்டு மகிழ்வர் என்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.

திருவேகம்பமுடையார்திருவந்தாதி

முற்றிற்று.

உ

கணபதி துணை.

ஐந்தாவது

# திருவொற்றியூர்த்தொகை.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியப்பா.

1. இருநிலமடந்தையியல்பினுடுத்த
பொருகடன்மேகலைமுகமெனப்பொலிந்த
ஒற்றிமாநகருடையோயுருவின்
பெற்றியொன்றுப்பெற்றோரியாரோ
மின்னியமின்னின்பிறக்கநின்சடையே
மன்னியவண்டநின்சென்னியின்வடிவே
பாவகன்பரிதிபனிமதிதன்னொடு
மூவகைச்சுடருநின்னுதனேர்நாட்டம்
தண்ணொளியாரந்தாராகணமே
விண்ணவர்முதலாவேறோரிடமாக்
கொண்டுறைவிசும்பேகோலநின்னகம்
எண்டிசைதிண்டோளிருங்கடலுடையே
அணியுடையல்குலுமவனிமண்டலமே
மணிமுடிப்பாந்தணின்றாளிணைவழக்கே
ஒழியாதோடியமாருதமுயிர்ப்பே
வழுவாவோசைமுழுதுநின்வாய்மொழி
வானவர்முதலாமன்னுயிர்பரந்த
ஊனமின்ஞானத்தொகுதிநின்னுணர்வே
நெருங்கியவுலகினினீர்மையுநிற்றலும்
சுருங்கலும்விரிதலுந்தோற்றநின்றொழிலே
அமைத்தலுமழித்தலுமாங்கதன்முயற்சியும்
இமைத்தலும்விழித்தலுமாநின்னியல்பே
என்றிவைமுதலாவியல்புடைவடிவினோ
டொன்றியதுப்புருவிருவகையாகி
முத்திறக்குணத்துநால்வகைப்பிறவி
அத்திறத்தைம்பொறியறுவகைச்சமயமோ
டேழுலகாகியெண்வகைமூர்த்தியோ
டூழிதோறூழியெண்ணிறந்தோங்கி
எவ்வகையளவினிற்கூடிநின்
றவ்வகைப்பொருளுநீயாகியவிடத்தே.

இ - ள். இருநிலமடந்தை - பெரியநிலமாது, இயல்பினின் - ஒழுங்காக, உடுத்த - அரையிற்சூழக்கொண்ட, பொரு - அலைகள்மோதுகின்ற, கடல் - கடலாகிய, மேகலை முகம் எனப்பொலிந்த - மேகலாபரணத்தின் முகப்புப்போல விளங்கிய, ஒற்றிமாநகர் உடையோய் - திருவொற்றிமாநகரத்தையுடையாய், மின்னிய மின்னின்பிறக்கம் - மின்னுகின்ற மின்னலின் விளக்கம், நின்சடையே - உன்சடைகளே, மன்னிய அண்டம் - நிலைபெற்ற ஆகாயம்- நின்சென்னியின்வடிவே - உன்திருமுடியினுருவமே, பாவகன் - அக்கினி, பரிதி - சூரியன், பனிமதிதன்னோடு - குளிர்ந்த சந்திரனுடன், மூவகைச்சுடரும் - மூன்றுவகைப்பட்ட ஒளியுடைப்பொருள்களும், நின் நுதல் நேர்நாட்டம் - உன் நெற்றிக்கெதிர்ந்த கண்கள், தண் ஒளி ஆரம் - தண்ணிய ஒளியுள்ள ஆரம், தாராகணமே - உடுத்திரளே, விண்ணவர் முதலா - தேவர்கள்முதலாக, வேறு ஓர் இடம்ஆ கொண்டு உறைவிசும்பே - மற்றோரிடமாகக் கொண்டுவாசம் பண்ணுகிற ஆகாயமே, கோலம் - அழகிய, நின் ஆகம் - உன்திருமேனி, எண்திசை - அட்டதிக்கும், திண்தோள்-திண்ணியதோள்கள்,இருங்கடல்-பெரியகடல், உடையே-ஆடையே, அணி உடை அல்குலும் - அழகையுடைய அல்குற்பிரதேசமும், அவனி மண்டலமே - பூ மண்டலமே, மணிமுடிபாந்தள்-மாணிக்கமுள்ள முடியையுடைய ஆதிசேடன், நின்தாள் இணைவழக்கே - உன்திருவடியிணையின் வழங்குமிடமே, ஒழியாது ஓடிய - இடையறுமற்சஞ்சரிக்கிற, மாருதம் - வாயுவானது, உயிர்ப்பே - உன் மூச்சே, வழுவா - தவறாத, ஓசைமுழுதும் - ஒலிமுழுதும், நின்வாய்மொழி - உன்திருவாய்மொழியே, வானவர்முதலா - தேவர்கள்முதலாக, மன்உயிர் - நிலைபெற்றசீவர்களாகி, பரந்த - வியாபித்த, உளனம் இல் - கெடுதியில்லாத, ஞானத்தொகுதி - ஞானத்திரள், நின் உணர்வே - உனதுஞானமே, நெருங்கிய உலகினில்- நெருங்கிய உலகத்தில், நீர்மையும் - குணங்களும், நிற்றலும் - அவைகள் நிற்றலும், சுருங்கலும் - சுருங்குதலும், விரிதலும் - விரிகையும் ஆகிய, தோற்றம் - தோற்றங்களெல்லாம், நின்தொழிலே - உன்செயல்களே, அமைத்தலும் - அமைத்து வைத்தலும், அழித்தலும் - முடிவுசெய்தலும், அதன் முயற்சியும் - அதின் பொருட்டுச்செய்யும் முயற்சியும்,இமைத்தலும்- இமைகொட்டுதலும், விழித்தலும்-விழித்திருத்தலும், நின் இயல்பே ஆகும்- உன்னியற்கையேயாகும், என்ற இவைமுதலா — என்றுசொல்லப்பட்ட இவைமுதலாக, இயல்பு உடைவடிவினோடு - இயற்கையாயுள்ள வுருவத்தோடு, ஒன்றிய - பொருந்திய, துப்பு உரு - சுத்தவுருவங்கள், இருவகை ஆகி - இரண்டு வகையையுடையனவாகி, முத்திறக்குணத்து - மூவகைக்குணத்தினோடும், நால்வகைப்பிறவி-நான்கு வகையினையுடைய பிறப்புகளோடும்,அத்திறத்து ஐம்பொறி—அத்தன்மையுள்ள ஐம்பொறியினோடும், அறுவகைச் சமயமோடு - அறுவகைப்பட்டசமயங்களோடும், ஏழ்உலகு

ஆகி - ஏழுலகங்களாகி, எண்வகை மூர்த்தியோடு - எண்வகைப்பட்ட மூர்த்தியோடு, ஊழிதோறூழி - ஊழிகள் தோறும், எண் இறந்து ஓங்கி - அளவுகடந்துயர்ந்து, எவ்வகை அளவினில் கூடி நின்று - எவ்வகைப்பட்ட பிரமாணங்களினுங் கலந்து நின்று, அவ்வகைப்பொருளும் - அவ்வகைப்பட்ட பொருள்களும், நீ ஆகிய இடத்து - நீ யேயாயிருந்தவிடத்து, உருவின்பெற்றி - உன்னுருவத்தின் தன்மை, ஒன்று ஆபெற்றோர்யார் - ஒன்றாகக்காணப் பெற்றவர்யாவர், எ - று.

திருவொற்றியூருடையானே, உன்சடைமுதலியன பலவேறுவகையாய் விளங்குமாயின் உன்னுருவத்தை மெய்யாகக் கண்டு புகழ்வோர் யாவர் என்பது கருத்து.

2. இடத்துறைமாதரோடீருடம்பென்றும்
நடத்தினைநள்ளிருணவிற்றினையென்றும்
புலியதளென்பொடுபுனைந்தோயென்றும்
பலிதிரிவாழ்க்கைபயின்றோயென்றும்
திருவமர்மாலொடுதிசைமுகனென்றும்
அருவமுமுருவமுமானாயென்றும்
உளனேயென்றுமிலனேயென்றும்
தளரானென்றுந்தளர்வோனென்றும்
ஆதியென்றுமசோகினனென்றும்
போதியிற்பொலிந்தபுராணனென்றும்
இன்னவைமுதலாத்தாமறியளவையின்
மன்னியநூலுடன்பன்மையுண்மயங்கிப்
பிணங்குமாந்தர்பெற்றிமைநோக்கி
அணங்கியவவ்வவர்க்கவ்வவையாகியடை
பற்றியபளிங்குப்போலும்
ஒற்றிமாநகருடையோயுருவே.

இ - ள். ஒற்றிமாநகர் உடையோய் - திருவொற்றிமாநகரினை யிடமெனவுடையாய், உரு - உன்னுருவமானது, இடத்து உறைமாதரோடு - இடப்பக்கத்துறைகின்ற உமாதேவியோடு, ஈருடம்பு என்றும் - இரண்டுடம்பென்றும் - நள் இருள் - நடுராத்திரியில், நடத்தினைநவிற்றினை என்றும் - நிருத்தஞ்செய்தாயென்றும், புலி அதள் - புலித்தோலை, என்பொடு புனைந்தாய் என்றும்-என்புமாலைகளோடு தரித்தாயென்றும், பலிதிரிவாழ்க்கை - பலியேற்றுண்ணும் வாழ்க்கையில், பயின்றோய் என்றும் - பழகினாய் என்றும், திரு அமர்மாலொடு - திருமகள் விரும்புகின்ற திருமாலோடு, திசைமுகன் என்றும் - பிரமனென்றும், அருவமும் உருவமும் ஆனாய் என்றும் - உருவின்மையும் உருவுண்மையும் ஆயினை என்றும், உளனே என்றும் - உள்ளவனே யென்றும், இலனே என்றும் - இல்லா

தவனே யென்றும், தளரான் என்றும் - தளராதவன் என்றும், தளர்வோன் என்றும் - தளர்பவனென்றும், ஆதி என்றும் - முதல்வனென்றும், அசோகினன் என்றும்-அசோகநீழலில் இருப்பவனென்றும், போதியில் பொலிந்த - அரசமரநிழலில்விளங்கிய, புராணன் என்றும்-பழையோனென்றும் - இன்னவைமுதலா - இவைமுதலாக, தாம் அறி அளவையின்-தாமறிந்த அளவினால், மன்னிய - நிலைபெற்ற, நூலுடன் - சாத்திரத்துடன், பன்மையுள் மயங்கி - பல்வாறுகமயங்கி, பிணங்கும் - பிணங்குகின்ற, மாந்தர் - மக்களது, பெற்றிமை நோக்கி - தன்மையைப்பார்த்து, அணங்கிய - வருந்தின, அவ்அவர்க்கு - அவரவர்கட்கு, அவ்வவை ஆகி - அவ்வவ்வுருவங்களேயாகி, அடை - தன்னையடைந்த பொருள்களை, பற்றிய - தன்னிடத்துக் கொண்டு காட்டுகின்ற, பளிங்குபோலும் - பளிங்குக் கல்லினை நிகர்க்கும், எ - று.

திருவொற்றியூரையுடையானே, நீ எவ்வெவ்வுருவங்களாகப்பாவிக்கினும் அவ்வவ்வுருவங்களாயமர்ந்திருத்தலால், உன்னுருவம் பளிங்குப் பாறையிற் பற்றியவுருவம் போலும் என்பது கருத்து. ,

3. உருவாமுலகுக்கொருவனாகிய
பெரியோய்வடிவின்பிறிதிங்கின்மையின்
எப்பொருளாயினுமிங்குளதாமெனின்
அப்பொருளுனக்கேயவயவமாதலின்
முன்னியமூவெயின்முழங்கெரியூட்டித்
தொன்னீர்வையகத்துயர்கெடச்சூழ்ந்ததும்
வேள்விமூர்த்திதன்றலையினைவிடுத்ததும்
நீள்விசும்பாளிதன்றோளினைநெரித்ததும்
ஓங்கியமறையோற்கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப்பொடிபடவிழித்ததும்
திறல்கெடவரக்கனைத்திருவிரலூன்றததும்
குறைபடக்கூற்றினைக்குறிப்பினிலடர்த்ததும்
என்றிவைமுதலாவாள்வினையெல்லாம்
நின்றுழிச்செறிந்தவைநின்செயலாதலின்
உலவாத்தொல்புகழொற்றியூர
பகர்வோர்நினக்குவேறின்மைகண்டவர்
நிகழ்ச்சியினிகழினல்லது
புகழ்ச்சியிற்படுப்பரோபொருளுணர்ந்தோரே.

இ - ள். உரு ஆம் - உருவமாத்திரையாய்க் காணப்படுகிற, உலகுக்கு-உலகத்துக்கு, ஒருவன் ஆகிய-ஒருமுதலாகிய, பெரியோய் - பெரியோனே, வடிவின் - உன்வடிவினின்றும், பிறிது - வேறுபொருள், இங்கு இன்மையின் - இவ்விடத்தில்லாமையால், எப்பொருள் ஆயினும் - எந்தப்பொரு

ளானாலும், இங்கு உளதாம் எனின் - இவ்விடத்துண்டெனின், அப்பொருள்-அந்தப்பொருள், உனக்கே அவயவம் ஆதலின் - உனக்கே அங்கமாதலால், முன்னிய - முற்பட்ட, மும்மெயில் - மும்மதிலை, முழங்கு எரியூட்டி - ஒலியாநின்ற நெருப்புக்கிரையாக்கி, தொல் - பழமையாகிய, நீர்கடலாற் சூழப்பட்ட, வையகம் - உலகம், துயர்கெட-துன்பத்தையொழியும்படி, சூழ்ந்ததும் - திருவுளம்பற்றினதும், வேள்விமூர்த்தி தன் - தக்கனது, தலையினை விசித்ததும் - சிரத்லதை நீக்கினதும், நீள்விசும்பு ஆளிதன்-பெரிய விண்ணுலகத்தை யாள்வோனாகிய இந்திரனது, தோள் இணை நெரித்ததும்-இரண்டு தோள்களைநெரித்ததும், ஓங்கிய மறையோற்கு-உயர்ந்தவேதியனாகிய பிரமனுக்கு, ஒருமுகம் ஒழித்ததும் - ஒருமுகத்தை நீக்கினதும், பூங்கணைவேளை - புஷ்பபாணத்தையுடைய மன்மதனை, பொடிபடவிழித்ததும் - நீறும்படிவிழித்ததும், திறல்கெட - வலியழிய, அரக்கனை - இராவணனை, திருவிரல் - திருவிரல் நுதியினால், உறுத்ததும்-அழுத்தினதும், குறைபட - மனவூக்கம் குறையும்படி, கூற்றினை - யமனை, குறிப்பினில் அடர்த்ததும் - குறித்தவண்ணம் உதைத்து வென்றதும், என்ற இவைமுதலா - என்ற இச்செயல்கள் முதலாக, உன்வினை எல்லாம் - உன்னாலாளப்பட்ட செயல்களெல்லாம், நின்றுழிச் செறிந்தவை - நீயிருந்த இடத்தே பொருந்தினவைகளாகி, நின் செயல் ஆதலின் - உன் செயல்களேயாகி முடிதலால், உலவா - அழியாத, தொல்புகழ் - பழைய கீர்த்தியையுடைய, ஒற்றியூர - திருவொற்றியூரனே, பகர்வோர் - உன்னைப்புகழ்ந்துரைப்போர், நினக்கு வேறு இன்மைகண்டு - உனக்கு வேறாகிய பொருளில்லாமையைப் பார்த்து, அவர்நிகழ்ச்சியின் நிகழினல்லது - அவர்தம் நடையில் நடப்பதன்றி, பொருள் உணர்ந்தோர் - பொருளுண்மையறிந்தோராதலால், புகழ்ச்சியிற் படுப்பரோ - மேற் கூறியவைகளை உன்புகழ்ப் பொருள்களிற் சேர்ப்பரோ, எ - று.

உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் உனக்கங்கங்களாயிருத்தலாலும் எல்லாச்செயல்களும் உன் செயல்களாயிருத்தலாலும், உன்னுண்மையையுணர்ந்தோர் நீ முப்புர மெரித்தமைமுதலிய செயல்களை உன் புகழ்க்குக் காரணமாகச் சொள்ளார் என்பது கருத்து.

4\. பொருளுணர்ந்தோங்கியபூமகன்முதலா
இருடிணையாக்கையிலியங்குமன்னுயிர்
உருவினுமுணர்வினுமுயர்வினும்பணியினும்
திருவினுந்திறலினுஞ்செய்தொழிலவகையினும்
வெவ்வேறாகிவினையொடும்பிரியா
தொவ்வாப்பன்மையுண்மற்றவரொழுக்கம்
மன்னியவேலையுள்வான்றிரைபோல
நின்னிடையெழுந்துநின்னிடையாகி

பெருகியுஞ்சுருங்கியும்பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேறாய்நின்றனைவிளக்கம்
ஓவாத்தொல்புகழொற்றியூர
மூவாமேனிமுதல்வநின்னருள்
பெற்றவரறியினல்லது
மற்றவரறிவரோநின்னிடைமயக்கே.

இ - ள். பொருள் உணர்ந்து ஓங்கிய - உறுதிப்பொருளின்னதென்றறிந்துயர்ந்த, பூமகன்முதலா - பிரமன்முதலாக, இருள்துணையாக்கையில்- அஞ்ஞானவிருளையே துணையாகக்கொண்டியங்கும் உடம்பில், இயங்கும் மன் உயிர் - சஞ்சரிக்கிற நிலைபேறுடையசீவர், உருவினும் - உருவத்தாலும், உணர்வினும் - அறிவாலும், உயர்வினும் - உயர்வாலும், பணியினும் - தாழ்வாலும், திருவினும் - செல்வத்தாலும், திறலினும் - வலியினாலும், செய்தொழில்வகையினும் - செய்தொழிலின் வேறுபாட்டானும், வெவ்வேறு ஆகி - வெவ்வேறு வகைப்பட்டு, வினையொடும்பிரியாது - வினைகளினின்றும் நீங்காமல், ஒவ்வா - ஒன்றற்கொன்றொவ்வாத, பன்மையுள் - பொருட்பன்மையில், அவர் ஒழுக்கம் - அந்தச்சீவர்களின் ஒழுக்கமானது, மன்னியவேலையுள் - நிலைபெற்றகடலில் உண்டாகிற, வான்திரைபோல - மேலாகிய அலைகளைப்போல, நின் இடை எழுந்தும் - உன்னிடத்தே தோன்றியும், நின் இடை ஆகியும் - உன்னிடத்தேவளர்ந்தும், பெருகியும் சுருங்கியும் - நிறைந்தும் குறைந்தும், பெயர்ந்தும் - நிலைபெயர்ந்தும், தோன்றியும் - மீட்டுங்காணப்பட்டும், விரவியும் - கலந்தும், வேறு ஆய்நின்றனை - வேறுபடநின்றாய், விளக்கம் ஓவா - பொலிவுநீங்காத, தொல்புகழ் - பழமையாகிய புகழையுடைய, ஒற்றியூர - திருவொற்றியூரனே, மூவா - முதிராத, மேனி - திருமேனியையுடைய, முதல்வ - முதல்வனே, நின் அருள் பெற்றவர் அறியின் அல்லது - உன் திருவருளைப்பெற்றவர்கள் அறியினறிவதன்றி, நின் இடைமயக்கு - உன்னிடத்து நிகழும் மாயாமயக்கத்தின் தன்மையை, மற்றவர் அறிவரோ - பிறர் உணரவல்லரோ, எ - று.

வேறாய் என்பது வேறாக என்பதன்திரிபு. பிரமன்முதலிய சீவர்களும் அவர்தொழில்களும் கடலிடத்தேதோன்றி அதன்கண்ணேயடங்கும் அலைமுதலியபோல, உன்னிடத்தே தோன்றி உன்னிடத்தே யொடுங்குதலால் உன் மாயாவிசித்திரத்தை உன்திருவருள்பெற்றவர் உணர்வதன்றி மற்றையோர் உணரவசமாமோ என்பது கருத்து,

5\. மயக்கமில்சொன்னீயாயினுமற்றவை
துயக்கநின்றிறமறியாச்சூழலும்
உறையிட்டுள்ளமாயினுமற்றது
கறைபடவாங்கேகரந்தகள்ளமும்
செய்வினையுலகினிற்செய்வோயெனினும்

அவ்வினைப்பயனீயணுகாவணிமையும்
இனத்திடையின்பம்வேண்டிநிற்பணிவோர்
மனத்திடைவாரியாகியவனப்பும்
அன்பினடைந்தவர்க்கணிமையுமல்லவர்ச்
சேய்மையுநாடொறும்
என்பினையுருக்குமியற்கையவாதலில்
கண்டவர்தமக்கேயூனுடல்கழிதல்
உண்டெனவுணர்ந்தனமொற்றியூர
மன்னியபெரும்புகழ்மாதவ
துன்னியசெஞ்சடைத்தூமதியோயே.

இ - ள். மயக்கம் இல் - மயக்கமற்ற, சொல் - சொல்லாகியவேதம், நீ ஆயினும்-நீயேயானாலும், அவை - அவைகள், துயக்க - தளர, நின்திறம்- உன்தன்மையை, அறியாசூழலும் - உணராவிரகும், உறையிடம் உள்ளம் ஆயினும் - நீவசிக்குமிடம் சிவர்களுடைய இதயமேயாயினும், அதுகறை பட - அது களங்கமடைய, ஆங்கேகரந்த கள்ளமும் - அவ்விடத்தே ஒளித்த கள்ளமும், உலகினில் செய்வினை செய்வோய் என்னினும் - உலகத்திற் செய்தொழில்கள்யாவும் செய்பவன் நீயென்றாலும், அவ்வினைப்பயன்- அவ்வினைப்பயன்களை, நீ அணுகா அணிமையும் - நீ பொருந்தாதபுணர்வும், இனத்திடை இன்பம்வேண்டி - திரளின்கண் சுகத்தைவிரும்பி, நிற்பணிவோர் - உன்னைத்தொழுவோரது, மனத்திடை - மனத்தின்கண், வாரி ஆகியவனப்பும் - இன்பப்பெருக்காகிய அழகும், அன்பின் அடைந்தவர்க்கு- அன்பினால் அடுத்தவர்களுக்கு, அணிமையும் - சமீபமும், அல்லவர்ச்சேய்மையும் - அல்லாதவர்களுக்குத் தூரமும், நாள்தோறும் - தினந்தோறும், என்பினை உருக்கும் - என்பையுருகப்பண்ணுகின்ற, இயற்கைய ஆதலின் - இயற்கையையுடையன ஆதலால், கண்டவர் தமக்கே - உன்னைத்தரிசித்தவர்களுக்கே, ஊன் உடல்கழிதல் - மாமிசசரீரம்கழிதல், உண்டு என உணர்ந்தனம்-உண்டென்றறிந்தோம், ஒற்றியூர - திருவொற்றியூரனே, மன்னிய பெரும்புகழ்மாதவ-நிலைபெற்ற பெரும்புகழையுடைய மாதவனே, துன்னிய செஞ்சடைத் தூமதியோயே - நெருங்கிய சடையினிடத்துத் தூயதாகிய சந்திரகண்டத்தை யணிந்தவனே, எ - று.

சூழல் - தந்திரம். திருவொற்றியூரனே, வேதம் உன்னுருவமேயாயினும் இவை உன் உண்மை நிலையையறியாது தளரும்தந்திரமும், நீவசிக்குமிடம் சிவர்களுடைய இதயமேயாயினும் அதுவும் அறியாது ஒளித்துநின்ற வஞ்சமும் இவைபோல்வனபிறவும் அன்பருடைய என்புருகப்பண்ணுவனவாதலால், உன்னைத்தரிசித்தவர்க்கு உடல்மெலிதலுண்டென அறிந்தோமென்பது கருத்து. "கூம்பலங்கைத்தலத்தன்பரென் பூடுருகக்குனிக்கும் பாம்பலங்காரப்பரன்" என்றார் திருவாதவூரடிகளும்.

6. தூமதிசடைமிசைச்சூடுதறூநெறி
ஆமதியானெனவமைத்தவாறே
அறனுருவாகியவானேறேறுதல்
இறைவனியானெனவியற்றுமாறே
அதுவவளவனெனநின்றமையார்க்கும்
பொதுநிலையானெனவுணர்த்தியபொருளே
முக்கணனென்பதுமுத்தீவேள்வியில்
தொக்கதென்னிடையென்பதோர்சுருக்கே
வேதமான்மறியேந்துதன்மற்றதன்
நாதனானெனநவிற்றுமாறே
மூவிலையொருதாட்சூலமேந்துதன்
மூவருமியானெனமொழிந்தவாறே
எண்வகைமூர்த்தியென்பதிவ்வுலகினில்
உண்மையானெனவுணர்த்தியவாறே
நிலநீர்தீவளியகல்வானென்றும்
உலவாத்தொல்புகழுடையோயென்றும்
பொருளுநற்பூதப்படையோயென்றும்
தெருளநின்றுலகினிற்றெருட்டுமாறே
ஈங்கிவைமுதலாவண்ணமும்வடிவும்
ஓங்குநின்பெருமையுணர்த்தவுமுணராத்
தற்கொலிமாந்தர்தம்மிடைப்பிறந்த
சொற்பொருள்வண்மையிற்சுழலுமாந்தர்க்
காதியாகியவறுதொழிலாளர்
ஓதலோவாவொற்றியூர
சிறுவர்தஞ்செய்கையிற்படுத்து
முறுவலித்திருத்திநீமுகப்படுமளவே.

இ - ள். தூமதி - பரிசுத்தமான சந்திரனை, சடைமிசைசூடுதல் - சடையின்மீது அணிதல், தூநெறி ஆம்அது - பரிசுத்தமார்க்கமாவது, யான் என அமைத்த ஆறே - யானென்று விளக்கும்பொருட்டு அமைத்தவிதமே, அறன் உரு ஆகிய ஆன் ஏறு ஏறுதல் - தருமரூபமாகிய இடபத்தின்மேல் ஏறுதல், இறைவன் யான் என - தலைவன் யானென்று, இயற்றும் ஆறே - விளக்கும்விதமே, அது அவள் அவன் என நின்றமை - அது அவள் அவன் என்னும்படி நின்றது, யார்க்கும் பொதுநிலையான் என உணர்த்தியபொருளே - யாவர்க்கும் பொதுநிலையாயுள்ளவன் நான் என்றறிவித்தபொருளே, முக்கண்ணன் என்பது - மூன்றுகண்களையுடையவனென்பது, முத்தீவேள்வியில் - மூவகையாகிய அக்கினியைவளர்க்கிற யாகத்தின்கண், என் இடை தொக்கது என்பது ஓர் சுருக்கே - (இவைகளெல்லாம்) என்னிடத்தே கூடியுள்ளனஎன்பதையறிவிப்பதாகிய ஒருசுருக்கவழியே, வேதமான்மறி ஏந்து

தல் - வேதரூபமாகிய மான்கன்றைத்தாங்குதல், அதன் நாதன் நான் என நவிற்றும் ஆறே - அவ்வேதநாதன் நான் என்று சொல்லும்விதமே, மூவிலை ஒருதாள் - மூன்றிலைகளையும் ஒருதாளையுமுடைய, சூலம் ஏந்துதல் - சூலத்தைத்தாங்குதல், மூவரும் யான் எனமொழிந்த ஆறே - மூவரும் நானேயென்று சொல்லியவிதமே, எண்வகைமூர்த்தி என்பது - எட்டு மூர்த்தியாயிருக்கின்றனையென்பது, இவ்வுலகினில் - இவ்வுலகத்தில், உண்மையான் என உணர்த்திய ஆறே - உளனாயிருப்பவன் நானென்றறிவித்தவிதமே, நிலம் நீர் தீவளி அகல்வான் என்றும் - பூமி நீர்நெருப்பு வாயு அகன்ற ஆகாயம் என்றும், உலவா - கெடாத, தொல்புகழ் உடையோய் என்றும் - பழமையாகிய புகழையுடையாய் என்றும், பொருளும் - பொருளாகப்பெற்றிருப்பதும், நல்பூதப்படையோய் என்றும் - நல்ல பூதப்படையையுடையாய் என்றும், தெருளாநின்று - தெளியநின்று, உலகினில்தெருட்டும் ஆறே - உலகத்தில் தெளிவிக்கும்விதமே, ஈங்கு இவைமுதலா - இவ்விடத்துச்சொல்லிய இவைமுதலாகிய, வண்ணமும்வடிவும் - நிறமும் உருவும், ஓங்கும்நின் பெருமை உணர்த்தவும்-உயர்ந்த உன்பெருமையை யறிவியாநிற்கவும், உணரா - அறியாத, தற்கொலிமாந்தர் தம்மிடைப்பிறந்த - தற்கொலைக்குரிய மக்களிடத்துப்பிறந்த, சொற்பொருள் வண்மையில் - சொற்பொருட்கொடைகளில், சுழலும்மாந்தர்க்கு - உழலும்மக்களுக்கு, ஆதியாகிய அறுதொழிலாளர் - முதன்மையாகிய அறுதொழிலாளர் என்கிறவேதியர், ஓதல் ஓவா - அந்திபசந்திபண்ணுதல் இடையறாத, ஒற்றியூர - திருவொற்றியூரனே, சிறுவர் தம்செய்கையிற்படுத்து - சிறுவரதுதொழிலில் அகப்படுத்தி, நீமுறுவலித்து இருத்தி - நீ நகைத்துக்கொண்டிருக்கிறாய், முகப்படும் அளவே - யாமெதிர்ப்படுமளவும், எ - று.

மக்களிற்சிறந்தோர் வேதியராதலால், ''மாந்தர்க்காதியாகிய வறுதொழிலாளர்'' என்றார். அறுதொழில்களாவன-வேட்டல்,வேட்பித்தல், ஓதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல், என்பன. திருவொற்றியூரனே, சந்திரனையணிதல்முதலியன நீ பரிசுத்த நெறியுடையானுதல் முதலியவற்றை விளக்கும்பொருட்டே, நீ யெமதுசெயல்களைச் சிறுவர் செய்கையாயெண்ணி, யாம் எதிர்ப்படுமளவும் நீ நகைத்துக்கொண் டிராநின்றனையென்பது கருத்து. எதிர்ப்படுதல் - வாய்த்தல்.

7. அளவினிலிறந்தபெருமையையாயினும்
எனதுளமகலாதொடுங்கினின்றனையே
மெய்யினையிறந்தமெய்யினையாயினும்
வையகமுழுதுநின்வடிவெனப்படுமே
கைவலத்தில்லைநீயெனினுங்காதல்
செய்வோர்வேண்டுஞ்சிறப்பொழியாயே
சொல்லியவகையாற்றுணையலையாயினும்
நல்லுயிர்க்கூட்டநாயகனீயே
எங்குமுள்ளோயெனினும்வஞ்சனை
தங்கியவஞ்சகர்சார்வில்லைநீயே
அஃதான்று

பிறவாப்பிறவியைபெருகாப்பெருமையை
துறவாத்துறவியைதொடராத்தொடர்ச்சியை
நுகரா நுகர்ச்சியை நுணுகா நுணுக்கினை
அகலாவகற்சியையணுகாவணிமையை
செய்யாச்செய்கையைசிறவாச்சிறப்பினை
வெய்யைதணியைவிழுமியைநொய்யை
செய்யைபசியைவெளியைகரியை
ஆக்குதியழித்தியானபல்பொருள்
நீக்குதிதொகுத்திநீங்குதியடைதி
ஏனையவாகியவெண்ணில்பல்குணம்
நினைதொறுமயக்குநீர்மையவாதலின்
ஓங்குகடலுடுத்தவொற்றியூர
ஈங்கிதுமொழிவார்தம்
சொன்னிலைசுருங்கினல்லது
நின்னியலறிவோர்யாரிருநிலத்தே.

இ - ள். அளவினில் இறந்தபெருமையை ஆயினும் - அளவு கடந்த பெருமையுடைமையையாயினும், எனது உள்ளம் அகலாது - என் மனத்தை விட்டு நீங்காமல், ஒடுங்கி நின்றனையே - ஒடுங்கி நின்றிருக்கின்றனையே, மெய்யினை இறந்த மெய்யினை ஆயினும் - உடம்பினைக் கடந்தவுண்மையையாயினும், வையகமுழுதும் - உலகமுழுதும், நின்வடிவு எனப்படுமே - உன்னுருவமென்று சொல்லப்படுமே, நீகைவலத்தில்லைஎனினும் - நீ ஒருவர்கையின் வயப்பட்டிருப்பாயல்லையெனினும், காதல் செய்வோர் - விருப்பஞ்செய்வோர், வேண்டும் சிறப்பு ஒழியாயே - விரும்புஞ் சிறப்பினின்றும் நீங்குவாயல்லையே, சொல்லிய வகையால் - சொல்லப்பட்ட விதங்களால், துணை அல்லை ஆயினும் - துணையாயில்லையாயினும், நல் - நல்ல, உயிர்க் கூட்டநாயகன் நீயே - ஜீவராசிகளின் தலைவன் நீயே, எங்கும் உள்ளோய் எனினும் - எவ்விடத்தும் நிறைந்திருப்போயாயினும், வஞ்சனை தங்கிய அகத்தை - வஞ்சகம் பொருந்தியுளத்தை, நீ சார்வு இல்லை - நீ பொருந்துதல் இல்லை, அஃதான்று - அது வன்றி, பிறவாப்பிறவியை - பிறவாப்பிறவியையுடையை, பெருகாப்பெருமையை - பெருகாதபெருமையையுடையை, துறவாத் துறவியை - துறவாத துறவினையுடையை, தொடராத் தொடர்ச்சியை - பற்றுத பற்றினையுடையை, நுகரா நுகர்ச்சியை - அநுபவியாத அநுபவத்தையுடையை, நுணுகா நுணுக்கினை - நுணுகாத நுணுக்கத்தினையுடையை, அகலா அகற்சியை - விசாலியாத விசாலத்தையுடையை, அணுகா அணிமையை - அணுகாத அணுக்கத்தையுடையை, செய்யாச் செய்கையை - செய்யாதசெய்கையுடையை, சிறவாச்சிறப்பினை - சிறவாத சிறப்பையுடையை, வெய்யை - வெப்பமுடையை, தணியை - தட்பமுடையை, விழுமியை - மேன்மையுடையை, நொய்யை - நொய்ம்மையையுடையை, செய்யை - செம்மைநிறத்தினை, பசியை - பசுமைநிறத்தினை, வெளியை - வெண்மைநிறத்தினை, கரியை - கருமைநிறத்தினை, ஆக்குதி - படைக்கின்றனை, அழித்தி - சங்கரிக்கின்றனை, ஆன பல்பொருள் - உண்டாகியபலபொருள்களை, நீக்குதி - விலக்குகின்றனை, தொகு

த்தி - மீட்டுஞ்சேர்க்கின்றனை, நீங்குதி - விலகுகின்றனை, அடைதி - சேர்கின்றனை, ஏனையவாகிய - பிறவாகிய, எண் இல் பல் குணம் - கணக்கற்ற பல குணங்கள், நினைதொறும் - கருதுந்தோறும், மயக்கும் நீர்மைய ஆதலின் - மனமயங்கப்பண்ணுந் தன்மையையுடையன வாதலால், ஓங்கு கடல் உடுத்த - உயர்ந்த கடலாற் சூழப்பட்ட, ஒற்றியூர - திருவொற்றியூருடையானே, ஈங்கு - இவ்விடத்து, இதுமொழிவார்தம் - இதனைச் சொல்லுவோரது, சொல் நிலை சுருங்கின் அல்லது - சொல்லினது நிலைமை சுருங்கிற் சுருங்குவதன்றி, இருநிலத்து - பெரியவுலகின்கண், நின் இயல் அறிவோர்யார்-உன்னியல்பை அறியவல்லார் யாவர், எ - று.

திருவொற்றியூரனே, நீ அளவுபடாத பெருமையை யாயினும் என்னுள்ளத்தில் நீங்காதொடுங்கி நிற்றல் முதலிய உன்குணங்கள்யாம் நினைக்குந்தோறும் என்னைமயக்குவன வாதலால், உன்னியல்பையறிய வல்லார் இவ்வுலகில் யாருளர் என்பது கருத்து.

3. நிலத்திடைப்பொறையாயவாவினினீண்டு
சொலத்தகுபெருமைத்தூராவாக்கை
மெய்வளியையொடுபித்தொன்றாக
ஐவகைநெடுங்காற்றுங்குடனடிப்ப
நரையெனுநுரையேநாடொறும்வெளுப்பத்
திரையுடைத்தோலேசெழுந்திரையாகக்
கூடியகுருதிநீரினுணிறைந்து
மூடியவிருமலோசையின்முழங்கிச்
சுடுபசிவெகுளிச்சுறவினமெறியக்
குடரெனுமாலாக்கூட்டம்வந்தொலிப்ப
ஊன்றடியெலும்பினுட்டிடலடைந்து
தோன்றியபல்பிணிப்பின்னகஞ்சுழலக்
கால்கையினரம்பேகண்டமாக
மேதகுநிணமேமெய்ச்சாலாக
முழக்குடைத்துளையேமுகங்களாக
வழுக்குடைமூக்காறேதம்வந்தொலிப்ப
இப்பரிசியற்றியவுடலிருங்கடலுள்
துப்புரவென்னுஞ்சுழித்தலைப்பட்டிங்
காவாவென்னுநின்னருளினைப்பெற்றவர்
நாவாயாகியநாதநின்பாதம்
முந்திச்சென்றுமுறைமையின்வணங்கிச்
சிந்தைக்கூம்பினைச்செவ்வியலிருத்தி
உருகியவார்வப்பாய்ப்பூரித்துப்
பெருகியநிறையெனுங்கயிற்றிடைப்பிணித்துத்
துன்னியசுற்றச்சுடர்க்கயிறறுத்து
மன்னியவொருமைப்பொறியினைமுறுக்கிக்

காமப்பாறெனுங்கடுவெளியற்ற
தூமச்சோதிச்சுடர்க்குறநிறுத்திச்
சுருங்காவுணர்ச்சித்துடுப்பினைத்துழாவி
நெருங்காவளவினீள்கரையேற்ற
வாங்கயாத்திரைபோக்குதிபோலும்
ஓங்குகடலுடுத்தவொற்றியூரோய்.

இ - ள். நிலத்திடை பொறையாய் - நிலத்துக்குச்சுமையாகி, அவாவி னின் நீண்டு-ஆசையால்நெடுகி, சொல்லத்தரும் அருமை - சொல்லுதற்கரிய பெருமையுள்ள, தூராஆக்கை-(உணவினால்) நிரப்பப்படாததேகம், மெய் - உண்மையாகிய, வளி - வாதம், ஐயொடு-சிலேத்துமத்துடன், பித்து-பித்த மும், ஒன்றாக - ஒன்றாகக்கூடி, ஐவகை - ஐந்துவகைப்பட்ட, நெடுங் காற்று - பெருங்காற்று, ஆங்கு உடன்நடிப்ப - அவ்விடத்து உடனே கூத்தாட, நரை என்னும் நுரையே - நரையென்று சொல்லப்படுகிற நுரையே, நாள்தொறும் வெளுப்ப - தினந்தோறும் வெளுக்கவும், திரை உடை தோலே - திரையுமியல்பையுடையதோலே, செழுந்திரை ஆக - செழிய அலைகளாகவும், கூடிய குருதி நீரினுள்நிறைந்து - சேர்ந்த உதிர நீரினுள்ளே நிரம்பி, மூடிய - மூடிக்கொண்ட, இருமல் ஓசையின் முழங்கி- இருமலாகிய ஒலியினால் முழங்கப்பெற்று, சுடுபசி-சுடுகின்றபசியும், வெகுளி- கோவமும் ஆகிய, சுற இனம் எறிய - சுறவின் கூட்டம் எறியவும், குடர் என்னும் - குடல் என்கின்ற, ஆலாக்கூட்டம் வந்து ஒலிப்ப - ஆலாப்பற வையின் தொகுதி வந்தொலிக்கவும், ஊன் தடி எலும்பினுள் - ஊனினாலும் மாமிசத்தினாலும் எலும்பினாலும், உள் திடல் அடைந்து - உள்ளேயிருக்கும் மேடுமூடப்பெற்று, தோன்றிய - உண்டாகிய, பல்பிணி - பலபிணிகளாகிய, பின்னகம் சுழல - மயிர்முடிசுழலவும், கால்கையில் நரம்பே கண்டம் ஆக- கால்கைகளிலுள்ள நரம்புகளே எல்லையாகவும், மேதகு நிணமே-மேன்மை பொருந்தியநிணமே,மெய்ச்சாலாக-உண்மையாகிய நீர்ச்சாலாகவும், முழக்கு உடைத்துளையே - முழங்குதலுடைய துவாரமே, முகங்கள் ஆக - முகங்க ளாகவும், வழக்குஉடை - வழங்குதலையுடைய, மூக்கு ஆறு - மூக்கின்வழி யாய், ஓதம்வந்து ஒலிப்ப - அலைகள் வந்து இரையவும், இப்பரிசு இயற்றிய- இந்தன்மைத்தாகச் செய்யப்பட்ட, உடல் இருகடலுள் - உடம்பாகிய பெருங்கடலினுள், துய்ப்புரவு என்னும் - ஐம்பொறிநுகர்ச்சியென்கிற, சுழி த்தலைப்பட்டு - சுழியினிடத்தகப்பட்டு, இங்கு - இவ்விடத்து, ஆவா என் னும் - ஐயோவென்றிரங்குகின்ற, நின் அருளினைப்பெற்றவர் - உன்ன ருளையடைந்தவர்கள், நாத நாவாயாகிய நின்பாதம் - இறைவனே மரக்கல மாகிய உன்திருவடியை, முந்திச்சென்று - முற்பட்டுப்போய், முறைமை யின்வணங்கி - முறைமையாய்வணங்கி,சிந்தை கூம்பினை - மனமாகிய பாய் மரத்தை, செவ்வியல் இருத்தி-செவ்வையாயிருத்தி, உருகிய ஆர்வம்பாய் பூரித்து - உருகாநின்ற ஆசையாகிய பாயைவிரித்து, பெருகிய நிறை என் னும்-அதிகரித்த நிறை என்கிற, கயிற்றிடைப்பிணித்து-கயிற்றாற்கட்டி, துன் னிய சுற்றம் - நெருங்கிய உறவினராகிய, சுடர்கயிறு அறுத்து - விளக்க முள்ள கயிற்றைச் சேதித்து, மன்னிய - நிலைபெற்ற, ஒருமைப்பொறி யினைமுறுக்கி - ஒற்றையந்திரத்தைமுறுக்கிவிட்டு,காமப்பார் என்னும்-காம ப்பாறையென்கிற, கடுவெளிஅற்ற - கடுவெளிகடந்த, தூமச்சோதி -

புகையோடுகூடிய காந்தியையுடைய, சுடர்க்கு உறநிறுத்தி - விளக்கத்துக்குப் பொருந்தநிறுத்தி, சுருங்காவுணர்ச்சி - குறையாத ஞானமாகிய, துடுப்பினைத்துழாவி - துடுப்புக்கோல்களால் துழாவி, நெருங்கா அளவின் - நெருக்கவொண்ணாத அளவினையுடைய, நீள்கரை ஏற்ற - பெரியமுத்திக்கரையில் ஏற்றும் பொருட்டு, வாங்கா - இடையறாத, யாத்திரைபோக்குதி போலும் - யாத்திரைபோகப்பண்ணுவைபோலும், ஓங்கு - உயர்ந்த, கடல்உடுத்த - கடலாற்சூழப்பட்ட, ஒற்றியூரோயே - திருவொற்றியூருடையானே, எ-று.

திருவொற்றியூரனே, இந்தச்சரீரமென்னுங் கடலில் அழுந்தி வருந்துகின்ற என்னை, முத்திக்கரையேற்றுதற் பொருட்டு உன்திருவடியாகிய மரக்கலத்தைத்தந்தருள வேண்டும் என்பது கருத்து.

௭. ஒற்றியூரவுலவாநின்குணம்
பற்றியாரப்பரவுதல்பொருட்டா
என்னிடைப்பிறந்தவின்றுப்புன்மொழி
நின்னிடையணுகாநீர்மையவாதலின்
ஆவலித்தழுதலிலகன்றதம்மனைக்
கேவலஞ்செய்மையிற்கேளாளாயினும்
பிறித்தற்கரியபெற்றியதாகிக்
குறைவினிலார்த்துங்குழவியதியல்வினை
யறியாதெண்ணிலூழிப்பிறவியின்
மயங்கிக்கண்ணிலர்கண்பெற்றாங்கே
தாய்தலைப்படநின்றாளிணைவணக்கம்
வாய்தலையறியாமயக்குறும்வினையேன்
மல்கியவின்பத்தோடுடன்கூடிய
வெல்லையிலவாவினிலியற்றியவாகக்
கட்டியநீயேயவிழ்க்கினல்ல
தெட்டனையாயினுமியானிதற்கறியேன்
துன்னிடையிருளினுந்தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாணவிருப்புறுவினையேன்
தந்தையுந்தாயுஞ்சாதியுமறிவுஞ்
சிந்தையுந்திருவுஞ்செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந்தூய்மையுமறிவு
மின்பமும்புகழுமிவைபலபிறவுஞ்
சுவையொளியூறோசைநாற்றந்தோற்ற
மென்றிவைமுதலாவிளங்குவவெல்லா
மொன்றநின்னடிக்கேயொருங்குடன்வைத்து
நின்றனன்றனியேனின்னடியல்லது
சார்வுமற்றின்மையிற்றளர்ந்தோர்காட்சிச்

சேர்விடமதனைத்திறப்படநாடி
யெய்துதற்கரியோயானினிச்
செய்வதுமறிவனோதெரியுங்காலே.

இ - ள். ஒற்றியூர - திருவொற்றியூரனே, உலவா - அழியாத, நின் குணம் - உன்குணங்களை, பற்றி - தொடர்ந்து, ஆரப்பரவுதல் பொருட்டா - நிரம்பத்துதித்தற் பொருட்டாக, என்னிடைப்பிறந்த - என்னிடத்துண்டாகிய, இன்னா - இனிமையைத்தராத, புன்மொழி - புல்லியசொற்கள், நின்னிடைஅணுகா - உன்னிடத்துப் பொருந்தாத, நீர்மைய ஆதலின் - தன்மையனவாதலால், ஆவலித்து அழுதலில் அகன்ற - கொட்டாவிவிட்டழுதலால் நீங்கின, தம்மனை கேவலம் சேய்மையின் கேளாள் ஆயினும் - தாயானவள் மிகவும் தூரத்தில் கேளாளாயினும், பிறித்தற்கு அரியபெற்றியது ஆகி - நீக்குதற்கரிய தன்மையையுடையதாகி, குறைவினில் ஆர்த்தும் - குறைவினால் அரற்றியும், குழவியது இயல்வினை - குழந்தையது இயல்பை, அறியாது - உணராமல், எண்இல் ஊழிப்பிறவியின் - கணக்கில்லாத ஊழிப்பிறவிகளில், மயங்கி - மயக்கமடைந்து, கண் இலர் - கண்ணில்லாதிருந்தவர், கண்பெற்றாங்கே - கண்பெற்றாற்போல, தாய்தலைப்பட - தாயானவள்தொடங்க, நின்தாள் இணைவணக்கம் வாய்தலைஅறியா - உன்திருவடியிணைக்கு வணக்கம் செய்யப்பெறுதலையறியாது, மயக்குறும் வினையேன் - மயக்கத்தையடைந்த தீவினையேன், மல்கிய இன்பத்தோடு உடன் கூடிய - நிறைந்த இன்பத்துடன்சேர்ந்த, எல்லை இல் - அளவற்ற, அவாவினில் - ஆசையால், இயற்றிய ஆக - செய்யப்பட்டனவாக, கட்டிய நீயே அவிழ்க்கின் அல்லது - பிணித்த நீயேயவிழ்த்தால் அவிழ்ப்பதன்றி, எள்தனை ஆயினும் - எள்ளளவாயினும், யான் இதற்கு அறியேன் - நானிதற்குச் செய்யும் வகையறிந்திலேன், துன் - நெருங்கிய, இடை இருள் என்னும் - இடையிருளென்று சொல்லப்படுகிற, தூற்றிடை ஒதுங்கி - சிறுசெடியினிடத்தொதுங்கி, வெள்ளிடைகாண - வெளியிற்காண, விருப்புறுவினையேன் - விருப்பம் மிக்கவினையினேன், தந்தையும் - தகப்பனும், தாயும் - அன்னையும், சாதியும் - குலமும், அறிவும் - ஞானமும், நம்சிந்தையும் - நமது மனமும், திருவும் - செல்வமும், செல்கதித்திறனும் - மேற்செல்லும்படியான கதிகளின் பாகுபாடும், துன்பமும் - துக்கமும், துறவும் - துறத்தலும், தூய்மையும் - பரிசுத்தமும், அறிவும் - உணர்வும், இன்பமும் - சுகமும், புகழும் - கீர்த்தியும், இவைபலபிறவும் - இவைபோன்றபல வேறுள்ளனவும், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் - ரசரூப ஸ்பரிச சப்தகந்தங்கள், தோற்றம் - உற்பத்தி, என்ற இவைமுதலா - என்ற இவைமுதலாக, விளங்குவ எல்லாம் - விளங்குவனயாவும், ஒன்ற - பொருந்த, நின் அடிக்கே - உன்திருவடியின்கண்ணே, ஒருங்குடன் வைத்து தனியே நின்றனன் - ஒருங்கேயிட்டு வைத்துத்தனியனாய் நின்றேன், நின்அடி அல்லது - உன் திருவடியல்லது, சார்வு - ஆதரவு, மற்று இன்மையின் - வேறொன்றின்

மையால், தளர்ந்தோர் காட்சிச்சேர்விடமதனை - தளர்ச்சியடைந்தோர்கட்குக் காட்சியைத்தருவதாகி அவர்கள் சேர்தற்குரிய இடத்தை, திறப்படநாடி - உறுதியாக ஆராய்ந்து, எய்து தற்கு அரியோய்-அடைதற்கரியானே, யான் - நான், இனி - இனி, தெரியுங்கால் - ஆராயுமிடத்து, செய்வதும் அறிவனோ - செய்யத்தகுவதனையும் அறிய வல்லேனோ, எ - று.

திருவொற்றியூரனே, நின்குணத்தைப்புகழ்தற் பொருட்டு என்னிடத்துண்டாகிய புன்மொழிகள் உன்னிடத்தே பொருந்தாக்குணத்தனவாதலால், என் ஐம்புலன்களையும் உன் திருவடியின்கண்ணேவைத்துநின்றேன், உன் திருவடியேயன்றி வேறுகதியில்லேன், யானினிச் செய்வதின்னதெனவுமறிந்திலேன் என்பது கருத்து.

10\. காலற்சீறியகழலோய்போற்றி
மூலத்தொகுதிமுதல்வபோற்றி
யொற்றிமாநகருடையோய்போற்றி
முற்றுமாகியமுதல்வபோற்றி
யணைதொறுஞ்சிறக்குமமிர்தேபோற்றி
யிணைபிறிதில்லாவீசபோற்றி
யர்ர்வஞ்செய்பவர்க்கணியோய்போற்றி
தீர்விலின்சுவைத்தேனேபோற்றி
வஞ்சனைமாந்தரைமறந்தோய்போற்றி
நஞ்சினையமிர்தாநயந்தோய்போற்றி
விரிகடல்வையகவித்தேபோற்றி
*புரிவுடைவனமாப்புணர்ந்தோய்போற்றி
காணமுன்பொருள்கருத்துறைசெம்மைக்
காணியாகியவரனேபோற்றி
வெம்மைதண்மையென்றிவைகுணமுடைமையிற்
பெண்ணோடாணெனும்பெயரோய்போற்றி
மேவியவவர்தமைவீட்டினிற்படுக்குந்
தீபமாகியசிவனேபோற்றி
மாலோய்போற்றிமறையோய்போற்றி
மேலாய்போற்றிவேதியபோற்றி
சந்திரபோற்றிதழலோய்போற்றி
யிந்திரபோற்றியிறைவபோற்றி
யமராபோற்றியழகாபோற்றி
குமராபோற்றிகூத்தாபோற்றி
பொருளேபோற்றிபோற்றியென்றுனை
நாத்தழும்பிருக்கநவிற்றினல்ல
தேத்துதற்குரியோரியாரிருநிலத்தே.

---

* "புரிவுடைவனமாய்ப்புணர்ந்தோய்" எனப்பாடமாயின்விரும்பப்படும் மோக்ஷமாயுள்ளவனே என்பது பொருள்.

இ - ள். காலன்சீறிய - யமனையுதைத்த, கழலோய்போற்றி - திருவடியையுடையானே போற்றி, மூலத்தொகுதி முதல்வபோற்றி, மூலத்திரளுக்கும் முதல்வனேபோற்றி, ஒற்றிமாநகர் உடையோய்போற்றி - திருவொற்றியூருடையானே போற்றி, முற்றும் ஆகியமுதல்வபோற்றி-எல்லாப் பொருள்களுமாகிய தலைவனேபோற்றி, அணைதொறும் சிறக்கும் அமிர்தே போற்றி-அடுக்குந்தோறும் சிறந்து தோன்றுகிற அமிர்தமேபோற்றி, இணை பிறிது இல்லா ஈசபோற்றி - ஒப்புவேறொன்றில்லாத ஈசனேபோற்றி, ஆர்வம் செய்பவர்க்கு - அன்புசெய்வார்க்கு, அணியோய் போற்றி-சமீபஸ்தனேபோற்றி, தீர்வு இல் இன்சுவைதேனேபோற்றி - நீங்குதலில்லாத இனிய சுவையுள்ளதேனேபோற்றி,வஞ்சனைமாந்தரை மறந்தோய்போற்றி-வஞ்சனையுள்ள மக்களைமறந்தவனேபோற்றி, நஞ்சினை அமிர்தாநயந்தோய் போற்றி - விஷத்தை யமிர்த மாகவிரும்பினவனே பொற்றி, விரிகடல்-விரிந்த கடல் சூழ்ந்த, வையகவித்தே போற்றி - பிரபஞ்சபீஜமேபோற்றி, புரிவுடை - கட்டுதலையுடைய, வனம் - கங்கைதங்கிய, மாப்புணர்ந்தோய் போற்றி - பெரிய சடாபாரத்தை யுடையவனே போற்றி, முன்பொருள் - நினைக்கின்ற பொருள்களை, காண - காணுதற்கு, கருத்துறை செம்மைக்கு-கருத்தில் தங்குகின்ற செம்மையாகிய அறிவுக்கு, ஆணியாகிய அரனே போற்றி - மூலமாகியசிவனே போற்றி, வெம்மை தண்மை என்ற-வெப்பம் தட்பம் என்ற, இவை குணம் உடைமையின் - இந்தக்குணங்களையுடைமையால், பெண்ணொடு ஆண் என்னும் பெயரோய் போற்றி - பெண்ணுடன் ஆண் என்கிற பெயரையுடையவனே போற்றி, மேவிய அவர் தம்மை - அடுத்த அவர்களை, வீட்டினில்படுக்கும்-மோக்ஷத்தில் பொருத்துகின்ற, தீபம் ஆகிய சிவனேபோற்றி - விளக்கம் போல்கின்றசிவபிரானே போற்றி, மாலோய்போற்றி - திருமாலேபோற்றி, மறையோய்போற்றி - பிரமனேபோற்றி, மேலாய்போற்றி - மேலானவனேபோற்றி, வேதிய போற்றி - வேதியனே போற்றி, சந்திர போற்றி - சந்திரனே போற்றி, தழலோய்போற்றி - அக்கினியேபோற்றி, இந்திரபோற்றி - இந்திரனே போற்றி, இறைவபோற்றி - தலைவனேபோற்றி, அமராபோற்றி-தேவனே போற்றி, அழகாபோற்றி - அழகனேபோற்றி, குமராபோற்றி - குமரனே போற்றி, கூத்தாபோற்றி - கூத்தனேபோற்றி, பொருளேபோற்றி - பொருளாயிருப்பவனேபோற்றி, போற்றி என்று-போற்றி யென்று, உன்னை - நின்னை, நாத்தழும்பிருக்க - நாவின் கண் தழும் புண்டாம்படி, நவிற்றின் அல்லது - துதிப்பினல்லது, இருநிலத்து - பெரியவுலகத்தின்கண், ஏற்றுதற்கு உரியோர்யார்-உயர்த்துதற்குரியவர் யாவர், எ - று.

இறைவனே, காலனைக்காய்ந்த காலனும், மூலத்தொகுதியும், ஒற்றியூருடையோனும் ஆகிய சிவபெருமானுக்கு நமஸ்காரம் என்று பலபடியாய்த் துதிப்பதன்றி வேறுவகையாய் உயர்த்திக் கூறவல்லவர் இவ்வுலகில் யாவர் என்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூர்த்தொகை
முற்றிற்று.

உ

கணபதி துணை.

# திருப்பாடற்றிரட்டு.

முதலாவது

# கோயிற்றிருவகவல்.

திருச்சிற்றம்பலம்.

1. நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
அலகைத்தேரினலமருகாலின்
உலகப்பொய்வாழ்க்கையையுடலையோம்பற்க
பிறந்தனவிறக்குமிறந்தனபிறக்கும்
தோன்றினமறையுமறைந்தனதோன்றும்
பெருத்தனசிறுக்குஞ்சிறுத்தனபெருக்கும்
உணர்ந்தனமறக்குமறந்தனவுணரும்
புணர்ந்தனபிரியும்பிரிந்தனபுணரும்
அருந்தினமலமாம்புனைந்தனவழுக்காம்
உவப்பனவெறுப்பாம்வெறுப்பனவுவப்பாம்
என்றிவையனைத்துமுணர்ந்தனையன்றியும்
பிறந்தனபிறந்தனபிறவிகடோறும்
கொன்றனையனைத்துமனைத்துநினைக்கொன்றன
தின்றனையனைத்துமனைத்துநினைத்தின்றன
பெற்றனையனைத்துமனைத்துநினைப்பெற்றன
ஓம்பினையனைத்துமனைத்துநினையோம்பின
செல்வத்துக்களித்தனை தரித்திரத்தழுங்கினை
சுவர்க்கத்திருந்தனை நரகிற்கிடந்தனை
இன்பமுந்துன்பமுமிருநிலத்தருந்தினை
ஒன்றொன்றொழியாதுற்றனையன்றியும்
புற்புதக்குரம்பைதுச்சிலொதுக்கிடம்

என்னநின் றியங்குமிருவினைக்கூட்டைக்
கல்லினும்வலிதாக்கருதினையிதனுள்
பூளையுநீரும்புறப்படுமொருபொறி
மீளுங்குறும்பிவெளிப்படுமொருபொறி
சளியுநீருந்தவழுமொருபொறி
உமிழ்நீர்கோழையொழுகுமொருபொறி
வளியுமலமும்வழங்குமொருவழி
சலமுஞ்சீயுஞ்சரியுமொருவழி
உள்ளுறத்தொடங்கிவெளிப்படநாறும்
சட்டகமுடிவிற்சுட்டெலும்பாகும்
உடலுறுவாழ்க்கையையுள்ளுறத்தேர்ந்து
கடிமலர்க்கொன்றைச்சடைமுடிக்கடவுளை
ஒழிவருஞ்சிவபெரும்போகவின்பத்தை
நிழலெனக்கடவாநீர்மையொடுபொருந்தி
எனதறநினைவறவிருவினைமலமற
வரவொடுசெலவறமருளறவிருளற
இரவொடுபகலறவிகபரமறவொரு
முதல்வனைத்தில்லையுண்முளைத்தெழுஞ்சோதியை
அம்பலத்தரசனையானந்தக்கூத்தனை
நெருப்பினிலரக்கெனநெக்குநெக்குருகித்
திருச்சிற்றம்பலத்தொளிருஞ்சிவனை
நினைமின்மனனேநினைமின்மனனே
சிவபெருமானைச்செம்பொனம்பலவனை
நினைமின்மனனேநினைமின்மனனே.

இ - ள். மனனேநினைமின் மனனேநினைமின் - மனமேநினைவாய் மனமேநினைவாய், சிவபெருமானை-சிவபிரானை, செம்பொன் அம்பலவனை-செம்பொன்னம்பலத்தானை, மனனேநினைமின் மனனேநினைமின் - மனமேநினைவாய் மனமேநினைவாய், அலகைத்தேரின் - பேய்த்தேரினும், அலமருகாலின் - சுழலாநின்றகாற்றினும், உலகப்பொய்வாழ்க்கையை - (அதிகமான) பிரபஞ்சப் பொய்வாழ்வையும், உடலை - உடம்பையும், ஓம்பற்க - பேணற்க, பிறந்தன இறக்கும் - தோன்றினவையழியும், இறந்தன பிறக்கும் - அழிந்தவைதோன்றும், தோன்றினமறையும் - காணப்பட்டவை மறையும், மறைந்தனதோன்றும் - மறைந்தவைகாணப்படும், பெருத்தன

சிறுக்கும் - பெருத்தவைசிறுக்கும், சிறுத்தனபெருக்கும் - சிறுத்தவை பெருக்கும், உணர்ந்தனமறக்கும் - நினைந்தனமறக்கும், மறந்தன உணரும்- மறந்தவைநினைக்கும், புணர்ந்தனபிரியும் - சேர்ந்தவைபிரியும், பிரிந்தன புணரும் - பிரிந்தவைசேரும், அருந்தினமலம் ஆம் - உண்டனவெல்லாம் மலரூபமேயாகும், புனைந்தன அழுக்கு ஆம் - உடுத்தனவெல்லாம் அழுக்கே யாகும், உவப்பனவெறுப்பு ஆம் - விரும்புவனவெறுத்தற் குரியனவாகும், வெறுப்பன உவப்பு ஆம் - வெறுத்தற் குரியன விரும்புதற் குரியனவாகும், என்று - என்றுபாகுபடுத்து, இவை அனைத்தும் உணர்ந்தனை - இவைக ளெல்லாவற்றையுமறிந்தனை, அன்றியும் - அல்லாமலும், பிறந்தனபிறந்தன பிறவிகள்தோறும் - நீபிறந்தபிறந்த பிறப்புக்கள்தோறும், கொன்றனை அனைத்தும்-எல்லாவற்றையுங்கொன்றனை, அனைத்துநின்னைக்கொன்றன- அவையனைத்தும் உன்னைக்கொன்றன,தின்றனைஅனைத்தும்-எல்லாவற்றை யும் உண்டனை, அனைத்தும் நின்னைத்தின்றன-அவையனைத்தும்உன்னையுண் டன, பெற்றனை அனைத்தும் - எல்லாவற்றையும் ஈன்றனை, அனைத்தும் நின்னைப்பெற்றன - அவையனைத்தும் உன்னையீன்றன, ஓம்பினை அனைத் தும்-எல்லாவற்றையும் காப்பாற்றினை, அனைத்துநின்னை ஓம்பின - அவை யனைத்தும் உன்னைக்காப்பாற்றின, செல்வத்துக்களித்தனை - செல்வக்கால த்தில் மகிழ்ந்தனை, தரித்திரத்து அழுங்கினை - வறுமைக்காலத்தில் துக்கித் தனை, சுவர்க்கத்து இருந்தனை - சுவர்க்கபோகங்களில் இருந்தாய், நரகில் கிடந்தனை - நரகலோகத்திற்கிடந்தாய், இன்பமும்துன்பமும் - சுகத்தையும் துக்கத்தையும், இருநிலத்து அருந்தினை - இந்தப்பெரியவுலகத்தில் அநுப வித்தாய், ஒன்றொன்று - ஒவ்வொன்றையும், ஒழிபாது உற்றனை - ஒழியா தடைந்தனை, அன்றியும் - அல்லாமலும், புற்புதக்குரம்பை - நீர்க்குமிழி போன்றகூடு, துச்சில்ஒதுக்கிடம்-துச்சிலாகிய ஒதுக்கிடம், என்ன - என்று சொல்லும்படி, நின்று இயங்கும் - நின்றுவிளங்குகின்ற, இருவினைக்கூட் டை - இருவினைச்கூட்டினை, கல்லினும்வலிது ஆக கருதினை - கல்லினும் வலியதாக நினைத்தனை, இதனுள் - இக்கூட்டினுள், ஒருவழி - ஒருவழியில், பீளையும் நீரும்புறப்படும் - பீளையும் நீரும்வெளிப்படும், ஒருபொறி - ஒரு பொறியில், மீளும்குறும்பிவெளிப்படும், மீண்டுமீண்டுமுண்டாகிற குறும்பி வெளிப்படும், ஒருபொறி - ஒருபொறியில், சளியும்நீரும்தவழும் - சளியும் நீரும் ஒழுகாநிற்கும், ஒருபொறி-ஒருபொறியில், உமிழ்நீர்கோழை ஒழுகும்- உமிழ்நீரும்கோழையும் ஒழுகாநிற்கும், ஒருவழி - ஒருவழியில், வளியும் மலமும்வழங்கும் - வாயுவும்மலமும் வழங்காநிற்கும், ஒருவழி - ஒருவழியில், சலமும்சீயும்சரியும் - நீரும்சீயும் சரியாநிற்கும், உள் உறத்தொடங்கி - உள் ளேநின்று ஆரம்பித்து, வெளிப்படநாறும்-வெளிப்பட்டளவில் நாறுகின்ற, சட்டகம் - உடம்பானது, முடிவில்-முடிவுக்காலத்தில், சுட்டெலும்பாகும் - சுட்ட எலும்புருவாகும், (ஆதலால்) உடல் உறுவாழ்க்கையை - உடம்போடு

பொருந்தும் வாழ்க்கையின் தன்மையை, உள் உறதேர்ந்து — மனத்தினுல் மிகவும் ஆராய்ந்துதெளிந்து, கடிமலர்க்கொன்றை - மணம்பொருந்திய கொன்றை மலர்மாலையையணிந்த, சடைமுடிகடவுளை - சடைமுடியையுடைய கடவுளை, ஒழிவு அரு - நீங்குதற்கரிய, பெரு - பெரிய, சிவபோக இன்பத்தை - சிவபோகாநந்தத்தை, நிழல்எனக்கடவ - நிழலெனக்கடவதாகிய, நீர்மையொடுபொருந்தி - குணத்தொடுபொருந்தி, எனதுஅற - எனதென்பது ஒழிய, நினைவு அற - நினைப்பொழிய, இருவினை மலம் அற - இருவினைகளும் மும்மலங்களும் ஒழிய, வரவொடு செலவு அற - வரவொடு போக்கொழிய, மருள் அற - மயக்கம் ஒழிய, இருள் அற - அஞ்ஞான விருளொழிய, இரவொடு பகல் அற - இராவோடு பகல் ஒழிய, இகபரம் அற - இகபரங்கள் ஒழிய, ஒருமுதல்வனை - ஒப்பற்ற முதல்வனை, தில்லையுள்முளைத்து எழும் சோதியை - தில்லையில் முளைத்துத் தோன்றுகின்ற ஒளியை, அம்பலத்தரசனை - அம்பலத்துக்கிறைவனை, ஆனந்தக்கூத்தனை - ஆநந்தத்தாண்டவனை, நெருப்பினில் அரக்கு என - நெருப்பிலிட்ட அரக்குப்போல, நெக்கு நெக்கு உருகி - நெகிழ்ந்து நெகிழ்ந்துருகி, திருச்சிற்றம்பலத்து ஒளிரும் சிவனை - திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்குகின்ற சிவபெருமானை, நினைமின்மனனே நினைமின்மனனே - நெஞ்சே நினையாய் நெஞ்சேநினைவாய், சிவபெருமானை-சிவபிரானை, செம்பொன் அம்பலவனை-செம்பொன்னம்பலத்தை யுடையவனை, நினைமின்மன்னே நினைமின்மனனே - மனமே நினையாய் மனமேநினையாய், எ - று,

பேய்த்தேர் - கானனீர். அருந்தின - சோறுமுதலாயின. புனைந்தன - ஆடைமுதலாயின. உவப்பன - பொருள்முதலாயின. வெறுப்பன - வறுமைமுதலாயின. பீளையு நீரும் புறப்படு பொருமொறி என்றது கண்ணை-மீளுங்குறும்பி வெளிப்படு மொருபொறி என்றது காதை. சளியு நீருந் தவழு மொருபொறி என்றது மூக்கை. உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி என்றது, வாயை. வளியு மலமும் வழங்கு மொருவழி என்றது, குதத்தை. சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி என்றது, குய்யத்தை. மனமே கானனீர்போன்ற இந்தப்பிரபஞ்சவாழ்க்கையையும்,இந்த நிலையற்ற உடம்பையும் விரும்பாமல் தில்லைப்பொன்னம்பலவனை விரும்பிமுக்கரணத்தானும் வழிபடுவாயாக வென்பது கருத்து. வாக்குங்காயமும் மனத்தின் வழிப்பட்டனவாதலால், நினைமின் எனவே துதித்தலும் வணங்குதலும் கிடைத்தன.

இரண்டாவது

## கோயிற்றிருவகவல்.

2. கார்தளவோடியகலகப்பாதகக்
கண்ணியர்மருங்கிற்புண்ணுடனுடுங்
காதலுங்கருத்துமல்லானின்னிருதாட்
பங்கயஞ்சூடப்பாக்கியஞ்செய்யாச்
சங்கடங்கூர்ந்தவமியேன்பாங்கிருந்
தங்கோடிங்கோடலமருங்கள்வர்
ஐவர்கலகமிட்டலைக்குங்கானகம்
சலமலப்பேழையிருவினைப்பெட்டகம்
வாதபித்தங்கோழைகுடிபுகுஞ்சீறூர்
ஊத்தைப்புன்றோலுதிரக்கட்டளை
நாற்றப்பாண்டநான்முழத்தொன்பது
பீற்றற்றுண்டம்பேச்சுரைத்தோட்டம்
அடலைப்பெரியசுடலைத்திடருள்
ஆசைக்கயிற்றிலாடும்பம்பரம்
ஓயாநோய்க்கிடமோடுமரக்கலம்
மாயாவிகாரமரணப்பஞ்சரம்
சோற்றுத்துருத்திதூற்றும்பத்தம்
காற்றிற்பறக்குங்கானப்பட்டம்
விதிவழித்தருமன்வெட்டுங்கட்டை
சதுர்முகப்பாணன்றைக்குஞ்சட்டை
ஈமக்கனலிலிடுசிலவிருந்து
காமக்கனலிற்கருகுஞ்சருகு
கிருமிகிண்டுங்கிழங்கஞ்சருமி
பவக்கொழுந்தேறுங்கவைக்கொழுகொம்பு
மணமாய்நடக்கும்வடிவின்முடிவிற்
பிணமாய்க்கிடக்கும்பிண்டம்பிணமே
ஊரிற்கிடக்கவொட்டாவுபாதி
காலெதிர்குவித்தபூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்டகடும்பனிக்கூட்டம்

அந்தரத்தியங்குமிந்திரசாபம்
அதிருமேகத்துருவினுருகிழல்
நீரிற்குமிழிநீர்மேலெழுத்து
கண்டுயில்கனவிற்கண்டகாட்சி
அதனினும்பொல்லாமாயக்களங்கம்
அமைபுமமையும்பிரானேயமையும்
இமையவல்லிவாழியென்றேத்த
ஆனந்தத்தாண்டவங்காட்டி
ஆண்டுகொண்டருள்கைநின்னருளினுக்கழகே.

இ - ள். காதளவு ஓடிய - காதினளவும் ஓடிப்பாய்ந்த, கலகம் - கலகத்தையுண்டாக்குதற்குரிய, பாதகம் - பாவத்துக்காளாக்குகின்ற, கண்ணியர் - கண்களையுடைய மாதரது, மருங்கின்-வயத்ததாகிய, புண் உடல் நாடும் - மாமிசசரீரத்தை விரும்புகின்ற, காதலும் கருத்தும் அல்லால் - ஆசையும் நினைப்புமன்றி, உன் இருதாள் - உன்னிருபாதங்களாகிய, பங்கயம் - தாமரைமலர்களை, சூட - தரித்துக்கொள்வதற்கு, பாக்கியம் செய்யா - புண்ணியம்செய்திராத, சங்கடம் கூர்ந்த - துன்பமிகுந்த, தமியேன் பாங்கு இருந்து - தனியேனிடத்திருந்து, அங்கோடு இங்கோடு அல்மரும் கள்வர் ஐவர் - அங்குமிங்குமாக உழல்கின்ற கள்வரோரைந்துபேர், கலகம் இட்டு - கலகம்விளைத்து, அலைக்கும்கானகம் - வருத்துகின்றகாடு, சலமலப் பேழை - ஜலமலப்பெட்டி, இருவினைப்பெட்டகம் - இருவினைகளாகிய பொருள்களையிட்டு மூடிவைத்தபெட்டகம், வாதபித்தம்கோழை - வாத பித்த சிலேத்துமங்கள், குடிபுகும் - குடிபுகாநின்ற, சிறூர் - சிற்றூர், உளத்தைப்புன்தோல் - உளத்தையடைத்துவைத்த புல்லியதோற்பை, உதிரக்கட்டளை-உதிரத்துக்கு எல்லை, நாற்றப்பண்டம்-நாறுதலையுடைய பாத்திரம், நான்முழத்து - நான்குமுழநீட்சியையும், ஒன்பதுபீற்றல் - ஒன்பது சிறுவழிகளையுமுடைய, துண்டம்-துணிக்கை, பேச்சு உரைத்தோட்டம் - பேசுகின்றசொற்கள் விளைகின்றதோட்டம், அடலைப்பெரிய கடலைத்திடருள் - வலிமைமிக்க பெரியகடல்சூழ்ந்த மேட்டினுள், ஆசைக்கயிற்றில் - ஆசையாகிய சாட்டையினால்; ஆடும்-ஆட்டப்படுகிற, பம்பரம் - பம்பரம், ஓயா - ஒழியாத, நோய்க்கு இடம் - பிணிகளுக்கிடமாய், ஓடும்மரக்கலம் - ஓடாநின்றமரக்கலம், மாயாவிகாரம்-மாயாவேறுபாடு, மரணப்பஞ்சரம்-மரணப்பொருளடைத்தகூடு, சோற்றுத்துருத்தி - சோற்றைத் திணித்துவைத்த துருத்தி, தூற்றும்பத்தம் - பழிதூற்றுகின்றகட்டு, காற்றில்பறக்கும்கானப்பட்டம் - வாயுவில்பறக்கும் கானப்பட்டம், விதிவழி - ஊழின்வழியே வந்து, தருமன்-யமன், வெட்டும்கட்டை - வெட்டுகின்றகட்டை, சதுமுகப்

பாணன் - பிரமனென்கிற தையற்காரன், தைக்கும்சட்டை - தைக்கின்ற சட்டை, ஈமக்கனலில் இடு - மயானநெருப்பிலிடப்படுகிற, சிலவிருந்து - சிலவிருந்து, காமக்கனலில் - காமநெருப்பில், கருகும்சருகு - கருகிப்போகின்ற சருகு, கிருமிகிண்டும் கிழங்கு - புழுக்கள்கிண்டுகின்ற கிழங்கு, அம் சருமி-அழகியதோற்கருவி, பவக்கொழுந்தும் ஏறும் - பிறவிக்கொடிபடர்ந்தேறுகின்ற, கவைக்கொழுகொம்பு - பிளவாகியகொள்கொம்பு, மணமாய் நடக்கும் வடிவின்முடிவில் - மணவுருவாய்நடக்கின்ற வடிவினதுமுடிவிடத்தில், பிணமாய்க்கிடக்கும் பிண்டம் - பிணவுருவாய்க்கிடக்கின்ற வுடம்பு, பிணமேல் - பிணவுருவிடையின், ஊரில்கிடக்கவொட்டா - ஊரிற்கிடக்கவொட்டாத, உபாதி - உபத்திரவம், கால் எதிர்குவித்த பூளை - காற்றுக்கெதிரில் குவித்துவைத்தபூளைப்பூ, காலைக்கதிர் எதிர்ப்பட்ட - உதயகாலத்தில் சூரியனுக்கெதிர்ப்பட்ட, கடும்பனிக்கூட்டம் - மிகுதியாகிய பனித்தொகுதி, அந்தரத்து இயங்கும் இந்திரசாபம் - ஆகாயத்தில் விளங்குகின்ற இந்திரவில், அதிரும்-முழங்குகின்ற, மேகத்து உருவின் - மேகரூபத்தின், அருநிழல் - அரியசாயை, நீரில்குமிழி - நீர்க்குமிழி, நீர்மேல்எழுத்து-நீரின்மீது எழுதப்பட்ட எழுத்து, கண்துயில் கனவில்கண்டகாட்சி - கண்ணுறங்குங்காலத்திலுண்டாவதாகிய சொப்பனாவஸ்த்தையில் கண்டகாட்சி, அதனினும்பொல்லா - அதினும்கெட்ட, மாயக்களங்கம் - மாயவழுக்கு, அமையும் அமையும் - போதும்போதும், பிரானே அமையும் - பெருமானே போதும், இமயவல்லி - உமாதேவியானவள், வாழி என்று ஏத்த - வாழியென்று துதிக்க, ஆனந்தத்தாண்டவம்காட்டி - ஆநந்தநிருத்தத்தைச்செய்தருளி, ஆண்டுகொண்டருள்கை - என்னையாட்கொண்டருளுதல், நின் அருளினுக்கு அழகு - உன்திருவருளுக்கு அழகாகும், எ - று.

மாதருடைய மல வுடம்பைநாடுதலன்றி உன்திருவடியைநாடுதற்குரிய பாக்கியம்செய்யாத தனியேன் எடுத்த இந்தப்பொய்யுடலின் கூட்டுறவும் அதனால் உளவாகிய துன்பங்களும் எனக்கு அமையும், இனியாயினும் உனது திருநடனத்தைக்காட்டி என்னை ஆட்கொண்டருளுதல் உன்திருவருளுக்கு அழகாம் என்பது கருத்து.

---

## மூன்றுவது
## கோயிற்றிருவகல்.

3. பாற்கடல்கடையப்படுங்கடுவெண்ணெயைத்
திருமிடற்றடக்கியசிவனேயடைக்கலம்
அடங்கலுமடக்கிடுங்கடுங்கொலைக்காலனைக்
காலெடுத்தடக்கியகடவுணின்னடைக்கலம்

உலகடங்கலும்படைத்துடையவன்றலைபறித்
திடக்கையிலடக்கியவிறைவநின்னடைக்கலம்
செய்யபொன்னம்பலச்செல்வநின்னடைக்கலம்
ஐயநின்னடைக்கலமடியநின்னடைக்கலம்
மனவழியலைத்திடுங்கனவெனும்வாழ்க்கையும்
விழுப்பொருளறியாவழுக்குறுமனனும்
ஆணவமலத்துதித்தளைந்ததிலுளைந்திடு
நிணவைப்புழுவெனநெளித்திடுஞ்சிந்தையும்
படிறும்பாவமும்பழிப்புறுநினைப்பும்
தவறுமழுக்காறுமிவறுபொச்சாப்பும்
கவடும்பொய்யுஞ்சுவடும்பெருஞ்சின
விகலுங்கொலையுமிழிப்புறுபுன்மையும்
பகையுமச்சமுந்துணிவும்பனிப்பும்
முக்குணமடமையுமைம்பொறிமுயக்கமும்
இடும்பையும்பிணியுமிடுக்கியவாக்கையை
உயிரெனுங்குருகுவிட்டோடுங்குரம்பையை
எலும்பொடுநரம்புகொண்டிடையிற்பிணித்துக்
கொழுந்தசைமேய்ந்துமொழுக்குவிழுங்குடிலைச்
செழும்பெழுவுதிரச்சிறுபுழுக்குரம்பையை
மலவுடற்குடத்தைப்புலவுடற்புட்டிலைத்
தொலைவிலாச்சோற்றுத்துன்பக்குழியைக்
கொலைபடைக்கலம்பலகிடக்குங்கூட்டைச்
சலிப்புறுவினைப்பலசரக்குக்குப்பையைச்
கோட்சரக்கொழுகும்பீறற்கோணியைக்
கோபத்தீமூட்டுங்கொல்லன்றுருத்தியை
ஐம்புலப்பறவையடையும்பஞ்சரத்தைப்
புலராக்கவலைவிளைமரப்பொதும்பை
ஆசைக்கயிற்றிலாடும்பம்பரத்தைக்
காசிற்பணத்திற்சுழலுங்காற்றாடியை
மக்கள்வினையின்மயங்குந்திகிரியைக்
கடுவெளியுருட்டியசகடக்காலைப்
பாவச்சரக்கொடுபவக்கடல்புக்குக்

காமக்காற்றெடுத்தலைப்பக்
கெடுவழிக்கரைசேர்கொடுமரக்கலத்தை
இருவினைவிலங்கொடுமியங்குபுற்கலனை
நடுவன்வந்தழைத்திடநடுங்கிடும்யாக்கையைப்
பிணமெனப்படுத்தியான்புறப்படும்பொழுதுநின்
அடிமலர்க்கமலத்துக்கபயநின்னடைக்கலம்
வெளியிடையுருமிடியிடித்தெனவெறித்தெழுங்
கடுநடைவெள்விடைக்கடவுணின்னடைக்கலம்
இமையாநாட்டத்திறையேயடைக்கலம்
அடியார்க்கெளியாயடைக்கலமடைக்கலம்
மறையவர்தில்லைமன்றுணின்றாடிக்
கருணைமொண்டலையெறிகடலேயடைக்கலம்
தேவருமுனிவருஞ்சென்றுநின்றேத்தப்
பாசிழைக்கொடியொடுபரிந்தருள்புரியும்
எம்பெருமானின்னிணையடிக்கபயம்
அம்பலத்தரசேயடைக்கலமுனக்கே.

இ - ள். பால்கடல் - திருப்பாற்கடலில், கடையப்படும் - திருமால் முதலிய தேவர்களால் கடைந்தெடுக்கப்பட்ட, கடுவெண்ணெயை விடமாகிய வெண்ணெயை, திருமிடற்று - திருக்கண்டத்தில், அடக்கிய - அடக்கிக்கொண்ட, சிவனே - சிவபெருமானே, அடைக்கலம் - யான் உன் கையடை, அடங்கலும்-எல்லாப் பொருள்களையும், அடக்கிடும்-அடக்குகின்ற, கடுகொலை காலனை - கடுமையாகிய கொலைத்தொழிலையுடைய யமனை, காலெடுத்து - காலெடுத்துதைத்து, அடக்கிய - அடக்கிவிட்ட, கடவுள் - கடவுளே, நின் அடைக்கலம் - யான் உன் கையடை, உலகு அடங்கலும் படைத்துடையவன்-உலகமுழுதும் படைத்துளோனாகிய பிரமனது, தலையறுத்து - ஒரு தலையைக்கிள்ளி, இடக்கையில் அடக்கிய - இடது கையில் தரித்துக்கொண்ட, இறைவ - தலைவனே, நின் அடைக்கலம் யான் உன்கையடை, செய்ய - செவ்விய, பொன்னம்பலச்செல்வ - பொன்னம் பலச்செல்வனே, நின் அடைக்கலம் - யான் உன்கையடை, ஐய-ஐயனே, நின் அடைக்கலம் - உன்னடைக்கலம், அடியன் நின் அடைக்கலம் -அடியேனுன்னடைக்கலம், மனவழி அலைத்திடும் - மனத்தின் வழியாகவே அலைக்கப்படுகின்ற, கனவு என்னும் வாழ்க்கையும் - சொப்பனத்துக்கு நிகராகிய வாழ்வும், விழுப்பொருள் அறியா - மேன்மையாகிய பொருளையுணராத, அழுக்கு உறுமனனும் - அழுக்கடைந்தமனமும், ஆணவ

மலத்து உதித்து - ஆணவமலத்தின் கண்தோன்றி, அளைந்து அதில் உளைந்திடும் - கலந்து அதிற்றானே உழைத்துக்கொண்டிராநின்ற, நிணவைப்புழுவென - நிணத்திற்புழுப்போல, தெளித்திடுசிந்தையும் - தெளியாநின்ற சிந்தனையும், படிறும் - வஞ்சனையும், பாவமும் - பாபமும், பழிப்பு உறுநினைப்பும் - பழித்தற்குரிய நினைவும், தவறும் - குற்றமும், அழுக்காறும் - பொறாமையும், இவறுபொச்சாப்பும் - மிகுதியாகிய மறதியும், கவடும் - கபடமும், பொய்யும் - அசத்தியமும், சுவடும்-இவற்றின் தழும்பும், பெருஞ்சின இகலும்-பெருங்கோபத்தின் வலியும், கொலையும்-கொலைத்தொழிலும், இழிப்பு உறு புன்மையும்-இழிவுபடுத்தற் குரிய புன்றொழில்களும், பகையும்-சத்துருத்துவமும், அச்சமும்-பயமும், துணிவும்-துணிதலும், பனிப்பும் - நடுக்கமும், முக்குணமடமையும் - முக்குணத்தாலுளதாகிய அறியாமையும், ஐம்பொறி முயக்கமும் - ஐம்பொறியிணக்கமும், இடும்பையும்-துன்பமும் பிணியும்-நோய்களும் ஆகிய இவற்றை, இடும்-கைக்கொண்டிருக்கிற, ஆக்கையை-உடம்பை, உயிர் என்னும் குருகு-உயிர் என்கிற பறவையானது, விட்டு ஓடும் குரம்பையை - விட்டு ஓடா நின்ற கூட்டை, எலும்பொடு நரம்புகொண்டு - எலும்பையும் நரம்பையுங்கொண்டு, இடையில் பிணித்து - இடையிற்கட்டி, கொழுந்தசைமேய்ந்து - கொழுமையாகிய மாமிசத்தினால் வேய்ந்து, மொழுக்கு விழும்குடிலை - மெழுகியிருக்குங் குடிசையை, செழும்பு எழு உதிரச் சிறுபுழுக்குரம்பையை - செழுமையுண்டாகிய உதிரமயமாயிருக்கிற சிறிய புழுக்கூட்டை, மல்வுடல் குடத்தை - மலவுடம்பாகிய குடத்தை, புலவு உடல் புட்டிலை - புல்வுடம் புப்பட்டிலை, தொலைவு இல்லா - தொலையாத, சோற்றுத்துன்பக்குழியை - சோற்றினால் தூர்க்கப்பட்ட துன்பப்பள்ளத்தை, கொலைபடைக் கலம்பலகிடக்கும் கூட்டை - கொலைக் குரிய பல ஆயுதங்கள் தங்கியிருக்கிற கூட்டை, சலிப்பு உறுவினைப்பல சரக்குக்குப்பையை - சலித்தற்குரிய வினைகளென்கிற பல சரக்குகளின் குவியலை, கோள்சரக்கு ஒழுகும் பீறல் கோணியை - துன்பச்சரக்குகள் சிந்துகின்ற கிழிச்சற்கோணியை, கோபத்தீமூட்டும் கொல்லன் துருத்தியை - கோவமாகிய தீயை மூள்விக்கின்ற கொல்லன் துருத்தியை, ஐப்புலப்பறவை அடையும் பஞ்சரத்தை - ஐம்புலன்கள் என்கிற பறவைகள் சேர்கின்ற கூட்டை, புலராகவலை விளைமரப்பொதும்பை - அழியாத விசனங்கள் விளைதற் கிடமான மரப்பொந்தை, ஆசைக்கயிற்றில் ஆடும்பம்பரத்தை - ஆசையாகிய கயிற்றினால் ஆட்டப்படுகிற பம்பரத்தை, காசில் பணத்தில் சுழலுங் காற்றாடியை - காசிலும் பணத்திலும் சுழலாநின்ற காற்றாடியை, மக்கள் வினையின் மயங்கும் திகிரியை-மக்களது செய்வினையால் மயங்குகின்ற சக்கரத்தை, கடுவெளி உருட்டிய சகடக்காலை-கடுவெளியிலுருட்டின வண்டியுருளையை, பாவச்சரக்கொடு - பாவமாகிய சரக்குகளுடன், பவக்கடல் புக்கு - பிறவிக்கடலிற் பிரவேசித்து, காமக்

காற்று எடுத்து அலைப்ப - சாமமென்கிற காற்றானது எடுத்தலைத்தலால், கெடுவழிக்கரைசேர் - கெட்டவழியாகிய கரையை யடைகின்ற, கொடுமரக்கலத்தை - கொடியமரக்கலத்தை, இருவினை விலங்கொடும் - இருவினைச் சங்கிலிகளுடன், இயங்குபுற்கலனை - சஞ்சரிக்கிறவுயிரை, நடுவன் வந்து அழைத்திட - யமன் வந்தழைக்க, நடுங்கிடும் யாக்கையை - நடுக்கமடைகின்றவுடலை, பிணம் எனப்படுத்தி - பிணத்தன்மையாக்கி, யான் புறப்படும்பொழுது - நான்வெளிப்படும்போது, நின் - உனது, அடி - திருவடியென்கிற, மலர்க்கமலத்துக்கு - தாமரைமலருக்கு, அபயம் - அபயம், நின் அடைக்கலம், உன்கையடை, வெளியிடை - ஆகாயத்தில், உரும் இடியிடித்தென - இடிஇடித்தாற்போல, வெறித்து எழும் - மதித்தெழுகின்ற, கடுநடை - வேகமாகிய நடையையுடைய, வெள்விடை - வெண்மையாகிய இடபத்தையுடைய, கடவுள் - கடவுளே, நின் அடைக்கலம்-உன்கையடை, இமையாநாட்டத்து-இமையாத கண்ணையுடைய, இறையே அடைக்கலம் - இறைவனே அடைக்கலம், அடியார்கு எளியாய் - அடியார்க்கெளியவனே, அடைக்கலம் அடைக்கலம்-கையடை கையடை, மறையவர்-வேதியர்வாழ்கின்ற, தில்லைமன்றுள் - தில்லையம்பலத்தில், நின்றுஆடி - நின்றுகூத்தாடி, கருணைமொண்டு - கருணையை முகந்து, அலையெறி-அலைகளாக வீசுகின்ற, கடலே அடைக்கலம்-ஆநந்தசாகரமே அடைக்கலம், தேவரும்-தேவர்களும், முனிவரும்-முனிவர்களும், சென்று நின்று ஏத்த-சென்று நின்று துதிக்க, பாசிழைக்கொடியொடு-பசியபொன்னாபரணங்களை யணிந்தகொடிபோல் பவளாகிய உமாதேவியோடு, பரிந்துஅருள் புரியும்-இரங்கியருள் செய்கின்ற, எம்பெருமான்-எம்பிரானே, நின் இணையடிக்கு அபயம்-உன் திருவடியிணைக்கு அபயம், அம்பலத்து அரசே - பொன்னம் பலத்துக்கு இறைவனே, உனக்கே அடைக்கலம் - உனக்கே நான்கையடை, எ - று.

பாற்கடலிற் பிறந்த நஞ்சாகிய வெண்ணெயைத் திருமிடற்றிலடக்குதல், எல்லாவுயிர்களையும் அடக்கும் ஆற்றலுள்ள காலனைக் காலாலுதைத்தடக்குதல் முதலிய செயல்களைச்செய்த தில்லையம்பலத்தரசனே, கனவுபோன்ற இப்பொய்வாழ்வையும் இப்பொய்யுடம்பையும் விட்டு நான் வெளிப்படும்போது உன்திருவடியிணையே எனக்குப் புகலிடம் என்பது கருத்து.

---

நான்காவது

## கச்சித்திருவகவல்.

திருமால்பயந்த திசைமுகனமைத்து
வருமேழ்பிறவியுமானுடத் துதித்து

மலைமகள்கோமான் மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங்குறுகாதவமே
மாதரைமகிழ்ந்துகாதல்கொண்டாடும்
மானிடர்க்கெல்லாம்யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாக்கடெளிவுறக்கேண்மின்
முள்ளுங்கல்லுமுயன்றுநடக்கும்
உள்ளங்காலைப்பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும்பாலேமேவியகணைக்காற்
றுள்ளும்வராலெனச்சொல்லித்துதித்தும்
தசையுமெலும்புந்தக்கபுன்குறங்கை
இசையுங்கதலித்தண்டெனவியம்பியும்
நெடுமுடைநாறுங்கிடுமிடையைத்
துடிபிடியென்றுசொல்லித்துதித்தும்
மலமுஞ்சலமும்வழும்புந்திரையும்
அலையும்வயிற்றையாலிலையென்றும்
சிலந்திபோலக்கிளைத்துமுன்னெழுந்து
திரண்டுவிம்மிச்சிப்பாய்ந்தேறி
உகிராற்கிறவுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய்நான்றுவற்றும்
முலையைப்பார்த்துமுளரிமொட்டென்றும்
குலையுங்காமக்குருடர்க்குரைப்பேன்
நீட்டவுமுடக்கவுநெடும்பொருள்வாங்கவும்
ஊட்டவும்பிசையவுமுதவியிங்கியற்றும்
அங்கையைப்பார்த்துக்காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்குமேவியகழுத்தைப்
பாரினிலினியகமுகெனப்பகர்ந்தும்
வெப்புமூத்தையுமேவியவாயைத்
துப்புமுருக்கின்றாய்மலரென்றும்
அன்னமுங்கறியுமசைவிட்டிறக்கும்
முன்னியபல்லைமுத்தெனமொழிந்தும்
நீருஞ்சளியுநின்றுநின்றொழுகும்
கூரிபழுக்கைக்குமிழெனக்கூறியும்

தண்ணீர்பீளை தவிராதொழுகும்
கண்ணைப்பார்த்துக்கழீஇனென்றும்
உள்ளுங்குறும்பியொழுகுங்காதை
வள்ளைத்தண்டின்வளமெனவாழ்த்தியும்
கையுமெண்ணெயுங்கலவாதொழியில்
வெய்யவதரும்பேனும்விளையத்
தக்கதலையோட்டின்முளைத்தெழுந்த
சிக்கின்மயிரைத்திரண்முகிலென்றும்
சொற்பலபேசித்துதித்துநீங்கள்
நச்சிச்செல்லுநரகவாயில்
தோலுமிறைச்சியுந்துதைந்துசீப்பாயும்
காமப்பாழிகருவிளைகழனி
தூமைக்கடவழிதொளைபெறுவாயில்
எண்சாணுடம்புமிழியும்பெருவழி
மண்பாற்காமங்கழிக்குமறைவிடம்
நச்சிக்காமுகர்நாய்தானென்றும்
இச்சித்திருக்குமிடைகழிவாயில்
திங்கட்சடையோன்றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ்சவலைப்பெருவழி
புண்ணிதுவென்றுபுடவையைமூடி
உண்ணீர்பாயுமோசைச்செழும்புண்
மால்கொண்டறியாமாக்தர்புகும்வழி
நோய்கொண்டொழியாநுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர்சாரும்படுகுழி
செருக்கியகாமுகர்சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும்பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியும்வாயிற்கருகே
சலஞ்சொரிந்திழியுந்தண்ணீர்வாயில்
இத்தைநீங்களினிதெனவேண்டா
பச்சிலையிடினும்பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபதவீடருள்பவனை
முத்திநாதனைமூவாமுதல்வனை

அண்டரண்டமுமனைத்துளபுவனமும்
கண்டவண்ணலைக்கச்சியிற்கடவுளை
ஏகநாதனையிணையடியிறைஞ்சுமின்
போகமாதரைப்போற்றுதலொழிந்தே.

இ-ள். திருமால்பயந்த திசைமுகன்-திருமால்பெற்ற பிரமதேவன், அமைத்துவரும் - அமைத்துவருகின்ற, எழ்பிறவியும் - ஏழுபிறவிகளினும், மாநுடத்துஉதித்து - மாநுடஜன்மத்திற்பிறந்து, மலைமகள்கோமான்-உமாதேவியின் கொழுநனாகிய சிவபெருமானது, மலர்அடி இறைஞ்சி - மலர்ப்பதங்களை வணங்கி, குலவிய - விளங்காநின்ற, சிவபதம் குறுகாது - சிவபதவியை யடையாமல், அவமே - வீணே, மாதரைமகிழ்ந்து - பெண்களைவிரும்பி, காதல்கொண்டாடும்-ஆசையைப் பாராட்டுகின்ற, மானிடர்க்கு எல்லாம் - மனிதர்களுக்கெல்லாம், யான்எடுத்து உரைப்பேன் - நானெடுத்துச் சொல்லுவேன், விழிவெளிமாக்கள் - புறக்கண்களையுடைய மாநுடரே, தெளிவுறக்கேண்மின் - தெளிவாகக்கேளுங்கள், முள்ளும்கல்லும் - முள்ளின்மேலும் கல்லின்மேலும், முயன்றுநடக்கும் - முயன்றுநடக்கின்ற,உள்ளங்காலை - உள்ளங்கால்களை, பஞ்சுஎனஉரைத்தும் - பஞ்சென்றுகூறியும், வெள்எலும்பாலே மேவியகணைக்கால் - வெள்ளெலும்பினாற் செய்யப்பொருந்திய கணைக்காலை, துள்ளும்-துள்ளுகின்ற, வரால் எனச்சொல்லி-வரால்மீனென்றுசொல்லி, துதித்தும் - புகழ்ந்தும், தசையும் எலும்பும் - மாமிசமும் எலும்பும், தக்க - பொருந்திய, பன்குறங்கை - புல்லியதொடையை, இசையும் - பொருந்துகின்ற, கதலித்தண்டெனஇயம்பியும்-வாழைத்தண்டென்று சொல்லியும், நெடும்உடல்தாங்கிநின்றிடும் இடையை - நெடிய உடம்பைச் சுமந்துநிற்கின்ற இடையினை, துடிபிடி என்றுசொல்லி துதித்தும் - உடுக்கைப்பிடியென்றுசொல்லிப் புகழ்ந்தும், மலமும் சலமும் - மலமும் நீரும், வழும்பும் இலாயும் - நிணமும் இரைச்சலும், அலையும்வயிற்றை-தங்கியசைதற்கிடமாகிய வயிற்றை, ஆல் இலையென்றும் - ஆலிலையெனக் கூறியும், சிலந்திபோல - கொப்புளம்போல, கிளைத்து - இரண்டாகி, முன் எழுந்து - முற்புறத்துத்தோன்றி, திரண்டு - திரட்சியாகி, விம்மி-பருத்து, சீப்பாய்ந்து ஏறி - சீப்பெருகியேறி, உகிரால்கீற - நகத்தாற்கிழிக்க, உலர்ந்து - உலர்ந்துபோய், உள் உருகி - மனமுருகி, நகுவார்க்கு இடம்ஆய் - சிரிப்பவர்களுக்கு இடங்கொடுப்பதாகி, நான்றுவற்றும் - தொங்கி வற்றிப்போகிற, முலையைப்பார்த்து-தனங்களைப்பார்த்து, முளரிமொட்டு என்றும்-தாமரையரும்பு என்றும், குலையும் - குழறுகின்ற, காமக்குருடர்க்கு - காமாந்தகருக்கு, உரைப்பேன் - சொல்லுவேன், நீட்டவும் முடக்கவும் - நீட்டுதற்கும் முடக்குதற்கும், நெடும்பொருள் வாங்கவும் - பெரும்பொருள்களை ஏற்கவும், ஊட்டவும் - உண்பிக்கவும், பிசையவும் - பிசையவும், உதவி

இங்கு இயற்றும் - இவ்விடத்துதவிசெய்கின்ற, அங்கையைப்பார்த்து-அழகிய கைகளைப்பார்த்து, காந்தள் என்று உரைத்தும்-காந்தள்மலர்என்றுசொல்லியும், வேர்வையும் - வெயர்வும், அழுக்கும் - அழுக்கும், மேவிய - பொருந்திய, கழுத்தை - கண்டத்தை, பாரினில் - உலகத்தில், இனிய கமுகு என பகர்ந்தும் - இனிமையாகிய கமுகென்றுசொல்லியும், வெப்பும் ஊத்தையும் மேவியவாயை - அழல்நாற்றமும் ஊத்தையும் பொருந்தியவாயை, துப்பு - பவளம், தூ - பரிசுத்தமாகிய, முருக்கின் மலர்என்றும் - முருக்கமலர் என்று சொல்லியும், அன்னமும் கறியும்-அன்னத்தையும் கறிகளையும், அசைவிட்டுஇறக்கும்-மென்று இறக்குகின்ற, முன்னியபல்லை - முன்னம்பல்லை, முத்து எனமொழிந்தும் - முத்தென்று சொல்லியும், சீரும்சளியும் நின்று நின்று ஒழுகும் - சீரும்சளியும் நின்றுநின்றொழுகாநின்ற, கூரிய மூக்கை - கூர்மையாகிய நாசியை, குமிழ்எனக் கூறியும் - குமிழம்பூவென்று சொல்லியும், தண்ணீர்பீளை தவிராது ஒழுகும் - தண்ணீரும் பீளையும் இடையறாதொழுகாநின்ற,கண்ணைப்பார்த்து-கண்களைப்பார்த்து,கழுநீர் என்றும்-கழுநீர்மலர்என்று சொல்லியும்,உள்ளும்-உள்ளிடத்துநின்றும், குறும்பி ஒழுகும் காதை-குறும்பியொழுகாநின்றகாதை,வள்ளைத்தண்டின்வளம்என வாழ்த்தியும் - வள்ளைத்தண்டின் வளமையுள்ளதென்று புகழ்ந்தும், கையும் எண்ணெயும் கலவாது ஒழியின்-கையும் எண்ணெயும் கலவாதொழிந்தால், வெய்யவதரும் - வெப்பமாகிய நோய்களையுண்டாக்கும், பேனும் விளையத்தக்க - (அன்றியும்) பேனும் விளைதற்குரிய, தலையோட்டில் முளைத்தெழுந்த - தலையோட்டின்மேல் முளைத்துத் தோன்றிய, சிக்கின்மயிரை - சிக்கோடுகூடிய மயிரை, திரள்முகில்என்றும் - திரண்டமேகமென்று சொல்லியும், சொற்பலபேசி துதித்து - பலசொற்களைச் சொல்லிப்புகழ்ந்து, நீங்கள் நச்சிச்செல்லும் - நீங்கள் விரும்பிச்செல்லுகின்ற, நரகவாயில்-நரகவாசல், தோலும் இறைச்சியும் துதைந்து - தோலும் சதையும் நெருங்கி, சீபாயும்-சீப்பெருகுகின்ற, காமப்பாழி - காமக்குகை, கருவிளைகழனி - பிறவியென்னும் பயிர்விளைகின்ற வயல், தூமைக்கடவழி - தூய்மையொழுகாநின்ற பெருவழி, தொளைபெறுவாயில் - தொளைபெற்றவாயில், எண்சாண் உடம்பும் - எண்சாணுடலும், இழியும் - இறங்கிவருதற்குரிய, பெருவழி - பெரியவழி, மண்பால்காமம் - மண்ணுலகத்தாரிடத்துள்ள காமத்தை, கழிக்கும்-கழித்தற்குரிய,மறைவிடம்-மறைவான இடம், காமுகநாய்தான் என்றும் நச்சி-காமுகன் என்கிற நாய்எப்போதும் விரும்பி, இச்சித்திருக்கும்-ஆசித்திருக்கிற, இடைகழிவாயில் - திட்டிவாசல், திங்கள்சடையோன் - சந்திரனை யணிந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானது, திருவருள் இல்லார் - திருவருள்கிடைக்கப்பெறாதவர்கள், தங்கித்திரியும் - தங்கித்திரிவதற்குரிய, சவலைப்பெருவழி - சவலையாகிய பெரியவழி,புண் இதுஎன்று-இது புண்ணென்றுகருதி, புடவையைமூடி - புடவையால் மூடி, உள்நீர்

பாயும் - உள்ளேநீர் பெருகுகின்ற, ஓசைச்செழும்புண் - ஆடவர்க்கு உவகையைச்செய்கின்ற செழியபுண், மால்கொண்டு - ஆசைகொண்டு, அறியாமாந்தர்-அறியாமையுள்ள மானுடர், புகும்வழி-நுழையும்வழி, நோய்கொண்டு - பிணிகொண்டு, ஒழியா - நீங்காத, நுண்ணியர் - மெலியோர், போம்வழி-போகின்றவழி, தருக்கியகாமுகர்-செருக்கடைந்த காமுகர்கள், சாரும் படுகுழி - அடைகின்ற படுபள்ளம், செருக்கிய-செருக்கடைந்த, காமுகர்-காமுகர்கள், சேரும் - அடைகின்ற, சிறுகுழி - சிறுபள்ளம், பெண்ணும் ஆணும் - பெண்களும் ஆண்களும், பிறக்கும் - உண்டாகின்ற, பெருவழி - பெரியவழி, மலம்சொரிந்து இழியும் வாயிற்கு அருகே - மலத்தைச்சொரிந்து இழிவடைந்திருக்கிற வாசலுக்கருகில், சலம்சொரிந்து இழியும் - நீரைச்சொரிந்திழிந்த, தண்ணீர்வாயில்-தண்ணீர்வாசல், இத்தை-இதனை, நீங்கள் இனிது எனவேண்டா-நீங்கள் இனியதென்று நினைக்கவேண்டா, பச்சிலை இடினும்-பச்சிலையைக்கிள்ளி யருச்சித்தாலும், பத்தர்க்கு இரங்கி - பத்தர்களுக்கிரங்கி, மெச்சி-கொண்டாடி, சிவபதம்-சிவபதமாகிய, வீடுஅருள்பவனை-மோக்ஷத்தையருள்செய்பவனை, முத்திநாதனை - முத்திக்கிறைவனை, மூவாமுதல்வனை - முதிராதமுதல்வனை, அண்டர்அண்டமும் - தேவலோகமும், அனைத்துளபுவனமும்-வேறுமுழுதுமாயுள்ளலோகங்களும்ஆகியஇவற்றை, கண்ட-படைத்த, அண்ணலை-பெரியோனை, கச்சியில்கடவுளை-திருக்கச்சியில் எழுந்தருளியிருக்கும் கடவுளை, ஏகநாதனை - தனிமையாகிய இறைவனை, போகமாதரை - அநுபவத்துக்குரிய மாதர்களை, போற்றுதல் ஒழிந்து - பேணுதலைக் கைவிட்டு, இணையடி - திருவடியிணையை, இறைஞ்சுமின் - வணங்குங்கள், எ-று.

எழ்பிறவியாவன - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. பெறுதற்கரிய மானிடப்பிறவியைப் பெற்றமானிடரே, நீங்கள் மாதருடைய உள்ளங்கால் முதலியவற்றைப் பஞ்சுமுதலியவாகப் புனைந்துரைத்து மீளாத நரகத்துக் காளாகிறீர்கள், இதனைவிட்டு முத்தியையருள்வோனாகிய திருக்கச்சிச் சிவபெருமானைவழிபட்டு அவனது திருவடியை வணங்குங்கள் என்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவேகம்பமாலை.

1. அறந்தானியற்றுமவனிலுங்கோடியதிகமில்லந்
துறந்தானவனிற்சதகோடியுள்ளத்துறவுடையோன்
மறந்தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற்
றிறந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே

இ - ள். இல்லந்துறந்தான்-இல்லறவாழ்க்கையை (யாதொருகாரணத்தாலாயினும்) துறந்தவனாகிய புறத்துறவுடையான், அறம் - (இல்லறவியலில்நடத்தவேண்டிய) முப்பத்திரண்டு அறங்களையும், இயற்றுமவனிலும் - வழுவாமற்செய்து வருவோனினும், கோடிஅதிகம் - கோடிமடங்குஅதிகனாவன், உள்ளத்துறவுடையோன் - அகத்துறவுடையோன், அவனின் - அப்புறத்துறவுடையோனினும், சதகோடி - நூறுகோடிமடங்கு அதிகனாவன், மறம்அறக்கற்று - பாவங்களெல்லாம் ஒருங்கொழியக்கற்கவேண்டிய வீட்டுநூல்களைக்கற்று, அறிவோடுஇருந்து - அவ்வீட்டுநூற்கல்வியாலுளதாகிய மெய்ஞ்ஞானத்தோடிருந்து, இருவாதனைஅற்று - இருவகைவாசனைகளும்நீங்கி, இறந்தான் - உடம்பைவிட்டுநீங்கினவனது, பெருமையை - சிறப்பை, என்சொல்லுவேன் - என்னென்றுசொல்லவல்லேன், கச்சியேகம்பனே - திருக்கச்சியேகம்பமுடையானே, எ - று,

அறம்முப்பத்திரண்டாவன :—ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற் குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம்.

வண்ணான்புன்னாவிதன்காதோலைசோலைமடந்தடம்வெண்
சுண்ணம்பறவைப்பிணஞ்சுடற்றூரியஞ்சோறளித்தல்
கண்ணாடியாவிற்குரிஞ்சுகல்வாயுறைகண்மருந்து
தண்ணீர்ப்பந்தறலைக்கெண்ணெய்பெண்போகந்தரலையமே.

மேதகுமாதுலர்க்குச்சாலையேறுவிடுத்தல்கலை
யோதுவர்க்குண்டிவிலங்கிற்குணவொடுயர்பிணிநோய்க்
கீதன்மருந்துசிறைச்சோறளித்தலியல்பிறரின்
மாதுயர்காத்தனற்கன்னியர்தானம்வழங்கலுமே.

கற்றவறுசமையத்தார்க்குணவுகருதும்விலை
யுற்றதளித்துயிர்மீட்டல்சிறுருக்குதவனற்பான்
மற்றுமகப்பெறுவித்தல்சிறுரைவளர்த்தலெனப்
பெற்றவிவற்றினையெண்ணுன்கறமெனப்பேசுவரோ.

என்பவற்ருனுங்காண்க. இருவாதனை - புண்ணியபாபவாசனை. இல்வாழ்வோனினும் இல்வாழ்க்கையைவிட்டவன் கோடிமடங்கதிகன், அவனினும் மனத்துறவுடையோன் கோடிமடங்கதிகன், அவனினும் பிறவிக்கு மூலமாகியஇருவாதனைகளையும் நீங்கினவன் அதிகன்என்பதுகருத்து.

2 கட்டியணைத்திடும்பெண்டிருமக்களுங்காலத்தச்சன்
வெட்டிமுறிக்குமரம்போற்சரீரத்தைவிழ்த்திவிட்டாற்
கொட்டிமுழக்கியழுவார்மயானங்குறுகியப்பா
லெட்டியடிவைப்பரோவிறைவாகச்சியேகம்பனே

இ - ள். காலத்தச்சன் - காலனுகியதச்சன், வெட்டிமுறிக்கும் - வெட்டிமுறிக்கின்ற, மரம்போல் - விருக்ஷத்தைப்போல, சரீரத்தைவீழ்த்திவிட்டால்-உடம்பைவிழுத்திவிட்டால், கட்டிஅணைத்திடும் - கட்டித்தழுவுகின்ற, பெண்டிரும் - மாதரும், மக்களும் - புதல்வரும், கொட்டிமுழக்கி - பறைகொட்டிமுழங்கப்பண்ணி, அழுவார் - அழுபவராய், மயானம்குறுகி - மயானத்தையடைந்து, அப்பால் - அதன்மேல், எட்டிஅடிவைப்பரோ - எட்டியடிவைப்பார்களோ, இறைவா - இறைவனே, கச்சியேகம்பனே - கச்சியேகம்பமுடையானே, எ - று.

இந்தச்சரீரமாகிய மரத்தைக்காலனுகிய தச்சன்வெட்டிவிழுத்திவிட்ட காலத்தில் மனைவிமக்கள்யாவரும் கொட்டிமுழக்கியழுவாரேயன்றி மயானத்திற்கப்பால் எட்டியடிவைப்பரோ என்பதுகருத்து.

3 கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன்கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன்முன்வைத்தயல்வளவி
லொப்புடன்சென்றுதுயினீத்துப்பின்வந்துறங்குவளை
யெப்படிநானம்புவேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். கைப்பிடிநாயகன் - மணம்புணர்ந்து அக்கிசாக்ஷியாகக்கையைப்பற்றினகணவன், தூங்கையிலே - உறங்கும்போது, அவன்கையை எடுத்து - அவனதுகையையெடுத்து, அப்புறந்தன்னில் - அப்புறத்தில், அசையாமல்முன்வைத்து - அசையாமல்முன்னேவைத்துவிட்டு, அயல்வளவில் - அண்டைவீட்டில், ஒப்புடன்சென்று-மனமொத்தலுடையவளாய்ச்சென்று, துயில்நீத்து - தன்காமநித்திரையைக்கழித்து, பின்வந்து - பிறகுவந்து, உறங்குவளை - உறங்குவாளை, எப்படிநான்நம்புவேன் - நான்எவ்வாறு நம்புவேன், இறைவாகச்சியேகம்பனே எ - று.

தன்நாயகன் உறங்குகையில் அவனையறியாமல் அயல்வீட்டிற்சென்று பிறநாயகனோடிணங்கிமீட்டும்வந்து உறங்குவாளைநான்எவ்வாறு நம்புவேன் என்பதுகருத்து.

4. நன்னாரிற்பூட்டியசூத்திரப்பாவைநன்னார்தப்பினாற்
றன்னாலுமாடிச்சலித்திடுமோவந்தத்தன்மையைப்போ
லுன்னாலியானுந்திரிவதல்லான்மற்றுனைப்பிரிந்தா
லென்னாலிங்காவதுண்டோவிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். நல்நாரின்பூட்டிய - நல்லநாரினாற்றொடுத்த, சூத்திரப்பாவை - சூத்திரப்பிரதிமையானது, நல்நார்தப்பினால் - நல்லநாரானது தவறினால், தன்னாலும் ஆடிச்சலித்திடுமோ - தனக்குத்தானே ஆடியோய்ந்திடுமோ, அந்தத்தன்மையைப்போல் - அந்தத்தன்மைபோல, உன்னால்யானும்திரிவதல்லால்-உன்னாலேநானும் திரிவதேயன்றி, உன்னைப்பிரிந்தால் - உன்னைப்பிரிவேனாயின், என்னால் - அடியேனால், இங்குஆவதுஉண்டோ - இங்குநடக்குங்காரியமுண்டோ, இறைவாகச்சியேகம்பனே, எ - று.

ஆட்டுவிக்குஞ்சூத்திரக்கயிறு இல்லாதபாவை இயங்காததுபோலஉன்னாலன்றிநான் இயங்குவேனோ என்பதுகருத்து.

5. நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பு
மெல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். நல்லார்இணக்கமும் - நல்லோரதுசிநேகமும், நின்பூசைநேசமும் - உன்பூசையில்விருப்பமும், ஞானமும்-ஞானமும், அல்லாது-அன்றி, வேறு நிலையுளதோ - வேறாகிய நிலையுடைப் பொருளுண்டோ, அகமும் - வீடும், பொருளும் - செல்வமும், இல்லாளும் - மனைவியும், சுற்றமும் - உறவினரும், மைந்தரும் - மக்களும், வாழ்வும்-வாழ்க்கையும், எழில் உடம்பும் - அழகாகிய சரீரமும் ஆகிய, எல்லாம் - அனைத்தும், வெளிமயக்கே-வெளிமயக்கமே, இறைவாகச்சி யேகம்பனே, எ - று.

நல்லாரிணக்கம் முதலாயின, நிலையுடைப் பொருள்களேயன்றி வீடு முதலாயின நிலையுடைப் பொருள்களல்ல என்பது கருத்து.

6. பொல்லாதவனெறியில்லாதவனைம்புலன்கடமை
வெல்லாதவன்கல்விகல்லாதவன்மெய்யடியவர்பாற்
செல்லாதவனுண்மைசொல்லாதவனின்றிருவடிக்கன்
பில்லாதவன்மண்ணிலேன்பிறந்தேன்கச்சியேகம்பனே.

இ - ள். பொல்லாதவன் - பொல்லாதவனும், நெறிநில்லாதவன் - நல்வழியில் நில்லாதவனும், ஐம்புலன்கள் தம்மை வெல்லாதவன் - ஐம்புலன் களைவெல்லாதவனும், கல்விகல்லாதவன் - வீட்டைடைதற்கேதுவாகியகல்வியைக்கல்லாதவனும், மெய்யடியவர்பால் செல்லாதவன்-உன்மெய்யன்பரிடத்திற்செல்லாதவனும், உண்மைசொல்லாதவன் - மெய்சொல்லாதவனும், நின்திருவடிக்கு அன்புதில்லாதவன் - உன்திருவடிக்கண் அன்பில்லாதவனுமாகியஅடியேன், மண்ணில் - பூமியில், ஏன்பிறந்தேன் - என்ன பயனடையச்சனித்தேன், கச்சியேகம்பனே, எ - று.

7. பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைபிறந்துமண்மே
லிறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ்சிவன்றந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

இ - ள். பிறக்கும்பொழுது - ஜந்மிக்கும்போது, கொடுவந்ததுஇல்லை - கொண்டுவந்ததில்லை, பிறந்துமண்மேல் - பூமியின்மேல்பிறந்து, இறக்கும்பொழுது - இறந்துபோம்போது, கொடுபோவதில்லை - கொண்டுபோவதுமில்லை, இடைநடுவில் - இடையாகியகாலத்தில், குறிக்கும் - நினைக்கப்படுகிற, இச்செல்வம் - இந்தச்செல்வமானது, சிவன்தந்ததுஎன்று - சிவபெருமானல் கிருபைசெய்யப்பட்டதென்றுஅறிந்து, கொடுக்கஅறியாது - வறியர்முதலானேர்க்குக் கொடுக்கவறியாமல், இறக்கும் - (அச்செல்வத்தைவறிதேவைத்துவிட்டு) இறந்துபோகின்ற, குலாமருக்கு - கீழ்மக்களுக்கு, என் சொல்லுவேன் - என்னஇதத்தைச்சொல்லுவேன், கச்சியேகம்பனே.

8. அன்னவிசாரமதுவேவிசாரமதுவொழிந்தாற்
சொன்னவிசாரந்தொலையாவிசாரநற்றேகையளைப்
பன்னவிசாரம்பலகால்விசாரமிப்பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம்வைத்தாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். அன்னவிசாரம் அதுவேவிசாரம் - அன்னத்தைப்பற்றியவிசனமோவென்றால் (வேறொன்றுக்கும் அவகாசமில்லாமல்) அந்தவிசனமேஅதிகரித்திராநின்றது, அது ஒழிந்தால் - அந்தவிசனம்சற்றுநீங்கினல், சொன்னவிசாரம் - பொருளைப்பற்றியவிசனம், தொலையாவிசாரம் - தொலையாதவிசனமாயிராநின்றது, (அதுசற்றொழியுமிடத்து) நல்தோகையளை - அழகியமாதரோடு, பன்ன - வார்த்தையாடலைப்பற்றிய, விசாரம் - விசனம் உண்டாகாநின்றது, பலகால்விசாரம் - இவ்வாறுபலகாலமும் விசனரூபமாயிருக்கும்படி, இப்பாவிநெஞ்சுக்கு - இந்தப்பாவி மனத்துக்கு, என்னவிசாரம்வைத்தாய் - என்னவிசனத்தை யுண்டாக்கிவைத்தனை, இறைவாகச்சியேகம்பனே, எ - று.

9. கல்லாப்பிழையுங்கருதாப்பிழையுங்கசிந்துருகி
நில்லாப்பிழையுநினையாப்பிழையுநின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந்துதியாப்பிழையுந்தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே.

இ - ள். கல்லாப்பிழையும் - அறிவுநூல்களைக்கல்லாதகுற்றமும், கருதாப்பிழையும் - உன்னைநினையாதகுற்றமும், கசிந்துஉருகிநில்லாப்பிழையும் - மனங்குழைந்துருகி நில்லாதகுற்றமும், நினையாப்பிழையும் - (அதைப்பற்றி) நினைத்திரங்காத குற்றமும், உன்அஞ்சுஎழுத்தை - உனது பஞ்சாக்ஷரத்தை, சொல்லாப்பிழையும் - உச்சரியாத குற்றமும், துதியாப்பிழையும் - உன்னைத் தோத்திரம்பண்ணாத குற்றமும், தொழாப்பிழையும் - உன்னை வணங்காதகுற்றமும் ஆகிய, எல்லாப்பிழையும் - எல்லாக்குற்றங்களையும், பொறுத்தருள்வாய் - பொறுத்தருள்வாயாக, கச்சியேகம்பனே, எ - று.

10. மாயநட்போரையுமாயாமலமெனுமாதரையும்
வீயவிட்டோட்டிவெளியேபுறப்பட்டுமெய்யருளாந்
தாயுடன்சென்றுபின்றாதையைக்கூடிப்பின்றாயைமறந்
தேயுமதேநிட்டையென்றானெழிற்கச்சியேகம்பனே.

இ - ள். மாயநட்போரையும்-மாயை என்கிற நட்பினரையும், மாயாமலம் என்னும் மாதரையும் - மாயாமலம் என்று சொல்லப்பட்ட மாதர்களையும், வீயவிட்டு ஒட்டி - நீங்கவிட்டுத்துரத்தி, வெளியே புறப்பட்டு - சிதாகாசத்தில் வெளிப்பட்டு, மெய் அருள் ஆம்-உண்மையருளாகிய, தாயுடன் சென்று - தாயோடு கூடிச்சென்று, பின் - பிறகு, தாதையைக்கூடி - தந்தையைச்சேர்ந்து, பின் - பிறகு, தாயைமறந்து - தாயையுமறந்து, ஏயுமதே-பொருந்தியிருப்பதே, நிட்டையென்றான் - நிஷ்டையென்றுசொன்னான், எழில் கச்சியேகம்பன் - அழகிய கச்சியேகம்பன், எ - று.

திருவருளை முன்னிட்டு இறைவனைக்கூடி ஐக்கியப்பட்டு, பிறகு அம்முன்னிலையையும் நழுவவிட்டு அசையாதிருப்பதே மேலான நிஷ்டையென்பதுகருத்து. மாயநட்போர் என்றது ஆறுகோடி மாயாசத்திகளை. இதை "ஆறுகோடிமாயாசத்திகள் வேறுவேறு தம்மாயைகடொடங்கினர்" என்னும திருவாசகத்தானுமுணர்க. மாயாமலமென்றது மும்மலங்களிலொன்றை. தாய் என்றது திருவருளை. தந்தை என்றது இறைவனை.

11. வரிக்கோலவேல்விழியாரநுராகமயக்கிற்சென்று
சரிக்கோதுவேனெழுத்தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல
நரிக்கோகழுகுபருந்தினுக்கோவெய்யநாய்தனக்கோ
வெரிக்கோவிரையெதுக்கோவிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். வரி - இரேகைபடர்ந்த, கோலம் - அழகாகிய, வேல்விழியார் - வேல்போலுங்கண்ணையுடைய மாதரது, அநுராக மயக்கில்சென்று-

காமமயக்கத்திற் சென்று, சரிக்க - சஞ்சரித்தற் பொருட்டு, ஓதுவேன் - (அதற்குவேண்டிய கல்விகளைக்) கற்பேன், எழுத்து அஞ்சும் சொல்லேன் - உன் திருப்பஞ்சாக்ஷரத்தையும் உச்சரியேன், (ஆதலால்) தமியேன் உடலம் - தமியேனது சரீரம், நரிக்கோ - நரிக்குந்தானோ, கழுகு பருந்தினுக்கோ - கழுகு பருந்து என்னும் இவைகளுக்குத்தானோ, வெய்ய நாய்தனக்கோ - வெவ்விய நாய்க்குத்தானோ, எரிக்கோ - நெருப்புக்குத்தானோ, இரை எதுக்கோ - உணவாவது (இவற்றுள்) எதற்கோ, இறைவா கச்சியேகம்பனே, எ - று.

**12.** காதென்றுமூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெதிரே
மாதென்றுசொல்லிவருமாயைதன்னைமறலிவிட்ட
தூதென்றெண்ணமற்சுகமென்றுநாடுமித்துர்ப்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். காதென்று-காதென்றும், மூக்கு என்று - மூக்கென்றும், கண் என்று - கண்ணென்றும், காட்டி - காட்டிக்கொண்டு, என் கண் எதிரே - என் கண்ணுக்கெதிரில், மாது என்று சொல்லி - பெண்ணென்று சொல்லப்பட்டு, வரும் - வருகின்ற, மாயை தன்னை - மாயையினுருவத்தை, மறலிவிட்ட - யமன் அனுப்பின, தூது என்று எண்ணமல் - தூதென்று நினையாமல், சுகம் என்று நாடும் - சுகரூபமென்று நினைக்கின்ற, இத்துர்ப்புத்தியை - இந்தத்துர்ப்புத்தியை, ஏது என்று எடுத்து உரைப்பேன் - யாதென்றெடுத்துச் சொல்லுவேன், இறைவா கச்சியேகம்பனே, எ - று.

மாதரை யமன்விட்ட தூது என்று நினைத்தல்வேண்டும் என்பது கருத்து.

**13.** ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டீர்சதமல்லபிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லதேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே.

இ - ள். ஊரும் சதம் அல்ல-ஊரும் நிலையல்ல, உற்றார் சதம் அல்ல - உறவினரும் நிலையல்ல, உற்றுப்பெற்ற பேரும் சதம் அல்ல -(பலவகையாக விரதங்காத்தல்முதலிய துன்பங்களை) அடைந்து பெற்றோர்களாகிய தாய் தந்தையரும் நிலையல்ல, பெண்டீர் சதம் அல்ல - மாதர்கள் நிலையல்ல, பிள்ளைகளும் சீரும் சதம் அல்ல - மக்களும் சிறப்பும் நிலையல்ல, செல்வம் சதம் அல்ல - ஐசுவரியமும் நிலையல்ல, தேசத்திலே யாரும் சதம் அல்ல - நாட்டிலுள்ள யாவரும் நிலையல்ல, நின் தாள் சதம் - உன் திருவடியே நிலையுடைப்பொருள், கச்சியேகம்பனே, எ - று.

**14.** சீறும்வினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையுமிறைச்சியுமாகிக்கொடுமையினாற்
பீறுமலமுமுதிரமுஞ்சாயும்பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். சீறும் வினையது - உயிர்களை வருத்துகின்ற வினையானது, பெண் உரு ஆகி - பெண்ணுருவமைந்து, திரண்டு உருண்டு-திரண்டுருண்டு, கூறும் முலையும் இறைச்சியும் ஆகி-சொல்லப்பட்ட தனங்களும் தசையுமாகி, கொடுமையினால்-கொடுமையால், பீறும்மலமும் உதிரமும் சாயும்-கிழித்துக் கொண்டு வெளிப்படுகின்ற மலமும் உதிரமும் பெருகிப்பாய்கின்ற, பெருங் குழிவிட்டு - பெரும்பள்ளத்தைவிட்டு, ஏறும் - ஏறுதற்குரிய, கரைகண்டிலேன்-முத்திக் கரையைக்கண்டிலேன், இறைவாகச்சியேகம்பனே, எ-று.

பெருங்குழி என்றது - அல்குற்றடத்தை.

**15.** பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்துந்
தெருளுடையோரைமுகத்தினுந்தேர்ந்துதெளிவதுபோ
லருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளிலன்பி
லிருளறுசொல்லினுங்காணத்தகுங்கச்சியேகம்பனே.

இ - ள். பொருள் உடையோரை - செல்வமுடையோரை, செயலினும் - (அவர்செய்யும்) செய்கையாலும், வீரரை - வீரத்தன்மையுள்ளாரை, போர்க்களத்தும் - யுத்தகளத்திற்செய்யும் யுத்தத்தாலும், தெருள் உடையோரை - கல்வித்தேர்ச்சி யுள்ளாரை, முகத்தினும் - (அவரது) முகத்தினாலும், தேர்ந்து தெளிவதுபோல் - ஆராய்ந்து தெளிவதுபோல, அருள் உடையோரை - உன்திருவருளுடையாரை, தவத்தில் - (அவர்செய்யும்) தவத்தாலும், குணத்தில் - (அவரது) குணத்தாலும், அருளில் - (அவர்க்குப் பிறவுயிர் கண்மீதுள்ள) இயற்கையாகிய அருளாலும், அன்பில்-(தொடர்புடையாரிடத்து அவர்க்குள்ள) அன்பினாலும், இருள் அறு சொல்லினும் - (கேட்பவருடைய அஞ்ஞானமென்கிற )இருளறுதிக்குக் காரணமாகிய (அவரது) சொற்களாலும், காணத்தகும் - காணலாகும், கச்சியேகம்பனே, எ - று.

**16.** பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்க
டுருத்திக்கறுசுவைபோடுகின்றார்தறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மாநிலத்தி
லிருத்திக்கொண்டேனிருந்தாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். பருத்திப் பொதியினைப்போலே - பருத்திப் பஞ்சுப்பொதியைப்போலே, வயிறுபருக்க - வயிறுபெருகும்படி, தங்கள் துருத்திக்கு -

தங்கள் தோற்பைக்கு, அறுசுவை - அறுசுவைப் பதார்த்தங்களை, போடு கின்றார் - நிரப்புகின்றார்கள், துறந்தோர்தமக்கு - துறவடைந்தார்க்கு, வருத்தி அமுது இடமாட்டார் - வரவழைத்து அமுது பரிமாறமாட்டார், அவரை - அப்படிப்பட்டவர்களை, இம்மாநிலத்தில் - இந்தப் பெரியவுலகத்தில், இருத்திக்கொண்டு - இருக்கச்செய்துகொண்டு, என் இருந்தாய் - ஏனிருந்தனை, இறைவா கச்சி ஏகம்பனே, எ - று.

**17.** பொல்லாவிருளகற்றுங்கதிர்கூகையென்புட்கண்ணினுக்
கல்லாயிருந்திடுமாறொக்குமேயறிவோருளத்தில்
வல்லாரறிவாரறியார்தமக்குமயக்கங்கண்டா
யெல்லாம்விழிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். அறிவு - அறிவினால், ஓர் -(விஷயங்களை) ஆராய்ந்துணர்தற்குரிய, உள்ளத்தில் வல்லார் - மனவூக்கத்தில் வல்லவர்களாகிய ஞானிகள், அறிவார் - (பரம்பொருளை) உள்ளவாறு தமது ஞானக்கண்ணினால் காண்பார்கள், அறியார் தமக்கு - அவ்வாறு காணுதற்குரிய ஞானக்கண் இல்லாதவர்க்கு, மயக்கம் - (அப்பரம்பொருள் உணர்ச்சி) மயக்கமேயாம், (அது எதுபோலவெனின்) பொல்லா இருள் அகற்றும் கதிர் - மிகுந்த இருளை நீக்குகின்ற சூரியகிரணம், கூகை என்புள் கண்ணினுக்கு - கூகை என்கிற பறவையின் கண்ணுக்கு, அல் ஆய் இருந்திடும் ஆறு ஒக்கும் - இருளாய் இருக்கும் விதத்தை ஒத்திருக்கும், (ஆதலால்) எல்லாம் விழிமயக்கே - தோன்றாமைமுதலிய குற்றங்களெல்லாம் கண்ணின் குற்றமேயாம்.

ஞானிகள் மனத்துக்கு பரம்பொருள் தோன்றும், அஞ்ஞானிகள் மனத்துக்குத்தோன்றாது என்பது கருத்து. அஞ்ஞானிகள் மனத்துக்குத் தோன்றாமைக்குக்காரணம் அவர்கள் மனக்குற்றமென்க.

**18.** வாதுக்குச்சண்டைக்குப்போவார்வருவார்வழக்குரைப்பார்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடியொன்று
மாதுக்கழிந்துமயக்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். வாதுக்கு - வாக்வாதத்துக்கும், சண்டைக்கு - கைச்சண்டைக்கும், போவார் - போவர், வருவர் - மீண்டுவருவர், வழக்கு - தமது வழக்கை, உரைப்பார்-பிறர்கேட்கச் சொல்வார்கள், தீதுக்கு உதவியும்செய்திடுவார் - பொல்லாங்குக்குத் துணையுஞ்செய்வார், விதிமாளுமட்டும்-தமது ஊழ்நசிக்குமளவும், ஒன்று - ஒப்பற்றதாகிய சுவர்ணத்தை, தினம்தேடி- நாள்தோறும் ஈட்டிவைத்து, மாதுக்கு - (தம்மால் விரும்பப்பட்ட) பெண்ணின்பொருட்டு, அழிந்து-அறிவழிந்து, மயங்கிடுவார்-மயங்குவார்கள்,இவர் இப்படிப்பட்ட குணங்களையுடையஇவர்,ஏதுக்குப்பிறந்தார்-என்னபுருஷார்த்தத்தைச் சம்பாதித்தற்பொருட்டுப் பிறந்தார்களோ, இறைவா கச்சியேகம்பனே, எ - று.

19. ஓயாமற்பொய்சொல்வர்நல்லோரைநிந்திப்பருற்றுப்பெற்ற
தாயாரைவைவர்சதியாயிரஞ்செய்வர்சாத்திரங்க
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார்தமையண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே.

இ - ள். ஓயாமல்பொய்சொல்வர் - இடையறுமற்பொய்சொல்வார்கள், நல்லோரைநிந்திப்பர் - நல்லோர்களைநிந்திப்பார்கள், உற்றுப்பெற்ற தாயாரைவைவர் - கருப்பநோய் முதலியவைகளையடைந்து ஈன்றஅன்னையை வைவார்கள், ஆயிரம்சதிசெய்வர் - ஆயிரம்வஞ்சனைசெய்வார்கள், சாத்திரங்கள்ஆயார் - அறிவுநூல்களையாராய்ந்திலர், பிறர்க்குஉபகாரம் செய்யார் - பிறர்க்குஉபகாரமும்செய்யார், தம்மைஅண்டினர்க்கு - தம்மையடுத்தவர்களுக்கு, ஒன்றுஈயார் - ஒருபொருளையும்கொடார், (இப்படிப்பட்ட இவர்) இருந்துஎன்ன - உலகிலிருந்தால்என்னலாபம், போய்என்ன - இறந்தொழிந்தால்என்னநஷ்டம், கச்சியேகம்பனே, எ - று.

20. அப்பென்றும்வெண்மையதாயினுமாங்கந்நிலத்தியல்பாய்த்
தப்பின்றியேகுணவேற்றுமைதான்பலசார்தலினாற்
செப்பிலபக்குவம்பக்குவமாயுள்ளசீவரினு
மிப்படியேநிற்பனெந்தைபிரான்கச்சியேகம்பனே.

இ - ள். அப்பு - நீரானது, என்றும் - எக்காலத்தும், வெண்மையது ஆயினும் - வெண்ணிறமுடையதே யாயினும், ஆங்கு - அதுமேகத்தினின்றும்வீழ்ந்ததாகிய, அந்நிலத்துஇயல்புஆய் - அந்தநிலத்தினதியற்கையையுடையதாகி, தப்புஇன்றியே - தவறுதல்இல்லாமலே, குணவேற்றுமைதான் - தன்னியற்கைக்குணத்தினின்றும் வேறுபாடடைதலையுடையதேயாம், எந்தைபிரான் - எமதுதந்தையாகிய மஹோபகாரனும், இப்படியே - இவ்வாறே, பலசார்தலினால் - பலசார்புகளால், செப்பில் - சொல்லுமிடத்து, அபக்குவம்பக்குவம்ஆய்உள்ளசீவரினும் - அபக்குவமாயும் பக்குவமாயுமுள்ள சீவர்களினும், நிற்பன் - (பக்வாபக்வாநுகுணமாக வேறுபாட்டையடைந்து) நிற்பன், கச்சியேகம்பனே, எ - று.

“நிலத்தியல்பானீர் திரிந்தற்றாகுமாந்தர்க் - கினத்தியல்பதாகுமறிவு” என்றார் தெய்வப்புலவரும்.

21. நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடிநயம்புரியுந்
தாயார்வயிற்றினரராய்ப்பிறந்துபின்சம்பன்னராய்க்
காயாமரமும்வறளாங்குளமுங்கல்லாவுமென்ன
வீயாமனிதரையேன்படைத்தாய்கச்சியேகம்பனே.

இ - ள். நாய்ஆய்பிறந்திடின் - நாயாகிப்பிறந்தாலும், நல்வேட்டை ஆடி - நல்லவேட்டையாடி, நயம்புரியும் - (தன்னைவளர்ப்பவனுக்குப்) பிரயோஜநத்தைச்செய்யும், தாயார்வயிற்றில் - அன்னைவயிற்றில், நரர்ஆய்பிற

ந்து - நாஜங்மமாகிப்பிறந்து, பின்சம்பந்ர்ஆய் - பிறகுசெல்வமுள்ளவர்களாகி, காயாமரமும் - காயாமரத்தையும், வறள்ஆம்குளமும் - நீர்வறண்டு போனகுளத்தையும், கல்ஆவும் - கற்பசுவையும், என்ன - போல, ஈயாமனிதரை - (தமர்க்கும்பிறர்க்கும்யாதொன்றனையுங்) கொடாதமாநுடரை, என் படைத்தாய் - (இவ்வுலகிலென்னகாரியத்துக்காகப்) படைத்தனை, கச்சியேகம்பனே, எ - று.

காயாதமரமும், நீர்வற்றியகுளமும், கல்லாவும் பிறக்குப்பயன்படாதது போல ஈகையில்லாதமனிதரும் பிறர்க்குப்பயன்படார் என்பதுகருத்து.

**22.** ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். ஐயா - ஐயனே, புரம்மூன்றுஎரித்து - முப்புரங்களையெரித்து. கூற்றை - யமனை, பணிகொள்ளும் - அடிமைகொண்ட, தாள்உடையாய் - திருவடியையுடையவனே, குன்றவில்உடையாய் - (மேரு) மலையாகியவில்லையுடையானே, ஏற்றுக்கொடிஉடையாய் - இடபக்கொடியையுடையானே, இறைவா - இறைவனே, கச்சியேகம்பனே - கச்சியேகம்பமுடையானே, என்அன்பையெல்லாம் - என்னன்புமுழுதினையும், ஆற்றில்கரைத்த - மஹாநதியிற்கரைத்துவிட்ட, புளிஆக்கிடாமல் - புளியாகச்செய்யாமல், போற்றி - (என்னன்புருவங்கெடாமல்) காத்து, திருவுளம்பற்றும் - திருவுளம்பற்றவேண்டும், கச்சியேகம்பனே, எ - று.

யமனை உதைத்தவனேஎன்றற்கு "கூற்றைப்பணி கொளும்தாளுடையாய்" என்றார்.

**23.** பெண்ணாகிவந்தொருமாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டிமுலையான்மயக்கிக்கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். பெண்ஆகிவந்த - பெண்ணுருக்கொண்டுவந்த, ஒருமாயப்பிசாசம் - ஒருமாயப்பேயானது, என்னைப்பிடித்திட்டு-என்னைப்பற்றி, கண்ணால்வெருட்டி - கண்களால்அச்சுறுத்தி, முலையால்மயக்கி - முலைகளைக்கொண்டு என்மதிமயங்கப்பண்ணி, கடிதடத்துப்புண்ஆம்குழியிடை - கடிதடத்தின்கண்ணதாகிய புண்ணென்றற்குரிய பள்ளத்தில், தள்ளி-வீழ்த்தி என்போதப்பொருள்பறிக்க-என்ஞானமாகிய பொருளைப்பறித்துக்கொள்ளுதலால், எண்ணாது-உன்னைஎண்ணாது, உனைமறந்தேன் - உன்னைமறந்துவிட்டேன், இறைவா கச்சியேகம்பனே, எ - று.

24. நாவாரவேண்டுமிதஞ்சொல்லுவாருனேநான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள்கைதான்வறண்டாற்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்
கீவார்தலைவிதியோவிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். நாஆர - நாநிரம்ப, வேண்டும் இதம் சொல்லுவார் - வேண்டிய ஹிதவசநங்களைச் சொல்வார்கள், உன்னை நான் பிரிந்தால் - உன்னை நான்பிரிவேனாயின், சாவேன் என்றே - இறந்துவிடுவேன் என்று சொல்லாநின்றே, ஒக்க இருந்து உண்பார்கள் - உடனிருந்துண்பார்கள், கைவறண்டால் - கையிற் பசையற்றுப்போனால், போய்வாரும் என்று - போய்வாருமென்று வாயினாற்சொல்லி, நடுத்தலைக்கு - நடுத்தலையில், குட்டும் - கையினாற் குட்டியனுப்புகிற, பூவையருக்கு - பொருட்பெண்டிர்க்கு, ஈவார் - (தம் பொருள்முதலானவைகளைக்) கொடுப்பார்கள் அறிவீனர்கள், தலைவிதியோ - (இப்படியிவர்கள் செய்தற்குக்காரணம் இவர்களுடைய) தலையில் பிரமன் எழுதின விதியின் நியமந்தானோ, இறைவாகச்சியேகம்பனே, எ - று.

பொருட் பெண்டிர் - வேசையர்.

25. கல்லார்சிவகதைநல்லோர்தமக்குக்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநினையார்நின்னுமநினைவிற்சற்று
மில்லாரிருந்தென்னிறந்தென்புகல்கச்சியேகம்பனே.

இ - ள். சிவகதை கல்லார் - சிவசரிதங்களைப்படியார், நல்லோர்தமக்கு - நல்லோர்களுக்கு, கனவிலும்மெய்சொல்லார் - ஸ்வப்நத்திலும்உண்மை பேசார்கள், பசித்தவர்க்கு அன்னம்கொடார் - பசித்துவந்தவர்களுக்கு அந்நம் தரார், குருசொன்னபடிநில்லார் - ஆசாரியன்சொன்னவண்ணம் நிற்கமாட்டார், அறத்தைநினையார் - தருமத்தைச் செய்யமனத்தினாலும் நினைக்கமாட்டார்கள், நின்நாமம் - உன்திருநாமம், நினைவில் - நினைவினிடத்து, சற்றும்இல்லார் - சிறிதுமுடையரல்லர், (இவர்கள்) இருந்தென் - (உலகில் உயிரோடுகூடி) இருந்தால்என்னலாபம், இறந்தென் - இறந்தால்என்ன நஷ்டம், புகல் - சொல்லாய், கச்சியேகம்பனே, எ - று.

26. வானமுதத்தின்சுவையறியாதவர்வண்கனியின்
றேனமுதத்தின்சுவையெண்ணல்போலத்தனித்தனியே
தேனமுதத்தின்றெளிவாயஞானஞ்சிறிதுமில்லார்க்
கீனமுதச்சுவைநன்றல்லவோகச்சியேகம்பனே.

இ - ள். வான் - விண்ணுலகத்திலுள்ள, அமுதத்தின் - அமிர்தத்தின், சுவை அறியாதவர் - சுவையையுணராதவர், வண்கனியின் - வளமாகியகனிகளின், அமுதத்தின்சுவை - ரசங்களின்சுவையை, எண்ணல்போல - மதித்

தல்போல, தனித்தனியே - தனித்தனியாகவே, தேன்அமுதத்தின்தெளிவு ஆய - தேனும்அமிர்தமும்ஆகிய இவற்றின்தெளிவையொத்த, ஞானம் - ஞானத்தை, சிறிதும்இல்லார்க்கு - சிறிதும்உடையரல்லாதார்க்கு, ஈனம் - இழிவாகிய, அமுதச்சுவை - (விஷயாநுபவமாகிய) அமிர்தத்தின் சுவையானது, நன்றுஅல்லவோ - நன்மையாமன்றோ, கச்சியேகம்பனே, எ - று.

**27.** ஊற்றைச்சரீரத்தையாபாசக்கொட்டிலையூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச்சோறிடுந்தோற்பையைப்பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். ஊற்றைச்சரீரத்தை - ஊற்றையுடம்பை, ஆபாசக்கொட்டிலை - நிந்தனைகளென்கிறசரக்குகளைப் பொதிந்துவைத்திருக்குமொதுக்கிடத்தை, ஊன்பொதிந்த - மாமிசம்பொருந்திய, பீற்றல்துருத்தியை - பலதுளைகளையுடையதுருத்தியை, சோறுஇடும்தோல்பையை - சோற்றையிட்டுநிரப்பின தோலாற்செய்யப்பட்டபையை, பேசஅரிய - சொல்லுதற்கரிய, காற்றில்பொதிந்த - காற்றைஅடைத்துவைத்த, நிலைஅற்றபாண்டத்தை - நிலையிலதாகியமட்கலத்தை, காதல்செய்து - விரும்பி, ஏற்றுத்திரிந்துவிட்டேன்-(அதைச்) சுமந்துதிரிந்தேன், இறைவாகச்சியேகம்பனே, எ - று.

**28.** சொல்லால்வருங்குற்றம்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினைபார்வையிற்பாவங்கள்புண்ணியநூ
லல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே.

இ - ள். சொல்லால்வரும்குற்றம்-சொல்லினாலுண்டாகுங்குற்றமும், சிந்தனையால்வரும்தோடம் - நினைப்பினாலுண்டாகும் தோஷமும், செய்த பொல்லாததீவினை - செய்தபொல்லாத தீச்செயல்களும், பார்வையின்பாவங்கள் - பார்வையினாலுண்டாகும் பாவங்களும், புண்ணிய நூல் அல்லாத கேள்வியை - புண்ணியநூல்களல்லாதனவாகிய கேள்விகளை, கேட்டிடும் தீங்குகள்ஆயவும் - கேட்கிறபாவங்களானவைகளும்ஆகிய, எல்லாப்பிழையும் - எல்லாக்குற்றங்களையும், பொறுத்துஅருள்வாய் - பொறுத்தருளல் வேண்டும், கச்சியேகம்பனே, எ - று.

**29.** முட்டற்றமஞ்சளையெண்ணெயிற்கூட்டிமுகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில்வெளிமயக்கேசெயும்பாவையர்மே
லிட்டத்தைநீதவிர்ப்பாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். முட்டுஅற்றமஞ்சளை - குற்றமற்றமஞ்சளை, எண்ணெயில் கூட்டி - எண்ணெயிற்கலந்து, (அதைப்பூசி) முகம்மினுக்கி - முகத்தைமினுக்கி, மெட்டுஇட்டு - கால்மிஞ்சியிட்டு, பொட்டுஇட்டு - பொட்டணிந்து

பித்தனை ஓலைவிளக்கிஇட்டு - பித்தனையோலையைத்துலக்கித்தரித்து, பட்டப்பகலில் - பட்டப்பகற்பொழுதில், வெளிமயக்குசெய்யும் - வெளிமயக்கஞ்செய்கிற, பாவையர்மேல் - மாதர்மீதுள்ள, இட்டத்தை - விருப்பத்தை நீதவிர்ப்பாய் - நீதீர்த்தருளவேண்டும், இறைவாசச்சியேகம்பனே, எ - று.

30. பிறந்துமண்மீதிற்பிணியேகுடிகொண்டுபேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப்புன்மாதருக்குட்
பறந்துழன்றேதடுமாறிப்பொன்றேடியப்பாவையர்க்கீந்
திறந்திடவோபணித்தாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். மண்மீதில்பிறந்து - பூமியின்மீதுபிறந்து, பிணியேகுடிகொண்டு - வியாதிகளேகுடிகொள்ளப்பெற்று, பேரின்பத்தைமறந்து - பேரானந்தத்தைமறந்து, சிற்றின்பத்தின்மேல்மயல்ஆகி - சிற்றின்பத்தின்மீது ஆசைகொண்டு, புல்மாதருக்குள் - அற்பநடையையுடைய மாதர்நடுவில், பறந்துஉழன்று - (பறவைபோலப்) பறந்துதிரிந்து, தடுமாறி - தடுமாற்றமடைந்து, பொன்தேடி - திரவியத்தைச்சம்பாதித்து, அப்பாவையர்க்கு ஈந்து - அந்தமாதருக்குக்கொடுத்து, இறந்திடவோ - மாண்டுபோகவோ, பணித்தாய் - அடியேனை நியமித்தாய், இறைவா கச்சியேகம்பனே, எ - று.

31. பூதங்களற்றுப்பொறியற்றுசாரைம்புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்கரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
யேதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். பூதங்கள் அற்று - பஞ்சபூதங்களொழிந்து, பொறி அற்று - பஞ்சேந்திரியங்களொழிந்து, சார் - அவைகளைச் சார்ந்த, ஐம்புலன்கள் அற்று - ஐம்புலன்களொழிந்து, பேதம் குணம் அற்று - ஒன்றற்கொன்று வேறுபாடுள்ள குணங்கள் ஒழிந்து, பேராசை அற்று - பெரிய அவாவொழிந்து, பின்முன்அற்று - பின்னுமுன்னுமொழிந்து, காது - மோதுகின்ற, அம் கரணங்களும்அற்ற - அழகிய அந்தக்கரணங்களுமொழிந்த, ஆநந்தக்காட்சியில் - இன்பநோக்கத்தில், ஏதம்களைந்து இருப்பேன் - குற்றங் கடிந்திருப்பேன், இறைவாகச்சியேகம்பனே. எ - று.

32. நல்லாயெனக்குமனுவொன்றுதந்தருண்ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும்பொழுதியல்பூசைசெபஞ்
சொல்லார்நற்கோயினியமம்பலவகைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேகம்பனே.

இ - ள். நல்லாய் - நல்லோய், எனக்கு - அடியேனுக்கு, மனு ஒன்று - ஒருவிண்ணப்பம், தந்தருள் - கிருபைசெய்தருளல்வேண்டும், (என்னெனின்) ஞானம் இல்லா - அறிவில்லாத, பொல்லா என்னை - பொல்லாத என்னை,

கொன்றுபோடும் பொழுது - கொல்லும் போது, இயல் பூசை - இயன்ற பூசையும், செபம் - ஜபமும், சொல் ஆர் - புகழ் நிறைந்த, நல்கோயில் நியமம்-நல்ல சிவாலயசேவை முதலிய நியமங்களும்,பலவகைத் தோத்திரமும்-பலவகையாகிய தோத்திரங்களும் ஆகிய, எல்லாம் - யாவும், முடிந்தபின் - நிறைவேறின பின்பு, கொல்லு-கொல்லக்கடவை, கச்சியேகம்பனே.எ-று.

**33.** சடக்கடத்துக்கிரைதேடிப்பலவுயிர்தம்மைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்துமிகமெலிந்து
படக்கடித்தின்றுழல்வார்கடமைக்கரம்பற்றிநம
னிடக்கடிக்கும்பொழுதேதுசெய்வார்கச்சியேகம்பனே.

இ - ள். சடக்கடத்துக்கு - சடரூபமாகிய சரீரத்தின் பாதுகாப்புக்காக, இரைதேடி - உணவைத்தேடி, பலவுயிர்தம்மைக் கொன்று - பலவுயிர்களைக் கொலைசெய்து, விடக்கு அடித்துக்கொண்டு -(அவற்றின்) தசையைப் பிடுங்கிக்கொண்டு, இறுமாந்திருந்து - செருக்கடைந்திருந்து, மிகமெலிந்துபட-மிகவும் மெலிந்து வருந்தும்படி, கடித் தின்று உழல்வார்கள் தம்மை - கடித்துத் தின்று உழல்வோரை, நமன்-யமன், கரம் பற்றி-கையாற்பிடித்துக்கொண்டு, இடக்கடிக்கும் பொழுது - வருத்தப்படுத்தும் போது, ஏது செய்வார் - யாது செய்யக்கடவர், கச்சியேகம்பனே. எ - று.

இச்செய்யுளால் ஊன் உண்பவர் யமனிடத்து அகப்பட்டு வருந்துவது நிச்சயம் என்பது ஸ்தாபிக்கப்பட்டது.

**34.** நாறுமுடலைநரிப்பொதிசோற்றினைநான்றினமுஞ்
சோறுங்கறியுநிரப்பியபாண்டத்தைத்தோகையர்தங்
கூறுமலமுமிரத்தமுஞ்சோருங்குழியில்விழா
தேறும்படியருள்வாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். நாறும் உடலை-நாறுகின்றவுடம்பை, நரிப்பொதிசோற்றினை-நரிகட்குப் பொதிசோறாயிருப்ப தொன்றை, நான் - அடியேன், தினமும் - நாள்தோறும், சோறும் கறியும் - சோற்றையும் கறியையும், நிரப்பிய-நிறைத்துவைத்த, பாண்டத்தை - மட்கலத்தை, தோகையர்-மாதரது, கூறும்-(அருவருப்பாகச்) சொல்லப்படுகிற, மலமும் இரத்தமும் சோரும் - மலமும் உதிரமும் ஒழுகாநின்ற, குழியில் விழாது - (கடிதடமாகிய) பள்ளத்தில் விழாமல், ஏறும்படி - கரையேறும் வண்ணம், அருள்வாய் - கிருபைபுரியாய், கச்சியேகம்பனே. எ - று.

**35.** சொக்கிட்டரமனைப்புக்குட்டிருடியதுட்டர்வந்து
திக்குற்றமன்னராக்கேட்பதும்பொற்சிவநிந்தைசெய்து
மிக்குக்குருலிங்கசங்கமநிந்தித்துவீடிச்சிக்கு
மெக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

இ - ள். சொக்கு இட்டு - சொக்குப்பொடிதூவி, அரமனை உள் புக்கு-அரண்மனையினுள்ளே பிரவேசித்து, திருடிய-களவுசெய்த, துட்டர்-துட்டர்கள், வந்து-(ராஜபடரால்அரசர்க்கெதிரில்)கொண்டுவரப்பட்டு,திக்கு உற்ற மன்னரை-தமக்குத் தற்காலவுதவியாகிய அரசனை, கேட்பது போல - (தம்மைச்சிக்ஷியாமல் விடும்படி) பிரார்த்திப்பதுபோல, சிவநிந்தைசெய்து-சிவதூஷணம்பண்ணி, மிக்கு - மிகுதியாய், குருலிங்க சங்கமம் நிந்தித்து - குருலிங்க சங்கமங்களை நிந்தனை பண்ணி, வீடு இச்சிக்கும்-வீட்டையடைய விரும்புகின்ற, எக்குப்பெருத்தவர்க்கு-தீமையில் மிக்கார்க்கு, என் சொல்லு வேன் - யாதுசொல்வேன், கச்சியேகம்பனே, எ - று.

36. விருந்தாகவந்தவர்தங்களுக்கன்னமிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்னாமத்தைப்போற்றிநித்த
மருந்தாமுலைப்பங்கரென்னாதபாதகரம்புவியி
லிருந்தாவதேதுகண்டாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். விருந்தாகவந்தவர் தங்களுக்கு - விருந்தினராய் வந்தவர்களுக்கு, அன்னம் - உணவை, மிகக்கொடுக்கப்பொருந்தார் - மிகவுங்கொடுக்க மனம்பொருந்தார், வளம் பெறவாழ்வார் - வளமையாக வாழ்வர், நித்தம் - நாள் தோறும், நின்நாமத்தைப்போற்றி - உன்திருநாமத்தைப்புகழ்ந்து, அருந்தாமுலைப்பங்கர்-உண்ணாமுலையம்மையை ஒருபங்கில் உடையவரே, என்னாத - என்று துதியாத, பாதகர் - பாவிகள், அம்புவியில் - உலகத்தில், இருந்து - இருந்ததனால்,ஆவது ஏது-உலகத்தார்க்கு அவர்களால் உண்டாகக்கடவதாகிய பிரயோஜநம் யாது, கச்சியேகம்பனே, எ - று.

37. எல்லாமறிந்துபடித்தேயிருந்தேமக்குள்ளபடி
வல்லானறிந்துளனென்றுணராதுமதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறுசூழ்விதியின்படிதுக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலேயென்பர்காண்கச்சியேகம்பனே.

இ - ள். (சிலர்) எல்லாம் அறிந்து-எல்லாக்காரியங்களையும் பிரத்தியக்ஷப்பிரமாணமாகக் கண்டுணர்ந்தும்,படித்தேயிருந்து - சத்தப்பிரமாணமாகப்படித்திருந்தும், எமக்கு உள்ளபடி-எமக்குள்ளவாற்றை, வல்லான் - எல்லாம் வல்ல இறைவன், அறிந்துளன் என்று உணராது - அறிந்திருக்கிறானென்றறியாமல், மதிமயங்கி - அறிவுகலங்கி, சொல்லால் மலைந்து - பிறர் சொல்லுஞ் சொற்களால் மலைவடைந்து, சூழ் - தம்மை வந்து சூழ்ந்து கொண்ட, விதியின்படி - ஊழின்படி, துக்கித்து - துக்கமடைந்து, பின் - பிறகு, எல்லாம்-யாவும், சிவன் செயலே என்பர்-சிவன் செயலே யென்று சொல்லி ஒருவாறு தேறுவார்கள், கச்சியேகம்பனே, எ - று.

எல்லா நூல்களையும் படித்துணர்ந்தவரும் ஒருதீங்கு மேலிட்டபோது இது இறைவன் செயலென்றுணராமல் மதிமயங்கி வருந்தி,பிறகு இறைவன் செயலே என்று தெளிவது இயற்கையாமென்பது கருத்து.

38. பொன்னைநினைந்துவெகுவாகத்தேடுவர்பூவையன்னா
டன்னைநினைந்துவெகுவாயுருகுவர்தாரணியி
லுன்னைநினைந்திங்குனைப்பூசியாதவுலுத்தரெல்லா
மென்னையிருந்துகண்டாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். பொன்னை நினைந்து - திரவியத்தை யீட்ட வெண்ணி, வெகுவாகத்தேடுவர் - மிகுதியாய்த்தேடுவார்கள், பூவையன்னாள் தன்னை - பூவைபோல்வாளாகிய பெண்ணை, நினைந்து - சமுகவெண்ணி, வெகுவாய் உருகுவர் - மிகுதியாய்மனங்கரைவார்கள், தாரணியில் - உலகத்தில், உன்னை நினைந்து - உன்னைநினைந்து, இங்கு - இப்பொழுது, உன்னைப்பூசியாத - உன்னைப்பூசிக்காத, உலுத்தர் எல்லாம் - உலுத்தர்கள் எல்லாரும், இருந்து - உயிர்வாழ்ந்து, என்னை - என்னபிரயோசநம், இறைவா கச்சியேகம்பனே,

39. கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்து
ணெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா
விடும்பரையென்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். கடுஞ்சொல்லின் - கடுஞ்சொற்களையுடைய, வம்பரை - வம்பர்களையும், ஈனரை - இழிந்தாரையும் - குண்டரை - வியபிசாரிபுத்திரரையும், காமுகரை - தூர்த்தரையும், கொடும்பவமேசெய்யும் - கொடியபாவத்தையே செய்கிற, நிர்மூடர்தம்மை - நிர்மூடரையும், குவலயத்துள் - உலகத்தில், நெடும்பனைபோலவளர்ந்தும் - நெடியபனைமரம்போல வளர்ந்திருந்தும், நல்லோர்தம் நெறி அறியா - நல்லோர்களுடைய வழியையுணராத, இடும்பரை - துஷ்டரையும், ஏன்வகுத்தாய் - ஏன்படைத்தாய், இறைவாகச்சியேகம்பனே, எ - று.

40. கொன்றேனனேகமுயிரையெல்லாம்பின்புகொன்றுகொன்று
தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதீர்கவென்றே
நின்றேனின்சன்னிதிக்கேயதனாற்குற்றநீபொறுப்பா
யென்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே.

இ - ள். அனேகம் உயிரையெல்லாம் - அநேகமான சீவர்களையெல்லாம், கொன்றேன் - கொலைசெய்தேன், பின்பு - பிறகு, கொன்று கொன்று தின்றேன் - கொன்று கொன்று புசித்தேன், அது அன்றியும் - அதல்லாமலும், தீங்குசெய்தேன் - வேறுபல தீமைகள்செய்தேன், அவைதீர்க என்றே - அவைகள் நீங்குக என்றே, நின்சந்நிதிக்கு நின்றேன் - உன்சந்நிதியில் நின்றேன், அதனால் - ஆதலால், குற்றம் - என் தவறுகளையெல்லாம், நீ பொறுப்பாய்என்றே - நீபொறுத்தருள்வையென்றே, உன்னைநம்பினேன் - உன்னைநம்பியிருக்கிறேன், இறைவாகச்சியேகம்பனே, எ - று.

## திருவேகம்பவிருத்தம்.

1. அன்னையெத்தனையெத்தனையன்னையோ
வப்பனெத்தனையெத்தனையப்பனோ
பின்னையெத்தனையெத்தனைபெண்டிரோ
பிள்ளையெத்தனையெத்தனைபிள்ளையோ
முன்னையெத்தனையெத்தனைசன்மமோ
மூடனாயடியேனுமறிந்திலேன்
இன்னமெத்தனையெத்தனைசன்மமோ
வென்செய்வேன்கச்சியேகம்பநாதனே.

இ - ள். அன்னை - தாயென்றால், எத்தனையெத்தனை அன்னையோ- எத்தனை யெத்தனை தாய்மார்களோ, அப்பன் - தந்தையென்றால், எத்தனை யெத்தனை அப்பனோ - எத்தனை யெத்தனை தந்தையரோ, பின்னை - பிறகு, எத்தனை யெத்தனை பெண்டிரோ - எத்தனை யெத்தனை மனைவியரோ, பிள்ளை - பிள்ளையென்றால், எத்தனை யெத்தனை பிள்ளையோ - எத்தனை யெத்தனை பிள்ளைகளோ, முன்னை - பூர்வத்தில், எத்தனை யெத்தனை சன்மமோ - எத்தனை யெத்தனைப் பிறவிகளோ, மூடனாய அடியேனும் அறிந்திலேன் - மூடனாகிய அடியேனும் உணர்ந்திலேன், இன்னம் - இன்னமும், எத்தனை யெத்தனை சன்மமோ - எத்தனை யெத்தனைப் பிறவிகளோ, என் செய்வேன் - (இவைகளின் நீக்கத்தின்பொருட்டு நான்) என்செய்யக்கடவேன், கச்சியேகம்பநாதனே, எ - று.

இதுவரையில் நான் எடுத்த ஜன்மங்கள் எத்தனையோ இனிமேல் நான் எடுக்கும் ஜன்மங்கள் எத்தனையோ அறியேன் என்பது கருத்து.

---

## திருத்தில்லை.

1. காம்பிணங்கும்பணைத்தோளார்க்கும்பொன்னுக்குங்காசினிக்கும்
தாம்பிணங்கும்பலவாசையும்விட்டுத்தனித்துச்செத்துப்
போம்பிணந்தன்னைத்திரளாகக்கூடிப்புரண்டினிமேல்
சாம்பிணங்கத்துதையோவென்செய்வேன்றில்லைச்சங்கரனே.

இ - ள். காம்பு இணங்கும் - மூங்கிலை நிகர்க்கின்ற, பணை - பருமையாகிய, தோளார்க்கும்-தோள்களையுடைய மாதர்பொருட்டாகவும், பொன்னுக்கும் - பொன்னின் பொருட்டாகவும், காசினிக்கும்-நிலத்தின்பொருட்

டாகவும், தாம்பிணங்கும்-தாம்பிணக்கமடைதற்குரிய, பலஆசையும்விட்டு-பலவகையாகிய விருப்பங்களையும்நீங்கி, தனித்து - தனிமையாகி, செத்துப்போம் பிணம்தன்னை - இறந்துபோகிற பிணங்களின்பொருட்டு, திரள் ஆகக்கூடி - கூட்டமாகக்கூடி, புரண்டு - நிலத்தின்மேல்வீழ்ந்து புரண்டு, இனிமேல் சாம்பிணம் - இனிச்சாகப்போகிற பிணங்கள், கத்துது - இரையாநின்றன, ஐயோ - அந்தோ, என்செய்வேன் - (இவரதுஅறியாமையைக்குறித்து) என்செய்கேன், தில்லைச்சங்கரனே - திருத்தில்லையில் வாழ்கின்ற சுககரனே, எ - று.

"இனிமேற்சாம்பிணம்" என்றது உயிர்வாழ்ந்திருக்கும் மானிடரை. சம் - சுகம், கரன் - செய்பவன்.

2. சோறிடுநாடுதுணிதருங்குப்பைதொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினையெப்பொழுதும்
நீறிடுமேனியர்சிற்றம்பலவர்நிருத்தங்கண்டால்
ஊறிடுங்கண்களுருகிடுநெஞ்சுமென்னுள்ளமுமே.

இ - ள். நாடு சோறு இடும் - நாடானது சோற்றையுதவும், குப்பை துணிதரும் - குப்பைமேடுகள் துணியைத்தராநின்றன, தொண்டு அன்பரைக்கண்டு-தொழும்புசெய்கிற அன்பரைக்கண்டு, கைகள் ஏறிடும்-என்கைகள் மேலுயராநின்றன, தீவினை இறங்கிடும் - (அப்படிச்செய்தலால் என்னைப்பற்றிய) தீவினைகள் தாழாநின்றன, நீறு இடும்மேனியர் - திருவெண்ணீற்றையணிந்த திருமேனியையுடையவரும், சிற்றம்பலவர் - திருச்சிற்றம்பலத்தையுடையவருமாகிய சிவபெருமானது, நிருத்தம்கண்டால்-திருநிருத்தத்தைக்காணின், எப்பொழுதும்-எப்போதும், கண்கள்-என்கண்கள், ஊறிடும்-நீரைச்சுரவாநின்றன, என் நெஞ்சும்-என்மார்பும், என்உள்ளமும்-என்மனமும, உருகிடும் - உருகாநின்றன, எ - று.

3. அழலுக்குள்வெண்ணெயெனவேயுருகிப்பொன்னம்பலத்தார்
நிழலுக்குணின்றுதவமுஞற்றுமனிட்டூரமின்னார்
குழலுக்கிசைந்தவகைமாலைகொண்டுகுற்றேவல்செய்து
விழலுக்குமுத்துலையிட்டிறைத்தேனென்விதிவசமே.

இ - ள். அழலுக்குள் வெண்ணெய் என உருகி - நெருப்பிலிட்ட வெண்ணெய்போலமனமுருகி, பொன்னம்பலத்தார் - பொன்னம்பலவரது, நிழலுக்குள் நின்று - திருவடிநீழலின்கீழ் நிலைத்திருக்க, தவம் உஞற்றுமல்-தவத்தைச்செய்யாமல், நிட்டூரம்-வன்சொல்லையுடைய, மின்னார்-மாதரது, குழலுக்கு இசைந்த - கூந்தலுக்குப்பொருத்தமான, வகை - பலவேறு வகைப்பட்ட, மாலைகொண்டு-பூமாலைகளையேந்திநின்று, குற்றேவல்செய்து-

குற்றேவல்களைப்பண்ணி, (அதனால்) விழலுக்கு - விழற்புல்லைப் பயிர்செய்தற்பொருட்டு, மூத்துலை இட்டு - மூன்றுதுலைபோட்டு, இறைத்தேன் - நீர் இறைத்தவனானேன், (இது) என்விதிவசமே - என் ஊழ்வயப்பட்டமையே (வேறன்று), எ - று.

துலை - ஏற்றமரம். மாதர்பொருட்டு உழைப்பது விழற்புல்லைப் பயிராக்குதற்கு முத்துலையிட்டிறைத்தாற்போலு மென்பது கருத்து.

**4.** ஓடாமற்பாழுக்குழைபாமலோரமுரைப்பவர்பால்
கூடாமனல்லவர்கூட்டம்விடாமல்வெங்கோபநெஞ்சில்
நாடாமனன்மைவழுவாமலின்றைக்குநாளைக்கென்று
தேடாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே.

இ - ள். சிதம்பரதேசிகனே - சிதாகாயத்தில் வாழ்கின்ற பரமாசாரியனே, ஓடாமல் - (இங்குமங்குமாக) ஓடாதிருக்கவும், பாழுக்கு உழையாமல் - வீணுக்கு உழையாதிருக்கவும், ஓரம்உரைப்பவர் பால்கூடாமல் - பக்ஷபாதமாய்ப் பேசுவோரிடத்திற் சேராதிருக்கவும், நல்லவர்கூட்டம்விடாமல் - நல்லோரது கூட்டத்தைநீங்காதிருக்கவும், நெஞ்சில்வெம்கோபம்நாடாமல் - (என்) மனத்தில் வெவ்வியகோபமென்னும் பொருள் எட்டிப்பாராதிருக்கவும், நன்மைவழுவாமல் - நன்மையானது என்னைவிட்டுநீங்காதிருக்கவும், இன்றைக்குநாளைக்குஎன்று - இன்றைக்குவேண்டும் நாளைக்குவேண்டும் என்று, தேடாமல் - பொருள்முதலானவைகளைத் தேடாதிருக்கவும், செல்வம் - உன்பதமாகியநிலைபேறுடைய செல்வத்தை, தருவாய் - அடியேனுக்குத்தந்தருள்வாயாக, எ - று.

சிதம்பரம் திருத்தில்லைநகர் எனினுமாம்.

**5.** பாராமலேற்பவர்க்கில்லையென்னுமற்பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள்வந்தணுகாமன்மனமயர்ந்து
பேராமற்சேவைபிரியாமலன்புபெறுதவரைச்
சேராமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே.

இ - ள். பாராமல் ஏற்பவர்க்கு - தமதுமுந்தினநிலையை நோக்காது வந்துஇரப்பவர்க்கு, இல்லையென்னுமல் - இல்லையென்று சொல்லாதிருக்கவும், பழுதுசொல்லிவாராமல் - குற்றங்களையேஎடுத்துக் கூறிவராதிருக்கவும், பாவங்கள்வந்துஅணுகாமல் - பாபங்கள்வந்து (என்னைச்) சேராதிருக்கவும், மனம்அயர்ந்துபேராமல் - மனஞ்சோர்ந்து நிலைபெயராதிருக்கவும், சேவைபிரியாமல் - உன்சேவைஎன்னைவிட்டுநீங்காதிருக்கவும், அன்புபெறுதவரைசேராமல் - உன்னிடத்தன்பு செய்யாதவரைக்கூடாதிருக்கவும், செல்வம் - நித்யவாழ்வை, தருவாய் - அடியேனுக்குத்தந்தருள்வாயாக, சிதம்பரதேசிகனே, எ - று.

6. கொல்லாமற்கொன்றதைத்தின்னாமற்குத்திரங்கோள்களவு
கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனவினும்பொய்
சொல்லாமற்சொற்களைக்கேளாமற்றோகையர்மாயையிலே
செல்லாமற்செல்வந்தருவாய்சிதம்பரதேசிகனே.

இ - ள். கொல்லாமல் - உயிர்களைக் கொல்லாதிருக்கவும், கொன்றதைத்தின்னாமல் - கொன்றவைகளை யுண்ணாதிருக்கவும், குத்திரம் கோள் களவுகல்லாமல் - வஞ்சனையையும் கோட்சொல்லலையும் சோரத்துவத்தையும் கல்லாதிருக்கவும், கைதவரோடு இணங்காமல் - பொய்யரோடிணங்காதிருக்கவும், கனவினும்பொய்சொல்லாமல் - சொப்பனத்திலும்பொய் சொல்லாதிருக்கவும், சொற்களைகேளாமல் - பிறர்சொல்லுஞ்சொற்களைக் கேளாதிருக்கவும், தோகையர்மாயையிலேசெல்லாமல் - மாதர்மயக்கிற் செல்லாதிருக்கவும், செல்வந்தருவாய் - மேலாகிய செல்வத்தைத்தந்தருள்வாயாக, சிதம்பரதேசிகனே, எ - று.

7. முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பராய்வெந்துமண்ணாவதுங்கண்டுபின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவர்
அடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே.

இ - ள். முடிசார்ந்தமன்னரும் - முடிபொறுத்தவேந்தரும், மற்றும் உள்ளோரும் - மற்றுமுள்ளவரும், முடிவில் - முடிவுக்காலத்தில், ஒருபிடி சாம்பர்ஆய்வெந்து - ஒருபிடிசாம்பலாகவெந்து, மண்ஆவதும்கண்டு - மண்ணுருவாவதையும்பார்த்து, பின்னும் - மேலும், இந்தப்படிசார்ந்தவாழ்வை - இந்தப்பிரபஞ்சத்தைச் சேர்ந்த நிலையற்றவாழ்க்கையை, நினைப்பது அல்லால் - (அடைய) எண்ணுவதேயன்றி, பொன்னின் அம்பலவர் - பொன்னம்பலவாணரது, அடி - திருவடிகளை, சார்ந்து - சரணடைந்து, நாம்உய்ய வேண்டும்என்று - நாம்பிழைக்கவேண்டுமென்று, அறிவார் - உணர்வோர், இல்லை - (இவ்வுலகத்தில்) இல்லை, எ - று.

8. காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியில்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமாம்
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
ஆலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே.

இ - ள். காலைஉபாதி - காலையில்நேரிடும் உபத்திரவம், மலம் சலம் ஆம் - மலசலவிசர் ஜநங்களாகும், அன்றி - அதுவுமன்றி, கட்டுச்சியில் - கடும்பகலில் நேரிடுகின்ற, சாலஉபாதி - மிக்கவுபத்திரவம், பசிதாகம்ஆகும் - பசிதாகங்களாகும், முன்சஞ்சிதம்ஆம் - முன்னீட்டியதாகிய, மாலை

உபாதி-மாலைக்காலத்தில் நேரிடுகிற உபத்திரவம், துயில்காமம்ஆம் - உறக்கமும்காமமும்ஆகும், இவைமாற்றிவிட்டு - இந்தவுபத்திரவங்களை நீக்கிவிட்டு, ஆலம் உகந்தருள் - நஞ்சத்தைஅமுதமாக எற்றருளிய, அம்பலவா - பொன்னம்பலவனே, என்னை ஆண்டருள் - என்னையாட்கொண்டருளவேண்டும், எ - று

9. ஆயுப்புகழ்த்தில்லையம்பலவாணரருகிற்சென்றால்
பாயுமிடபங்கடிக்குமரவம்பின்பற்றிச்சென்றால்
பேயுங்கணமும்பெருந்தலைப்பூதமும்பின்றொடரும்
போயென்செய்வாய்மனமேபிணக்காடவர்போமிடமே.

இ - ள். ஆயும்புகழ் - அறிஞரால் ஆராயப்படுகிற கீர்த்தியையுடைய, தில்லையம்பலவாணர் - தில்லையம்பலவாணருக்கு, அருகில்சென்றால் - சமீபத்திற்போனால், இடபம்பாயும் - ருஷபம்பாயும், அரவம்கடிக்கும் - பாம்புகடிக்கும், பின்பற்றிச்சென்றால் - பின்தொடர்ந்துபோனால், பேயும் - பேய்களும், கணமும் - பூதகணங்களும், பெருந்தலைப்பூதமும் - பெருந்தலையையுடைய பூதங்களும், பின்தொடரும் - பின்தொடர்ந்துவரும், மனமே - நெஞ்சே, அவர்போம்இடம் - அவர்போகுமிடம், பிணக்காடு - பிணக்காடாம், போய்என்செய்வாய்-(அவ்விடத்தில்) நீபோய்என்செய்வாய், எ-று,

10. ஓடுமெடுத்ததளாடையுஞ்சுற்றியுலாவிமெள்ள
வீடுகடோறும்பலிவாங்கியேவிதியற்றவர்போல்
ஆடுமருட்கொண்டிங்கம்பலத்தேநிற்குமாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்னகாண்சிவகாமசவுந்தரியே.

இ - ள். ஓடும்எடுத்து - பலிபாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு, அதள் ஆடையும்சுற்றி-தோலாடையையும் அரையிற்சுற்றி, மெள்ளஉலாவி, மெல்லத்திரிந்து, வீடுகள்தோறும்பலிவாங்கி - வீடுகள்தோறும் பிச்சையேற்று, விதியற்றவர்போல் - குணம்அற்றவர்போல், ஆடும் மருள்கொண்டு - தலைசுற்றி யாடுகின்றமருட்சியைக்கொண்டு, இங்குஅம்பலத்தேநிற்கும் ஆண்டிதன்னை - இந்தஅம்பலத்தில் நிற்கும்ஆண்டியை, தேடுங்கணக்குஎன்னகாண் - தேடுங்கணக்கென்ன, சிவகாமசவுந்தரியே - சிவகாமசவுந்தரியம்மையே, எ - று.

இதுதில்லையில், பசிமிகுதியால், "பன்னுகவாடகப்பொற்பாதம்" என்றுபாடுதலும், உலகமாதாவாகிய சிவகாமிபம்மையார்வேதியப் பெண்ணுருவாய் உச்சிநிவேதனப்பிரசாதத்தை வட்டகையில்நின்றும் கொடுத்தருள, உண்டுபசியாறினவுடன் மறைந்தருளலும் பிராட்டியாரென்றுணர்ந்து ஆராமைமிகுதியால்பாடப்பட்டது.

11. ஊட்டுவிப்பானுமுறங்குவிப்பானுமிங்கொன்றொடொன்றை
மூட்டுவிப்பானுமுயங்குவிப்பானுமுயன்றவினை
காட்டுவிப்பானுமிருவினைப்பாசக்கயிற்றின்வழி
ஆட்டுவிப்பானுமொருவனுண்டேதில்லையம்பலத்தே.

இ - ள். ஊட்டுவிப்பானும் - உண்பிப்பவனும், உறங்குவிப்பானும்- உறங்கச்செய்பவனும், இங்குஒன்றொடுஒன்றை மூட்டுவிப்பானும் - இவ்விடத்தில் ஒன்றோடொன்றை மூட்டிவிடுவோனும், முயங்குவிப்பானும் - சேரப்பண்ணுவோனும், முயன்றவினைகாட்டுவிப்பானும் - முயன்றுசெய்த வினைகளின்பயனைக் காட்டுவிப்பவனும், இருவினை-இருவினைகளென்கிற, பாசம்கயிற்றின்வழி - பாசமாகியகயிற்றின்வழியாய், ஆட்டுவிப்பானும் - அசைப்பிப்பவனும்ஆகிய, ஒருவன் - ஒருவன், தில்லைஅம்பலத்துஉண்டு - தில்லையம்பலத்தின் கண்ணேயுளன், எ - று.

12. அடியார்க்கெளியவரம்பலவாணரடிபணிந்தால்
மடியாமற்செல்வவரம்பெறலாம்வையமேழளந்த
நெடியோனும்வேதனுங்காணாதநித்தநிமலனருட்
குடிகாணுநாங்களவர்காணுமெங்கள்குலதெய்வமே.

இ - ள். அடியார்க்குஎளியவர் - தன்னடியவர்க்கு எளியராயிருப்பவர், அம்பலவாணர் - பொன்னம்பலத்தில் வாழ்பவர்,(அவரது) அடிபணிந்தால்-திருவடியைவணங்கினால், மடியாமல்-இறவாதிருக்க,செல்வம்-முத்திச் செல்வத்தையடைதற்குரிய, வரம்பெறலாம் - வரம்பெறலாகும், வையம் ஏழ் அளந்த - ஏழுலகங்களையுமளந்த, நெடியோனும் - திரிவிக்கிரமனும், வேதனும்-பிரமனும், காணாத - கண்டறியாத, நித்தநிமலன்-சாசுவதனும் நிர்மலனுமாகிய சிவபெருமானுக்கு, நாங்கள் அருட்குடி - நாங்கள் அருட்குடிகளாவேம், அவர் - அக்கடவுள், எங்கள் குலதெய்வம் - எங்கள் குலதெய்வமாவர், எ - று.

13. தெய்வச்சிதம்பரதேவாவுன்சித்தந்திரும்பிவிட்டால்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே.

இ - ள். தெய்வச்சிதம்பரதேவா-தெய்விகமான சிதாகாயத்தில் நடிக்கின்ற கடவுளே, உன்சித்தம் திரும்பிவிட்டால் - உன்திருவுள்ளம் மாறுபடின், பொய்வைத்த - பொய்த்தன்மையுள்ள, சொப்பனம்ஆம் - கனவை நிகர்த்த, மன்னர்வாழ்வும்-அரசரது வாழ்க்கையும், புவியும்-பூமியும், எங்கே-யாண்டையது, மெய்வைத்த செல்வம் எங்கே - மெய்த்தன்மை யமைத்து

வைக்கப்பட்ட செல்வம் யாண்டையது, மண்டலீகர் தம்மேடை எங்கே-மண்டலாதிபதிகளுடைய மேடை யாண்டையது, கைவைத்த நாடக சாலை எங்கே - ஒப்பனையமைந்த நாடகசாலையாண்டையது, இதுகண்மயக்கே - இதுகண்மயக்கமேயாம், எ - று.

14. உடுப்பானும்பாலனமுண்பானுமுய்வித்தொருவர்தம்மைக்
கெடுப்பானுமேதென்றுகேள்விசெய்வானுங்கெதியடங்கக்
கொடுப்பானுந்தேகியென்றேற்பானுமேற்கக்கொடாமனின்று
தடுப்பானுநீயல்லையோதில்லையானந்தத்தாண்டவனே.

இ - ள். உடுப்பானும் - உடுப்பவனும், பால் அன்னம் உண்பானும் - பாற்சோற்றையுண்பவனும், ஒருவர் தம்மை உய்வித்து - ஒருவனை வாழ்வித்து, கெடுப்பானும் - (ஒருவனைக்) கெடுப்பவனும், ஏது என்று கேள்வி செய்வானும் - என்னென்று கேட்பவனும், கெதி அடங்கக்கொடுப்பானும்-வறுமைதீரக் கொடுப்பானும், தேகி என்று ஏற்பானும் - கொடு என்று யாசிப்பவனும், ஏற்க - அப்படியேற்க, கொடாமல் - (கொடுப்பவனைக்) கொடாதவண்ணம், நின்று தடுப்பானும் - உறுதியாய்நின்று தடுப்பவனும், நீ அல்லையோ - நீயேயன்றோ, தில்லை-திருத்தில்லையின்கண், ஆநந்தத்தாண்டவனே - ஆநந்தநிருத்தஞ்செய்பவனே, எ - று.

15. வித்தாரம்பேசினுஞ்சோங்கேறினுங்கம்பமீதிருந்து
தத்தாவென்றோதிப்பவுரிகொண்டாடினுந்தம்முன்றம்பி
யொத்தாசைபேசினுமாவதுண்டோதில்லையுண்ணிறைந்த
கத்தாவின்சொற்படியல்லாதுவேறில்லைகன்மங்களே.

இ - ள். வித்தாரம்பேசினும் - விஸ்தாரமாகப்பேசினலும், சோங்கு ஏறினும் - கப்பலேறிச்சென்றாலும், கம்பம்மீது இருந்து - கம்பத்தின்மேலேறியிருந்து, தத்தா என்று ஓதி - தத்தாவென்று சொல்லி, பவுரிகொண்டாடினும் - பவுரிக்கூத்தாடினும், தம்முன் - தமையனும், தம்பி - தம்பியும், ஒத்தாசைபேசினும் - உதவியாய்ப்பேசினலும், ஆவது உண்டோ - ஆவதொருகாரியமுண்டோ, தில்லையுள்நிறைந்த - தில்லையிலிருப்பினும் சர்வவியாபகனாய் எங்கும் நிறைந்திருக்கிற, கத்தாவின் சொற்படி அல்லாது - கர்த்தனது சொற்படியேயன்றி, கன்மங்கள் வேறு இல்லை - உலகத்தில் நிசழுந் தொழில்கள் வேறில்லையாம், எ - று.

16 பிறவாதிருக்கவரம்பெறல்வேண்டும்பிறந்துவிட்டால்
இறவாதிருக்கமருந்துண்டுகாணிதுவெப்படியோ
அறமார்புகழ்த்தில்லையம்பலவாணரடிக்கமலம்
மறவாதிருமனமேயதுகாணன்மருந்துனக்கே.

இ - ள். பிறவாது இருக்க - பிறவாமலிருக்க, வரம்பெறல்வேண்டும் - வரம்பெறுகையே தகுதி, பிறந்துவிட்டால் - பிறந்துவிடின், இறவாது இருக்க - இறவாமலிருக்க, மருந்து உண்டு - மருந்துளது, இது எப்படியோ - இது எப்படியென்றாலோ, அறம் ஆர் - தர்மமார்க்கம் நிறைந்திருக்கிற, புகழ் - புகழையுடைய, தில்லையம்பலவாணர் - தில்லையம்பலவாணரது, அடிகமலம் - ஸ்ரீபாததாமரையை, மறவாது இரு - மறவாமலிரு, மனமே - நெஞ்சே, அது - (அப்படி) மறவாதிருக்கையே, உனக்கு நன்மருந்து- உனக்கு இறவாமைக் கேதுவாகிய நல்லமருந்து, ஏ - று.

**17.** தவியாதிருநெஞ்சமேதில்லைமேவியசங்கரனைப்
புவியார்ந்திருக்கின்றஞானகரனைப்புராந்தகனை
அவியாவிளக்கைப்பொன்னம்பலத்தாடியையைந்தெழுத்தால்
செவியாமனீசெவித்தாற்பிறவாமுத்திசித்திக்குமே.

இ - ள். நெஞ்சமே - மனமே, தவியாது இரு-இளைக்காமலிரு, தில்லை மேவிய சங்கரனை - தில்லையைத்தனக்கு வாசஸ்த்தானமாகப் பொருந்திய சுககரனை, புவி ஆர்ந்து இருக்கின்ற - உலகமெங்கும் நிறைந்து இருக்கின்ற, ஞானகரனை - ஞானத்துக்குப் பிறப்பிடமாயிருப்பவனை, புராந்தகனை - திரிபுராந்தகனை, அவியாவிளக்கை - அவியாததீபத்தை, பொன் அம்பலத்து ஆடியை - பொற்சபையில் நடிப்பவனை, ஐந்து எழுத்தால் - ஸ்ரீபஞ்சாட்சரத்தைக்கொண்டு, செவியாமல் நீ செவித்தால்-நீ செபிக்காமல் செபித்தால், பிறவா முத்திசித்திக்கும் - பிறவாமைக்கேதுவாகிய முத்திசித்திக்கும், எ - று.

ஞானகரன் என்பதை ஞானம் ஆகரன் எனப்பிரிக்க. "செவியாமற் செவித்தல்" அஜபம்.

**18.** நாலின்மறைப்பொருளம்பலவாணனைநம்பியவர்
பாலிலொருதரஞ்சேவிக்கொணுதிருப்பார்க்கருங்கல்
மேலிலெடுத்தவர்கைவிலங்கைத்தைப்பர்மீண்டுமொரு
காலினிறுத்துவர்கிட்டியுந்தாம்வந்துகட்டுவரே.

இ - ள். நாலின் மறைப்பொருள் அம்பலவாணனை நம்பி - நான்கு வேதங்களின் அர்த்தமாகிய அம்பலவாணனை நம்பி, அவர் பாலில் - அவர் பக்ஷத்தில், ஒருதரம் சேவிக்கொணுதிருப்பார் - ஒருதரம் சேவிக்கப்பெறுதவர்களை, (யமபடர்) கருங்கல்மேலில் எடுத்து - கருங்கல்லை மேலேயேற்றி, அவர் கைவிலங்கைத்தைப்பர் - அவர்கையில் விலங்கைப்பூட்டுவர், மீண்டும் - மீளவும், ஒருகாலில் நிறுத்துவர் - ஒருகாலின்மேல் நிற்கச்செய்வர், தாம்வந்து கிட்டியும் கட்டுவர் - தாம்நெருங்கியும் வந்து கட்டுவர் எ - று.

19. ஆற்றோடு தும்பையணிந்தாடுமம்பலவாணர்தமைப்
போற்றாதவர்க்கடையாளமுண்டேயிந்தப்பூதலத்தில்
சோற்றாவியற்றுச்சுகமற்றுச்சுற்றத்துணியுமற்றே
ஏற்றாலும்பிச்சைகிடையாமலேக்கற்றிருப்பர்களே

இ - ள். ஆற்றோடு தும்பை அணிந்து ஆடும் - கங்கையோடு தும்பை மலரையுந்தரித்து நிருத்தஞ்செய்கின்ற, அம்பலவாணர் தம்மை - அம்பலவாணரை, போற்றாதவர்க்கு - வணங்காதவர்களுக்கு, அடையாளம் உண்டு, அடையாளமுளது, (என்னெனில்) இந்தப்பூதலத்தில் - இந்தவுலகத்தில், சோற்று ஆவி அற்று - சோற்று வாசனையொழிந்து, சுகம் அற்று - சுகமொழிந்து, சுற்றத்துணியும் அற்று - உடுக்க ஆடையுமொழிந்து, ஏற்றாலும் - இரந்தாலும், பிச்சைகிடையாமல் - பிச்சைகிடைக்காமல், ஏக்கற்றிருப்பர்கள் - ஏக்கமடைந்திருப்பார்கள், ஏ - று.

20. அத்தனைமுப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதியை
நித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெம்
கத்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்கள்
எத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றவே.

இ - ள். அத்தனை - எல்லார்க்குந் தந்தையை, முப்பத்துமுக்கோடி தேவர்க்கு அதிபதியை - முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கு அதிபனை, நித்தனை - சாசுவதனை, அம்மை சிவகாமசுந்தரிநேசனை - எமது தாயாகிய சிவகாமசுந்தரிக்கு அன்பனை, எம் கத்தனை - எமது கடவுளை, பொன்னம்பலத்தாடும் ஐயனை - பொற்சபையில் நிருத்தஞ்செய்கின்ற இறைவனை, காண - காணும்பொருட்டு, கண்கள் - விழிகள், எத்தனை கோடியுகமோ - எத்தனை கோடியுகங்களோ, தவம்செய்திருக்கின்ற - தவம்செய்திருக்கின்றன, ஏ - று.

---

## திருச்செங்காடு.

1. நெருப்பானமேனியர்செங்காட்டிலாத்திநிழலருகே
இருப்பார்திருவுளமெப்படியோவின்னமென்னையன்னைக்
கருப்பாசயக்குழிக்கேதள்ளுமேகண்ணன்காணரிய
திருப்பாதமேதருமோதெரியாதுசிவன்செயலே.

இ - ள். நெருப்பானமேனியர் - நெருப்புப்போலுந் திருமேனியையுடையவர், செங்காட்டில் - திருச்செங்காட்டில், ஆத்திநிழல் அருகேயிருப்பார் -

ஆத்திமரநிழலில் வீற்றிருப்பவர், (அவரது) திருவுளம் எப்படியோ - திருவுள்ள மெவ்வாறிருக்கின்றதோ, இன்னம் - இன்னமும், என்னை - அடியேனை, அன்னை - தாயினது, கருப்பாசயக்குழிக்கேதள்ளுமோ - கருப்பையிற்கொண்டுபோய் வீழ்த்துமோ, கண்ணன் காணரிய - திருமால்காணுதற் கருமையாகிய, திருப்பாதமேதருமோ - தன் திருவடியையே கொடுக்குமோ, சிவன்செயல்தெரியாது - சிவன்செயல்தெரியாது, எ - று.

---

## திருவொற்றியூர்.

1. ஐயுந்தொடர்ந்துவிழியுஞ்செருகியறிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்றுவேண்டுவல்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர்திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணியைந்தெழுத்தோதவுங்கற்பியுமே.

இ - ள். ஐயும்தொடர்ந்து - சிலேத்துமமும் தொடர்ந்து, விழியும் செருகி - கண்களும் செருகி, அறிவு அழிந்து - உணர்வுகெட்டு, மெய்யும் பொய்யாகி விடுகின்றபோது - மெய்யும் பொய்யாகிவிடுங்காலத்தில், யான் ஒன்றுவேண்டுவல் - அடியேன் ஒன்றைவிரும்புகிறேன், (என்னெனின்) செய்யும் திருவொற்றியூருடையீர் - ஒப்பனையமைந்த திருவொற்றியூருடையீரே, திருநீறும் இட்டு - திருநீற்றையுமணிந்து, கையும் தொழப்பண்ணி - கைகளால் அஞ்சலிசெய்யவும் பண்ணி, ஐந்து எழுத்து ஓதவும் கற்பியும் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைப் படனம்பண்ணவும் கற்பிப்பீராக, எ - று.

2. சுடப்படுவாரறியார்புரமூன்றையுஞ்சுட்டபிரான்
திடப்படுமாமதிற்றென்னொற்றியூரன்றெருப்பரப்பில்
நடப்பவர்பொற்பதநந்தலைமேற்படநன்குருண்டு
கிடப்பதுகாண்மனமேவிதியேட்டைக்கிழிப்பதுவே.

இ - ள். சுடப்படுவார் அறியார் - (இறந்து உறவினரால்) சுடப்படுவோராகிய அஞ்ஞானிகள் அறியார்கள், புரமூன்றையும் சுட்டபிரான் திரிபுரங்களையும் எரித்தபெருமான், திடப்படுமாமதில் - உறுதிப்பட்ட பெரியமதில்சூழ்ந்த, தென்னொற்றியூரன் - தென்னொற்றியூரின் கண்ணன், (அவனது) தெருப்பரப்பில் நடப்பவர் - வீதிப்பரப்பில்நடப்பவரது, பொன்பதம் - பொன்னடிகள், நம் தலைமேல்பட - நமது தலையின்மீது படும்படி, நன்கு உருண்டுகிடப்பது - நன்றாயுருண்டுகிடத்தலே, மனமே - மனதே, விதியேட்டைக்கிழிப்பது - பிரமனது ஏட்டைக்கிழித்தலாவது- எ - று.

மனமே திருவொற்றியூர்த்தெருவில்நடப்பவரது பொன்னடிகள் நமது தலைமேற்படும்படி உருண்டுகிடப்போமாயின் பிரமனெழுத்தை அழிக்கலாம் என்பது கருத்து.

---

## திருவிடைமருதூர்.

1. காடேதிரிந்தென்னகாற்றேபுசித்தென்னகந்தைசுற்றி
ஓடேயெடுத்தென்னவுள்ளன்பிலாதவரோங்குவிண்ணோர்
நாடேயிடைமருதீசர்க்குமெய்யன்பர்நாரியர்பால்
வீடேயிருப்பினுமெய்ஞ்ஞானவீட்டின்பமேவுவரே.

இ - ள். உள்ளன்பு இல்லாதவர் - மனத்தின்கண் அன்பில்லாதவர்கள், காடேதிரிந்து என்ன - காட்டிலே திரிந்தாலென்ன பிரயோஜநம், காற்றேபுசித்து என்ன - வாயுபக்ஷணஞ்செய்தும் என்னபிரயோஜநம், கந்தைசுற்றி - கந்தைத்துணியை அரையிற்சுற்றி, ஓடேயெடுத்து என்ன - ஓட்டையே கையிலேந்தினால் என்னபிரயோஜநம், ஓங்கு - உயர்ந்த, விண்ணோர் நாடு ஏய் - தேவருலகத்தை நிகர்த்த, இடைமருது ஈசர்க்கு - திருவிடைமருதூர்ச் சிவபெருமானுக்கு, மெய்யன்பர் - மெய்யன்பராயினோர், நாரியர் பால்வீடேயிருப்பினும் - மாதரிடத்து இல்வாழ்க்கைக் கண்ணேயிருந்தாலும், மெய்ஞ்ஞான வீட்டு இன்பம் மேவுவர் - மெய்ஞ்ஞானத்தாலடைதற்குரிய மோக்ஷசுகத்தைப் பொருந்துவார்கள், எ - று.

திருவிடைமருதூரிறைவர்க்கு அன்பராயினோர்மாதர்மயக்கிலாழ்ந்து கிடப்பினும் முத்தியையடைவர் என்பது கருத்து.

2. தாயும்பகைகொண்டபெண்டீர்பெரும்பகைதன்னுடைய
சேயும்பகையுறவோரும்பகையிச்செகமும்பகை
ஆயும்பொழுதிலருஞ்செல்வநீங்கிலிங்காதலினால்
தோயுநெஞ்சேமருதீசர்பொற்பாதஞ்சுதந்திரமே.

இ - ள். இங்கு அருஞ்செல்வம் நீங்கில் - இவ்வுலகத்தில் அருமையாகிய செல்வம் நீங்கிவிட்டால், தாயும்பகை - பெற்றதாயும் பகையாவள், கொண்டபெண்டீர் பெரும்பகை - கொண்ட மனைவியரும் பெரும்பகைவராவர், தன்னுடைய சேயும்பகை - தன்னுடைய புதல்வனும் பகையாவன், உறவோரும்பகை - உறவினரும் பகையாவர், இச்செகமும்பகை - இவ்வுலகமும் பகையாகும், ஆதலினால் - ஆகையால், ஆயும்பொழுதில் - ஆராயுமிடத்து, தோயும்நெஞ்சே - என்னோடு ஒற்றுமைப்பட்டிருக்கு மனமே, மருதீசர்பொற்பாதம் - மருதீசரது பொன்னடிகளே, சுதந்திரம் - நமக்குச்சுதந்திரப்பொருள் ஆகும், எ - று.

வறுமைவந்தகாலத்து தாய்முதலாகிய எல்லாரும்பகையாவர் ஆதலால் மருதீசர்பொன்னடி ஒன்றே நமக்கு அழியாப்பொருளாகப் பற்றுதற்குரியது என்பது கருத்து.

## திருக்கழுக்குன்றம்.

1. காடோசெடியோகடற்புறமோகனமேமிகுந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிகுந்த
வீடோபுறந்திண்ணையோதமியேனுடல்வீழுமிடம்
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணைநின்பதமே.

இ - ள். தமியேன் உடல்வீழும் இடம் - தனியேனது உடம்புவிழுமிடம், காடோ - காடோ, செடியோ - செடியோ, கடற்புறமோ - கடற்கரையோ, கனமேமிகுந்தநாடோ - மேன்மைமிக்க நாடுதானோ, நகரோ - நகர்தானோ, நகர்நடுவோ - நகர்நடுவிடமோ, நலமேமிகுந்தவீடோ - நன்மைமிக்க வீடுதானோ, புறந்திண்ணையோ - வெளித்திண்ணையோ, நீள்தோய் கழுக்குன்றில் ஈசா - நீட்சிபொருந்திய திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஈசனே, உயிர்த்துணை - என்னுயிர்த்துணையாவது, நின்பதமே - உன்திருவடியே, எ - று.

## திருக்காளத்தி.

1. பத்தும்புகுந்துபிறந்துவளர்ந்துபட்டாடைசுற்றி
முத்தும்பவளமும்பூண்டோடியாடிமுடிந்தபின்பு
செத்துக்கிடக்கும்பிணத்தருகேயினிச்சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண்கயிலாபுரிக்காளத்தியே.

இ - ள். பத்தும்புகுந்து - (தாய்வயிற்றில்) பத்துமாசமுஞ்சுழிந்து, பிறந்து - ஜந்மித்து, வளர்ந்து - விருத்தியாகி, பட்டாடைசுற்றி - பட்டாடையுடுத்து, முத்தும்பவளமும்பூண்டு - முத்துமாலைகளையும் பவளத்தாழ்வடங்களையும் அணிந்து, ஓடி ஆடி முடிந்தபின்பு - ஓடியாடி ஆயுள்முடிந்தபிறகு, செத்துக்கிடக்கும் பிணத்தருகே - செத்துக்கிடக்கும் பிணத்தருகில், இனிச்சாம்பிணங்கள் - இனிச்சாகப்போகிறபிணங்கள், கத்துங்கணக்கு என்ன - கத்துதற்கு அளவென்ன, கயிலாபுரிக்காளத்தியே - கயிலாபுரிக்காளத்தியே, எ - று.

2. பொன்னாற் பிரயோசனம் பொன்படைத் தாற்குண்டு பொன் படைத்தோன், தன்னாற்பிரயோசனம்பொன்னுக்கங்கேதுண் டத்தன்மையைப்போல், உன்னாற்பிரயோசனம் வேணதெல் லாமுண்டுனைப்பணியும், என்னாற்பிரயோசனமேதுண்டுகாளத் திபீச்சுரனே.

இ - ள். பொன்னால் பிரயோசநம் - பொன்னினாலாகவேண்டிய பிர யோஜநம், பொன்படைத்தாற்கு உண்டு - பொன்படைத்தவனுக்கு உண்டு, பொன்படைத்தோன் தன்னால் பிரயோசநம் பொன்னுக்கு அங்கு ஏது உண்டு - பொன்படைத்தவனாலுண்டாகும் பிரயோஜநம் பொன்னுக்கு அவ் விடத்தேதுளது, அத்தன்மையைப்போல் - அத்தன்மைபோல, உன்னால் பிரயோசநம் - உன்னாலாகவேண்டிய பயன், வேணதெல்லாம் உண்டு - எனக்கு வேண்டியதெல்லாம் உண்டு, உன்னைப்பணியும் என்னால் - உன்னை வணங்குகின்ற என்னால், பிரயோசநம் ஏது உண்டு - (உனக்குப் பயன்) யாதுளது, காளத்தியீச்சுரனே, எ - று.

3. வாளான்மகவரிந்தூட்டவல்லேனல்லன்மாதுசொன்ன
சூளாலிளமைதுறக்கவல்லேனல்லன்றொண்டுசெய்து
நாளாறிற்கண்ணிடந்தப்பவல்லேனல்லனினிச்சென்
றாளாவதெப்படியோ திருக்காளத்தியப்பருக்கே.

இ - ள். மகவு - பிள்ளையை, வாளால் அரிந்து - வாளாலறுத்து, ஊட்டவல்லேன் அல்லன் - (சமைத்து) உண்பிக்கவல்லேனல்லேன், மாதுசொன்ன சூளால்-மனைவிசொன்ன பிரதிஜ்ஞையால், இளமைதுறக்க வல்லேன் அல்லன் - இளமைப்பருவச்சுகத்தைத் துறக்கவல்லேன் அல் லேன், தொண்டுசெய்து - தொழும்புசெய்து, நாள் ஆறில் - ஆறுநாளில், கண் இடந்து அப்பவல்லேன் அல்லன் - கண்ணைத்தோண்டி அப்பவல் லேனல்லேன், நான் - (இப்படிப்பட்ட) நான், திருக்காளத்தி அப்பருக்கு- திருக்காளத்தி இறைவனுக்கு, இனிச்சென்று ஆள் ஆவது எப்படியோ - இனிப்போய் ஆளாவது எவ்வாறோ, எ - று.

"வாளால் மகவரிந்தூட்டினவர்" சிறுத்தொண்டநாயனார். "மாது சொன்னசூளால் இளமை துறந்தவர்" திருநீலகண்டக்குயவநாயனார். "தொண்டுசெய்து நாளாறிற் கண்ணிடந்தப்பினவர்" கண்ணப்பநாயனார்.

4. மூப்போதுமன்னம்புசிக்கவுந்தூங்கவுமோகத்தினால்
செப்போதிளமுலையாருடன்சேரவுஞ்சீவன்விடும்
அப்போதுகண்கலக்கப்படவும்மமைத்தாயையனே
எப்போதுகாணவல்லேன்றிருக்காளத்தியீச்சுரனே.

இ - ள். முப்போதும் - மூன்றுகாலமும், அன்னம்புசிக்கவும்-சோற்றையுண்ணவும், தூங்கவும் - நித்திரைசெய்யவும், மோகத்தினால் - மோகத்தால், செப்பு ஓது - செப்பென்றுசொல்லத்தக்க, இளமுலையாருடன்சேரவும் - இளமைபொருந்திய தனங்களையுடைய மாதர்களோடு புணரவும், சீவன்விடும் அப்போது-உயிர்விடும் அந்தக்காலத்தில், கண்கலக்கப்படவும், கண்கலங்கியழவும், அமைத்தாய் - வகுத்தனை, ஐயனே - இறைவனே, திருக்காளத்தி யீச்சுரனே - திருக்காளத்தியீசனே, எப்போது காணவல்லேன் - (உன்னை) எம்பொழுது காணவல்லேனாவேன், எ - று.

முப்போதும் என்றது காலை, மாலை, உச்சி என்பவற்றை.

5. இரைக்கேயிரவும்பகலுந்திரிந்திங்கிளைத்துமின்னார்
அரைக்கேயவலக்குழியருகேயசும்பார்ந்தொழுகும்
புரைக்கேயுழலுந்தமியேனையாண்டருள்பொன்முகலிக்
கரைக்கேகல்லாலநிழற்கீழமர்ந்தருள்காளத்தியே.

இ - ள். பொன்முகலிக்கரைக்கு - பொன்முகலிக்கரையில், கல்லால நிழற்கீழ் அமர்ந்தருள் - கல்லாலநீழலின்கீழே யமர்ந்தருளிய, காளத்தியே-காளத்தீச்சுரனே, இரவும்பகலும் - அல்லும்பகலும், இரைக்கேதிரிந்து - உணவின்பொருட்டேதிரிந்து, இங்கு இளைத்து - இவ்விடத்துமெலிந்து, மின்னார் அரைக்கே - மாதரது கடிப்ரதேசத்தின்கண்ணே, அவலக்குழி அருகே - வருத்தத்தையுண்டாக்குதற்குரிய, அசும்பு ஆர்ந்து ஒழுகும் - துர்நீர்நிறைந்தொழுகாநின்ற, புரைக்கே - துவாரத்தின்பொருட்டே, உழலும்-உழல்கின்ற, தமியேனை ஆண்டருள் - தனியேனை யாண்டருளவேண்டும்.

6. நாறுங்குருதிச்சலதாரைதோற்புரைநாடொறுஞ்சீ
ஊறுமலக்குழிகாமத்துவாரமொளித்திடும்புண்
தேறுந்தசைப்பிளப்பந்தரங்கத்துளசிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய்திருக்காளத்தியீச்சுரனே.

இ - ள். நாறும் குருதிச்சலதாரை - நாறுகின்ற குருதிநீர் ஒழுகும் வழி, தோல்புரை - தோற்குழி, நாள்தோறும் - தினந்தோறும், சீ ஊறும்-சீயூறுகின்ற, மலக்குழி - மலப்பள்ளம், காமத்துவாரம் - காமத்தொளை, ஒளித்திடும்புண் - மறைத்தற்குரியபுண், தேறும்தசைப்பிளப்பு - தெளியத்தக்க சதையின்பிளப்பு, அந்தரங்கத்து உள்ளசிற்றின்பம் - ரகசியத்திலநுபவிக்கத்தக்க அற்பசுகம், (இதனை) விட்டு ஏறும்பதம் - நீங்கிக் கரையேறும் பதத்தை, தருவாய் - தந்தருள்வாய், திருக்காளத்தியீச்சுரனே, எ - று.

---

## கைலாயம்.

1. கான்சாயும்வெள்ளிமலைக்கரசேநின்கழனம்பினேன்
ஊன்சாயுஞ்சென்மமொழித்திடுவாய்கருவூரனுக்காய்
மான்சாயச்செங்கைமழுவலஞ்சாயவணிந்தகொன்றைத்
தேன்சாயநல்லதிருமேனிசாய்த்தசிவக்கொழுந்தே.

இ - ள். கான்சாயும்-காடு ஓங்கிச்சாய்கின்ற, வெள்ளிமலைக்கு அரசே-வெள்ளிமலைக்கிறைவனே, கருவூரனுக்காய் - கருவூரன்பொருட்டு, மான் சாய - மான்சாயவும், செங்கைமழுவலம்சாய - செங்கையிலுள்ள மழுவானது வலப்பக்கஞ்சாயவும், வணிந்த - அலங்கரித்த, கொன்றை - கொன்றைமாலையினின்றும், தேன்சாய - தேன்சாய்ந்தோடவும், நல்லதிருமேனி சாய்த்த - அழகிய திருமேனியைவளைத்த, சிவக்கொழுந்தே - சிவக்கொழுந்தே, நின்கழல் நம்பினேன் - உன்திருவடியை நம்பினேன், ஊன்சாயும் சென்மம் - மாமிசசரீரத்தோடுகூடிப் பிறத்தலை, ஒழித்திடுவாய்-நீக்கியருள வேண்டும், எ - று.

2. இல்லந்துறந்துபசிவந்தபோதங்கிரந்துதின்று
பல்லுங்கறையற்றுவெள்வாயுமாயொன்றிற்பற்றுமின்றிச்
சொல்லும்பொருளுமிழந்துசுகானந்தத்தூக்கத்திலே
அல்லும்பகலுமிருப்பதென்றோகயிலாயத்தனே.

இ - ள். இல்லம்துறந்து - வீட்டைவிட்டு, பசிவந்தபோது - பசியுண்டானபோது, அங்கு இரந்துதின்று - அவ்விடத்து இரந்துண்டு, பல்லும் கறை அற்று - பற்களும் கறைநீங்கி, வெள்வாயுமாய் - வெள்வாயையுடையேனுமாகி, ஒன்றில்பற்றும் இன்றி - ஒன்றில் பற்றுமில்லாமல் - சொல்லும்பொருளும் இழந்து - சொல்லையும் பொருளையுநீங்கி, சுகாநந்தத் தூக்கத்திலே - சுகாநந்தநித்திரையில், அல்லும்பகலும் - இரவும்பகலும், இருப்பது- நான் இருக்கப்பெறுவது, என்றோ - என்றைக்கோ, கயிலாயத்தனே - கயிலாயநாதனே, எ - று.

3. சினந்தனையற்றுப்பிரியமுந்தானற்றுச்செய்கையற்று
நினைந்ததுமற்றுநினையாமையுமற்றுநிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந்தானந்தநித்திரைதங்குகின்ற
வனந்தலிலென்றிருப்பேனத்தனேகயிலாயத்தனே.

இ - ள். சினந்தனை அற்று-கோவத்தைநீங்கி, பிரியமுந்தான் அற்று-விருப்பத்தையும் நீங்கி, செய்கை அற்று - தொழில்நீங்கி, நினைந்ததும் அற்று - நினைந்ததையும்நீங்கி, நினையாமையும் அற்று - நினையாமையையும் நீங்கி, நிர்ச்சிந்தன் ஆய் - சிந்தனையற்றவனாகி, தனந்தனியேயிருந்து - தன்

ணந்தனியேயிருந்து, ஆனந்தநித்திரைதங்குகின்ற - சுகநித்திரைதங்குகின்ற, அனந்தலில் - தூக்கத்தில், என்று இருப்பேன் - எக்காலத்து நானிருக்கப் பெறுவேன், அத்தனே-கடவுளே, கயிலாயத்தனே-கயிலாயநாதனே, எ-று.

4. கையாரவேற்றுநின்றங்ஙனந்தின்றுகரித்துணியைத்
தையாதுடுத்துநின்சன்னிதிக்கேவந்துசந்ததமும்
மெய்யாரநிற்பணிந்துள்ளேயுரோமம்விதிர்விதிர்ப்ப
ஐயாவென்றோலமிடுவதென்றோகயிலாயத்தனே.

இ - ள். கையார ஏற்று நின்று - கையார இரந்துநின்று, அங்ஙனம் தின்று - அப்படியேயுண்டு, கரித்துணியைத்தையாது உடுத்து - கரித்துணியைத்தையாமல் உடுத்துக்கொண்டு, நின்சந்நிதிக்குவந்து - உன்சந்நிதியில் வந்து, சந்ததமும் - சதாகாலமும், மெய்யாரநிற்பணிந்து-மெய்யார உன்னை வணங்கி, உள்ளே - மனத்தினாலே நினைந்து, உரோமம் விதிர்விதிர்ப்ப - உரோமாஞ்சலிகொள்ள, ஐயா என்று - ஐயனேயென்று, ஓலம் இடுவது என்றோ - முறையிடுவது எக்காலமோ, கயிலாயத்தனே, எ - று.

5. நீறார்த்தமேனியுரோமஞ்சிலிர்த்துளநெக்குநெக்குச்
சேறாய்க்கசிந்துகசிந்தேயுருகிநின்சீரடிக்கே
மாறாத்தியானமுற்றானந்தமேற்கொண்டுமார்பிற்கண்ணீர்
ஆறாய்ப்பெருகக்கிடப்பதென்றோகயிலாயத்தனே.

இ - ள். நீறு ஆர்த்தமேனி உரோமம்சிலிர்த்து-நீறுபூசப்பட்ட உடம்பின்மீதுள்ள வுரோமங்கள் சிலிர்க்கப்பெற்று, உள்ளம் நெக்கு நெக்கு - மனம்நெகிழ்ந்து நெகிழ்ந்து, சேறாய்க்கசிந்து கசிந்தே உருகி - சேறுபோலக் குழைந்து குழைந்துருகி, நின்சீரடிக்கே - உனதுசிறந்த திருவடியின்கண்ணே, மாறாத்தியானம் உற்று-இடையறாததியானத்தைப்பொருந்தி, ஆநந்தம்மேற்கொண்டு - இன்பம் அதிகரிக்கப்பெற்று, மார்பில் - மார்பின்மீது, கண்ணீர் - கண்ணீரானது, ஆறாய்ப்பெருக - ஆறுபோலப் பெருகாநிற்க, கிடப்பது என்றோ - கிடப்பது எக்காலமோ, கயிலாயத்தனே, எ - று.

6. செல்வரைப்பின்சென்றுசங்கடம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தின்
எல்லையிற்புக்கிடவேகாந்தமாயெனக்காமிடத்தே
அல்லலற்றென்றிருப்பேனத்தனேகயிலாயத்தனே.

இ - ள். செல்வரை - செல்வர்களை, பின்சென்று - பின்பற்றிச்சென்று, சங்கடம்பேசி - வருத்தத்தைச்சொல்லி, தினந்தினமும் - நாள்தோறும், பல்லினைக்காட்டி - பல்லைக்காட்டி, பரிதவியாமல் - பரிதவிக்காமல் பராநந்தத்தின் எல்லையில்புக்கிட - பராநந்தத்தின் எல்லையில் பிரவேசிக்க

ஏகாந்தமாய் - தனிமையாய், எனக்கு ஆம் இடத்தே-எனக்கானவிடத்தில், அல்லல் அற்று - துன்பமற்று, என்று இருப்பேன் - எக்காலமிருக்கப்பெறுவேன், அத்தனே கயிலாயத்தனே, எ - று.

எனக்காம் இடம் என்றது கருவிகரணங்கள் ஒய்ந்தவிடத்தை.

7. மந்திக்குருளையொத்தேனில்லைநாயேன்வழக்கறிந்தும்
சிந்திக்குஞ்சிந்தையையானென்செய்வேனென்னைத்தீதகற்றிப்
புந்திப்பரிவிற்குருளையையேந்தியபூசையைப்போல்
எந்தைக்குரியவன்காணத்தனேகயிலாயத்தனே.

இ - ள். மந்திக்குருளை ஒத்தேன் இல்லை - குரங்குக்குட்டியை நிகர்த்திருந்தேன் இல்லை, நாயேன்வழக்கு அறிந்தும் - நாயினேனது வழக்கையறிந்திருந்தும், சிந்திக்கும் சிந்தையை - சிந்திக்கின்ற சிந்தையை, யான் என்செய்வேன் - நானென்செயக்கடவேன், என்னை - அடியேனை, தீது அகற்றி - தீமையைவிலக்கி, புந்திப்பரிவின் - மனப்பரிவோடு, குருளையை ஏந்திய - குட்டியையேந்திய, பூசையைப்போல் - பூனையைப்போல, எந்தைக்குரியவன் - என் தந்தையாகிய உனக்குரியேன், அத்தனே கயிலாயத்தனே, எ - று.

இறைவனது திருவருளைமுயன்று அடைதற்கு உரியேனல்லேன் அவனே என்னை எடுத்தாளுதற்குரியேன் என்பது கருத்து. மந்திக்குருளைமற்கடநியாயம். குருளையையேந்திய பூசை - மார்ச்சாலநியாயம்.

8. வருந்தேன்பிறந்துமிறந்துமயக்கும்புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற்புகுகின்றிலேன்புகழ்வாரிடத்தில்
இருந்தேனினியவர்கூட்டம்விடேனியலஞ்செழுத்தாம்
அருந்தேனருந்துவனின்னருளாற்கயிலாயத்தனே.

இ - ள். பிறந்தும் இறந்தும் வருந்தேன் - பிறந்தும் இறந்தும் துன்பமடையமாட்டேன், மயக்கும் - மயக்குகின்ற, புலன்வழிபோய்ப் பொருந்தேன் - புலன்வழிபிற்சென்று பொருந்தமாட்டேன், நரகில் புகுகின்றிலேன் - நரகலோகத்திற் பிரவேசியேன், புகழ்வார் இடத்தில் இருந்தேன்-(உன்னைத்) துதிப்பவரிடத்திலிருந்தேன், இனி அவர்கூட்டம் விடேன் - இனி அவர்கூட்டத்தை விட்டு நீங்கேன், இயல் அஞ்செழுத்தாம் - பொருந்திய ஸ்ரீபஞ்சாக்ஷரமாகிய, அருந்தேன் - அரியதேனை, நின் அருளால் அருந்துவன் - உன்னருளாற் பருகுவேன், கயிலாயத்தனே. எ - று.

---

## மதுரை.

1. விடப்படுமோவிப்பிரபஞ்சவாழ்க்கையைவிட்டுமனம்
திடப்படுமோநின்னருளின்றியேதினமேயலையக்
கடப்படுமோவற்பர்வாயிலிற்சென்றுகண்ணீர்ததும்பிப்
படப்படுமோசொக்கநாதாசவுந்தரபாண்டியனே.

இ - ள். இப்பிரபஞ்ச வாழ்க்கையை - இந்தப்ரபஞ்ச வாழ்வை, விடப்படுமோ - விடவொண்ணுமோ, நின் அருளின்றி - உன்னருளில்லாமல், விட்டு - விட்டு, மனம்திடப்படுமோ-மனம் உறுதிப்படுமோ, தினமே அலைய - நாள்தோறும் அலைய, கடப்படுமோ - இசையுமோ, அற்பர்வாயிலிற் சென்று - அற்பர் வாசலிற்போய், கண்ணீர்ததும்பிப் படப்படுமோ - கண்ணீர் ததும்பித் துன்பப்பட வொண்ணுமோ, சொக்கநாதா - சொக்கநாதனே, சவுந்தரபாண்டியனே. எ - று.

---

## பொது.

1\. உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
குடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே
விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில் [கே.
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்

இ - ள். இந்த மேதினியில் - இந்தப்பூமியில், உடை - உடுக்கும் ஆடை, கோவணம் உண்டு - கௌபீனம் உண்டு, உறங்க - நித்திரைசெய்ய, திண்ணை புறம் உண்டு - திண்ணைப் புறங்கள் உண்டு, உணவு - உண்டி, இங்கு - இவ்வுலகத்தில், அடைகாய் இலை உண்டு - இளந்தளிரும் காயும் கீரையும் உண்டு, அருந்த தண்ணீர் உண்டு - குடிக்கச்சாதாரண நீர் உண்டு, அரு துணைக்கு - பிரியாதுநின்று துணையாவதற்கு, விடை ஏறும் - நந்தி என்னும் ரிஷபத்தின்மேல் ஏறும், ஈசர் திருநாமம் உண்டு - பரமசிவனுடைய திருநாமங்கள் உண்டு, வான்பிறைக்கு - அந்திவானத்தில் தோன்றுகின்ற பிறைச்சந்திரனுக்கு, வடகோடு - வடமுனை, உயர்ந்து என்ன - உயர்ந்திருந்தால் ஆவது என்ன, தென்கோடு-தென்முனை, சாய்ந்து என்ன- தாழ்ந்திருந்தால் ஆவது என்ன. எ - று.

ஈசர் - எல்லாப்பொருளுக்குந் தலைவர். பரமசிவன் ஏறும் நந்தி என்னும் ஏற்றை அறத்தின் உருவமென்பர். பிறைச்சந்திரனது வடமுனை உயர்ந்திருந்தால் ஊருக்கு க்ஷேமம் என்றும், தென்முனை உயர்ந்திருந்தால் ஊருக்கு க்ஷாமமென்றும் உலகத்தார் கூறுவர். சுகதுக்கங்களைச் சமமாகப் பாராட்டுகின்றவராதலால் "வடகோடுயர்ந்தென்ன தென்கோடுசாய்ந்தென்ன வான்பிறைக்கே" என்றனர். உடுக்க கௌபீனமும, நித்திரைசெய்யத் திண்ணைப்புறங்களும், உண்ண இளந்தளிரும் காயும் கீரையும், குடிக்கச் சாதாரண நீரும், பிரியாத்துணையாகப் பரமசிவனுடைய திருநாமங்களும் உள்ளன ஆகையால், நல்லாடைகளையும், மாளிகைகளையும், சிறந்த உண்டிகளையும், பால்முதலிய பானவகைகளையும், வேறுதுணைவர்களையும் வேண்டோம் என்றபடி.

2. வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
ஓடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
ஈடுநமக்குச்சொலவேயொருவருமிங்கில்லையே.

இ - ள். நல் நெஞ்சமே - நல்லமனமே, நமக்கு - நமக்கு, வீடு - தங்கும் இடம், திருவாலங்காடு - திருவாலங்காடு என்னும் திருப்பதி, விமலர்- பரிசுத்தராகிய பரமசிவன், தந்த - கொடுத்த, ஓடு நமக்கு உண்டு - திருவோடு நமக்கு உண்டு, (அது) வற்றாதபாத்திரம்-வேண்டிய பொருள் உள்ள பாத்திரமாம், ஓங்கு செல்வம் நாடு - வளர்கின்ற எல்லாச் செல்வங்களையுமுடைய தேசங்கள், நமக்கு உண்டு - நமக்கு உண்டு, (அவை) கேட்டது எல்லாம் - கேட்ட பொருளை யெல்லாம், தரும் - கொடுக்கும், நமக்கு ஈடு சொல்ல - நமக்குச் சமானஞ்சொல்ல, இங்கு - இவ்வுலகத்தில், ஒருவரும் இல்லை - ஒருவரும் கிடையார். எ - று.

விமலர் - மும்மலங்களையும் இயற்கையில் நீங்கினவர். மும்மலம் :— ஆணவம், காமியம், மாயை. ஒன்றின்மேலும் விருப்பமில்லாமையால் ஒருவரும் நமக்கு ஈடாகார் என்றார்.

3. நாடிக்கொண்டீசனைநாட்டமுற்றாயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலிலைப்பித்தர்களே.

இ - ள். நெஞ்சமே - மனமே, ஈசனை - பரமசிவனை, நாடிக்கொண்டு - குறித்துக்கொண்டு, நாட்டம் உற்றாய் இலை - தேடினாய் இல்லை, நாதர் - அவ்விறைவருடைய, அடி - பாதங்களை, தேடிக்கொண்டு - தேடிப்பெற்றுக்கொண்டு, தெளிந்து ஆடினாய் இல்லை - (அவையே) துணையென்று துணிந்து ஆடினாய் இல்லை, செகமாயைவந்து - உலகமாயைவந்து, மூடிக்கொண்டோமென்றும் - மூடப்பட்டோமென்றும், காமாயுதங்கள்-மன்மத பாணங்கள், முனிந்த என்றும் - கோபித்தன என்றும், பீடிப்பையோ - (வாளா) வருத்துவாயோ, உனைப்போல் இல்லை பித்தர்களே - பித்தர்கள் உன்னைப்போல்வார் இல்லை. எ - று.

காமாயுதங்களாவன :—தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்னும் ஐவகை மலர்கள். யாவும் சிவன்செயலென்று அப்பெருமானுடைய பாதங்களை நாடித் தேடிப்பற்றி ஆநந்தித்திராமல், உலகமாயையும், மன்மத பாணங்களும் கோபிக்கின்றன வென்றுமனமே என்னை வருத்துகின்றாய், உன்னைப்போல் பித்தர்கள் இல்லை என்பது கருத்து.

4. கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழும் [ணப்
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே.

இ - ள். கை ஒன்று செய்ய - கை வேறொருதொழிலைச் செய்யா நிற்க, விழி ஒன்று நாட - கண்கள் வேறு உருவத்தைப் பாரா நிற்க, கருத்து ஒன்று எண்ண - மனம் வேறொரு காரியத்தை எண்ணாநிற்க, பொய் ஒன்று - பொய்த்தன்மை ஒன்றுபட்டுள்ள, வஞ்சகம் - வஞ்சகமுள்ள, நா - நாவானது, ஒன்றுபேச - வேறொரு செய்கையைப்பேசா நிற்க, புலால் கமழும் - புலால்நாற்றம் மணக்கின்ற, மெய் - உடலானது, ஒன்றுசார - வேறொருபரிசத்தைச் சாராநிற்க, செவி ஒன்று கேட்க - காது வேறொரு சொல்லைக் கேளாநிற்க, விரும்பும் யான் - (மேற்சொன்ன விடயங்களை) விரும்புகின்ற நான், செய்கின்றபூசை - பண்ணுகின்ற பூசையை, எவ்வாறு கொள்வாய் - எப்படி அங்கீகரிப்பாய், வினைதீர்த்தவனே - வினைதீர்த்த பெருமானே. எ - று.

5. கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலையால்
எண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானிடமே.

இ - ள். (சிவபெருமானை) காண - தரிசிக்க, கண் உண்டு - (உங்களுக்கு) கட்புலனுண்டு, நோக்க - பாவனைசெய்ய, கருத்துண்டு - எண்ணம் உண்டு, கசிந்து உருகிப்பாட - (உள்ளம்) இளகி உருகிப்பாட, பண்ணுண்டு- (செவ்வழிமுதலிய) பண்கள் உண்டு, கேட்க - அப்பண்களைக்கேட்க, செவி உண்டு - செவிப்புலன் உண்டு, பல் பச்சிலையால் - பல ஈரம் உலராத பசிய பத்திரங்களினால், சாத்த எண் உண்டு - அருச்சிக்க (சஹஸ்ரம் என்னும்) கணக்குண்டு, எதிர் நிற்க - (ஏற்றுக்கொள்ளப்) பிரத்தியட்சமாய் நிற்க, ஈசன் இருக்கையிலே - பரமசிவன் எளியனாய் இருக்கையில், இந்த மானுடம் - இந்த மனிததேகம், மண்ணுண்டு போகுது - மண்ணால் உண்ணப்பட்டுக் கழிகின்றது, (மேற்கூறிய செயல்களைச் செய்யாமல்) ஐயோ கெடுவீர் - ஐயோ கெடுகின்றீர். எ - று.

இந்த மானுடதேகத்தைக் கருவியாகக்கொண்டு உயிர்க்கு உறுதியாகிய வீட்டின்பம் பெறுமையால் "மண்ணுண்டு போகுதையோ" என்று இரங்கிக் கூறினர்.

6. சொல்லிலுஞ்சொலலின்முடிவிலும்வேதச்சுருதியிலும்
அல்லிலுமாசற்றவாகாயந்தன்னிலுமாய்ந்துவிட்டோர்
இல்லிலுமன்பரிடத்திலுமீசனிருப்பதல்லால்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே.

இ - ள். எங்கள் கண்ணுதல் - எங்கள் பரமசிவன், சொல்லிலும் - பேசுஞ்சொல்லிலும், சொல்லின் முடிவிலும் - பேசுஞ்சொல்லின் முடிவிலும், வேதச்சுருதியிலும் - வேதத்தின் ஒலியிலும், அல்லிலும் - இராத்திரியிலும், மாசு அற்ற - குற்ற மற்ற, ஆகாயந்தன்னிலும் - ஆகாயத்திலும், ஆய்ந்து - பலநூல்களையும் ஆராய்ந்து, விட்டோர் - இருவகைப்பற்றையும் துறந்தோருடைய, இல்லிலும் - மனக்கோயிலிலும், அன்பரிடத்திலும் - அன்பர்களிடத்திலும், ஈசன் - பரமசிவன், இருப்பதல்லால் - இருப்பதல்லாமல், கல்லிலும் - கல்மட்டிலும், செம்பிலுமோ - செம்புமட்டிலுமோ, இருப்பான் - இருக்கு மியல்புடையான். எ - று.

மற்ற பூதங்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருப்பதாகையால் மாசற்ற ஆகாயம் என்றார். பரமசிவன் எங்கும் நிறைந்திருப்பார் என்பது கருத்து. இருவகைப்பற்று :— அகப்பற்று, புறப்பற்று. அன்பர் என்றது இல்லறத்தாரை.

7. வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தால்
தினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கிந்நெறியினின்றால்
உனைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரே.

இ - ள். மனமே - மனமே, வினைப்போகமே - செய்த வினைகளின் போகங்களை அநுபவிப்பதற்கே (பெற்றது), ஒருதேகம் - இச்சிறிய உடல், வினைதான் ஒழிந்தால் - அவ்வினை முற்றுப்பெற்றால், தினைப்போதளவும் - தினையளவுகாலமும், நில்லாது - நிலைபெறாது, (ஆதலால்) சிவன் பாதம் நினை - சிவனுடைய பாதங்களைச் சிந்தனைசெய், நினைப்போரை - சிந்தனை செய்வோரை, மேவு - கூடு, நினையாரை - சிந்தனை செய்யாதவரை, நீங்கு - விட்டொழி, இந்நெறியில் நின்றால் - இவ்வழியில் நின்றால், எனக்கு உற்றவர் - எனக்கு உற்றதுணையாவோர், உனைப்போல் - உன்னைப்போல, ஒருவர் உண்டோ - ஒருவர் உளரோ. (இல்லை) எ - று.

போகம் - பயன். சிவன் - மங்கலமுடையவன். நின்றால் என்பது நிற்றல் அருமைநோக்கி.

8. பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து [துக்
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொடுத்
கட்டியிருந்தகனமாயக்காரிதன்காமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே.

இ - ள். பட்டைக்கிழித்து - சிறுநறுக்கைக் கிழித்து, முட்டச்சுருட்டி - நெருங்கச்சுருட்டி, பருவூசிதன்னை - பருமையாகிய ஊசியை, பரிந்து

எடுத்து - விரும்பி எடுத்து, என் - என்னுடைய, மொய்குழலாள் கையில் - அடர்ந்த கூந்தலையுடைய என்மனைவியினிடத்தில், முன்கொடுத்து - முன்னேகொடுத்து, கட்டியிருந்த-என்னோடு ஒன்றுபட்டிருந்த, கனமாயக்காரிதன் - கனமாகிய மாயை செய்ய வல்லவளால்நேர்ந்த, காமம் எல்லாம் - காமம் முழுமையும், விட்டுப்பிரிய என்றோ - விட்டுப்பிரிய வென்று கருதியோ, சிவன் - பரமசிவனுகிய மருதப்பிரான், இங்ஙனே - இங்கேவந்திருந்து, மீண்டது - திரும்பியருளியது. எ - று.

மொய்குழலாள் என்றது பட்டணத்தார் மனைவியாராகிய சிவகலையை. கனமாயக்காரி என்றது உலகமாயையை. இங்குச்சிவன் என்றது மானுடத்திருவுருவங்கொண்டு பட்டணத்துப் பிள்ளையாருக்குத் திருக்குமாரராய் அவர் இல்லின் கண்வளர்ந்துவந்த மருதப்பிரான் என்னும் சிவபெருமானை. சிவபெருமானுகிய மருதப்பிரான் பட்டணத்தாரைவிட்டுப் பிரிந்துபோனசெய்தி: - குபேரன் பட்டணத்துப்பிள்ளையாராகப்பிறந்து காவிரிப்பூம்பட்டணத்தில் சீமானுய் இருக்கையில், பரமசிவம் தாம்முன் அக்குபேரனுக்கு வாக்களித்தவண்ணம் ஆட்கொள்ளும் பொருட்டு திருவிடைமருதூர் உத்தியானவனத்தில் வில்வமரத்தடியில் குழந்தை வடிவங்கொண்டெழுந்தருளியிருக்க, அக்குழந்தையை வறுமையால் வருந்திய சிவனடியாராகிய சிவசருமரும் அவர் மனைவியாரும் சிவபெருமான் கனவில் கட்டளையிட்டபடி அம்மரத்தடியில் இருந்த குழந்தையைக் கொண்டுபோய் பிள்ளையில்லாமல் வருந்திய பட்டணத்துப் பிள்ளையாருக்குக்கொடுக்க, அவரும் பிள்ளைகலிதீர்க்கவந்த சிவபெருமானுகிய குழந்தையைப்பெற்று அக்குழந்தையின் நிறையளவான பொன்கொடுக்க அதைப்பெற்றுப்போயினர் - இங்கு இக்குழந்தை யுருவமான சிவபெருமான் மருதப்பிரான் என்னும் திருநாமம்பூண்டு பதினறுண்டு பட்டணத்தாருக்குத் திருக்குமாரராய் வளர்ந்துவர; பின் பட்டணத்தார்திருவருள் பெறவேண்டியகாலம் அடுக்கவும் ஒருநாள் அவர் இல்லாத காலையில் மருதப்பிரான் ஓர் பெட்டியில் "காதற்ற ஊசியும் வாராது கடைவழிக்கே" என்னும் வாக்கியமெழுதிப ஒருநறுக்கையும், ஒருகாதற்ற ஊசியையும் வைத்துத் தாளிட்டு இதை என்பிதாவந்தவுடன் கொடுக்கக்கடவீர் என்று தாய்கையிற் கொடுத்து மறைந்துபோயினர். பின் பட்டணத்தார் மனைவியாரும் தம்நாயகன் வந்தவுடனே அவர்கையில் இதை உம்முடைய மைந்தர் கொடுக்கச்சொல்லிப் போயினரென்று கொடுக்க, அவரும் மைந்தனுல் கொடுக்கப்பட்டதெனவே பேரவாவுடன் அப்பெட்டியைத் திறந்து, அதிலுள்ள நறுக்கையும், காதற்ற ஊசியையுங்கண்டு ஞானேதயமாய் இதுவனையும் தம்மோடிருந்தவர் சிவபெருமானென்றறிந்து அவர் பிரிவுக்கிரங்கியழுது தமது செல்வம் முழுவதையும் பலருக்கும் சூறையிடக்கடவீரென்று தம் தலைமைக்காரியக்காரராகிய சேந்தனுர் என்பவருக்குக் கட்டளையிட்டுத் தாம் துறவுபூண்டு திருப்பதிகள் தோறும் சிவபெருமா

லனத் தரிசிக்கப் புறப்பட்டனர். இதுமுதலிய நான்கு செய்யுள்களும்துறவு பூண்டுவீட்டை விட்டுப்புறப்பட்ட அச்சமயத்திற்பாடியவை.

9. சூதுற்றகொங்கையுமாதர்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தால்
தீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே.

இ-ள். சூதுற்ற கொங்கையும் - சூதாடு கருவிபோல் தங்கியஸ்தனங்களும், மாதர் - மாதர்களுடைய, கலவியும் - புணர்ச்சியும், சூழ்பொருளும்-நிரம்பிய செல்வப்பொருளும்; போது-மரணகாலத்தில், உற்ற -நேர்ந்த, பூசலுக்கு - போராவிலக்குவதற்கு, என்செயலாம் - என்ன உபகாரத்தைச் செய்யமுடியும், தீது அற்ற - இயற்கையில் தீமையில்லாத, மன்னவன் - எம் தலைவனாகிய பரமசிவன், செய்த புண்ணியத்தால் - நான் முன் செய்த நல்வினைப்பயனாலே, சிந்தையின் - என் மனத்தின்கண், இன்று-இப்போது, தெளிவதற்கோ - தெளிவை அடைவதற்கோ, காதற்ற ஊசியை - காதறுந்த ஊசியை, தந்து-என் மனைவிகையில் கொடுத்து; என்தன் கைதனிலேவிட்டான் - என்னுடைய கையிலே செலுத்தினான் எ-று.

பூசலுக்கு என்பதனீற்றில் விலங்குவதற்கு என்னுஞ்சொல் இசையெச்சமாய் நின்றது. சிந்தையின் என்பதில் இன் ஏழனுருபு. இயல்பாகவே பாசங்களினீங்கினவனாகையால் பரமசிவனைத் தீதற்ற மன்னவனென்றார். சிவபெருமான் காதற்ற ஊசியைக்கொடுத்துத் துறவடையச்செய்தார் என்பது கருத்து.

10. வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்தில்
தீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே.

இ-ள். வாது உற்ற -(அர்ச்சுனனோடு செய்த) வாதில் தங்கிய, திண்புயர் - திண்ணிய புசங்களையுடையாராகிய, அண்ணாமலையர் - திருவண்ணாமலையாருடைய, மலர்ப்பதத்தை - செந்தாமரைப் பூப்போன்ற பாதங்களை, போது உற்று - நல்ல மலர்களைப்பெற்று, எப்போதும் - எக்காலத்திலும், புகலு - துதிசெய், நெஞ்சே - மனமே, இந்தப் பூதலத்தில் - இப்பூமியில், தீது உற்ற செல்வம் என் - தீமையை அடைந்த செல்வப்பொருளால் என்னபயன், தேடி - சம்பாதித்து, புதைத்த - (பிறர்கவரவொட்டாமல்) புதைத்துவைத்த, திரவியம் என் - திரவியத்தால் என்னபயன், காது அற்ற ஊசியும் - காது அறுந்த ஊசியின் மதிப்புப்பொருளும், கடைவழிக்கு - இனிச்செல்லும் கடைசிவழிக்கு, வாராது - துணைவரமாட்டாது.

சிவபெருமான் அர்ச்சுனனோடு வாதுற்றசெய்தி: - அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறும்பொருட்டு கைலைக்குச்சென்று சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்கையில், அத்தவத்தை அழிக்கத் துரியோதனனால் ஏவப்பட்ட மூகாசுரன் என்னும் அசுரன் வராகவுருவங்கொண்டு வந்தனன். இதைஉணர்ந்தசிவபெருமான் அப்பன்றியைக்கொன்றுஅர்ச்சுனனைக்காத்து அவன்வேண்டிய பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தருளும்பொருட்டு வேடனுருவங்கொண்டு தவத்தை அழிக்கும்படி அர்ச்சுனனுக்கெதிரில் ஓடிவந்த அவ்வராகத்தை அம்பால் எய்தனர். அதேதருணத்தில் அர்ச்சுனனும் அவ்வராகத்தின்மேல் தானும் ஓர் அம்பெய்தனன். வராகம் இறந்தது, வில்வீரர்களில் சிறந்தோனாகிய அர்ச்சுனனோடு விளையாட்டாகப் போர்புரியக் கருதிய சிவபெருமான் அவன்தான் குறிவைத்தபன்றியை எய்தனனென்று அவ்வருச்சுனனோடு வீணேவாதாடி விற்போரும் மற்போரும் செய்தனரென்பது. இங்குக் கடைவழி என்றது - மரணத்தை.

**11.** வேதத்தினுட்பொருண்மண்ணாசைமங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழிகேட்டிலையோசெய்தபுண்ணியத்தால்
ஆதித்தன்சந்திரன்போலேவெளிச்சமதாம்பொழுது
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே.

இ - ள். மண்ணாசை - மண்ணாசையையும், மங்கையை - பெண்ணாசையையும், விட்டுவிட - விட்டுவிடும்படி, செய்த புண்ணியத்தால் - நான் செய்த நல்வினைப்பயனாலே, வேதத்தின் உட்பொருள் - வேதத்தின் உட்கருத்தை, போதித்தவன்மொழி - போதித்த பரமசிவனது மொழியை, கேட்டிலையோ - கேட்கவில்லையோ, ஆதித்தன் சந்திரன்போலே-சூரியனைப் போலவும் சந்திரனைப்போலவும், வெளிச்சமது ஆம்பொழுது - (இருசரங்களும் வெளிப்படும்பொழுது, காதற்ற ஊசியும் - (நீதேடிய பொருள்களிலே) காதறுந்த ஊசியின் மதிப்புள்ளபொருளும், கடைவழிக்கு - இனிச் செல்லும் கடைசிவழிக்கு, வாராது - துணைவரமாட்டாது. எ - று.

இங்கு ஆதித்தன் சந்திரன்போல் வெளிச்சமதாம் பொழுது என்றது பிங்கலை, இடைகலை இரண்டும் இத்தேகத்தைவிட்டு நீங்கும் காலத்தை; அதாவதுமரணகாலம். பிங்கலையாகியவலது சரத்தைச் சூரியகலையென்றும் இடகலையாகிய இடதுசரத்தைச் சந்திரகலை யென்றும் கூறுவர் யோகநூலோர் "தவமும் தவமுடையார்க்காகும்" என்றபடி செய்தபுண்ணியத்தால் போதித்தவன் என்றார்.

**12.** மனையாளுமக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாசன்மட்டே
இனமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவம்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே.

இ - ள். மனையாளும்-மனைவியும், மக்களும் - (தான்பெற்ற) பிள்ளைகளும், வாழ்வும் - செல்வமும், தனமும் - பொருளும், தன் வாசல்மட்டே-(உயிர்நீங்கிய காலத்தில்) தன் வாயிலின் அளவே சிறப்பைத்தரும், இனமான - இனமாகிய, சுற்றம் - உறவு, மயானமட்டே - சுடுகாட்டின் அளவே சிறப்பைத்தரும், வழிக்கு-உயிர்செல்லும் வழிக்கு, துணை ஏது - துணையாய் வருவதுயாது, தினையாம் அளவு ஆகினும் - தினையரிசியின் அளவாகினும், எள் அளவு ஆகினும் - எள்ளின் அளவாகினும், முன்பு - (உயிர்நீங்கு) முன், செய்த தவம்தனை - (ஒருவன்தான் தொடங்கிச்செய்த) தவத்தை, என்றும் - எப்போதும், ஆள - விடாமற்செய்ய, பரலோகம் - (மறுமையில் அடையும்) வீட்டுலகம், சித்திக்கும் - வாய்க்கும், சத்தியமே - (இது) உண்மையேயாகும் எ - று.

பரலோகம்-சிறந்தபதம். மனைவிமக்கள்முதலியோர்பால்வைத்த ஆசையால் தாம் மேற்கொண்ட தவத்தைவிட்டொழியாமல் மறுமைக்குத் துணையாகிய அவ்வறத்தை முற்றுப்பெறச் செய்யவேண்டுமென்பது கருத்து.

**13.** அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழியம்பொழுக
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலைமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே.

இ - ள். அத்தமும் - பொருளும், வாழ்வும் - (அதனால்) உண்டாகும் செல்வமும், அகத்துமட்டே - வீட்டின் அளவேசிறப்பைத்தரும், மெத்திய-மிகுந்தன்மையையுடைய, மாதரும்-மனைவிமுதலிய பெண்களும், விழி அம்பு ஒழுக - கண்கள் நீர் ஒழுக, வீதிமட்டே - தெருவின் அளவே தொடர்ந்துவருவர், விம்மிவிம்மி - பலமுறைதேம்பி, இருகை தலைமேல் வைத்து - இரண்டு கைகளையும் தலைமேல்தாங்கி, அழும் - அழுகின்ற, மைந்தரும் - புத்திரர்களும், சுடுகாடுமட்டே - சுடுகாட்டின் அளவேவிடாது வருவர், இருவினை-நல்வினை தீவினைகளினது பயனாகிய, புண்ணிய பாவமுமே-புண்ணியமும் பாவமுமே, பற்றித்தொடரும்-பின்பற்றிச் செல்லும் எ - று.

"தன்னொடு செல்வதுவேண்டின் அறஞ்செய்க" என்றபடி தான் செய்த இருவினையே தனக்குத்துணைவருமென்பது.

**14.** சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவாய்
ஈயுமெறும்புமபுகுகின்றயோனிக்கிரவுபகல்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே.

இ - ள். சீயும் - சீயும், குருதி - இரத்தமாகிய, செழுநீர் - கொழுமையாகிய நீர் சுரக்கின்ற, வழும்பும் - நிணமும், செறிந்தெழுந்து - மிகுந்தெழு

ந்து, பாயும்-பாய்கின்ற, புடைவையொன்று - மறைவாகிய ஒருபுடைவை, இல்லாதபோது - இல்லாதகாலத்தில், பகல் இரவாய் - பகலும் இராத்திரியுமாக, ஈயும் எறும்பும் - ஈயும் எறும்பும், புகுகின்ற - நுழைகின்ற, யோனிக்கு - யோனியின் பொருட்டு, இரவு பகல் - இரவும் பகலுமாக, மாயும் மனிதரை - தம் வலி தொலைகின்ற மக்களை, மாயாமல்வைக்க - அழியாமல் வைத்திருக்க, மருந்தில்லையே - மருந்தில்லையோ. எ - று.

புருஷர்கள் மாதர்களின் காமத்திற் சிக்கி அழிகின்றார் என்பது கருத்து.

**15.** சீதப்பனிக்குண்டுசிக்கெனக்கந்தைதினமிரந்து
நீதுய்க்கச்சோறுமனைதோறுமுண்டுநினைவெழுந்தால்
வீதிக்குணல்லவிலைமாதருண்டிந்தமேதினியில்
ஏதுக்குநீசலித்தாய்மனமேயென்றும்புண்படவே.

இ - ள். இந்த மேதினியில் - இந்தப்பூமியில், சீதப்பனிக்கு - குளிர்ச்சியைத்தருகின்ற பனிக்காலத்திற்கு, சிக்கென - உறுதியாகப்போர்க்க, கந்தை உண்டு - பழஞ்சீலை உளது, தினம் இரந்து - தினமும் யாசித்து, நீதுய்க்க - நீ அநுபவிக்க, சோறு - உணவு, மனைதோறும் உண்டு - வீடுகள்தோறும் உளது, நினைவு எழுந்தால் - காம நினைப்பு உண்டானால், வீதிக்குள் - வீதிகளில், நல்லவிலைமாதர் உண்டு - சுந்தரமானதாசிகள் உளர், மனமே - மனமே, என்றும் புண்பட - எக்காலமும் புண் உண்டாகும்படி, ஏதுக்கு - எதற்கு, நீசலித்தாய் - நீ இளைத்தாய் எ - று.

**16.** ஆறுண்டுதோப்புண்டணிவீதியம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்தம்
மாறுண்டுலாவிமயங்குநெஞ்சேமனைதோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே.

இ - ள். நித்தம் நித்தம் - தினந்தோறும், மாறுண்டு-மாறுபாட்டையடைந்து, உலாவி-விஷயங்களிற்சென்று, மயங்குநெஞ்சே - மயங்குகின்ற மனமே, ஆறுண்டு - (உடம்பழுக்கைக் கழுவுதற்கு) நதி உண்டு, தோப்புண்டு - (உல்லாசமாய்த் தங்குவதற்கு) சோலை உண்டு, அணிவீதி - அழகிய வீதிகளில், அம்பலம் தானும் உண்டு - (தனித்திருப்பதற்கு) பொதுவிடமும் உண்டு, நீறுண்டு - (பூசிக்கொள்வதற்கு) விபூதியுண்டு, கந்தை நெடுங்கோவணமுண்டு-(மானத்தைக்காத்துக்கொள்ள) கந்தையாகிய நெடியகோவணமுண்டு, மனைதோறுஞ்சென்று சோறு உண்டு - வீடுகள்தோறும் போய்ச் சோற்றைப் புசித்து, தூங்கி - நித்திரைசெய்து, பின் - அதன்பின், சும்மா இருக்க-(யாதொரு முயற்சியுமில்லாமல்) சும்மா இருப்பதினால், சுகமும் உண்டு - சுகமும் உளது, எ - று.

அம்பலம் - ஊரிலுள்ள பொதுக்கட்டடம். "சும்மாவிருந்து சுகம் பெறுவதெக்காலம்" என்பதும் இது.

17. உடுக்கக்கவிக்கக்குளிர்காற்றுவெய்யிலொடுங்கிவந்தால்
தடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையெங்கெங்குமுண்டுபசித்துவந்தால்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே.

இ - ள். நெஞ்சே - மனமே, குளிர்காற்று - குளிர்ந்தகாற்றிலும், வெயில் - வெய்யிலிலும், ஒடுங்கிவந்தால் - (உடல்) ஒடுங்கும்படி நேர்ந்தால், தடுக்க - (அவ்விரண்டையும்) தடுக்கும்பொருட்டு, உடுக்க - உடுத்தற்கும், கவிக்க-குடைபோலக் கவிப்பதற்கும், பழைய ஒருவேட்டி உண்டு - பழைய ஒரு ஆடை உண்டு, படுக்க - படுத்துறங்க, சகம்முழுதும் - பூமி முழுதிலும், புறந்திண்ணை - திண்ணைப்புறங்கள், எங்கெங்குமுண்டு-எவ்வெவ்விடங்களிலும் உண்டு, பசித்துவந்தால் - பசித்துச்சேர்ந்தால், கொடுக்க-(உணவு) கொடுக்க, சிவனுண்டு - பரமசிவன் உண்டு, (ஆதலால்) நமக்குக் குறைவில்லை - நமக்கு யாதொரு குறைவுமில்லை, எ - று.

18. மாடுண்டுகன்றுண்டுமக்களுண்டென்றுமகிழ்வதெல்லாம்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
ஓடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே.

இ - ள். மாடுண்டு - பசுமாடுகள் உண்டு, கன்றுண்டு - அவற்றின் கன்றுகள் உண்டு, மக்கள் உண்டு - பிள்ளைகள் உண்டு, என்று மகிழ்வதெல்லாம்-என்று சந்தோஷிக்கின்ற எல்லாப்பொருள்களுக்கும், கேடுண்டு எனும்படி-அழிவுண்டு என்னும் விதத்தை, கேட்டு-பெரியோர்களாற் கேள்விப்பட்டு, விட்டோம் - அவற்றின்மேல் இருந்த பற்றை ஒழித்தோம், இனிக்கேள் - இனிக்கேளாய், மனமே - மனமே, ஓடுண்டு - (யாசிக்க) திருவோடுண்டு, கந்தையுண்டு - (உடுக்க) கந்தையுண்டு, உள்ளே எழுத்தைந்தும் ஓத உண்டு - உனக்குள்ளே ஓதுதற்கு பஞ்சாட்சரமுண்டு, தோடு - காதணிகள், உண்ட - தீண்டுகின்ற, கண்டன் - கண்டத்தையுடைய பரமசிவனது, அடியார் - அடியார்கள், நமக்கு - நமக்கு, துணையுமுண்டு - துணையாவாருமுளர், எ - று.

உடலைக்காக்கத் திருவோடும் கந்தையும், உயிரைக்காக்கப் பஞ்சாட்சரமும் சிவனடியாரும் உண்டென்பது கருத்து.

19. மாத்தானவத்தையுமாயாபுரியின்மயக்கத்தையும்
நீத்தார்தமக்கொருநிட்டையுண்டோநித்தனன்புகொண்டு
வேர்த்தாற்குளித்துப்பசித்தாற்புசித்துவிழிதுயின்று
பார்த்தாலுலகத்தவர்போலிருப்பர்பற்றற்றவரே.

இ - ள். மாத்து ஆன - மகத் தத்துவமான, அத்தையும் - அதையும், மாயாபுரியின் மயக்கத்தையும் - மாயையின் ஆளுகைக்குட்பட்ட தேகத்தினது பிரமிப்பையும், நீத்தார் தமக்கு - முற்றத்துறந்தவர்க்கு, ஒரு நிட்டை உண்டோ - வேறொருநிதிபானம் உளதோ (இல்லை), நித்தன்-நித்தியனாகிய சிவனது, அன்புகொண்டு - அன்பைப்பெற்று, வேர்த்தால் - வேர்த்தால், குளித்து - முழுகி, பசித்தால் - பசியுண்டானால், புசித்து - உண்டு, விழிதுயின்று - (உறக்கம்வந்தால்) கண்ணுறங்கி, பார்த்தால்-பிறர் ...மைக்கண்டால், உலகத்தவர்போல் - உலகத்தாரைப்போல, இருப்பர் - இருப்பார்கள், பற்றற்றவர்-இருவகைப்பற்றையும் முற்றும் விட்டவர் (இதுவே அவர்களுடைய நிட்டை.) எ - று.

புருடன் தெரிதற்குக் கருவியாகிய மகத்தத்துவத்தைக் கூறினமையால் அதன்கட்டோன்றிய அகங்காரமும், மனமும், அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் அமையும். இதனை "சுவை யொளியூறோசை" என்னும் குறட்குப் பரிமேலழகர் உரையானுமுணர்க "மாத்தானவத்தையும்" என்பதற்கு, மாத்து - மகத்தத்துவத்தையும், ஆன - அதன்கண்தோன்றிய, அத்தையும்-அசங்காரத்தையும் என்னலுமாம். மஹத் என்னும் வடமொழி மாத் எனவந்தது. அதை என்பது அத்தை எனநின்றது உலகவழக்கு. உலகத்தவர் - சமுசாரபந்தமுடையவர். பற்று - அகப்பற்று, புறப்பற்று. இவைகளுக்கு வடமொழியில் அகங்காரம், மமகாரம் என்றுபெயர். அகங்காரத்தை வாயாற்கூறவும் அஞ்சிச் சுட்டுப்பெயரால் அத்தை எனக்கூறினர் போலும்.

**20.** ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர்செல்வமெல்லாம்
அன்றென்றிருபசித்தோர்முகம்பார்நல்லறமுநட்பும்
நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
என்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே.

இ - ள். மனமே - மனமே, ஒன்று என்று இரு-கடவுள் ஒருவன் என்று கருதியிரு, தெய்வம் உண்டென்று இரு-ஆகூழ் போகூழ்களாகிய ஊழ் உண்டென்று கருதியிரு, உயர் செல்வமெல்லாம்-உயர்ந்த செல்வங்களெல்லாம், அன்று என்று இரு-உயிருக்குத் துணையாவதல்ல என்று இரு, பசித்தோர் முகம்பார் - பசியால் இளைத்தவர்களுடைய முகத்தைப்பார்த்துக் கருணையாய்க்கொடு, நல்லறமும் நட்பும் நன்று என்று இரு-துறவறமும் நல்லாரோடு உறவாடுதலும் உயிர்க்கு நன்மை தருவன வென்று நம்பியிரு, நடு நீங்காமலே-நடுவு நிலைமையினின்று நீங்காமலே, நமக்கு இட்டபடி-கடவுள் நமக்கு விதித்த விதம், என்று - இளமையிலோமூப்பிலோ, என்று இரு - என்று கருதியிரு, உனக்கு உபதேசம் இதே-உனக்கு உபதேசம் இதுவே. எ - று.

சத்துவமுதலாகிய மூன்றுகுணங்களால் மூவராகிய முதற்கடவுள் ஒருவர் என்பார் கடவுளை ஒன்று என்றும், ஊழ்வினை இல்லையென்பாரை மறுத்துத் தெய்வம் உண்டு என்றும், செல்வம் மறுமைக்குத் துணையாகாது என்பார் அன்றென்றிரு செல்வம் என்றுங்கூறினர். தெய்வம், ஊழ், பால், முறை, உண்மை, நியதி, விதி என்பன ஒருபொருட் சொற்கள்.

**21.** நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்புபொம்மல்
ஆட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீர்
ஓட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே.

இ - ள். சற்குருபாதத்தை - நமக்கு நன்மையை உபதேசித்தகுருவினுடைய பாதத்தை, நாட்டமென்றே இரு - தேடத்தகுந்தபொருளென்றே கருதியிரு, நம்பு - (அப்பாதங்களை) நம்பியிரு, பொல்லா உடலை - நிலையுள்ளதுபோல் தோன்றி அழிகின்ற உடம்பை, பொம்மல் ஆட்டமென்றே இரு - பிரதிமையின் ஆடுதலென்றே கருதியிரு, சுற்றத்தை - உறவினரை, அடர்ந்த - வந்துநெருங்கின, சந்தைகூட்டமென்றே - (வேண்டியபொருளை வாங்கவந்த) சந்தையின் கூட்டமெனறே, இரு - கருதியிரு, வாழ்வை - செல்வத்தோடு கூடிவாழும் வாழ்க்கையை, குடம் கவிழ்நீர் ஓட்டமென்றே - குடம் கவிழ்ந்த நீரோட்டமென்றே, இரு - கருதியிரு, நெஞ்சே உனக்கு உபதேசம் இதே - மனமே உனக்கு உபதேசம் இதுவேயாம் எ - று.

வடநூலாரும் இத்தேகத்தை அன்னமயகோசமென்பர். கோசம் - சட்டை. உடல்முதலியன நிலையில்பொருள் ஆகையால், நிலையுள்பொருளாகிய இறைவனை அடைவிக்கும் சற்குருபாதமே தஞ்சமென்றிரு என்பது கருத்து.

**22.** என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
உன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைப்பிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே.

இ - ள். தெய்வமே - பரமசிவமே, இனி - உனக்கடிமைப்பட்டபின், என்செயலாவது - என்னுடைய செயலாய் நிற்பது, யாதொன்றுமில்லை - யாதொரு செயலுமில்லை, உன்செயலே யென்று - (நான்செய்யும் செயல்களெல்லாம்) என்னைக்கொண்டு நீ செய்விக்கும் செயலேயென்று, உணரப்பெற்றேன் - உண்மை உணரப்பெற்றுக்கொண்டேன், இந்த ஊன் எடுத்த பின் - இந்த ஞான உடலைப்பெற்றபின், செய்த தீவினை யாதொன்றுமில்லை - (யானாக) செய்த தீவினை யாதொன்றுமில்லை, பிறப்பதற்கு முன்செய்த

தீவினையோ - இந்த ஞான உடலைப் பெறுவதற்குமுன் செய்த தீயவினையி னாலேயோ, இங்ஙனேவந்து-இவ்வாறேவந்து, மூண்டது-பற்றியது, எ-று.

இச்செய்யுள் பத்திரகிரி யரசனுடைய சேவகர்கள் பட்டணத்தாரைக் கழுவேற்றக் கொண்டுபோனபோது அவர் பாடியருளியது. கழுவேற்ற நேர்ந்தசெய்தி:—சிலகள்ளர் ஒன்றுசேர்ந்து களவாடப் போய்க்கொண் டிருக்கையில், பத்திரகிரியரசன் அரசாண்டநகரத்தின் குறுங்காட்டிலுள்ள ஓர் விநாயகர் கோயிலைக்கண்டு தங்களுக்குக் களவுவாய்க்கவேண்டுமென்று பிரார்த்தித்துச்சென்று அந்நகரடைந்து அரசன் அரண்மனையில் புகுந்து வேண்டியமட்டும் பலவகை ரத்தினாபரணங்களைக் களவாடித்திரும்புகை யில், அக்கள்வர் தங்கள்கோரிக்கை நிறைவேறியதைமுன்னிட்டு அவ்விநா யகர் ஆலயத்திற்குவந்து அங்கு நிட்டையிலிருந்த பட்டணத்துப்பிள்ளை யாரைச் சிலாரூபமாகிய விநாயகமூர்த்தியென்று கருதி ஓர் இரத்தின ஆர த்தை அவர்கழுத்தில் அணிந்து சென்றனர். பின் அரண்மனைச்சேவகர் அரண்மனையில் களவுசெய்த கள்ளரைப் பிடிக்கத்திரிகையில், விநாயகர் கோயிலில் நிஷ்டையிலிருந்த பட்டணத்தார்கழுத்தில் களவுபோன ரத்ந வடமிருக்கக்கண்டு, அச்சேவகர்கள் அவரைக் கள்ளனென்று துணிந்து பற்றி யிழுத்துக்கொண்டுபோய் அரசனுக்குத்தெரிவிக்க, அரசனும் கழு வேற்ற ஆணைகொடுக்க, பட்டணத்தாரைக் கழுமரத்துக்கருகில் அழைத் துச்செல்ல, அவர் கழுமரத்தைக்கண்டு புன்னகைசெய்து "என்செயலாவ தியாதொன்றுமில்லை" என்ற இப்பாடலைப்பாடியவுடன் கழுமரம் பற்றி யெரிந்தது. அவ்வற்புதத்தைச் சேவகர்களால் அறிந்த அரசன் திடுக்கிட் டுப் பாதசாரியாய் ஓடிவந்து திருவெண்காடரைத் தரிசித்து அவரையே தனக்கு ஞானாசிரியராகக்கொண்டு தானும் துறவு பூண்டனன் என்பது.

**23.** திருவேடமாகித்தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைபகருமென்றனைப்பதம்பணிந்தேன்
கருவாகுமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை
உருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே.

இ - ள். திருவேடமாகி-திருவேடவுருக்கொண்டு, தெருவில் பயின்று- தெருவில் பலமுறை திரிந்து, என்னை - எனக்கு, தேடிவந்து - நாடிவந்து, பரிவாக - அன்பாக, பிச்சை பகரும் - பிட்சான்னத்தை இடும், என்றனை- என்ற பரமசிவனை, பதம் பணிந்தேன் - பாதங்களை வணங்கினேன், கரு ஆகும்-கருப்பமாகிய, ஏதம் - குற்றமுள்ள, கடல்கரை - கடலின்கரையை, மேவ-அடைய, கருதும் என்னை-நினைக்கின்ற என்னை, உருவாக்கிக்கொள்ள அல்லோ - தன்னுருவமாகச் செய்துகொள்ள வல்லவா, இங்ஙன் - இவ் வாறு, சிவன் உற்றது - பரமசிவன் என்னிடம் வந்தது, எ - று.

திருவேடம் என்றது கற்பில் மிகுந்தோமென்று கர்வித்திருந்த தாருகாவனத்து ரிஷிபத்தினிகளைக் கற்பழிக்கச் சிவபிரான்கொண்ட திகம்பர வேடத்தை. தெரு என்றது அம்முனிவருடைய பன்னசாலை வீதியை. பிச்சை - முனிவர்க்கிடும் உணவு. இங்கு உருவாக்கிக்கொள்ளுதல் என்றது சாருப்பிய முத்தியை.

**24.** விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன்
கிட்டேனவருரைகேட்டுமிரோன்மெய்கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்றொல்லைநான்மறைக்கும்
எட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே.

இ - ள். உலகம் - உலகப் பொருள்களிலுள்ள பற்றை, விட்டேன் - முற்றும் அறவிட்டேன், இருவினை - நல்வினை தீவினைகளை, விரும்பேன் - இனிச்செய்ய விரும்பேன், வீணருடன் - பயனற்ற செயல்செய்வாரோடு, கிட்டேன் - நெருங்கேன், அவர் உரைகேட்டும்-அவர் பேசுஞ்சொற்களைக் காதுகொடுத்துக் கேட்டும், இரோன் - உட்காரேன், மெய்கெடாத நிலை - உண்மை கெடாத நிலைமையை, தொட்டேன் - தொடங்கினேன், சுகதுக்கம் - சுகமும் துக்கமும், அற்றுவிட்டேன் - நீங்கிவிட்டேன் (சமமாகக் கொண்டேன்), தொல்லை நான்மறைக்கும் - பழமையாகிய நான்கு வேதங்களுக்கும், எட்டேன் எனும் - எட்டப்படேன் என்னும், பரம் - பரம்பொருள், என்னிடத்தேவந்து - என்னிடத்தில்வந்து, இங்கு - இந்த நிலைமையில், எய்தியது - சார்ந்தது, எ - று.

நல்வினையும் பிறவிக்குக்காரணமாகையால் இருவினையும் விரும்பேன் என்றார்.

**25.** அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தையைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்செம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
எட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே.

இ - ள். அட்டாங்கயோகமும் - எட்டு உறுப்புகளையுடைய யோகத்தையும், ஆதாரம் ஆறும் - ஆதாரங்கள் ஆறையும், அவத்தை ஐந்தும் - ஐந்து அவஸ்தைகளையும், விட்டு ஏறிப்போன வெளிதனிலே - விட்டு ஏறி அடைந்த வெற்றிடத்திலே, வியப்பு ஒன்று கண்டேன் - அதிசயிக்கத் தகும் பொருள் ஒன்றைக்கண்டேன், செம்மதிப்பால் ஊறல் - செம்மையாகிய சந்திரனது பாலாகிய தேனை, வண்டு ஆகி-வண்டுபோலாகி, உண்டு- உட்கொண்டு, மகிழ்ந்திருக்க - நித்தியானந்தமாயிருக்க, எட்டாத பேரின்பம் - எட்டப்படாத பெரிய இன்பமானது, என்னைவிழுங்கி இருக்கின்றது - என்னைத் தன்னுட்படுத்தி ஒழிந்திலது, எ - று.

அட்டாங்க யோகமாவன:—இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிராத்தியாசாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் இவ்வெட்டுமாம். ஆதாரம் ஆறுவன:—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநுகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன. அவத்தை ஐந்தாவன:—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. அட்டாங்கயோக முதலானவற்றை விட்டேறிப்போன நிலைக்கு யோகக்கழற்றிஎன்றுபெயர். வண்டு வட்டென எதுகை நோக்கிவலித்தல் ஆயிற்று. அட்டாங்கயோக நிலையையும் ஆறுதார நிலையையும் ஐந்தவத்தைகளையும் கடந்த பரவெளியிலே நான் ஒரு ஆச்சரியத்தைக் கண்டேன், அதாவது வண்டு தேனை உண்பதுபோல என்னில் அமிர்தபானம்பண்ணிக்கொண்டு மகிழ்ந்திருந்து கிடைத்தற்கரிய பேரின்பத்தின் வசப்பட்டதேயாம் என்பது கருத்து.

**26.** எரியெனக்கென்னும்புழுவோவெனக்கெனுமிந்தமண்ணும்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னுயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனுலென்னபேறெனக்கே.

இ - ள். எரி எனக்கு என்னும்-தீ எனக்கு உரியது என்று கருதும், புழுவோ எனக்கு என்னும் - புழுவோ எனக்கு உரியதென்று கருதும், இந்த மண்ணும் எனக்கு சரி என்னும் - இந்தப்பூமியும் எனக்கு ஒத்ததெனக் கருதும், பருந்தோ எனக்கு என்னும் - பருந்தோ எனக்குரியதென்று கருதும், தான் புசிக்க - தான் உண்ணுதற்கு, நரி எனக்கு என்னும் - நரி எனக்கு உரியது என்று கருதும், புல்நாய்-இழிந்தநாய், எனக்கு என்னும்-எனக்கு உரியது என்று கருதும், இந்நாறு உடலை - (இப்படிப்பட்ட) நாறுகின்ற உடலை, பிரியமுடன் - இஷ்டத்தோடு, வளர்த்தேன் - காப்பாற்றினேன், இதனுல் எனக்கு என்னபேறு - இப்படிக் காப்பாற்றியதனுல் எனக்கு என்னபயன், எ - று.

உடலின் நிலையாமையைக்கருதி எரிமுதலியன எனக்கென்னுமென்ருர்.

**27.** அண்ணறன்வீதியரசிருப்பாகுமணிபடையோர்
நண்ணொருநாலொன்பதாமவரேவலுநண்ணுமிவ்வூர்
துண்ணென்பசிக்குமடைப்பள்ளியானசுகமுமெல்லாம்
எண்ணிலிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே.

இ - ள். (பரப்பிரமத்துக்கு) அண்ணல் தன் - சதாசிவத்தினது, வீதி - வீதி, அரசிருப்பாகும் - இராசதானியாகும், அணி - அழகிய, படையோர் - சேனுவீரர்களாகிய, நண் - பிரியாதுள்ள, ஒருநாலொன்பதாமவரும் - முப்பத்தறுவரும், ஏவல் - ஏவற்றொழிலை, நண்ணும்-செய்வார்கள், இவ்வூர் - (உடலாகிய) இந்தவூர், துண்ணென்பசிக்கு - யாவரும் அஞ்சு

கின்ற பசிநோய்க்கு, மடைப்பள்ளி - மடைப்பள்ளியாகும், ஆன - இப்படி உண்டாயிருக்கிற, எல்லாச்சுகமும் - எல்லாச்சுகங்களையும், (பெற வேண்டிய) எண்ணிலிகாலம் - அளவற்றதாகிய காலத்தை, அவமே - பயனில்லாமலே, விடுத்தனம் - கழித்தனம், எண்ணரிது - அக்காலத்தைக் கணக்கிட அரியது, எ - று.

உடலில் ஆருதார நிலை பரப்பிரமத்துக்கு அரசிருக்குமிடம், உலாவும் வீதியுமாகும். முப்பத்தாறு தத்துவங்களும் அப்பரபிரமத்துக்கு ஏவல் செய்யும். இந்த உடலாகிய ஊர் ஐம்புலன்களும் தம்பசிநோய் நீங்குவதற்கு மடைப்பள்ளி போல்வது. இப்படி உண்டாயிருக்கிற சுகங்களை எல்லாம் அளவற்றகாலம் ஆராய்ந்தறியாமல் வினைகழித்தோம் என்பது கருத்து. தத்துவங்கள் முப்பத்தாருவன:— பூதம் ஐந்து:—பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், புலன் ஐந்து:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். ஞானேந்திரியம் ஐந்து:-மெய், வாய், கண், மூக்கு, செவி. கருமேந்திரியம் ஐந்து:-வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம். கரணம் நான்கு:—மனம், புத்தி, சித்தம், அகங்காரம். சுத்ததத்துவம் ஐந்து:—சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம். வித்தியாதத்துவம் ஏழு:-காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. பிணியை நீக்கும் மருந்தை பிணிக்குமருந்து என்றாற்போல, பசியைப்போக்கும் மடைப்பள்ளியை பசிக்கு மடைப்பள்ளி என்றார்.

**28.** என்பெற்றதாயருமென்னைப்பிணமென்றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்றமாதரும்போவென்றுசொல்லிப்புலம்பிவிட்டார்
கொன்பெற்றமைந்தரும்பின்வலம்வந்துகுடமுடைத்தார்
உன்பற்றொழியவொருபற்றுமில்லையுடையவனே.

இ - ள். என்பெற்ற தாயரும் - என்னைப்பெற்ற தாய்மார்களும், என்னைப் பிணமென்று - என்னைப்பயனற்ற பிணமென்று கருதி, இகழ்ந்து விட்டார் - அவமதித்து ஒழித்தார்கள், பொன்பெற்றமாதரும் - (நான் முயற்சியோடு இருந்த காலையில்) செல்வப்பொருளைக் கொடுக்கப்பெற்றுக் கொண்ட மாதர்களும், போ என்று சொல்லிப் புலம்பிவிட்டார் - போவென்றுசொல்லி அழுதுதள்ளிவிட்டார், பெற்றகொன்மைந்தரும்-நான்பெற்ற பெருமையாகிய பிள்ளைகளும், பின்வலம்வந்து-பின்புறத்தில் பிரதட்சிணம் செய்து, குடம் உடைத்தார் - (சாச்சடங்காகிய) குடம் உடைத்தார்கள், உன்பற்று ஒழிய - உன்னிடத்தில்வைத்த பற்றே அல்லாமல், உடையவனே - என்னை ஆளாக உடையவனே, ஒருபற்றுமில்லை - வேறொருபற்றும் எனக்கு இல்லை. எ - று.

மரணத்துக்குப்பின் நடப்பனவற்றைக் கருதிச்செய்தது இச்செய்யுள். கடவுள் உடையவனும் நாம் உடைமையுமாதலால் இங்குப் பரமசிவத்தை

உடையவனே என்றார். "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்றபடி "உன்பற்றொழிய வொருபற்றுமில்லை" என்றார்.

29. கறைபற்றபல்லுங்கரித்துணியாடையுங்கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும்பொல்லாதவூணும்புறந்திண்ணையும்
தறையிற்கிடப்புமிரந்துண்ணுமோடுஞ்சகமறியக்
குறைவற்றசெல்வமென்றேகோலமாமறைகூப்பிடுமே.

இ - ள். கறை அற்றபல்லும் - காவிக்கறை நீங்கியபல்லும், கரித்துணி ஆடையும்-அழுக்குப்படிந்த துண்டாகிய ஆடையும், கள்ளம் இன்றி-வஞ்சகம் இல்லாமல், பொறை உற்ற நெஞ்சமும் - சாந்தகுணந்தங்கிய மனமும், பொல்லாத ஊணும் - இழிந்த உணவும், புறம்திண்ணையும்-திண்ணைப்புறமும், தறையில் கிடப்பும்-தறையிற்படுத்தலும், இரந்து உண்ணும் ஓடும்-பிச்சையெடுத்து உண்ணுகின்ற ஓடும், சகம் அறிய-உலகில் உள்ளோர் அறியும்படி, குறைவற்ற செல்வம் என்று - (ஆகிய இவைகளே) மனம் நிரம்பிய செல்வமாகும் என்று, கோலம்மாமறைகூப்பிடும்-அழகியசிறந்த வேதங்கள் கோஷிக்கும். எ - று.

கறையற்றபல் என்றது தாம்பூலம்முதலிய தரித்தல் இன்மையைக் குறித்தற்கு. கறையற்றபல் முதலியன குறைவற்ற செல்வமெனவே கறையுற்ற பல்முதலியன உள்ளபடி நோக்குங்கால் செல்வம் ஆகா, துக்கத்துக்கே ஏதுவாம் என்றபடி.

30. எட்டுத்திசையும்பதினாறுகோணமுமெங்குமொன்றாய்
முட்டித்ததும்பிமுளைத்தோங்குசோதியைமூடரெல்லாம்
கட்டிச்சுருட்டித்தங்கக்கத்தில்வைப்பர்கருத்தில்வையார்
பட்டப்பகலையிரவென்றுகூறிடும்பாதகரே.

இ - ள். எட்டுத்திசையும் - எட்டுத்திக்கிலும், பதினாறுகோணமும் - அவ்வெட்டினுள் அடங்கிய பதினாறுகோணங்களிலும், எங்கும் ஒன்றாய் - எங்கும் ஒருதன்மையாய், ததும்பி - நிரம்புப்படி, முட்டி - (இடம்பெறாமல்) முட்டுற்று, முளைத்து - உதித்து, ஓங்கும் - ஓங்கும் இயல்புள்ள, சோதியை - சுயம்பிரகாசத்தைக் குறித்துச்சொல்லும் ஞானநூல்களை, மூடர் எல்லாம் - பேதையர் யாவரும், கட்டிச்சுருட்டி - சுருட்டிக்கட்டி, தம் கக்கத்தில் வைப்பர் - தங்கள் கைம்மூலத்திலிடுக்கித் திரிவார், கருத்தில்-(ஞானியர்களுக்குப் பட்டப்பகல்போல் விளக்கமாகிய அப்பரம்பொருளை) தங்கள் எண்ணத்தில், வையார் - வைக்கமாட்டார்கள், (இவர்கள்) பட்டப்பகலை யிரவென்று கூறிடும் - பட்டப்பகற்பொழுதை யிரவென்று சொல்லுகின்ற, பாதகரே - பாவிகளேயாவார். எ - று.

கக்ஷம் என்னும் வடமொழி கக்கம் எனத் தற்பவமாய்வந்தது. கூறுவர் பலர்பாற்படர்க்கைவினையாலணையும்பெயர். எட்டுத்திசையும் பதினாறு கோணமும் எங்குமொன்றாய் முட்டித்ததும்பி முளைத்தெழுஞ்சோதி என்றது பரப்பிரமத்தை. அப்பரப்பிரமம் அணுவைச் சதக்கூறிட்டகோணங்களிலும் உள்ளது என்றபடி.

**31.** வாய்நாறுமூழன்மயிர்சிக்குநாறிடுமையிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்
சீநாறும்யோனியழனாறுமிந்தியச்சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே.

இ - ள். வாய் ஊழல் நாறும் - வாய் ஊத்தைநாற்றம் நாறுகிற்தும், மயிர்சிக்கு நாறிடும் - மயிர் சிக்கு நாற்றம்நாறுகிற்கும், மை இடும்-மை இடுகின்ற, கண் - கண், பீநாறும் - பீநாறுகிற்கும், அங்கம்-தேகம், பிணவெடி-பிணத்தினது அருவருக்கும் நாற்றம், நாறும்-நாறுகிற்கும், பெருகுழிவாய் - பெரியகுழியாகிய குய்யம், சீநாறும் - சீநாறுகிற்கும், யோனி - யோனித்துவாரம், அழல்நாறும் - தீநாற்றம் நாறும், இந்தியச்சேறு சிந்தி - இந்திரியமாகிய குழம்பு சிந்துவதினால், பாய் நாறும் - பாய் நாறுகிற்கும், மங்கையர்க்கோ - (இவ்வகை அவயவங்களையுடைய) மங்கையர்களுக்கோ, இங்ஙனே - இவ்வுலகத்திலே, மனம்பற்றியது - என் மனம் பற்றுவைத்தது. எ - று.

மங்கையர்தன்மை இவையாதலின் அவர்கள்மேல் ஆசைநீங்க வேண்டுமென்பது கருத்து.

**32.** உரைக்கைக்குநல்லதிருவெழுத்தைந்துண்டுரைப்படியே
செருக்கித்தரிக்கத்திருநீறுமுண்டுதெருக்குப்பையில்
தரிக்கக்கரித்துணியாடையுமுண்டெந்தச்சாதியிலும்
இரக்கத்துணிந்துகொண்டேன்குறைவேதுமெனக்கில்லையே.

இ - ள். உரைக்கைக்கு - செபம் பண்ணுதற்கு, நல்ல - குற்றமற்ற, திருவெழுத்து ஐந்துண்டு-ஸ்ரீபஞ்சாட்சரம் உண்டு, உரைப்படியே-சாஸ்திரவிதிப்படியே, செருக்கி-இறுமாந்து, தரிக்க - பூசிக்கொள்வதற்கு, திருநீறுமுண்டு - விபூதியும் உண்டு, தெருகுப்பையில் - தெருக்களில்கொட்டிய குப்பைகளில், தரிக்க - உடுக்க, கரித்துணி ஆடையும் உண்டு - கரித்துணியாகிய ஆடையுமுண்டு, எந்த சாதியிலும் - எந்தச்சாதியிலேயும், இரக்க - (உணவை) யாசிக்க, துணிந்து கொண்டேன் - மனம் துணிவு பெற்றேன்-எனக்கு குறைவு ஏதுமில்லை - எனக்கு யாதொரு குறைவுமில்லை. எ-று.

செருக்கித் தரித்தலாவது அத்திருநீறுதன்னை அணிந்தோரைப் புனிதமாக்குமென்று களிப்புக்கொண்டு அணிதல்.

**33.** ஏதப்பட்டாயினிமேற்படும்பாட்டையிதென்றறிந்து
போதப்பட்டாயில்லைநல்லோரிடஞ்சென்றுபுல்லறிவால்
வாதைப்பட்டாய்மடமானார்கலவிமயக்கத்திலே
பேதப்பட்டாய்நெஞ்சமேயுனைப்போலில்லைபித்தருமே.

இ - ள். ஏதப்பட்டாய் - (இதுவரையும்) குற்றம் அடைந்தாய், இனிமேல் - வருங்காலத்தில், படும்பாட்டை - நீ அடையும் சிரமத்தை, இஃது என்று அறிந்து - இத்தன்மையானதென்று நூல்களினால் அறிந்து, நல்லோரிடஞ்சென்று போதம்பட்டாய் இல்லை - ஞானிகளிடஞ்சென்று ஞானம் அடைந்தாய் இல்லை, மடம்மானார்கலவி மயக்கத்தில் - இளமையாகிய மாதரது புணர்ச்சியின் மயக்கத்தில், புல் அறிவால் வாதைப்பட்டாய் - அறிவின்மையால் வேதனை அடைந்தாய், பேதப்பட்டாய் - (இச்செயல்களை நோக்கின்) நானாவகை அடைந்தாய், நெஞ்சமே - மனமே உனைப்போல் இலை பித்தரும் - பித்தர்களினும் உனைப்போன்றவர் ஒருவரும் இல்லை. எ - று.

இனிமேல் என்றமையால் இதுவரையிலும் என்பது வருவித்துரைக்கப்பட்டது. இதுவரையில் ஏதப்பட்டதாவது நாம் ஆண்டானுடைமை என்று துணிந்து துறவாமை. இனிமேற்படும்பாடாவது அவ்வாறு துணிந்து நன்மார்க்கத்தைச் சேராதபோது சனனமரண துக்கங்களை அனுபவித்தல்.

**34.** சுரப்பற்றுவல்வினைசுற்றமுமற்றுத்தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர்கையிணக்கற்றுக்கவலையற்று
வரப்பற்றுநாதனைவாயாரவாழ்த்திமனமடங்கப்
பரப்பற்றிருப்பதன்றோபரமாபரமானந்தமே.

இ - ள். வல்வினை - வலியவினைகள், சுரப்பு அற்று - மேலுமேலும் பெருகுதல் அற்று, சுற்றமும் அற்று - உறவினரும் ஒழிந்து, தொழில்கள் அற்று - பொருள்தேடும் முயற்சிகள் ஒழிந்து, கரப்பு அற்று - (முயற்சிகளால் கிடைத்தபொருள்களை) ஒளித்தல் நீங்கி, மங்கையர்கை - மங்கையர்வசத்தில், இணக்கு அற்று - சிநேகம் ஒழிந்து, கவலை அற்று - சிந்தனை நீங்கி, வரம்பு அற்று - எல்லை இல்லாமல், நாதனை - இறைவனை, வாயார வாழ்த்தி - வாயினால் நிரம்பவாழ்த்தி, மனம் அடங்க - மனமானதுகுவிய, பரப்பற்று - (விடயங்களில்) (அம்மனம்) செல்லுகை அற்று, இருப்பது அன்றோ - (சும்மா) இருப்பதல்லவோ, பரம்-சிரேஷ்டமாகிய, மா-பெரிய, பரமானந்தம் - பரமானந்தம் என்பது. எ - று.

வல்வினை சுரப்பறுதலாவது பிராரத்துவவினையே அன்றி ஆகாம்ய சஞ்சித வினைகளும் ஒழிதல். தொழில்கள் அற்று என்றது யாவும் சிவன்

செயலின்படி யாகுமென்று தேகாதி பிரபஞ்சங்களில் முயற்சியின்றி யிருத்தல். வரப்பற்றுவாயார வாழ்த்துதலாவது இன்னகாலம் இன்னசமயம் என்கிற எல்லையைக்கடந்து எப்பொழுதும் வாய்நிரம்பத்துதித்தல். பசுபதியாதலின் நாதன் என்றார். மனம் அடங்கப் பரப்பற்று என்றதினால் பரப்பு அற்றாலொழிய மனம் அடங்காதென்பது விளங்குகிறது. மேற்கூறிய நிலையில் நிற்பதே முத்தியின்பம்.

**35.** பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெல்லாம்
நாய்போலருந்திநரிபோ லுழன்றுநன்மங்கையரைத்
தாய்போற்கருதித்தமர்போலனைவர்க்குந்தாழ்மைசொல்லிச்
சேய்போலிருப்பர்கண் டீருண்மைஞானந்தெளிந்தவரே.

இ - ள். உண்மை ஞானம்தெளிந்தவர் - மெய்ஞ்ஞானத்தைத்தெளிந்தவர், பேய்போல்திரிந்து - பேய்போலப்பல இடங்களிலும்திரிந்து, பிணம்போல்கிடந்து - உயிரில்லா உடம்புபோலப்படுத்து, இட்டபிச்சை எல்லாம். போட்டபிச்சைப் பொருள்களையெல்லாம், நாய்போல் அருந்தி - நாய்போல உண்டு, நரிபோல் உழன்று - நரியைப்போல வருந்தித்திரிந்து, நல்மங்கையரை - கட்டழகுள்ள மாதர்களை, தாய்போல் கருதி - பெற்றதாய்போலப் பாவனைசெய்து, தமர்போல் - உறவினரைப்போல, அனைவர்க்கும் - எல்லாருக்கும், தாழ்மைசொல்லி - பணிவுமொழிகளைச்சொல்லி, சேய்போல் இருப்பர் - இளம்பிள்ளைகளைப்போல இருப்பர்.

இச்செய்யுள் ஞானியர் தன்மையை உணர்த்தியபடி. பேய்போற்றிரிதலாவது உலகத்தார் பேய்பிடித்தவன் என்று கருதும்படி அலைந்து திரிதல். பிணம்போற்கிடத்தலாவது உலகசுகங்களில் உணர்ச்சியற்றுக்கிடத்தல். நாய்போல் அருந்துதலாவது இன்னார் இனையவர் என்கிற வேறுபாடின்றி எங்கும் நாய்போல உண்ணுதல். நரிபோல் உழலுதலாவது சுகத்தைப்பேணி ஓரிடத்தில் நிலைத்திராமல் நரியைப்போல இங்குமங்கும் அலைந்து திரிதல். சேய்போலுதலாவது பகைவர், அயலவர், நட்பினர் என்கிற வேறுபாடு இன்றி இருத்தல் என்க. துறவிகளையும் தம்வசப்படுத்தும் கட்டழகைக் குறிப்பிக்க நன்மங்கையரென்றார். ஒருவர் கல்விகேள்விகளில் சிறந்தவராயினும் உறவினர்க்கு அடங்கி நடத்தல் பெருவழக்குப்பற்றி தமர்போல் தாழ்மைசொல்லி என்றார்.

**36.** விடக்கேபருந்தின்விருந்தேகமண்டலவீணணிட்ட
முடக்கேபுழுவந்துறையிடமேமலமுற்றுமிலாச்
சடக்கேகருவிதளர்ந்துவிட்டாற்பெற்றதாயுந்தொடாத்
தொடக்கேயுனைச்சுமந்தேனின்னிமேதுசுகமெனக்கே.

இ - ள். விடக்கே - இறைச்சியே, பருந்தின் விருந்தே - பருந்தினுடைய விருந்தானபொருளே, கமண்டல வீணன் - கமண்டலத்தைத் தாங்கிய வீண்தொழில் செய்பவனாகிய பிரமன், இட்ட - செய்துவைத்த, முடக்கே - முடக்கு என்னும் மண்கலயமே, புழுவந்து-புழுக்கள் உதித்து, உறை - வாழ்கின்ற, இடமே - இடமே, நலம் முற்றும் இல்லா - நன்மை அழியும் வரையுமில்லாத, சடக்கே - சட்டையே, கருவி தளர்ந்துவிட்டால் - மனமுதலிய நான்கு கரணங்களும் தமது தொழில் தளர்ந்துவிட்டால், பெற்றதாயும் - பெற்றெடுத்ததாயும், தொடா - தீண்டக்கூசுகின்ற, தொடக்கே-(சப்ததாதுக்களால் கட்டப்பட்ட)சட்டே, உன்னைச்சுமந்தேன்-உன்னை வீணாகச்சுமந்தேன், நின்னின் - உன்னாலே, சுகம் எனக்கு ஏது - எனக்குச் சுகம் எவ்வாறு உளது. எ - று.

இத்தேகம் அழியும் இயல்பினதாகையால் முடக்கு என்றும், உயிருக்குச் சட்டைபோலுதலால் சடக்கு என்றும், சப்ததாதுக்களால் அமைந்ததாகையால் தொடக்கு என்றும் கூறினர். கருவி என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை. கருவி தளர்ந்துவிட்டால் என்றது மரணம் நேர்ந்தால் என்றபடி. தாயும் என்னாமல் பெற்றதாய் என்றது பத்துமாதம் சுமந்துபெற்ற வருத்தத்தைக் குறிப்பித்தற்கு. சப்ததாதுக்களாவன:— தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்பன.

**37.** அழுதாற்பயனென்னநொந்தாற்பயனென்னவாவதில்லை
தொழுதாற்பயனென்னநின்னையொருவர்சுடவுரைத்த
பழுதாற்பயனென்னநன்மையுந்தீமையும்பங்கயத்தோன்
எழுதாப்படிவருமோசலியாதிரென்னேழைநெஞ்சே.

இ - ள். அழுதால் பயன் என்ன - (நேர்ந்த இடுக்கணுக்கு) அழுதால் என்னபயன், நொந்தால் பயன் என்ன - (உன்னை) நொந்துகொண்டால் என்னபயன், ஆவது - ஆகும்பயன், இல்லை - இல்லை, நின்னை தொழுதால் பயன் என்ன - உன்னைப் பிறர்தொழுதால் என்னபயன், ஒருவர் - ஒருவர், சுட உரைத்த - நீ வருந்தும்படி நிந்தித்த, பழுதால்-நிந்தையினால், பயன் என்ன - என்ன பயன், நன்மையும் தீமையும்-நன்மையும் தீமையும், பங்கயத்தோன் - பிரமன், எழுதாப்படி - எழுதாதவகை, வருமோ - சம்பவிக்குமா, சலியாதிரு - நடுங்காமலிரு, என் ஏழைநெஞ்சே-என் அறியாமையாகிய மனமே. எ - று.

மரணமுதலிய இடுக்கண் உண்டாகும்போது அழுதலும் கடவுளை நோதலும் வழக்கமாதலின் அவற்றாற்பயனில்லையென்றார். தம்மை ஒருவர்புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் பயனில்லை என்பார் "தொழுதால்" "சுடவுரைத்த பழுதால்"பயனென்ன என்றார். சுடவுரைத்தபழுதால் என்றமையால் மதி

மூம்படி தொழுதால் என்பதுபெற்றும். பங்கயத்தோன் எழுதல் என்றது ஆத்மாக்கள் செய்த வினைக்குத் தகுந்தபடி செனனகாலத்தில் விதித்த விதியை.

**38.** செல்வரைப்பின்சென்றுபசாரம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தின்
எல்லையிற்புக்குநல்லேகாந்தமாயெனக்காமிடத்தே
அல்லலற்றென்றிருப்பேனாலநீழலரும்பொருளே.

இ - ள். ஆலம் நீழல் - கல்லாலமரத்தின் நிழலில் எழுந்தருளிய, அரும்பொருளே - அருமையாகிய பரம்பொருளே, செல்வரை பின் சென்று - செல்வப்பொருளை உடையாரைப் பின்பற்றிப்போய், உபசாரம்பேசி - இன்சொற்களைப்பேசி, தினந்தினமும் - ஒவ்வொருநாளும், பல்லினைக்காட்டி - பற்களைக்காட்டி, பரிதவியாமல் - சங்கடப்படாமல், பரானந்தத்தின் - சிறந்த ஆனந்தத்தினது, எல்லையில் புக்கு - கரையில் புகுந்து, எனக்கு ஆம் இடத்தே - எனக்குத் தகுந்த இடத்திலே, நல் ஏகாந்தமாய் - மிகவும் தனிமையாய், அல்லல் அற்று - கவலை அற்று, என்று இருப்பேன் - எக்காலத்தில் இருப்பேன். எ - று.

அல்லல் என்றது தன்காரியம் முடிவதற்காகச் செல்வரை அடுத்து உறவாடி அவர் மகிழும்படி உபசாரமொழிகளைப்பேசி, அவர்களுக்கு இனிய முகங்காட்டி வருந்துதல் முதலியன. ஆலநீழல் அரும்பொருளே என்றது கல்லால விருக்ஷத்தின்கீழ் தக்ஷிணாமூர்த்தமாய் எழுந்தருளிய திருவுருவத்தை.

**39.** ஊரீருமக்கோருபதேசங்கேளுமுடம்படங்கப்
போரீர்சமணைக்கழுவேற்றுநீற்றைப்புறந்திண்ணையில்
சாரீரனந்தலைச்சுற்றத்தைநீங்கிச்சகநகைக்க
ஏரீருமக்கவர்தாமேதருவரிணையடியே.

இ - ள். ஊரீர் - ஊராரே, உமக்கு ஓர் உபதேசம் கேளும் - உங்களுக்கு நான்கூறும் ஒரு உபதேசமொழியைக் கேளுங்கோள், உடம்பு அடங்க - உடம்பு முற்றும், சமணை - சமணர்களை, கழுவேற்று நீற்றை - கழுவினிலேற்றுதற்குக் காரணமாகிய திருநீற்றை, போரீர் - பூசுங்கோள், சுற்றத்தை நீங்கி - சுற்றத்தை ஒழிந்து, புறம் திண்ணையில் - திண்ணைப்புறத்தில், அனந்தலை-யோகநித்திரையை, சாரீர்-செய்யுங்கோள், சகம் நகைக்க- பூமியில் உள்ளார் நகைக்க, ஏரீர்-(சிவவேடமாகிய) அழகு உடையீர் ஆகுங்கோள், உமக்கு - உங்களுக்கு, அவர்தாமே - அப்பரமசிவம் தாமாகவே, இணை அடி-தமது இரண்டு திருவடிகளையும், தருவர் - கொடுப்பார். எ-று.

பட்டணத்தார் தாமடைந்த பிரமானந்தத்தை உலகத்தாரும அடைய விரும்பி உலோகோபகாரமாய் அருளிச்செய்தது இச்செய்யுள். அஞ்ஞான

நித்திரையில் உள்ள சகத்தார் 29-35-ஆம் செய்யுள்களிற் கூறியதுபோன்ற சிவவேடங்களைக்கண்டு தம்மைப்போல் இராமையால் நகைப்பார் ஆகையால் "சகம் நகைக்க" என்றார். "அவர்தாமே தருவர் இணையடியே" என்றமையால் இவன் செய்யும் சரியை கிரியை யோகம் ஞானங்களுக்கும் "அவன் அருளாலே அவன்றாள் வணங்கி" என்றபடி தாமே துணைநின்று சிவசாயுச்சியம் அளிப்பர் என்பது. சமணைக்கழுவேற்றிய நீற்றின்செய்தி:— கூன்பாண்டியனுடைய சமுகத்தில் திருஞானசம்பந்தர் சமணரோடு தமது சைவ சமயத்தைக்குறித்து வாதாடியபொழுது வெப்புநோய்கொண்டிருந்த அவ்வரசன் உங்களில் எவர் என்னுடைய நோயைத் தீர்க்கின்றீர்களோ அவரே வாதில் வென்றவராவீர் என்றுசொல்ல, சமணர்கள் உம்முடைய இடப்பாகத்து நோயை நாங்கள் எங்கள் சமயமந்திரத்தினாலே தீர்ப்போம், அவர் வலப்பாகத்து நோயைத்தீர்க்கக்கடவர் என்று அரசனுடைய இடப்பாகத்தைச் சமணர்கள் பீலியினாலேதடவினார்கள், அதனாலே வெப்புநோய் வளரப் பாண்டியன் அந்நோயைப்பொறுக்காதவனாகி திருஞானசம்பந்தரைப்பார்த்தான், அவர் அரசனுடைய நோக்கத்தைக்கண்டு "மந்திரமாவது நீறு" என்னும் திருநீற்றுப்பதிகத்தைப்பாடி அவனுடைய வலப்பாகத்தை விபூதிகொண்டு தடவியருள; அவ்வலப்பாகம் வெப்புநோய் தணிந்து, இடப்பாகத்துநோய் முன்னினும் இருமடங்காய் மிகுந்தது. இதைக்கண்ட சமணர்கள் செருக்கழிந்து ஏதொன்றுஞ்செய்ய வலியில்லாதவர்களாய் தூரத்திலே நின்றார்கள். பின் அரசனுடைய வேண்டுகோளால் திருஞானசம்பந்தர் முன்போலவே விபூதியைக்கொண்டு இடப்பாகத்து வெப்புநோயையும் தீர்த்தருளினர். தோல்வியடைந்த சமணர்களில் சைவசமயத்தைத்தழுவினவர்கள்போக மற்றவர்கள் சங்கேதப்படி அரசனால் கழுவேற்றப்பட்டார்கள் என்பது.

**40.** நீற்றைப்புனைந்தென்னநீராடப்போயென்னநீமனமே
மாற்றிப்பிறக்கவகையறிந்தாயில்லைமாமறைநூல்
ஏற்றிக்கிடக்குமெழுகோடிமந்திரமென்னகண்டாய்
ஆற்றிற்கிடந்துந்துறையறியாமலலைகின்றையே.

இ - ள். நீற்றை - திருநீற்றை, புனைந்து என்ன - உடல்முழுதும் பூசி என்னபயன், நீர் ஆட-புண்ணிய தீர்த்தங்களில் மூழ்க, போய் என்ன- போய் என்னபயன், நீ மனமே - மனமே நீ, மாற்றி - அவ்வுடலைமாற்றி, பிறக்க - ஞானவுடல் எடுப்பதற்கு, வகை அறிந்தாய் இல்லை-நல்லவகையை அறிந்து கொண்டாயில்லை, மாமறை-பெரிய வேதங்களிலும், நூல்-(அவற்றின் சார்பு) நூல்களிலும், ஏற்றிக்கிடக்கும்-அமைத்திருக்கும், எழுகோடி மந்திரம் - எழுகோடி மந்திரங்களைச்செபித்தும், என்ன கண்டாய்-நீ கண்ட பயன்யாது, ஆற்றில் கிடந்தும் - பெரிய ஆற்றிலே தங்கியும், துறை அறியாமல்-ஏறுந்துறையறியாமல், அலைகின்றை - அலைகின்றாய். எ - று.

"ஆற்றிற்கிடந்தும் துறையறியாமல் அலைகின்றையே" என்ற உவமையால் மனம் தூய்மைபெறாமல் விடயங்களில் செல்லாநிற்க நீற்றைப்புனைதல் முதலியவற்றால் பயனில்லையென்பதுபெறப்பட்டது. மாமறை-முதனூல். சூத்திரம்:—"அவற்றுள்-வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" நூல்-வழிநூல், சார்புநூல்என இருவகைப்படும். சூத்திரம்:—(வழிநூல்) "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங்கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" (சார்புநூல்) "இருவர்நூற்கு மொருசிறைதொடங்கித் திரிபுவேறுடையது புடைநூலாகும்" எழுகோடிமந்திரம் என்றது பலமந்திரங்கள் என்றபடி.

**41.** ஓங்காரமாய்நின்றவத்துவிலேயொருவித்துவந்து
பாங்காமுளைத்தபயனறிந்தாற்பதினாலுலகும்
நீங்காமனீங்கிநிறையாநிறைந்துநிறையுருவாய்
ஆங்காரமானவர்க்கெட்டாக்கனிவந்தமர்ந்திடுமே.

இ-ள். ஓங்காரமாய் நின்ற - பிரணவமாய்நின்ற, வத்துவிலே-ஒரு பொருளிலே, ஒருவித்துவந்து - ஒரு முதலெழுத்துவந்து, பாங்காக - செவ்வையாக, முளைத்த - தோன்றிய, பயன் அறிந்தால் - அர்த்தத்தை அறிந்தால், பதினாலு உலகும் - பதினான்கு உலகங்களிலும், நீங்காமல் நீங்கி - நீங்காமலே நீங்கி, நிறையா நிறைந்து - நிறையாமல் நிறைந்து, நிறை உருவாய் - நிறைந்த உருவாய், ஆங்காரமானவர்க்கு - அகங்காரமயமா யிருப்பவர்களுக்கு, எட்டாக்கனி - எட்டப்படாத பரம்பொருளாகிய கனியானது, வந்து (அவரைத்தேடி) வந்து, அமர்ந்திடும்-(அவரிடத்தில்) தங்குகின்றது. எ-று.

பிரணவத்தின் முதலெழுத்தாகிய அகாரமே சிவபிரானென்று உள்ளபடி யறிந்தவர்களுக்குச் சர்வபரிபூரணனாகிய அப்பரமசிவன் தானே வெளிப்பட்டருளுவானென்பது கருத்து. ஊனக்கண்ணுடைய அஞ்ஞானிகளுக்கு தமக்குத்தோன்றும்பொருள்களில் பரமசிவன் தோன்றாமையால் நீங்கியிருப்பவனைப்போலவும், நிறைந்திராதவனைப்போலவும் காணப்பட்டாலும் ஞானக்கண் பெற்றோர்க்கு எப்பொருள்களிலும் நீங்காதவனாயும், நிறைந்தவனாயும் தோன்றுகிறபடியால் பரமசிவத்தை நீங்காமல் நீங்கி நிறையாநிறைந்து என்றார். இவ்வாறு கூறியதற்குப் பரமசிவன் சர்வபரிபூரணனென்பது கருத்து. அகங்காரத்தைக்கூறினமையால் மமகாரமும்அமையும். ஆங்காரம் அகங்காரம் என்பதன் மரூஉ. கனி என்றது பரமசிவனை, இது உருவகம்.

**42.** விதியார்படைப்புமரியாரளிப்பும்வியன்கயிலைப்
பதியார்துடைப்புநம்பாலணுகாதுபரானந்தமே
கதியாகக்கொண்டுமற்றெல்லாந்துயிலிற்கனவெனநீ
மதியாய்திருமனமேயிதுகாணன்மருந்துனக்கே.

இ - ள். விதியார்-பிரமனுருடைய, படைப்பும்-சிருட்டிப்பும், அரியார் - திருமாலுடைய, அளிப்பும் - காப்புத்தொழிலும், வியன் - பெரிய, கயிலைப்பதியார் - கயிலைமலையாகிய நகரமுடையாரது, துடைப்பும் - அழிப்புத்தொழிலும், நம்பால்-நம்மிடத்தில், அணுகாது-நெருங்காமல், பரானந்தமே-பரானந்தமொன்றுமே, கதியாகக்கொண்டு-உற்றதுணையாகத்துணிந்து, மற்றெல்லாம் - அதல்லாத மற்றபொருள்களையெல்லாம், துயிலில் கனவு என - நித்திரையிற்கண்ட கனவைப்போல, மனமே நீ - மனமேநீ, மதியாதிரு - மதியாமலிரு, இது - இவ்வாறுகருதுதல், உனக்கு நல்மருந்து - (பிறவிப்பிணியைப் போக்குதற்கு) உனக்கு நல்ல மருந்தாகும். எ - று.

பரானந்தமொன்றுமே உயிர்க்கு உற்றதுணையென்று துணிந்து அதல்லாத உலகசுகங்கள்யாவும் நித்திரையிற்கண்ட கனப்பொருள்போலப் பொய்யானவையென்று மதித்திருப்பவர் சிருட்டி ஸ்திதி சங்காரங்களில் அகப்படார் (ஜனனமரணங்களிற் சிக்கி வருந்தார்) இவ்வாறிருத்தல் ஜனன மரணநோயை நீக்கும் நல்லமருந்தாம் என்பது கருத்து.

**43.** நாய்க்குண்டுதெண்டுநமக்குண்டுபிச்சைநமனைவெல்ல
வாய்க்குண்டுமந்திரபஞ்சாட்சரமதியாமல்வரும்
பேய்க்குண்டுநீறுதிகைப்புண்டுநின்றபிறவிப்பிணி
நோய்க்குண்டுதேசிகன்றன்னருணோக்கங்கணோக்குதற்கே.

இ - ள். நாய்க்கு - (பெறுக்கித்தின்னும்) நாய்க்கு, உண்டு - உளது, தெண்டு - இலைக்கட்டு, நமக்குண்டு - நமக்குளது, பிச்சை - (ஊரார் இடும்) பிச்சை, நமனைவெல்ல - (உயிர்கவரும்) நமனைவெல்வதற்கு, வாய்க்குண்டு - வாய்க்கு உளது, மந்திரபஞ்சாட்சரம்-மந்திரமாகிய பஞ்சாட்சரம், மதியாமல் வரும் - (யாரையும்) மதியாமல் வருகின்ற, பேய்க்கு - பேயை ஓட்டுதற்கு, நீறு உண்டு - திருநீறு உளது, திகைப்புண்டுநின்ற - பிரமிப்பைப் பெற்று நின்ற, பிறவிப்பிணிநோய்க்கு - பிறவிப்பிணியாகிய நோய்க்கு, தேசிகன் தன் - ஆசிரியனுடைய, அருள்நோக்கங்கள்-கருணையாகிய கடாட்சங்கள், நோக்குதற்கு - நம்மைநோக்குதற்கு, உண்டு - உள்ளன. எ - று.

நாய்க்கு உண்டெறிந்த எச்சிற்கலை எங்கும் பிரயாசமின்றிக்கிடைப்பது போல துறந்தோர்க்கு எவ்விடத்திலும் பிரயாசமின்றி உணவு கிடைக்குமென்பது. நமனைப் பஞ்சாட்சரம்வெல்லும் என்பதை மார்க்கண்டேயர் பாற்காண்க. நமனைப் பஞ்சாட்சரம் வென்றசெய்தி:—மிருகண்டமுனிவர் புத்திரனில்லாமையால் சிவமூர்த்தியை நோக்கித் தவம்செய்ய, அம்மூர்த்தி எதிரேதோன்றி நினக்கு ஒருபுத்திரன் உண்டாவான், அவன் பதினாறுவயது மட்டும் உயிர்பிழைத்திருப்பானென்று வரந்தந்துபோதலும், அப்படியே பிறந்து சிவநேசம் முதிர்ந்து சிவார்ச்சனை செய்துகொண்டிருந்த அம்மார்க்

கண்டேயர்மேல் நமன்பாசம் வீசுதலும் சிவபெருமானுக்குக் கோபம்பிற ந்து நமனை எட்டி யுதைத்தனனென்பது.

44. நேமங்கணிட்டைகள்வேதங்களாகமநீதிநெறி
ஓமங்கடர்ப்பணஞ்சந்திசெபமந்த்ரயோகநிலை
நாமங்கள்சந்தனம்வெண்ணீறுபூசிநலமுடனே
சாமங்கடோறுமிவர்செய்யும்பூசைகள்சர்ப்பனையே.

இ - ள். நேமங்கள்-நியமங்களை அனுஷ்டித்தல்களும், நிட்டைகள் - மனம் அலையாது நிற்பதுபோல் காட்டிச்செய்யும் தியானங்களும், வேதங்கள் - வேதங்களை யோதல்களும், ஆகமம் - ஆகமவிதிகளை யனுட்டித்தல்களும், நீதிநெறி-(இவைசொன்ன) முறையின் வழியில் நடக்கும், ஓமங்கள்-ஓமங்களைச்செய்தலும், தர்ப்பணம் - (பிதிரர்களுக்குச்செய்யும்) தர்ப்பணங்களும், சந்தி-சந்தியாவந்தனங்கள் செய்தல்களும், செபம் மந்திரம்-மந்திரங்களைச்செபித்தல்களும், யோகநிலை - யோகங்களில் உடலசையாமலிருத்தலும், நாமங்கள்-சிவநாமசங்கீர்த்தனங்களைச் செய்தல்களும், சந்தனம்வெண்ணீறு-சந்தனத்தையும் வெள்ளிய திருநீற்றையும், பூசி-உடலில்தரித்து, நலமுடனே-சுகாசனத்தில் இருந்து, சாமங்கள்தோறும் - ஒவ்வொரு சாமத்திலும், இவர் செய்யும் பூசைகள் - (மனம் புறத்தில்செல்ல) இவர்கள் பண்ணும் பூசைகள், சர்ப்பனையே-வஞ்சனைகளே. எ - று.

மனத்தைப் புறத்தில் அலையவிட்டுச்செய்யும் நேமங்கள் முதலியன பயனற்றன வென்பதுகருத்து. நேமம் - அட்டாங்கயோகத்தி லொன்று. இது நியமம் என்பதன் மரூஉ. நிட்டை - மனம் அசைவற்றிருத்தல். ஆகமம் - சிவனுடைய வாக்கியம். ஓமம் - நித்தியாக்கினிவளர்த்தல். தர்ப்பணம் - இன்பம் நிறைவேற மந்திரநீர் இறைத்தல். சந்தி-காலை மாலைகளில் செய்யும் வந்தனம்.

45. நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேட்டிலைநன்னெஞ்சமே
ஏனிப்படிக்கெட்டுழலுகின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டிலிட்டவகையதுபோல்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே.

இ - ள். நல்நெஞ்சமே-நல்லமனமே, நான் எத்தனை புத்திசொன்னாலும் - நான் எத்தனை அறிவுகளைச்சொன்னாலும், கேட்டிலை-கேட்டு உணரவில்லை, ஏன் - காரணம் யாது, இப்படிக்கெட்டு உழலுகின்றாய் - இவ்வகையாக அநர்த்தப்பட்டு விடயங்களில் திரிகிறாய், வானத்தின் மீனுக்கு-ஆகாயத்தில் உள்ள விண்மீன்களுக்கு, வல்தூண்டில் - நீண்ட தூண்டில், இட்ட வகையதுபோல் - எறிந்த (அறிவின்மையின்) வகையைப்போல, இனி ஏதும் இலா-இனி யாதொரு சம்பந்தமும் இல்லாமல், போனத்தை-ஒழிந்த

பொருளை, மீள - மறுபடியும், நினைக்கின்றனை - விரும்புகின்றாய், இது என்னபுத்தி-இது எவ்வகையான அறிவு. எ - று.

சென்றகாலத்தில் சேர்ந்த சுகதுக்கங்களை நினைத்தல் மனத்துக்கு இயற்கையாகையால் துறந்தபின்னும் பழயவாசனையால் விடயங்களில் செல்லுகின்ற தமது மனத்தைப்பார்த்து, அந்நினைப்பால் பயனில்லையென்று கூறினது இச்செய்யுள். பயனில்லையென்பது "வானத்தில் மீனுக்கு வன்றூண்டிவிட்ட வகையதுபோல்" என்னும் உவமையாற்பெற்றாம்,

46. அஞ்சக்கரமெனுங்கோடாலிகொண்டிந்தவைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டைவேரறவெட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச்சதாசிவமென்கின்றவித்தையிட்டுப்
புஞ்சக்களைபறித்தேன்வளர்த்தேன்சிவபோகத்தையே.

இ - ள். அஞ்சக்கரமெனும் - பஞ்சாக்கரமென்று சொல்லப்படும், கோடாலிகொண்டு - குடாரத்தினால், இந்த ஐம்புலனும் - இந்த ஐம்புலன்களும் தோன்றுகிற, வஞ்சம்புலம் கட்டை-வஞ்சகத்தையுடைய ஐம்பொறிகளாகிய கட்டையை, வேர் அறவெட்டி - முதல் அறும்படிவெட்டி, வளங்கள்செய்து - (அந்நிலத்தை) கொழுமையாக்கி, விஞ்சதிருத்தி-அதிகமாகத் திருத்தஞ்செய்து, சதாசிவம் என்கின்ற - சதாசிவம் என்று சொல்லப்படுகின்ற, வித்தை இட்டு-விதையை நட்டு, புஞ்சம் களை - கூட்டமாகிய களைகளை, பறித்தேன் - பறித்தேனாகி, சிவபோகத்தை - சிவபோகமென்னும் பயிரை, வளர்த்தேன்-வளர்த்தேன். எ - று.

ஐம்புலனும் வஞ்சப்புலக்கட்டையை வேரறவெட்டுதலாவது—சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புல ஆசைகளையும் முற்றும் அடக்கி ஆளுதல். புஞ்சக்களையாவது-கடவுளை அடைதற்குப் பிரதிபந்தகமானவை. கோடாலி-குடாரம் என்னும் வடமொழியின் திரிபு.

47. தாயாருஞ்சுற்றமும்பெண்டிருங்கைவிட்டுத்தாழ்ந்திடுநாள்
நீயாருநானாரெனப்பகர்வாரந்தநேரத்திலே
நோயாரும்வந்துகுடிகொள்வரேகொண்டநோயுமொரு
பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே.

இ - ள். உடலே - உடம்பே, தாயாரும் - (உன்னைச்சுமந்துபெற்ற) தாயும், சுற்றமும்-உறவும்,பெண்டிரும்-மனைவியரும், கைவிட்டு-செயலற்று, தாழ்ந்திடுநாள் - முயற்சி இன்றியிருக்கும் மரணதசையில், நீயாரு - நீயார், நான் ஆர்-நான்யார், எனப்பகர்வார்-(மணிமந்திர ஔடதங்கள் பயன்படாமையால்) என்று கருதுவார், அந்தநேரத்திலே - அந்தவேளையிலே, நோயாரும் - வியாதியும், வந்து குடிகொள்வர் - (தடையின்றி) வந்து நிலைக்கும்,

கொண்டநோயும்-நிலைபெற்றநோயும், ஒருபாயாரும்-படுத்தபாயும், நீயும் அல்லால்-நீயுமல்லாமல், பின்னை ஏது - வேறுஎந்தப்பொருள், நட்பாம் - உன்னோடு பிரியாச்சிநேகமாயிருக்கும். எ - று.

மரணகாலத்தில் தாய்முதலிய எவரும் துணையாகார் என்பது கருத்து. ஊர் ஊரு, சொல் சொல்லு என்பனபோல ஆர் என்பது உகரச்சாரியை பெற்று ஆரு என நின்றது.

48. ஆயும்பொழுதுமயிர்க்கால்கடோறுமருங்கிருமி
தோயுமலக்குட்டையாகியகாயத்தைச்சுட்டுவிட்டால்
பேயுநடனமிடுங்கடமாமென்றுபேசுவதை
நீயுமறிந்திலையோபொருடேடநினைந்தனையே.

இ - ள். ஆயும்பொழுது-ஆராயுங்காலத்தில், மயிர்க்கால்கள்தோறும் - ஒவ்வொரு மயிர்க்காலிலும், அருகிருமி-மிகச்சிறிய புழுக்கள், தோயும்-படிந்துள்ள, மலக்குட்டையாகிய-மலம் நிறைந்த குட்டையாகிய, காயத்தை-இத்தேகத்தை, சுட்டுவிட்டால் - சுட்டால், பேயும் - பேய்களும், நடனமிடும் - மேலேறிக்கூத்தாடுகின்ற, கடம் ஆம் என்று - இத்தேகம் குடம் ஆகுமென்று, பேசுவதை-(அறிவுடையோர்) பேசுவதை, நீயும் அறிந்திலையோ - நீயும்கேட்டு அறிந்தாய் இல்லையோ, (ஓ மனமே) பொருள்தேட நினைந்தனையே - பொருளைத்தேட நினைந்தாயே (இது ஆச்சரியம்) எ - று.

மயிர்க்கால்கள்தோறும் கிருமிகள் நிரம்பிய மலம் நிறைந்த குட்டையாகிய இத்தேகத்தைச் சுட்டுவிட்டபின் பேய்கள் நடனஞ்செய்கின்ற குடம் என்று பெரியோர் சொல்லக்கேட்டும் அதை உணராது இழிந்த இவ்வுடலைக்காக்கப் பொருள்தேட முயல்வோரைக்கண்டு அநுதாபத்தாற் கூறியது இச்செய்யுள். அருமை இங்கு சிறுமையை உணர்த்திநின்றது.

49. பூணும்பணிக்கல்லபொன்னுக்குத்தானல்லபூமிதனைக்
காணும்படிக்கல்லமங்கையர்க்கல்லநற்காட்சிக்கல்ல
சேணுங்கடந்தசிவனடிக்கல்லவென்சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்கவடியேன்படுந்துயர்சற்றல்லவே.

இ - ள். பூணும் - பூணப்படும், பணிக்கு அல்ல - ஆபரணங்களைக் குறித்து அல்ல, பொன்னுக்கு தான் அல்ல - பொன்னைக்குறித்தே அல்ல, பூமிதனைக்காணும்படிக்கு அல்ல - நிலத்தைக்கண்டு மகிழும்படி அல்ல, மங்கையர்க்கு அல்ல - மாதர்கள் பொருட்டல்ல, நற்காட்சிக்கு அல்ல - நல்ல சிறப்பைக்கருதியல்ல, சேணும் கடந்த - ஆகாயத்தையும் கடந்த, சிவன் அடிக்கு அல்ல-சிவனுடைய பாதங்களுக்கு அல்ல, என் சிந்தை-என்மனம், கெட்டு-நிலைமை அழிந்து, சாணும்-(வயிறாகிய சாண்) உறுப்பையும், வளர்க்க-பசிபோறச்செய்ய, அடியேன்-அடியேன், படும்துயர்-அடையும் துன்பம், சற்றல்ல-கொஞ்சமல்ல. எ - று.

திருவெண்காடர் என்னும் பட்டணத்தார் கொங்குநாட்டில் மௌன விரதம் பூண்டிருக்கையில், ஒருநாள் இரவில் பசியுற்று ஒருவன் வீட்டுத் தலைவாயிலிற்சென்று கைதட்டிநிற்க, இவர் நிலையை யுணராத அங்கிருந்த ஒரு மூர்க்கன் இவரை வேஷதாரியென்றெண்ணிக் கோலாற்புடைக்க, ஐயரும் இடம்விட்டுப்பெயராது சிவசிவவென்று நின்றனர், இதை அண்டை வீட்டுத் திண்ணையிற்படுத்திருந்த அவ்வீட்டுத்தலைவன் ஓடிவந்து அம்மூர்க்கனைவைது இவரைச் சிவயோகியென்றுணர்ந்து அவருக்குஅமுதுபடைத்து உபசரித்தனன். அப்போது பட்டணத்தார் திருவருளைநாடி "பூணும்பணிக் கல்ல" என்னும் இச்செய்யுளைப் பாடியருளினர். பசிநோய் யாவற்றினும் கொடியது என்பது கருத்து. "மானங்குலங்கல்வி வண்மையறிவுடைமை, தானந்தவமுயற்சி தாளாண்மை-தேனின், கசிவந்தசொல்லியர்மேற் காமுறுதல்பத்தும், பசிவந்திடப்பறந்துபோம்" என்னும் ஔவையார் செய்யுளாலுமுணர்க.

**50**, வெட்டாதசக்கரம்பேசாதமந்திரம்வேறொருவர்க்
கெட்டாதபுட்பமிறையாததீர்த்தமினிமுடிந்து
கட்டாதலிங்கங்கருதாதநெஞ்சங்கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோகுருநாதன்மொழிந்ததுவே.

இ - ள். வெட்டாத சக்கரம் - செப்பேட்டிலே குறிக்காத யந்திர சக்கரமும், பேசாத மந்திரம்-வாயினாலே ஜபிக்காத மந்திரமும், வேறொருவர்க்கு-மற்றவர்களுக்கு, எட்டாத புட்பம்-அகப்படாதமலரும், இறையாத தீர்த்தம்-அபிடேகஞ்செய்யாத தீர்த்தமும், இனிமுடிந்து கட்டாத லிங்கம்-இனிமையாகமுடிந்து தாரணைசெய்யாத லிங்கமும், கருதாத நெஞ்சம் - தியானிக்காத மனமும், கருத்தினுள்ளே முட்டாத - எண்ணத்துக்கு எட்டாத, பூசையன்றோ-பூசையல்லவோ, குருநாதன்-தேசிகர்களில்உத்தமன், மொழிந்தது-(எனக்கு) உபதேசித்த உபதேசம். எ - று.

அட்டாங்கயோகமும் ஆதாரமாறும் அவத்தை ஐந்தும் விட்டேறிப் போன வெளியை அடைந்தவராகையால் இவர்நிலை வெட்டிய சக்கரம் பேசும் மந்திரம் முதலியவற்றை அநுட்டிப்போர் நிலையினும் சிறந்ததென்பது. "கருதாதநெஞ்சம்கருத்தினுள்ளேமுட்டாதபூசை" என்றதனால் எல்லாம் சிவமயம் என்கிற அபேத உணர்ச்சியுடையார் என்பது விளங்குகின்றது.

**51**. எருமுட்டைபிட்கினுதிர்ந்திடுஞ்செல்லுக்கெவராழுவார்
கருமுட்டைபுக்குக்கழலகன்றேய்கனதுக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர்போலழும்பேதையிர்பேத்துகிறீர்
ஒருமுட்டும்விட்டுமரணமமென்றைக்குயோதுமினே.

இ - ள். (மனமே) கரு-(தாயின்) கருப்பமாகிய, முட்டை-முட்டையில், புக்கு-புகுந்து, கழல்-(சிவனுடைய) பாதங்களை, அகன்றாய்-(வீணே) நீங்கினாய், (அவ்வாறுநீங்கிப் பயனிழந்த உன்னைக்குறித்து வருந்தாமல்) கனதுக்கமதாய் - (இத்தேகம் நீங்கியதைக்குறித்து) மிகுந்த துக்கமுடையவர்களாய், பெருமுட்டுப் பட்டவர்போல் - பெரிய இடர்ப்பாடடைந்தவர்களைப்போல, அழும்பேதையிர் - அழும் மூடர்களே, பேத்துகிறீர் - (என்) கலங்குகிறீர், ஒருமுட்டும் - ஒப்பற்ற (சனனமரணமாகிய) குறையையும், வீட்டும் — தடுக்கவல்ல, அரன்நாமம் - பரமசிவனுடைய திருநாமங்களை, என்றைக்கும் ஓதுமின் - எப்பொழுதும் துதியுங்கோள், (அதைவிட்டு) எருமுட்டைபிட்கின் - எருமுட்டையைப் பிட்டால், உதிர்ந்திடும் செல்லுக்கு - அதினின்றும் உதிர்கின்ற செல்லுக்கு, எவர் அழுவார் - எவரும் அழார் (ஆகையால்) வினையின் வசப்பட்டதேகம் விழுதலைக்குறித்து வருந்தாதிருங்கள். எ - று.

மனத்தையும் இறந்தவர்க்காக அழும் உலகத்தாரையும் குறித்துச் சொல்லியது இச்செய்யுள். ஆத்மாக்கள் கடவுளின் பாதங்களை நீங்கியதற்குக்காரணமும், அவ்வாறு நீங்கிய அச்கடவுளின் பாதங்களை மீண்டும் பெறுவதற்கு உபாயமும் கூறியபடி வருவித்துக்கூறியவை இசையெச்சம். கருமுட்டைபுக்குக்கழல் அகன்றுஆய் கனதுக்கமதாய் எனப்பிரித்து, ஆய்ந்தெடுத்த (மிகுந்த) துக்கமதாய் என்றாவது, ஆய்என்பதைக் கருமுட்டைக்கு விசேஷணமாக்கித் தாயின்கருப்பமாகியமுட்டையில் புக்குக்கழல் அகன்று மிகுந்த துக்கமாய் என்றாவது பொருள் உரைக்க. இவ்வாறு பொருள்கொள்ளும்போது உலகத்தாரையே பார்த்துக் கூறியதாகக்கொள்க.

52. மையாடுகண்ணியுமைந்தரும்வாழ்வுமனையுஞ்செந்தீ
ஐயாநின்மாயையுருவெளித்தோற்றமகிலத்துள்ளே
மெய்யாயிருந்தநாட்செலநாட்செலவெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே.

இ - ள். மை ஆடு கண்ணியும்-மை தீட்டும் கண்களையுடையவளாகிய மனையாளும், மைந்தரும் - புத்திரர்களும், வாழ்வும் - செல்வத்தோடுகூடி வாழ்தலும், மனையும் - வாழ்க்கைசெய்கின்ற வீடும், செந்தீ ஐயா - சிவந்த தீயைக் கையிலேந்திய ஐயனே, நின்மாயை உருவெளித்தோற்றம் - உன் மாயையின் உருவெளித்தோற்றமாகும், அகிலத்துள்ளே மெய்யாய் இருந்தது-இப்பூமியில் நிலையுள்ளதுபோல் தோற்றிய அவ்வுருவெளித்தோற்றம், நாட்செல நாட்செல-நாள்கழியக்கழிய, வெட்டவெறும்பொய்யாய் - முழுமையும் பொய்யாய், பழங்கதையாய் - கேள்விப்பட்ட பழங்கதைபோலாகி, கனவாய் - கனாக்கண்டதுபோலாகி, மெல்லப்போனது - மெல்லெனக் கழிந்தது. எ - று.

மை யாடு கண்ணியு மைந்தரும் வாழ்வும் மனையும் என்றது ஈஷணத்திரயத்தை. "பொன்னை மாதரைப் பூமியைநாடிடேன்" எனப்பிறர் கூறலாலுமறிக. இவை அழியும் இயல்பின ஆகையால் நின்மாயை உருவெளித்தோற்றம் என்றார். நாட் செல்லச்செல்ல என்றது அவை அழியும் இயல்பினவாகுதல் தன்சுகானுபவத்துக்கு வந்தநசையை. சிவபிரான் கையில் தீ ஏந்தியசெய்தி:—சிவபிரான் தாருகாவனத்தில் முனிவர் மடைந்தையரைப் பிக்ஷாடன கோலமாய்க் கற்பழிக்க, அதுபொழுது அம்முனிவர்கள் சிவபிரானைக்கொல்ல யாகஞ்செய்து அந்தயாகத்திற்பிறந்த தீயை அப்பெருமான்மேல்விடுக்க, அத்தியை அவர் கையிற்பிடித்தனர் என்பது.

53. ஆயாய்பலகலையாய்ந்திடுந்தூயவருந்தவர்பால்
போயாகிலுமுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்
வேயார்ந்ததோளியர்காமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின்றனைமனமேயென்னபித்துனக்கே.

இ - ள். மனமே-மனமே, ஆயாய் பலகலை - பலகலைகளையும் ஆயுந்திறமில்லாய், ஆய்ந்திடும்-ஆராயும் இயல்புள்ள, தூய-பரிசுத்தமாகிய, அருந்தவர்பால் - அருமையாகிய தவமுடையவர்களிடத்தில், போயாகிலும்-போயினும், உண்மையைத் தெரிந்தாய் இல்லை-உண்மையைத் தெரிந்துகொண்டாய் இல்லை, பூதலத்தில் - பூமியில், வேய் ஆர்ந்த - மூங்கிலின் அழகு நிறைந்த, தோளியர் - தோள்களையுடைய மாதர்களது, காமவிகாரத்தில்-காமவிகாரமாகிய கடலில், வீழ்ந்து அழுந்தி-விழுந்துஅழுந்தி, பேயாய் விழிக்கின்றனை-பேய்போல (யாதுசெய்வோமெனத்) திகைக்கின்றாய்,என் பித்து உனக்கு-உனக்கு இது என்ன பித்தநோய். எ - று.

கற்றலும் கேட்டலும் வேண்டுமென்பார், ஆயாய் என்றும் ஆய்ந்திடும் தூய அருந்தவர்பாற் போயாகிலும் உண்மையைத்தெரிந்தாயில்லை என்றும் கூறினார். போயாகிலும் என்றவும்மை அவர் வராமையைச் சுட்டுகின்றது. உண்மை என்றது மேற்செய்யுளிற்கூறிய பெண்ணும், புதல்வரும், வீடும் மாயையின் உருவெளித்தோற்றம் என்னும் உண்மையை.

54. அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப்
படிமீதில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த
குடியானசுற்றமுந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்கள்
தடியாலடியுண்டவாறிருக்குமென்றினஞ்சார்ந்திலரே.

இ - ள். அடியார் உறவும் - சிவனடியார் நேசமும், அரன் பூசை நேசமும் - சிவபூசையில் விருப்பமும், அன்பும் அன்றி - பக்தியும் அல்லாமல், படிமீதில் - பூமியிலே, வேறுபயன் உளதோ - பயன் தருஞ்செயல் வேறுண்டோ, பங்கயன் வகுத்த - பிரமன் சிருஷ்டித்த, குடியான சுற்றமும் - ஒருகுடும்பத்திற்பிறந்த உறவும், தாரமும் - மனைவியும், வாழ்வும் -

வாழ்க்கையும், குயக்கலங்கள் - குயவனாற்செய்யப்பட்ட பாத்திரங்கள், தடியால் அடி உண்டஆறு-தடியினால் அடிபட்ட விதத்தை, ஒக்குமென்று- ஒத்திருக்குமென்று கருதி, இனம் சார்ந்திலரோ - (நிலையில்லாமையைக் கண்டு) இன்னமும் துறவைச் சார்ந்தார் இல்லையே. எ - று.

இத்தேகம் எடுத்ததற்குப் பயன் முத்திபெறவேண்டியதே ஆகையால் அதற்குக் காரணமாகிய அடியார் உறவும் அரன்பூசை நேசமும் அன்பும் பயனென்றார், இனஞ்சார்ந்திலர் என்பதற்கு அடியார் கூட்டத்தைக் கூடு தல் இல்லார் என்னலுமாம்.

55. ஆங்காரப்பொக்கசங்கோபக்களஞ்சியமாணவந்தான்
நீங்காவரண்மனைபொய்வைத்தகூடம்விண்ணீடிவளர்
தேங்கார்பெருமதிற்காமவிலாசமித்தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந்தெப்படிஞானம்பலிப்பதுவே

இ - ள். ஆங்காரப் பொக்கசம் - அகங்காரத்துக்குப் பொக்கசம் போல்வாய், கோபக்களஞ்சியம் - கோபத்துக்குக் களஞ்சியம் போல்வாய், ஆணவம் நீங்கா அரண்மனை - தன்னினும் உயர்ந்தான் இல்லை என்று கருதும் கருத்து நீங்குதல் இல்லாத அரண்மனைபோல்வாய், பொய்வைத்த கூடம் - பொய்யைவைத்த கூடம்போல்வாய், விண் - ஆகாயத்தில், நீடி - மேலோங்கி, வளர் - வளர்கின்ற, தேங்கு ஆர் - நிறைதல் உள்ள, பெரு மதில் - பெரியமதிலையுடைய, காமவிலாசம் - காமம்களித்து உலாவுகின்ற (சோலையின்) இடம்போல்வாய், இத்தேகம் - இத்தன்மையையுடைய தேக மே, கந்தல் - (நவத்துவாரங்களை யுடைமையால்) கந்தைத் துணியைப் போல்வாய், (ஆகையால்) பாங்காய் - நீபக்குவமாயிருக்க, உனை - உன்னை, பணிந்து - (உணவுமுதலியவற்றால்) உபசரித்தால், எப்படி - எவ்விதம், ஞானம் - ஞானநிலை, பலிப்பது - கைகூடுவது. எ - று.

அகங்காரம், கோபம், ஆணவம், பொய், காமம் ஆகிய இக்குணங்கள் நிரம்பியுள்ள தேகத்தை உடையார்க்கு ஞானம் கைகூடாதாகையால் மேற் கூறிய குணங்களை ஒழிக்கவேண்டுமென்பது கருத்து. தேகத்தை ஆங் காரப் பொக்கசம் முதலியவாக உருவகப்படுத்தினமையால் இச்செய்யுள் உருவகவணி. அரண்மனை - காவல் உள்ளவீடு.

56. ஒழியாப்பிறவியெடுத்தேங்கியேங்கியுழன்றநெஞ்சே
அழியாப்பதவிக்கவுடதங்கேட்டியனாதியனை
மழுமான்கரத்தனைமால்விடையானைமனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்திவிம்மியழூஉன்மைவேண்டுமென்றே.

இ - ள். ஒழியா-ஒழிதலில்லாத, பிறவி எடுத்து எடுத்து - சனனம் பல்முறை எடுத்து, ஏங்கி ஏங்கி-அழுதழுது, உழன்ற-திரிந்தலைந்த, நெஞ்சே- மனமே, அழியா - அழிவில்லாத, பதவிக்கு - வீட்டுலகிற்கு, ஔடதம் -

மருந்தைச் சொல்வேன், கேட்டி - நீகேள், அநாதியனை - தனக்கொரு மூலமில்லாதவனை, மழுமான் கரத்தனை - மழுவையும் மானையும் ஏந்திய கைகள் உடையானை, மால்விடையானை - பெருமையாகிய ரிஷபத்தை யுடையானை, நன்மைவேண்டுமென்று - அழியாப்பதவி வேண்டுமென்று, மனத்தில் உன்னி - மனத்தினால் தியானித்து, விழியால் புனல்சிந்தி - கண்களினால் ஆனந்தக் கண்ணீர்சிந்தி, விம்மிஅழு - தேம்பியழு (இதுவே மருந்தாகும்.) எ - று.

ஒழியாப்பிறவி என்றமையால் பலபிறவிகள் என்பது பெற்றாம். அநாதியனை மனத்தினால் உன்னிவிழியாற் புனல்சிந்தி விம்மியழுதல் பிறவி நோய்க்கு மருந்துபோலுதலால் ஔடதம் என்றார். அநாதியன் - தனக்கு முதல் இல்லாதவன். சிவம் என்பதற்கு நன்மையென்று பொருளாதலால் அச்சிவபதத்தை நன்மை யென்றுகூறினார். சிவபெருமான் கையிலேந்திய மழுவும் மானும் தாருகாவனத்து ரிஷிகளால் விடுத்தவை என்றுணர்க.

57. நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம்பிடிபடுமோபெருங்காஞ்சிரங்காய்
ஆக்குவராரருந்துவராரதுபோலுடம்பு
தீக்கிரையாவதல்லாலேதுக்காமிதைச்செப்புமினே.

இ - ள். நாய்க்கு ஒருசூலும் - நாய்க்கு ஒருகருப்பமும், அதற்கு - அக்கருப்பத்திற்கு, ஓர் மருத்துவம்-ஓர் வைத்தியமும், நாட்டில்உண்டோ- தேசத்தில் செய்பவர் உண்டோ, பேய்க்கு - பேய்க்கு, ஒருஞானம் - ஒப்பற்ற ஞானம், பிடிபடுமோ - பற்றப்படுமோ, பெருங்காஞ்சிரங்காய் - பெரிய எட்டிக்காயை, ஆக்குவர் ஆர் - விளைவிப்பவர் யாவர், அது அருந்துவர் ஆர் - அக்காயை உண்பவர் யாவர், அதுபோல் - அதுபயன்படாதழிதல் போல, உடம்பு - தேகம், தீக்கு இரையாவது அல்லால் - தீக்கு இரையாய் விடுவது அல்லாமல், ஏதுக்கு ஆம் - எதற்குப் பயன்படும், இதைச்செப்புமின் -(உலகத்தாரே) இதைச்சொல்லுங்கோள். எ - று.

இச்செய்யுளும் 59-ஆம் செய்யுளும் கழுமரத்தடியில் வந்தபத்திரகிரியார் தன்னை வணங்கி நின்றபோது கூறியன. நாய்க்குச்சூலைக்கவனித்து மருத்துவம் செய்வார் இல்லாமைபோல் பேய்போல உழலும் சமுசாரிகளுக்கு ஞானம் பிடிபடுதல் இல்லையென்பது. காஞ்சிரங்காய் வளர்ப்பாரும் உண்பாரும் இல்லாமல் அழிவதுபோல இத்தேகம் தீக்கிரையாகிப்பயன்படாது என்பது.

58. கச்சிற்கிடக்குங்கனதனத்திற்கடைக்கண்கள்பட்டே
இச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேயிமவான்பயந்த
பச்சைப்பசுங்கொடியுண்ணாமுலைபங்கர்பாதத்திலே
தைச்சுக்கிடமனமேயொருகாலுந்தவறில்லையே.

இ - ள். கச்சில் - (இறுக்கிக்கட்டிய) கச்சுக்குள், கிடக்கும் - தங்கியிருக்கும், கனதனத்தில் - பருத்த ஸ்தனங்களிலே, கடைக்கண்கள் பட்டே - உன் கடைக்கண்பார்வை பட்டதினலே, இச்சித்திருக்கின்ற ஏழை நெஞ்சே - (அவர்களை) சிந்தித்துக்கிடக்கின்ற அறியாமையையுடைய மனமே, இமவான்பயந்த - மலையரசன்பெற்ற, பச்சைப்பசுங்கொடி - மிகவும் பசுமையாகிய பூங்கொடியை ஒத்தவளாகிய, உண்ணுமுலைபங்கர் - உண்ணுமுலைத் தேவியை வாமபாகத்தில் உடையாரது, பாதத்திலே - பாதங்களிலே, தைச்சுக்கிட - ஊன்றிக்கிட, மனமே - மனமே, ஒருகாலும்-ஒருகாலத்திலும், தவறுஇல்லை - (சிவகதி) தவறுதல் இல்லை.

மாதர் வலைப்பட்டு வருந்துகின்ற மனமே பரமசிவனுடைய பாதத்தில் அன்புபூண்டால் சிவகதிகிடையாமற்போகாது என்பதுகருத்து. இமவான் பார்வதியைப் பெற்றசெய்தி:—தாக்ஷாயணி என்னும் உமாதேவியார் தன் பிதாவாகிய தக்கன் யாகஞ்செய்யும் பொழுது சிவபெருமானையும் தன்புத்திரியையும் அவமதித்த காரணத்தால் உமாதேவியார் அவன்மகளென்று சொல்லப்படுகின்ற அவ்வுடலை யொழித்து மலையரசன் மகளாய்த்தோன்றினளென்பது.

59. மானுர்விழியைக்கடந்தேறிவந்தனன்வாழ்குருவும்
கோனுகியென்னைக்குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனுலும்பேறிருந்தாலுநற்பேறிதுபொய்யன்றுகாண்
ஆனுலுமிந்தவுடம்போடிருப்பதருவருப்பே.

இ - ள். மானுர் விழியை-மாதர்களது கண்ணுகிய வலையை, கடந்து ஏறிவந்தனன் - தாண்டி ஏறிவந்து விட்டேன், வாழ்குருவும் - நித்தியானந்தத்தில் வாழ்கின்ற குருவும், கோனுகி-நாயகனுகி, என்னைக் குடியேற்றிக்கொண்டனன்-என்னை (முத்தியுலகில்) குடியாக ஏற்றிக்கொண்டான், குற்றமில்லை-(இனி எனச்கு) குற்றமென்பதில்லை, போனுலும் பேறு - இவ்வுடலம் அழிந்தாலும் முத்தியாகிய பேறுளது, இருந்தாலும் நல்பேறு - அழியாதிருப்பினும் நல்ல முத்தியாகிய பேறுளது, இதுபொய் அன்று - இச்சொல் சத்தியமாம், ஆனுலும் - இவ்வாறு பயன்படுவதாயினும், இந்த உடம்போடு இருப்பது-இந்த உடம்போடு வாழ்ந்திருப்பது, அருவருப்பே-அருவருக்கத்தக்கதே. எ - று.

இத்தேகம் இறந்தாலும் இருந்தாலும் குருகடாட்சத்தினல் முத்திசித்திக்கு மென்பது நிச்சயமாயினும் தேகத்தோடிருப்பது அருவருப்பென்பது கருத்து.

60. சற்றுகினுந்தன்னைத்தானறியாய்தனையாய்ந்தவரை
உற்றுகிலுமுனாக்கப்பொருந்தாயுனக்கானதிலை
பற்றுய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றென்
பெற்றுய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைபித்தனுமே.

இ - ள். சற்றுகிலும் - சிறிதாயினும், தன்னைத்தான் அறியாய்-உன்னிலைமையை நீ அறியாய், தனை ஆய்ந்தவரை - தன் உயிரின் நிலையை ஆராய்ந்தறிந்தவரை, உற்றுகிலும் - அடைந்தாகிலும், உரைக்க - அவர்கள் பேசுகையில், பொருந்தாய் - தங்கிக்கேளாய், உனக்கு ஆன நிலைபற்றுய் - உனக்குத் தகுந்த நிலையைக்கைக்கொண்டு அநுட்டியாய், குருவை-அந்நிலையை உபதேசித்த குருவை, பணியாய்-பணிந்து அடங்கியிராய், பரத்தையர் பாலில் - வேசிகளிடத்தில், சென்று - போய், என்பெற்றுய் - என்னபேறு பெற்றுய், மடநெஞ்சமே - அறியாமையையுடைய மனமே, பித்தனும் - ஒருபித்தனும், உனைப்போல் இலை - உன்னைப்போல் இல்லை. எ - று,

தனைத்தான் அறிதலாவது நாம் அடிமை அவன் ஆண்டான் என்னும் உண்மையையுணர்தல். தனை ஆய்ந்தவர் என்றது ஞானியரை. ஆனநிலை புருடார்த்தத்தைப்பெறும் நிலையை.

61. உளியிட்டகல்லையுமொப்பிட்டசாந்தையுமூத்தையறப்
புளியிட்டசெம்பையும்போற்றுகிலேனுயர்பொன்னெனவே
ஒளியிட்டதாளிரண்டுள்ளேயிருத்துவதுண்மையென்று [னே.
வெளியிட்டடைத்துவைத்தேனினிமேலொன்றும் வேண்டில

இ - ள். உளி இட்ட கல்லையும் - உளியினுல் கொத்துவேலைசெய்த கல்லுருவத்தையும், ஒப்பு இட்ட சாந்தையும் - அவயவங்கள் ஒத்திருக்கச் செய்த சுண்ணச்சாந்து உருவத்தையும், ஊத்தை அற - (களிம்பு முதலிய) அழுக்குப்போக, புளி இட்ட செம்பையும் - புளியிட்டுத்துலக்கிய செப்புருவத்தையும், போற்றுகிலேன்-துதித்து வணங்கேன், உயர்பொன் எனவே-உயர்வாகிய பொன் என்று, ஒளி இட்ட - பிரகாசத்தை வீசிய, தாள் இரண்டு-இரண்டு தாள்களையும், உள்ளே இருத்துவது-மனத்தில் வைத்துச் சிந்திப்பது, உண்மை என்று - உண்மை நெறி என்று, வெளி இட்டு - பிறருக்குச்சொல்லி, அடைத்துவைத்தேன்-மூடிவைத்தேன், இனிமேல் ஒன்றும் வேண்டிலன்-இனிமேல் ஒருபொருளையும பெறவேண்டேன். எ - று.

"பொன் எனவே - பொன்னுகவே, ஒளியிட்ட - இயற்கையாய்ப் பிரகாசிக்கின்ற, தாள் இரண்டு - பிங்கலை இடகலை என்கிற இரண்டு சரங்களையும், உள்ளே இருத்துவது - புறத்தில் செல்லவிடாது உள்ளே அடக்கும் நெறி, உண்மை என்று - உண்மை நெறியென்று, வெளியிட்டு - பிறருக்கு வெளியிட்டுச்சொல்லி, அடைத்துவைத்தேன்-பத்திரப்படுத்திவைத்தேன்" என்று யோகநூலோர் கூறுவர். இவர் மானதபூசை கைவந்தவர் ஆகையால் உளியிட்டகல் முதலியவற்றைப் போற்றுகிலேன் என்றுர்.

திருச்சிற்றம்பலம்.

## தாயாருக்குத்

## தகனகிரியை செய்கையிற்பாடிய

### வெண்பா.

1. ஐயிரண்டுதிங்களாவங்கமெலாநொந்துபெற்றுப்
பையலென்றபோதேபரிந்தெடுத்துச் - செய்யவிரு
கைப்புறத்திலேந்திக்கனகமுலைதந்தாளை
எப்பிறப்பிற்காண்பேனினி.

இ - ள், ஐயிரண்டு திங்களா - பத்துமாசமாகச்சுமந்து, அங்கம் எல்லாம் நொந்து - உடம்பு முழுதும் நொந்து, பெற்று - ஈன்று, பையல் என்றபோதே - புத்ரன் என்று அருகிருப்பவர் சொல்லக்கேட்டபொழுதே, பரிந்து எடுத்து - அன்புகொண்டெடுத்து, செய்ய - செவ்விய, இருகைப் புறத்தில் ஏந்தி - இருகைகளின் மேலேந்திக்கொண்டு, கனகமுலை தந்தாளை - பொன்மலைபோன்ற முலையுண்பித்தவளை, இனி எப்பிறப்பில் காண்பேன் - இனியெந்தச்சநநத்திற் காணப்போகிறேன். எ - று.

2. முந்தித்தவங்கிடந்துமுந்நூறுநாளளவும்
அந்திபகலாய்ச்சிவனையாதரித்துத் - தொந்தி
சரியச்சுமந்துபெற்றதாயார்தமக்கோ
எரியத்தழன்மூட்டுவேனா.

இ - ள். முந்தித்தவம் கிடந்து-முற்காலத்தில் தவஞ்செய்து கிடந்து, (அந்தத்தவப்பேற்றால் கருப்பம் வாய்த்தபிறகு) முந்நூறு நாள் அளவும் - முந்நூறு நாள்வரையும், அந்திபகலாய்ச்சிவனை ஆதரித்து - அல்லும் பகலுமாகச் சிவபெருமானை வழிபட்டு, தொந்திசரியச்சுமந்துபெற்ற-வயிறு சரியச்சுமந் தீன்ற, தாயார்தமக்கோ - தாயார்க்கோ, தழல் எரிய மூட்டுவேன் - நெருப்பெரிய மூள்விப்பேன். எ - று,

முந்நூறுநாள் என்றது - பத்துமாசத்தை.

3 வட்டிலிலுந்தொட்டிலிலுமார்மேலுந்தோண்மேலும்
கட்டிலிலும்வைத்தென்னைக்காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக்காப்பாற்றிச்சீராட்டுந்தாய்க்கோ
விறகிலிட்டுத்தீமூட்டுவேன்.

இ - ள். வட்டிலிலும்-புட்டிலிலும், தொட்டிலிலும் - தொட்டிலின் மீதும், மார்மேலும் - மார்பின்மீதும், தோள்மேலும் - தோள்களின்மீதும்,

கட்டிலிலும் - கட்டிலின்மீதும், என்னைவைத்து - என்னையிருத்தி, காதலித்து - விரும்பி, முட்ட - முழுதும், சிறகில் இட்டுக்காப்பாற்றி - கக்கத்தில்வைத்துக்காப்பாற்றி, சீராட்டும் தாய்க்கோ - சிறப்புச்செய்யுந் தாயாரையோ, விறகில் இட்டுத் தீமூட்டுவேன்-விறகின்மீதிட்டு நெருப்பை மூள்விப்பேன். எ - று.

மாநுடர்க்குச் சிறகின்மையால், சிறகு என்பது இவ்விடத்துக் கக்கத்தைக்குறித்தது.

4. நொந்துசுமந்துபெற்றுநோவாமலேந்திமுலை
தந்துவளர்த்தெடுத்துத்தாழாமே - அந்திபகல்
கையிலேகொண்டென்னைக்காப்பாற்றுதாய்தனக்கோ
மெய்யிலேதீமூட்டுவேன்.

இ - ள். நொந்து சுமந்துபெற்று-நோவாநின்றே சுமந்தீன்று, நோவாமல் ஏந்தி - எனக்கு நோவுண்டாகாதவண்ணம் தாங்கி, முலைதந்து - முலையூட்டி, வளர்த்து எடுத்து - வளர்த்து விருத்தியடைவித்து, தாழாமே-தனியே தங்கியிராமல், அந்திபகல் - இரவும்பகலும், கையிலேகொண்டு - கையிலேந்தி, என்னைக்காப்பாற்றும் தாய் தனக்கோ - என்னைக்காப்பாற்றின தாயாருக்கோ, மெய்யிலே தீ மூட்டுவேன் - உடம்பின்கண் தீயை மூள்விப்பேன், எ - று.

5. அரிசியோநானிடுவேனுத்தாடனக்கு
வரிசையிட்டுப்பார்த்துமகிழாமல் - உருசியுள்ள
தேனேயமிர்தமேசெல்வத்திரவியப்பு
மானேயெனவழைத்தவாய்க்கு.

இ - ள். ஆத்தாள் தனக்கு - தாயாருக்கு, வரிசையிட்டுப்பார்த்துமகிழாமல் - வரிசைவைத்துப்பார்த்துக் கண்களிக்காமல், உருசி உள்ள தேனே - சுவைபொருந்திய தேனே, அமிர்தமே - அமுதமே, செல்வத்திரவியப்புமானே - அகண்டைசுவரிய புருஷனே, என அழைத்தவாய்க்கு - என்று அழைத்த வாயின்கண், நான் அரிசியோ இடுவேன் - நான் அரிசியையோ போடுவேன். எ - று.

புமான் - ஆண்மகன். அரிசி என்றது - வாய்க்கரிசியை.

6. அள்ளியிடுவதரிசியோதாய்தலைமேல்
கொள்ளித்தனைவைப்பேனோகூசாமல் - மெள்ள
முகமேன்முகம்வைத்துமுத்தாடியென்றன்
மகனேயெனவழைத்தவாய்க்கு.

இ - ள். மெள்ள - பைய, முகம்மேல் முகம்வைத்து - என்முகத்தின்மேல் தன்முகத்தைவைத்து, முத்தாடி - முத்தமிட்டு, என்றன் மகனே என அழைத்தவாய்க்கு - என்மகனே யென்றழைத்தவாய்க்கு, அரிசியோ அள்ளியிடுவது-அரிசியையோ அள்ளிப்போடுவது, தாய் தலைமேல்-தாயின் சிரசின்மீது, கூசாமல் - கைகூசாமல், கொள்ளிதனை வைப்பேனோ-கொள்ளியை யிடுவேனோ. எ - று.

## விருத்தம்.

7. முன்னையிட்டதீமுப்புரத்திலே
பின்னையிட்டதீதென்னிலங்கையில்
அன்னையிட்டதீயடிவயிற்றிலே
யானுமிட்டதீமூள்கமூள்கவே.

இ - ள். முன்னை இட்ட தீ முப்புரத்திலே - முதலில் (சிவபெருமானால்) இடப்பட்ட நெருப்பு முப்புரத்தின்கண் (மூண்டெரிந்தது), பின்னை யிட்ட தீ தென்னிலங்கையில் - அதின் பிறகு (அநுமானால்) இடப்பட்ட நெருப்பு தென்னிலங்கைநகரில் (மூண்டெரிந்தது), அன்னை இட்ட தீ அடிவயிற்றிலே - (இப்பொழுது) என்தாயாரால் இடப்பட்டநெருப்பு என்னடிவயிற்றில் (மூண்டெரியாநின்றது), (அங்ஙனமாக) யானும் இட்ட தீ மூள்க மூள்க - நானும் தாயாருடம்பில் இட்ட நெருப்பு மூண்டெரிக மூண்டெரிக. எ - று.

## வெண்பா.

8. வேகுதேதீயதனில்வெந்துபொடிசாம்பல்
ஆகுதேபாவியேனையகோ - மாகக்
குருவிபறவாமற்கோதாட்டியென்னைக்
கருதிவளர்த்தெடுத்தகை.

இ - ள். மாகக்குருவி பறவாமல் - ஆகாயசஞ்சாரிகளாகிய குருவிகள் (எனக்கு நேராகப்) பறவாவண்ணம், என்னைக்கோதாட்டி - என்னைப் பாராட்டி, கருதி - (நமக்கு இம்மை மறுமைகட் குதவுவனே என்று) நினைத்து, வளர்த்தெடுத்தகை - வளர்த்தெடுத்த கையானது, தீயதனில் வேகுதே - நெருப்பில் வேகாநின்றதே, வெந்துபொடிசாம்பல் ஆகுதே - வெந்து நுண்ணிய சாம்பலாகாநின்றதே, பாவியேன் ஐயகோ-இதைப்பார்த்தற்கிருந்த தீவினையேன் ஐயகோ, எ - று.

மாகக்குருவி பறவாமல் என்றது-பக்ஷிதோஷமுண்டாமென்று கருதியென்க. ஐய கோ - முறையீட்டுக்குறிப்பு.

9. வெந்தாளோசோணகிரிவித்தகாநின்பதத்தில்
வந்தாளோவென்னைமறந்தாளோ - சந்ததமும்
உன்னையேநோக்கியுகந்துவரங்கிடந்தென்
றன்னையேயீன்றெடுத்ததாய்.

இ - ள். சோணகிரி வித்தகா - சோணாசலத்தில் வாழ்கின்ற ஞான வடிவனே, சந்ததமும்-சதாகாலமும், உன்னையேநோக்கி - உன்னையேநாடி, உகந்துவரங்கிடந்து - மகிழ்ச்சியோடு வரம்பெறவேண்டிக்கிடந்து, என்றன்னை ஈன்றெடுத்ததாய் - என்னைப்பெற்றெடுத்த தாயானவள், வெந்தாளோ - வெந்து போயினளோ, நின்பதத்தில் வந்தாளோ - உன்திருவடியில்வந்து சேர்ந்தாளோ, என்னை மறந்தாளோ - என்னை மறந்துவிட்டாளோ. எ - று.

10 வீற்றிருந்தாளன்னைவீதிதனிலிருந்தாள்
நேற்றிருந்தாளின்றுவெந்துநீறானாள் - பாற்றெளிக்க
எல்லீரும்வாருங்களேதென்றிரங்காமல்
எல்லாஞ்சிவமயமேயாம்.

இ - ள். அன்னை வீற்றிருந்தாள்-தாயானவள் வீற்றிருந்தாள், (எவ்விடத்தெனின்) வீதிதனில் இருந்தாள் - வீதியிலிருந்தாள், (எப்பொழுதெனின்) நேற்று இருந்தாள் - நேற்றிருந்தாள், (ஆயின் இன்று நிகழ்ந்ததென்னையோவெனின்) இன்று வெந்து நீறு ஆனாள் - இன்று வெந்து நீறுபட்டாள், (ஆயின் எம்மால்ஆகவேண்டியகாரிய மென்னெனின்) ஏது என்று இரங்காமல்-இதென்ன ஆச்சரியமென்றிரங்காமல், பால் தெளிக்க - பால்தெளிக்கும்பொருட்டு, எல்லீரும்வாருங்கள்-நீவிரெல்லீரும்வாருங்கள், எல்லாம் சிவமயமேஆம் - எல்லாம் சிவமயமேயாகுமாதலால், எ - று.

---

## இடைமருது.

1. மென்றுவிழுங்கிவிடாய்கழிக்கநீர்தேடல்
என்றுவிடியுமெனக்கென்கோவே - நன்றி
கருதார்புரமூன்றுங்கட்டழலாற்செற்ற
மருதாவுன்சன்னிதிக்கேவந்து.

இ - ள். நன்றிகருதார் புரமூன்றும் - நன்மையை நினையாதவர்களது முப்புரங்களையும், கட்டழலால்செற்ற - பெருநெருப்பால் நீறாக்கின, மருதா - மருதுாருடையானே, உன்சந்நிதிக்கேவந்து - உன்சந்நிதியின் கண்ணேவந்து, மென்றுவிழுங்கி - உணவைமென்று விழுங்கி, விடாய்கழிக்க -

விடாயைத் தணித்துக்கொள்ளும் பொருட்டு, நீர்தேடல் - நீரைத்தேடுந் தொழில், எனக்குஎன்றுவிடியும் - எனக்குஎன்று முடிவுபெறும். எ - று.

நான்அந்நபாநங்களை வெறுத்து உன்சந்நிதியிலிருக்கப் பெறுவது எக்காலமோ என்பதுகருத்து.

ஒற்றி.

2. கண்டங்கரியதாங்கண்மூன்றுடையதாம்
அண்டத்தைப்போலவழகியதாந் - தொண்டர்
உடலுருகத்தித்திக்குமோங்குபுகழொற்றிக்
கடலருகேநிற்குங்கரும்பு.

இ - ள். ஓங்கு - உயர்ந்த, புகழ் - புகழையுடைய, ஒற்றிக்கடல் அருகேநிற்கும்கரும்பு - ஒற்றியூரைச்சார்ந்த கடலினருகேநிற்குங் கரும்பானது; கண்டம்கரியது ஆம் - கண்டங்கரிதாகும், கண்மூன்றுஉடையது ஆம் - கண்கள் மூன்றையுடையதாகும், அண்டத்தைப்போல் அழகியது ஆம் - ஆகாயத்தைப்போல அழகையுடையதாகும், தொண்டர் உடல்உருகத்தித்திக்கும் - அடியார்களுடைய உடல்குழைந்துருகும்படி இனிக்கும். எ - று.

கண்டம் - துண்டு. கண் - கணு.

3. ஒடுவிழுந்துசீப்பாயுமொன்பதுவாய்ப்புண்ணுக்
கிடுமருந்தையானறிந்துகொண்டேன் - கடுவருந்தும்
தேவாதிதேவன்றிருவொற்றியூர்த்தெருவில்
போவாரடியிற்பொடி.

இ - ள். ஒடுவிழுந்து - கட்டிகள் உண்டாகி, சீபாயும் - சீப்பாயா நின்ற, ஒன்பது வாய்ப்புண்ணுக்கு - ஒன்பது துவாரங்களுள்ள உடம்புக்கு, இடும் - இட்டு அதனைப்பரிகரிக்கத்தக்க, மருந்தை - ஔஷதத்தை, யான் அறிந்துகொண்டேன் - நான் தெரிந்துகொண்டேன், (என்னெனின்) கடு அருந்தும் - நஞ்சையுண்ட, தேவாதிதேவன் - தேவாதிதேவனது, திருவொற்றியூர்த்தெருவில் - திருவொற்றியூர்த்தெருவின்கண், போவார் - நடப்பவர்களுடைய, அடியில் பொடி - பாதத்தின் துகளேயாம், எ - று.

பிறவிப் பிணியறுக்கைக்குத் திருவொற்றியூர்த்தெருவில் நடப்பவர்களுடைய திருவடிப்பொடியே மருந்தாகும் என்பது கருத்து.

4. வாவியெல்லாந்தீர்த்தமணலெல்லாம்வெண்ணீறு
காவனங்களெல்லாங்கணநாதர் - பூவுலகில்
ஈதுசிவலோகமென்றென்றேமெய்த்தவத்தோர்
ஓதுந்திருவொற்றியூர்.

இ - ள். ஈது - இது, பூவுலகில்-பூலோகத்தில் உள்ள, சிவலோகம் - சிவலோகமாகும், என்று என்று - என்று பலதரஞ்சொல்லி, மெய்த்தவத்தோர் - உண்மையாகிய தவத்தையுடையோர், ஓதும் - புகழ்கின்ற, திருவொற்றியூர் - திருவொற்றியூர்க் கண்ணேயுள்ள, வாவியெல்லாம் - தடாகங்கள்யாவும், தீர்த்தம் - புண்யதீர்த்தங்களாம், மணல் எல்லாம் - மணல் முழுதும், வெண்ணீறு - திருவெண்ணீறாகும், காவனங்கள் எல்லாம் - சோலைகளும் வனங்களுமாகிய அனைத்தும், கணநாதர் - கணநாதர்களாகும், எ - று.

திருவாரூர்.

5. ஆரூரரிங்கிருக்கவவ்வூர்த்திருநாளென்
றூரூர்கடோறுமுழலுவீர் - நேரே
உளக்குறிப்பைநாடாதவூமர்காணீவிர்
விளக்கிருக்கத்தீத்தேடுவீர்.

இ - ள். ஆரூரர் - திருவாரூருடையார், இங்கு இருக்க - இவ்விடத்திலிருக்க, அவ்வூர் - அந்த ஊரில், திருநாள் என்று - திருவிழாவென்று, ஊர் ஊர்கள்தோறும் - எல்லா ஊர்களிலும்சென்று, உழலுவீர் - அலைபவர்களே, நேரே - நேராக, உளக்குறிப்பைநாடாத - மனக்கருத்தை அறியாத, ஊமர்காள் - மூங்கைகளே, நீவிர் - நீங்கள், விளக்கு இருக்க - தீபம் இருக்கச்செய்தே, தீத்தேடுவீர் - நெருப்பைத்தேடுவீர்கள், எ - று.

6. எருவாய்க்கிருவிரன்மேலேறுபுழுக்கூட்டுக்
கருவாய்க்கேகண்கலக்கப்பட்டாய் - திருவாரூர்த்
தேரோடும்வீதியிலேசெத்துக்கிடந்தாயே
நீரோடுந்தாரைக்கேநீ.

இ - ள். எருவாய்க்கு - மலத்துவாரத்துக்கு, இருவிரல்மேல்-இரண்டங்குலத்திற்குமேலே, ஏறு - ஏறிய, புழுக்கூடு - புழுக்கூடாகிய, கருவாய்க்கு - பிறப்பிடத்திற்கு, கண்கலக்கப்பட்டாய் - கண்கலங்கினை, திருவாரூர் - திருவாரூரின்கண், தேர் ஓடும்வீதியிலே - தேரோடும் தெருவில், நீ - நீ, நீர் ஓடும் தாரைக்கே - நீர் ஓடும் வழியின்பொருட்டு, செத்துக்கிடந்தாயே - மாண்டுகிடந்தாயே, எ - று.

கருவாய் - பெண்குறி.

### திருக்காஞ்சி.

7. எத்தனையூரெத்தனைவீடெத்தனைதாய்பெற்றவர்கள்
எத்தனைபேரிட்டழைக்கவேனென்றேன் - நித்தம்
எனக்குக்களையாற்றுயேகம்பாகம்பா
உனக்குத்திருவிளையாட்டோ.

இ - ள். எத்தனை ஊர் - எத்தனை ஊர்கள், எத்தனை வீடு - எத்தனை வீடுகள், எத்தனை தாய் - எத்தனை தாய்மார்கள், பெற்றவர்கள் - ஈன்றோர்கள், எத்தனைபேர் இட்டு அழைக்க-எத்தனைபேர் வைத்தழைக்க, ஏன் என்றேன் - ஏன் என்று விடைகொடுத்தேன், நித்தம்-நாள்தோறும், எனக்கு-அடியேனுக்கு, களை ஆற்றுய் - விடாய்தணியாய், ஏகம்பா - திருவேகம்பமுடையானே, கம்பா - கம்பாநதியையுடையானே, உனக்கு-தேவரீருக்கு, திருவிளையாட்டோ - இது ஒரு திருவிளையாட்டா யிருக்கிறதோ, எ - று.

### கச்சிக்காரோணம்.

8. அத்திமுதலெறும்பீறுனவுயிரத்தனைக்கும்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகா - மெத்தப்
பசிக்குதையாபாவியேன்பாழ்வயிற்றைப்பற்றி
இசிக்குதையாகாரோணரே.

இ - ள். அத்திமுதல் - யானைமுதல், எறும்பு ஈறு ஆன - எறும்பு கடையாகிய, உயிர் அத்தனைக்கும் - ஜீவர்கள் அத்தனைக்கும், சித்தம் மகிழ்ந்து அளிக்கும் - மனமகிழ்ந்து (அவைகள் வேண்டியவற்றைக்) கொடுக்கின்ற, தேசிகா - ஆசாரியனே, மெத்தப்பசிக்குது - மிகவும் பசிக்கின்றது, ஐயா - ஐயனே, பாவியேன் - பாவியாகிய என்னுடைய, பாழ்வயிற்றை - பாழாகிய உதரத்தை, பற்றி இசிக்குது - பற்றி இழுக்கின்றது, ஐயா - கட்வுளே, காரோணரே - காரோணத்திலிருப்பவரே. எ - று.

### திருக்காளத்தி.

9. பொய்யையொழியாய்புலாலைவிடாய்காளத்தி
ஐயனையெண்ணுயறஞ்செய்யாய் - வெய்ய
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு.

இ - ள். பொய்யை ஒழியாய் - பொய்யை ஒழித்துவிடு, புலாலை விடாய் - புலாலை ஒழித்துவிடு, காளத்திஐயனை எண்ணுய் - திருக்காளத்தி ஈசனை நினை, அறம்செய்யாய் - தருமத்தைச்செய், வெய்யசினமே ஒழியாய்-

வெவ்வியகோபத்தை நீக்கிவிடு, திருவெழுத்து ஐந்து ஓதாய் - ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓது, மனமே - மனதே, உனக்கு என்னமாண்பு - உனக்கு என்ன செருக்கு, எ - று.

பொய்யையொழியாய் முதலியவற்றை எதிர்மறையாக்கி, உனக்கென்னமாண்பு என்பதற்கு, இவ்வாறிருந்தால் உனக்கென்ன பெருமையுண்டாம் என்றுரைப்பினுமாம்.

### திருவிருப்பையூர்.

10. மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே - நாதா
இருப்பையூர்வாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையூர்வாராமற்கா.

இ - ள். மாதா - தாயானவள், உடல்சலித்தாள் - உடம்புதளர்ந்தாள், வல்வினையேன் - வலியவினையையுடைய நான், கால்சலித்தேன் - கால் ஓய்ந்துவிட்டேன், வேதாவும் - பிரமனும், கைசலித்துவிட்டான் - கைதளர்ந்துவிட்டான், நாதா - தலைவனே, இருப்பையூர் வாழ்சிவனே-திருவிருப்பையூரில் வாழ்கின்ற சிவபெருமானே, இன்னம் - இனிமேலும், ஓர் அன்னை - ஒருதாயினது, கருப்பைஊர்- கருப்பை ஆகிய ஊரில், வாராமல்-வந்துபொருந்தாமல், கா - என்னைக்காத்தருள் எ - று.

நானெடுத்தபிறவிகளுக்கு ஓரளவில்லை யென்றற்கு "மாதாவுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன் வேதாவுங் கைசலித்துவிட்டான்" என்றார்.

### திருவையாறு.

11. மண்ணுந்தணலாறவானும்புகையாற
எண்ணரியதாயுமிளைப்பாறப் - பண்ணுமயன்
கையாறவுமடியேன்காலாறவுங்கண்பார்
ஐயாதிருவையாறு.

இ - ள். மண்ணும் தணல் ஆற - பூமிநெருப்புத்தணியவும், வான் புகை ஆற - ஆகாயம் புகைதணியவும், எண் அரியதாயும் இளைப்பு ஆற - எண்ணுதற்கரிய தாய்மார் இளைப்பாறவும், பண்ணும் அயன்கை ஆறவும் - படைக்கின்ற பிரமனது கைகள் இளைப்பாறவும், அடியேன்கால் ஆறவும் - அடியேனுடைய கால்கள் இளைப்பாறவும், கண்பார் - கிருபைக்கண்பார்த்தருளாய், ஐயா - ஐயனே, திருவையாறு - திருவையாற்றை உடையவனே, எ - று.

என் பிறவியற்றொழியக் கிருபைக்கண்பாராய் என்பது கருத்து.

## குற்றாலம்.

12. காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே - மேல்விழுந்தே
உற்றாரழுமுன்னேயூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையேகூறு.

இ - ள். காலன்வருமுன்னே - எமன் வருவதற்குமுன்னே, கண் பஞ்சு அடைமுன்னே - கண் பஞ்சடைவதற்கு முன்னே, பால் உண்கடை வாய்படுமுன்னே - பாலுண்டகடைவாய்ப் பல்விழுமுன்னே, உற்றார்மேல் விழுந்து அழுமுன்னே - உறவினர்மேல்வீழ்ந்து அழுவதற்குமுன்னே, ஊரார்சுடுமுன்னே - ஊரிலுள்ளார் (மயானத்திற்கொண்டுபோய்) சுடுவ தற்குமுன்னே, குற்றாலத்தானையே - திருக்குற்றாலத்துச் சிவபெருமானை யே, கூறு - துதி, எ - று.

---

## பொது.

1. சிற்றம்பலமுஞ்சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடிவிட்டோமே - நித்தம்
பிறந்திடத்தைத்தேடுதேபேதைமடநெஞ்சம்
கறந்திடத்தைநாடுதேகண்.

இ - ள். சிற்றம்பலமும் - திருச்சிற்றம்பலமும், சிவனும் - சிவபெரு மானும், அருகு இருக்க - அருகேயிருக்க, வெற்றம்பலம்தேடிவிட்டோமே- வெறுமையாகிய அம்பலத்தைத் தேடிக்கொண்டோமே, (என்னெனின்) பேதைமடநெஞ்சம்-அறியாமையையும் மடமையையும்உடையமனமானது, நித்தம் - நாள்தோறும், பிறந்த இடத்தைதேடுதே-பிறந்த இடத்தை தேடா நின்றதே, கண்-கண்ணானது, கறந்த இடத்தை நாடுதே - கறந்த இடத்தை நாடாநின்றதே. எ - று.

பிறந்திடம் - பெண்குறி, கறந்திடம் - தனம்.

2. தோடவிழும்பூங்கோதைத்தோகையுனையிப்போது
தேடினவர்போய்விட்டார்தேறியிரு-நாடிநீ
என்னைநினைத்தாலிடுப்பிலுதைப்பேனுன்
உன்னைநினைத்தாலுதை.

இ - ள். தோடு அவிழும் - இதழ்விரியாநின்ற, பூங்கோதை-பூமாலையையணிந்த, தோகை - பெண்ணே, உன்னை - நின்னை, இப்போது தேடினவர் போய்விட்டார் - இப்பொழுது தேடினவர்போய்விட்டனர்,தேறி இரு-மனந்தெளிந்திரு, நீ என்னை நாடிநினைத்தால் - நீ யென்னை விரும்பி நினைத்தனையாயின், நான் இடுப்பில் உதைப்பேன் - நான் உன்னையிடுப்பின்மேலுதைப்பேன், உன்னை நினைத்தால் உதை - உன்னைநான் நினைத்தேனாயின் நீயென்னை உதை. எ - று.

3. வாசற்படிகடந்துவாராதபிச்சைக்கிங்
காசைப்படுவதில்லையண்ணலே - யாசைதனைப்
பட்டிறந்தகாலமெலாம்போதும்பரமேட்டி
சுட்டிறந்தஞானத்தைச்சொல்.

இ - ள். வாசற்படி கடந்து வாராத பிச்சைக்கு - வாசற்படியைக் கடந்துவந்து இடாத பிக்ஷைக்கு, இங்கு ஆசைப்படுவதில்லை - இவ்விடத்து ஆசைப்படுவதில்லை, அண்ணலே-பெரியோனே, ஆசைதனைப்பட்டு இறந்த காலம் எல்லாம் போதும் - ஆசைப்பட்டு மாண்டகாலமெல்லாம் போதும், பரமேட்டி-சிவபெருமானே, சுட்டு இறந்தஞானத்தைசொல் - சுட்டுதலற்ற ஞானத்தை அடியேனுக்கு அருள்செய். எ - று.

இறந்த - கழிந்த எனினும் பொருந்தும்.

4. நச்சரவம்பூண்டானைநன்றாய்த்தொழுவதுவும்
இச்சையிலேதானங்கிருப்பதுவும் - பிச்சைதனை
வாங்குவதுமுண்பதுவும்வந்துதிருவாயிலிலே
தூங்குவதுந்தானேசுகம்-

இ - ள். நச்சு அரவம் பூண்டானை-நஞ்சையுடைய பாம்பையணிந்த பரமசிவனை, நன்றாய்த் தொழுவதுவும்-நன்றாகவணங்குவதும்,இச்சையிலே தான் அங்கு இருப்பதுவும்-யதேச்சையாய் இருத்தலும், பிச்சைதனைவாங்குவதும் - பிச்சையேற்பது,ம் உண்பதுவும்-புசித்தலும், வந்து - வந்து, திருவாயிலிலே தூங்குவதும்தானே - ஆலயவாயிலில் படுத்து உறங்குதலுமே, சுகம் - இன்பமாவது. எ - று.

5. இருக்குமிடந்தேடியென்பசிக்கேயன்னம்
உருக்கமுடன்கொண்டுவந்தாலுண்பேன் - பெருக்க
அழைத்தாலும்போகேனரனேயென்றேகழ்
இளைத்தாலும்போகேனினி.

இ - ள். இருக்கும்இடம்தேடி-நானிருக்குமிடத்தைத்தேடிக்கொண்டு, என்பசிக்கு - என்பசியைத் தணித்தற்கு, அன்னம் - அன்னத்தை, உருக்கமுடன்கொண்டுவந்தால் - பரிவோடு கொண்டுவந்தால், உண்பேன் - புசிப்பேன், (அப்படிச் செய்யாமல்) பெருக்க அழைத்தாலும் போகேன் - மிகவும் அழைத்தாலும் போகமாட்டேன், அரனே - சிவபெருமானே, என்தேகம் இளைத்தாலும்-என்சரீரம் மெலிந்தாலும், இனிபோகேன்-இனிப்போகமாட்டேன். எ - று.

6. விட்டுவிடப்போகுதுயிர்விட்டவுடனேயுடலைச்
சுட்டுவிடப்போகின்றார்சுற்றத்தார் - பட்டதுபட்
டெந்நேரமுஞ்சிவனையேத்துங்கள்போற்றுங்கள்
சொன்னேனதுவேசுகம்.

இ - ள். (உலகத்தாரே) உயிர்விட்டுவிடப்போகுது-உயிர்உடலைவிட்டுவிடப்போகின்றது, விட்டவுடனே - விட்டவுடன், உடலை - சரீரத்தை, சுற்றத்தார் - உறவினர், சுட்டுவிடப்போகின்றார் - சுட்டுவிடப்போகிறார், (ஆதலால்) பட்டதுபட்டு-என்ன பாடுபட்டாயினும், எந்நேரம் - எப்பொழுதும், சிவனை - சிவபெருமானை, ஏத்துங்கள் - துதியுங்கள், போற்றுங்கள் - வணங்குங்கள், சொன்னேன் - சொல்லிவிட்டேன், அதுவேசுகம் - அதுவேசுகமாவது. எ - று.

7. ஆவியொடுகாயமழிந்தாலுமேதினியில்
பாவியென்றுநாமம்படையாதே - மேவியசீர்
வித்தாரமுங்கடம்பும்வேண்டாமடநெஞ்சே
செத்தாரைப்போலேதிரி.

இ - ள். மடநெஞ்சே - அறியாமையோடு கூடியமனமே, ஆவியொடு காயம் அழிந்தாலும் - உயிரோடுகூடிய சரீரம் அழிந்துபோனாலும், மேதினியில் - உலகத்தில், பாவியென்று நாமம்படையாதே-பாவியென்று பேர் படைக்காதே, மேவிய சீர்வித்தாரமும் - பொருந்திய சிறப்பையுடைய விஸ்தாரமும், கடம்பும்-பொய்யுலகரோடு உறவாந்தன்மையும், வேண்டாம்-உனக்கு வேண்டாம், செத்தாரைப்போலேதிரி - மாண்டவர் போலத்திரிவாயாக. எ - று.

8. வெட்டவெளியானவெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்பணமுங்காணாதே - இட்டமுடன்
பற்றென்றாற்பற்றாதுபாவியேனெஞ்சிலவன்
இற்றெனவேவைத்தவினிப்பு.

இ - ள். பாவியேன் நெஞ்சில் - பாவியேனது மனத்தில், அவன் - அந்தக்கடவுள், இற்று எனவைத்த இனிப்பு - இத்தன்மைத்தென்னும்படியமைத்த இனிமையானது, வெட்டவெளியான வெளிக்கும் தெரியாது - வெறுவெளியான வெளிக்கும் தெரியாது, கட்டளையும் கைப்பணமும் காணுது - கட்டளையும் கைப்பணமும் காணமாட்டாது, இட்டமுடன் பற்று என்றால் பற்ருது - பிரியத்தோடு பற்றென்றால் பற்றமாட்டாது. எ - று.

பின்முடுகுவெண்பா.

9. இப்பிறப்பைநம்பியிருப்பரோநெஞ்சகமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்கச் - சொப்பனம்போல்
விக்கிப்பற்கிட்டக்கண்மெத்தப்பஞ்சிட்டப்பைக்
கக்கிச்செத்துக்கொட்டக்கண்டு.

இ - ள். நெஞ்சகமே - மனமே, வைப்பு இருக்க - ஊர் இருக்க, வாயில்மனை இருக்க - வாயிலும்மனையுமிருக்க, சொப்பனம்போல் - ஸ்வப்நம்போன்று நிலையிலதாகி, விக்கி-விக்கலெடுத்து, பல்கிட்ட - பற்கள் கிட்ட, கண்மெத்தப்பஞ்சிட்டு - கண்கள் மிகவும்பஞ்சடைந்து, அம்பு ஐ கக்கி - நீரையும் கோழையையும் கக்கி, செத்து - இறந்து, கொட்டக்கண்டு – சாப்பறை யடிக்கப்படு தலைக் கண்டிருந்தும், இப்பிறப்பைநம்பியிருப்பரோ-இந்த ஜந்மத்தை நம்பியிருப்பரோ அறிவுடையோர். எ - று.

10. மேலுமிருக்கவிரும்பினையேவெள்விடையோன்
சீலமறிந்திலையேசிந்தையே - கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக்குத்திமொத்தப்பட்டவுட
கட்டையிட்டுச்சுட்டுவிடக்கண்டு. [ல்

இ - ள். கால்கைக்கு - கால்கைகளுக்கு, கொட்டையிட்டு - சிறுதிண்டுகள்வைத்து, மெத்தையிட்டு - மெத்தைகள் வைத்து, குத்தி - குத்தி, மொத்தப்பட்டவுடல்-பருத்தவுடம்பை, கட்டை யிட்டுச்சுட்டுவிடக்கண்டு - விறகிவிட்டுச் சுட்டு விடப்பார்த்தும், சிந்தையே-மனமே, மேலும் இருக்க விரும்பினையே - இனிமேலும் இருக்கவிரும்பினேயே, வெள்விடையோன் சீலம் அறிந்திலையே - வெள்ளிய இடபவாகநத்தையுடைய பரமசினது கல்யாணகுணங்களை யுணர்ந்திலையே. எ - று.

11. ஒன்பதுவாய்த்தோற்பைக்கொருநாளைப்போலவே
அன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே - வன்கழுக்கள்
தத்தித்தத்திச்சட்டைதட்டிக்கட்டிப்பிட்டுக்
கத்திக்குத்தித்தின்னக்கண்டு.

இ - ள். வல்கழுக்கள் - வலியகழுக்கள், தத்திதத்தி-குதித்துக் குதித்து, செட்டைதட்டிக்கட்டி, இறகைத்தட்டி மூடி, பிட்டு-சிறுகூறுகளாக்கி, கத்தி-இரைச்சலிட்டு, குத்தி - மூக்கினுல்குத்தி, தின்னக்கண்டு - தின்னப்பார்த்தும், நெஞ்சே - மனமே, ஒன்பதுவாய் - ஒன்பதுவாயில்களையுடைய, தோல்பைக்கு - தோற்பையின் பொருட்டு, ஒரு நாளைப்போலவே-ஒரு நாள்போலவே, அன்புவைத்து அலைந்தாயே - அன்புவைத்துத் திரிந்தாயே. எ - று.

தோற்பை-உடல்.

**12.** இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரென்றிருந்துவாழ்ந்தவரை - முன்னம்
எரிந்தகட்டைமீதிலிணைக்கோவணத்தை
உரிந்துருட்டிப்போட்டதுகண்டு.

இ - ள். மன்னர் இவர் என்று இருந்து வாழ்ந்தவரை - அரசர் இவர் என்று சொல்லப்பட்டிருந்து வாழ்ந்தவரை, முன்னம் எரிந்த கட்டைமீதில்-முன்னே (வேறொருசவம்) எரிந்தசிதையின்மேல், இணைக்கோவணத்தை உரிந்து - தமது ஆண்மைக்குத் துணையாயிருந்த கோவணத்தையும் உரிந்துகொண்டு, உருட்டிப்போட்டது கண்டு-உருட்டிப் போட்டதைப் பார்த்தும், நெஞ்சமே - மனமே, இன்னம் பிறக்க இசைவையோ - இனிமேலும் பிறத்தற்கிணங்குவையோ. எ - று.

சிதை - சவமெரிக்க அடுக்கிய எருமுட்டைத்திண்ணை.

**13.** முதற்சங்கமுதூட்டுமொய்குழலாராசை
நடுச்சங்கநல்விலங்குபூட்டும் - கடைச்சங்கம்
ஆம்போததுவூதுமம்மட்டோவிம்மட்டோ
நாம்பூமிவாழ்ந்தநலம்.

இ - ள். முதற்சங்கு - முதலிலுண்டாகிற சங்கானது, அமுது ஊட்டும் - அமிர்தத்தையுண்பிக்கும், மொய்குழலார் ஆசை நடுச்சங்கம்-மாதரது ஆசைகாரணமாக வுண்டாகிற நடுச்சங்கானது,நல்விலங்கு பூட்டும்-நல்லவிலங்கு பூணச்செய்யும்,கடைச்சங்கம்-கடைகாலத்திலுண்டாகிற சங்கானது, ஆம் போதது ஊதும் - இறக்குங்காலத்துக்குரியதாகி ஊதப்படும், நாம் பூமிவாழ்ந்தநலம்-நாம் உலகத்தில்வாழ்ந்த சுகம்,அம்மட்டோ இம்மட்டோ-அந்தமட்டோ இந்தமட்டோ. எ - று.

சங்குமுதலில் பாலூண்பித்தது, இடையில் மாதராசையாகிய தளையைப் பூட்டியது, கடையில் மயானத்துக்குச் செல்லுங்குறியாக ஊதப்பட்டது என்பது கருத்து. நடுச்சங்கம் - மாதரைமணக்குங்காலத்தில் ஊதப்படுகிற மங்கலசங்கம், நல்விலங்கு - உறுதியாகிய விலங்கு.

**14.** எத்தனைநாள்கூடியெடுத்தசரீரமிவை
அத்தனையுமண்டின்பதல்லவோ - வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக்கங்குல்பகலற்றிடத்தே
மேலைக்குடியிருப்போமே.

(இ - ள்.) இவை - இவைகள், எத்தனைநாள் கூடியெடுத்தசரீரம் - எத்தனைநாள் சேர்ந்தெடுத்தவுடம்புகள், அத்தனையும் - அவ்வளவும், மண் தின்பது அல்லவோ - மண்ணுண்பதல்லவோ, வித்தகனார் - கடவுளது, காலை - திருவடியை, மெள்ளப்பிடித்து - மெல்லப்பற்றி, கங்குல் பகல் அற்றிடத்தே - இராப்பகலற்ற இடத்திலே, மேலைக்குடியிரும்போம் - மேன்மைக் குடியாயிருப்போம். எ - று.

மேலைக்குடியிருப்போம் என்பதற்கு மேலான முத்தியுலகில் வாழ்வோம் எனினுமமையும்.

**15.** எச்சிலென்றுசொல்லியிதமகிதம்பேசாதீர்
எச்சிலிருக்குமிடமறியீர் - எச்சிறனை
உய்த்திருந்துபார்த்தாலொருமைவெளிப்படும்பின்
சித்தநிராமயமாமே.

(இ - ள்.) எச்சில் என்றுசொல்லி - எச்சிலென்று இகழ்ந்துரைத்து, இதம் அகிதம் பேசாதே - இதாகிதங்கள் பேசாதே, எச்சில் இருக்கும் இடம் அறியீர் - எச்சிலிருக்குமிடத்தை யுணரீர், எச்சில் தனை - எச்சிலை, உய்த் திருந்துபார்த்தால் - யூகித்திருந்து பார்த்தால், ஒருமை வெளிப்படும் - ஒற்றுமைவெளியாகும், பின் - பிறகு, சித்தம் நிராமயம் ஆம் - மனம் துன்பமற்றதாகும். எ - று.

ஆமயம் - நோய், நிராமயம் - நோயின்மை.

**16.** எத்தனைபேர்நட்டகுழியெத்தனைபேர்தொட்டமுலை
எத்தனைபேர்பற்றியிழுத்தவிதழ் - நித்தநித்தம்
பொய்யடாபேசும்புவியின்மடமாதரைவிட்
டுய்யடாவுய்யடாவுய்

(இ - ள்.) எத்தனைபேர் நட்டகுழி - எத்தனைபேர் தம்கோசத்தை நாட்டினபள்ளம், எத்தனைபேர் தொட்டமுலை - எத்தனைபேர் தொட்ட தனம், எத்தனைபேர்பற்றியிழுத்த இதழ்-எத்தனைபேர்பிடித்திழுத்த அதரம், (ஆதலால்) அடா - ஏடா. நித்தம் - நாள்தோறும், பொய்பேசும் - பொய்யையே பேசுகிற, புவியில் மடமாதரைவிட்டு - உலகிலுள்ள அறியாமையோடு கூடிய மாதரைக்கைவிட்டு, உய்யடா உய்யடா உய் - பிழையேடா பிழையேடா பிழை. எ - று.

17. இருப்பதுபொய்போவதுமெய்யென்றெண்ணிநெஞ்சே
ஒருத்தருக்குந்தீங்கினையுன்னாதே - பருத்ததொந்தி
நம்மதென்றுநாமிருப்பநாய்நரிகள்பேய்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந்தான்.

இ - ள். நெஞ்சே - மனமே, இருப்பதுபொய்-உலகிலிருப்பதுபொய், போவதுமெய்-இறந்துபோவதுமெய், என்று எண்ணி-என்று ஆலோசித்து, ஒருத்தருக்கும் - ஒருவர்க்காயினும், தீங்கினை உன்னாதே - கெடுதியை நினையாதே, பருத்ததொந்தி - பெருத்தவயிறானது, நம்மது என்று - நம்முடையதென்று, நாம் இருப்ப - நாமிருக்க, நாய்நரிகள் பேய்கழுகு - நாயும் நரியும் பேயும் கழுகும், தம்மது என்று தாம் இருக்கும்-தம்முடைய தென்று தாமிருக்கும். எ - று.

18. எத்தொழிலைச்செய்தாலுமேதவத்தைப்பட்டாலும்
முத்தர்மனமிருக்குமோனத்தே - வித்தகமாய்க்
காதிவிளையாடியிருகைவீசிவந்தாலும்
தாதிமனநீர்க்குடத்தேதான்.

இ - ள். வித்தகமாய்க் காதிவிளையாடி-அதிசயமாய் அசைந்து விளையாடிக்கொண்டு, இருகைவீசிவந்தாலும் - இரண்டுகைகளை வீசிவரினும், தாதிமனம் நீர்க்குடத்தேதான்-தாதியின் மனமானது நீர்க்குடத்தின் கண்ணதே, (அதுபோல) எத்தொழிலைச்செய்தாலும் - எந்தத்தொழிலைச்செய்யினும், ஏது அவத்தைப்பட்டாலும் - எந்த அவஸ்த்தையை யநுபவித்தாலும், முத்தர்மனம்-முக்தர்களுடைய மனமானது, மோனத்தேயிருக்கும்-மௌநநிலையிலேயேயிருக்கும். எ - று.

19. மாலைப்பொழுதினறுமஞ்சளரைத்தேகுளித்து
வேலைமினுக்கிட்டுவிழித்திருந்து - சூலாகிப்
பெற்றாள்வளர்த்தாள்பெயரிட்டாள்பெற்றபிள்ளை
பித்தானாலென்செய்வாள்பின்.

இ - ள். மாலைப்பொழுதில்-மாலைக்காலத்தில், நறுமஞ்சள் அரைத்து குளித்து - மணமஞ்சளையரைத்துக் குளித்து, வேலைமினுக்கிட்டு - வேலை மெனக்கெட்டு, விழித்திருந்து - கண்விழித்திருந்து, சூல்ஆகி - கர்ப்பமாகி, பெற்றாள் - ஈன்றாள், வளர்த்தாள் - விருத்திசெய்தாள், பெயர் இட்டாள்-பெயருமிட்டாள், பெற்றபிள்ளை - பெற்றபிள்ளையானது, பித்து ஆனால் - பித்தனாகிவிட்டால், பின் என்செய்வாள் - பிறகுயாது செய்வாள். எ - று.

20. காப்பிளக்கப் பொய்புரைத்து நவநிதியந்தேடி
நலனொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவருமேழைப்புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவர்பிளந்தமரத்துளையிற்காணுழைத்துக்கொண்டே
ஆப்பதனையசைத்துவிட்டகுரங்கதனைப்போல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே.

இ - ள். காபிளக்க பொய் உரைத்து-நாப்பிளக்கும்படிப் பொய்பேசி, நவநிதியம் தேடி - நூதனமாகிய திரவியங்களைச் சம்பாதித்து, நலன் ஒன்றும் அறியாத - நன்மைசிறிதுமுணராத, நாரியரைக் கூடி - மாதரைச்சேர்ந்து,பூப்பிளக்கவரும் - பூமி வெடிக்க அதினின்றும் புறப்படுகிற, ஏழைப் புற்றீசல்போல-பேதைமையானபுற்றீசலைப்போல,புலபுலெனக்கலகலென- புலபுலவெனக் கலகலவென, புதல்வர்களைப்பெறுவீர் - பிள்ளைகளைப்பெறுவீர்கள், காப்பதற்கும்வகை அறியீர் - (அவர்களைக்) காப்பாற்றுவதற்கும் வகையறியீர்கள்,கைவிடவும்மாட்டீர்-கைவிடவும்மாட்டீர்கள், கவர்பிளந்த மரத்துளையில் - இருபிளவாகப்பிளந்த மரத்தொளையின்கண்,கால் நுழைத்துக்கொண்டு - காலை நுழைத்துக் கொண்டு, ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கதனைப்போல - ஆப்பையசைத்துப்பிடுங்கின குரங்கைப் போல, அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீர் - சிக்கிக்கொண்டீர் கிடந்துழலச்சிக்கிக்கொண்டீர், எ - று.

வேறு.

21. வடிவந்தானும்வாலிபம்மகளுந்தாயும்மாமியும்
படிகொண்டாரூமூரிலேபழிகொண்டாடனீதியோ
குடிவந்தானுமேழையோகுயவன்றானுங்கூழையோ
நடுகின்றானும்வீணனோநகரஞ்சூறையானதே.

இ - ள். வடிவமும் வாலிபம் - உருவுமிளமையுள்ளது, மகளும் தாயும் மாமியும் - மகளும் அவள் தாயும் மாமியும், படிகொண்டு ஆரும் ஊரிலே - (தமக்குப்போதுமான) பூமியைச் சுவாதீநப்படுத்திக்கொண்டு வாழ்கிற ஊரில், பழிகொண்டாடல் நீதியோ - (இந்தப்பழியைக்கொண்டாடியிரங்குவது) நீதிதானோ, குடிவந்தானும் ஏழையோ - (இச்சரீரமாகிய வீட்டில்) குடிபுக்கவனாகிய ஆன்மாவும் எளியனோ, குயவனும் கூழையோ - (மட்கலம்போலழியுமுடலை வனைந்த குயவனாகிய) பிரமனும் வலியற்றவனோ, நடுகின்றானும் வீணனோ - (தேஹி தேஹசம்பந்

த்துக்குக் காரணனும்) நடுநின்றியைத்த சர்வசக்தனும் பயனற்ற செய்கையைச் செய்பவனோ, (அன்றே அங்ஙனமாக) நகரம் சூறையானது - இந்தச் சரீரமாகிய நகரம் கொள்ளையாய்விட்டது, ஏ - என்னபாவம். எ - று.

இறத்தற்குரிய பருவமன்றென்பார் வாலிபம் என்றார். ஓகாரம் மூன்றும் எதிர்மறை. அங்ஙனமாக நகரஞ் சூறையாதல் தகாதகாரிய மென்பது கருத்து.

வேறு.

22. மண்ணுமுருகுமரமுருகுமாயையுருகுமாலுருகும்
பெண்ணுமுருகுமாணுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தாளுருகுமரவணையான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாலுரைத்தவோர்மொழியே

இ - ள். குருநாதன் - குருமூர்த்தி, என்பால் உரைத்த ஓர்மொழி - என்னிடத்திற் கிருபைசெய்த ஒருமொழியை, எண்ணி - சிந்தித்து, மண்ணும் உருகும் - பூமியும் உருகும், மரம் உருகும் - மரங்களுமுருகும், மாயை உருகும் - மாயையு முருகாநிற்கும், மால் உருகும் - (மாயாகாரியமாகிய) மயக்கமும் உருகும்-பெண்ணும் உருகும்-பெண்டன்மையும் உருகும், ஆண் உருகும் - ஆண்டன்மையுமுருகும், பேதம் அபேதம் வகை உருகும் - வேற்றுமை வேற்றுமையின்மை யென்னும் கூறுபாடுகளுமுருகும், அண்ணல் உருகும் - சிவபெருமானும் உருகுவன், இடத்து அமர்ந்த - அவனது இடதுபாகத்தமைந்த, ஆத்தாள் உருகும் - லோகமாதாவாகிய உமாதேவியும் உருகுவாள், அர அணையான் உருகும் - சர்ப்பசயநத்தையுடைய திருமாலும் உருகாநிற்பன். எ - று.

ஒருமொழியாற்றலா னிங்ஙன நிகழுமாயின் இறந்துகிடந்த பிணமகனுயிர்த்தெழலோர் வியப்போவென்பது கருத்து. "ஒருமொழியேபலமொழிக்கு மிடங்கொடுக்குமந்த - ஒருமொழியேமலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த-குருமொழியே" எனவும், "ஒருரையால்வாய்க்குமுண்மை" எனவும், "மன்னவென்னையோர்வார்த்தையுட்படுத்து" எனவும் பிறரும் இவ்வாறுகூறுதல் காண்க,

திருச்சிற்றம்பலம்.

# முதல்வன் முறையீடு.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

1. மூலமறியேன்முடியுமுடிவறியேன்
ஞாலத்துட்பட்டதுயர்நாடநடுக்குதடா.

ஞாலம் - உலகு.

2. அறியாமையாமலத்தாலறிவுமுதற்கெட்டனடா
பிறியாவினைப்பயனுற்பித்துப்பிடித்தனடா.

3. தனுவாதியநான்குந்தானாய்மயங்கினண்டா
மனுவாதிசத்திவலையிலகப்பட்டனடா.

தனு - தேகம்

4. மாமாயையென்னும்வனத்திலலைகிறண்டா
தாமாயுலகனைத்துந்தாதுகலங்கிறண்டா.

கன்னிவனநா கன்னிவனநாதா.

5. மண்ணாசைப்பட்டேனைமண்ணுண்டுபோட்டதடா
பொன்னாசைபெண்ணாசைபோகேனேயென்குதே.

6. மக்கள்சுற்றத்தாசைமறக்கேனேயென்குதே
திக்கரசாமாசையதுதீரேனேயென்குதே.

7. வித்தைகற்குமாசையதுவிட்டொழியேனென்குதே
சித்துகற்குமாசைசிதையேனேயென்குதே.

8. மந்திரத்திலாசைமறக்கேனேயென்குதே
சுந்தரத்திலாசைதுறக்கேனேயென்குதே.

9. கட்டுவர்க்கத்தாசைகழலேனேயென்குதே
செட்டுதனிலாசைசிதையேனேயென்குதே.

செட்டு - சிக்கனவு.

10. மாற்றுஞ்சலவைமறக்கேனேயெனகுதே
சோற்றுக்குழியுமின்னந்தூரேனேயென்குதே.

சோற்றுக்குழி - வயிறு.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

11. ஐந்துபுலனுமடங்கேனேயென்குதே
சிந்தைதவிக்கிறதுந்தேறேனேயென்குதே.

12. காமக்குரோதம்கடக்கேனேயென்குதே
நாமேயரசென்றுநாடோறுமெண்ணுதே.

13. அச்சமாங்கார மடங்கேனேயென்குதே
லைச்சுமின்னுமானங்கழலேனேயென்குதே,
ஙைச்சும் - வெறுத்தும்

14. நீர்க்குமிழியாமுடலைநித்தியமாயெண்ணுதே
ஆர்க்குமுயராசையழியேனேயென்குதே.

15. கண்ணுக்குக்கண்ணெதிரேகட்டையில்வேகக்கண்டும்
எண்ணுந்திரமாயிருப்போமென்றெண்ணுதே,
எண்ணும் - என்றும்.

16. அநித்தியத்தைநித்தியமென்றுதரவாயெண்ணுதே
தனித்திருக்கேனென்குதேதனைமறக்கேனென்குதே.

17. நரகக்குழியுமின்னுநான்புசிப்பேனென்குதே
உரகப்படத்தல்குலுனைக்கெடுப்பேனென்குதே.
உரகம் - பாம்பு.

18. குரும்பைமுலையுங்குடிகெடுப்பேனேன்குதே
அரும்புவிழியுமென்றனுவியுண்பேனென்குதே

19. மாதருருக்கொண்டுமறலிவஞ்சமெண்ணுதே
ஆதரவுமற்றிங்கரக்காயுருகிறண்டா.
மறலி - இயமன்.

20. கந்தனையீன்றருளுங்கன்னிவனநாதா
எந்தவிதத்திலுனேறிப்படருவண்டா,
கன்னிவனநாதா கன்னிவனநாதா.

21. புல்லாகிப்பூடாய்ப்புலர்ந்தநாள்போதாதோ
கல்லாய்மரமாய்க்கழிந்தநாள்போதாதோ.

22. கிரியாய்க்கிடமாய்க்கெட்டநாள்போதோ
கீரியாயூர்வனவாய்நின்றநாள்போதாதோ.
கிடம் - புழு. கீரி - நீர்வாழ்வன.

23. பூதமொடுதேவருமாய்ப்போனநாள்போதாதோ
வேதனைசெய்தானவராய்வீந்தநாள்போதாதோ.
தானவர் - அரக்கர். வீதல்-இறத்தல்.

24. அன்னைவயிற்றிலழிந்தநாள்போதாதோ
மன்னவனுய்வாழ்ந்துமரித்தநாள்போதாதோ.
மரித்தல் - இறத்தல்.

25. தாயாகித்தாரமாய்த்தாழ்ந்தநாள்போதாதோ
சேயாய்ப்புருடனுமாய்ச்சென்றநாள்போதாதோ.
சேய் - குழந்தை.

26. நோயுண்ணவேமேலிந்துநொந்தநாள்போதாதோ.
பேயுண்ணப்பேயாய்ப்பிறந்தநாள்போதாதோ.

27. ஊனவுடல்கூன்குருடாயுற்றநாள்போதாதோ
ஈனப்புசிப்பிலிளைத்தநாள்போதாதோ.

28. பட்டகளையும்பாதவிப்பும்போதாதோ.
கெட்டநாள்கெட்டெனென்றுகேளாதும்போதாதோ.

29. நில்லாமைக்கேயழுதுநின்றநாள்போதாதோ
எல்லாருமென்பாரமெடுத்தநாள்போதாதோ

30. காமன்கணையாற்கடைபட்டல்போதாதோ
எமன்கரத்தாலிடியுண்டல்போதாதோ.
கணை - அம்பு.

31. நான்முகன்பட்டோலைநறுக்குண்டல்போதாதோ
தேன்றுளபத்தானேமிதேக்குண்டல்போதாதோ.
நான்முகன் - பிரமன்.
தேன்றுளபத்தான் - விஷ்ணு.
நேமி - சக்கரம்.

32. உருத்திரனார்சங்காரத்துற்றநாள்போதாதோ
வருத்தமறிந்தையிலைவாவென்றழைத்தையிலை.
கன்னிவனநாதா கன்னிவனநாதா.

33. பிறப்பைத்தவிர்த்தையிலைபின்னாகக்கொண்டையிலை.
இறப்பைத்தவிர்த்தையிலையென்னென்றுகேட்டையிலை.

34. பாசமெரித்தையிலைபாதவிப்பைத்தீர்த்தையிலை
பூசியநீற்றைப்புனையென்றளித்தையிலை.

35. அடிமையென்றுசொன்னையிலையக்கமணிதந்தையிலை
விடிமூலகம்போக்கியுன்றன்வேடமளித்தையிலை.
அக்கமணி-உருத்திராக்ஷம்.

36. உன்னிலழைத்தையிலையொன்றாக்கிக்கொண்டையிலை
நின்னடியார்கூட்டத்தினியழைத்துவைத்தையிலை.

37. ஓங்குபரத்துளொளித்தவடியார்க்கடியான்
ஈங்கோரடியானெமக்கென்றுணர்த்தையிலை.

38. நாமந்தரித்தையிலேநானொழியநின்றையிலே
சேமவருளிலெனைச்சிந்தித்தழைத்தையிலே.
சேமம் - காவல்.

39. முத்தியளித்தையிலேமோனங்கொடுத்தையிலே
சித்தியளித்தையிலேசீராட்டிக்கொண்டையிலே.

40. தவிர்ப்பைத்தவிர்த்தையிலேதானாக்கிக்கொண்டையிலே
அவிப்பரியதீயாமென்னாசைதவிர்த்தையிலே.

41. நின்றநிலையினிறுத்தியெனைவைத்தையிலே
துன்றுங்கரணமொடுதொக்கழியப்பார்த்தையிலே.
துன்றுதல் - நெருங்குதல்.
கரணம் - மனமுதலியஅந்தக்கரணங்கள்.

42. கட்டவுலகக்காட்சிக்கட்டொழியப்பார்த்தையிலே
நிட்டையிலேநில்லென்றுநீநிறுத்திக்கொண்டையிலே.
கன்னிவனநாதா கன்னிவனநாதா.

43. கடைக்கணருள்தாடாகன்னிவனநாதா
கெடுக்குமலமொருக்கிக்கிட்டிவரப்பாரோடா.
ஒருக்குதல் - அடக்குதல்.

44. காதல்தணியேனோகண்டுமகிழேனோ
சாதல்தவிரேனோசங்கடந்தான்தீரேனோ.

45. உன்னைத்துதியேனோவூர்நாடிவாரேனோ
பொன்னடியைப்பாரேனோபூரித்துநில்லேனோ.

46. ஓங்காரப்பொற்சிலம்பினுல்லாசம்பாரேனோ
பாங்கானதண்டைபலபணியும்பாரேனோ.

47. வீரகண்டாமணியின்வெற்றிதனைப்பாரேனோ
சூரர்கண்டுபோற்றுமந்தச்சுந்தரத்தைப்பாரேனோ.

48. இடையில்புலித்தோலிருந்தநலம்பாரேனோ
விடையிலெழுந்தருளும்வெற்றிதனைப்பாரேனோ.
நலம் - அழகு.
விடை - இடபம்.

49. ஆனையுரிபோர்த்தவழகுதனைப்பாரேனோ
மானைப்பிடித்தேந்துமலர்க்கரத்தைப்பாரேனோ.
உரி - தோல்.

50. மாண்டார்தலைபூண்டமார்பழகைப்பாரேனோ
ஆண்டார்நமக்கென்றறைந்துதிரியேனோ.

51. கண்டங்கறுத்துநின்றகாரணத்தைப்பாரோனே
தொண்டர்குழுவினின்றதோற்றமதைப்பாரோனே.
குழு - கூட்டம்.
52. அருள்பழுத்தமாமதியாமாநநத்தைப்பாரோனே
திருநயனக்கடையொளிருஞ்செழுங்கொழுமைபாரோனே.
ஆநநம் - முகம்.
நயனம் - கண்.
53. செங்குமிழின்றுண்டம்வளர்சிங்காரம்பாரோனே
அங்கனியையொவென்றவதரத்தைப்பாரோனே.
துண்டம் - நாசி.
அம்கனி - அழகாகிய கோவைக்கனி.
54. முல்லைநிலவெறிச்சுமூரலொள்ளிபாரோனே
அல்லார்புருவத்தழகுதனைப்பாரோனே.
மூரல் - பல்.
அல் - கருமை.
55. மகரங்கிடந்தொளிரும்வண்மைதனைப்பாரோனே
சிகரமுடியழகுஞ்செஞ்சடையும்பாரோனே.
56. கங்கையொடுதிங்கணின்றகாட்சிதனைப்பாரோனே
பொங்கரவைத்தான்சடையிற்பூண்டவிதம்பாரோனே.
திங்கள் - சந்திரன்.
57. சரக்கொன்றைபூத்தசடைக்காட்டைப்பாரோனே
எருக்கறுகூமத்தையணியேகாந்தம்பாரோனே.
58. கொக்கிறகுசூடிநின்றகொண்டாட்டம்பாரோனே
அக்கினியையேந்திநின்றவாநந்தம்பாரோனே.
59. தூக்கியகாலுந்துடியிடையும்பாரோனே
தாக்குமுயலகன்மேற்றுண்டவத்தைப்பாரோனே.
துடி - உடுக்கை.
60. வீசுகரமும்விகசிதமும்பாரோனே
ஆசையளிக்குமபயகரம்பாரோனே.
அபயகரம் - அபயஹஸ்தம்.
61. அரிபிரமர்போற்றவமரர்சயசயெனப்
பெரியம்மைபாகம்வளர்பேரழகைப்பாரோனே.
அமரர் - தேவர்.

62. சுந்தரநீற்றின்சொகுசுதனைப்பாரோனோ
சந்திரசேகரனாய்த்தயவுசெய்தல்பாரோனோ.

சேகரம் - முடி.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

63. கெட்டநாள்கெட்டாலுங்கிருபையினிப்பாரோடா
பட்டநாள்பட்டாலும்பதமெனக்குக்கிட்டாதோ.

64. நற்பருவமாக்குமந்தநாளெனக்குக்கிட்டதோ
எப்பருவமுங்கழன்றவேகாந்தங்கிட்டாதோ.

65. வாக்கிறந்துநின்றமவுனமதுகிட்டாதோ
தாக்கிறந்துநிற்குமந்தத்தற்சத்திகிட்டாதோ.

66. வெந்துயரைத்தீர்க்குமந்தவெட்டவெளிகிட்டாதோ
சிந்தையையந்தீர்க்குமந்தத்தேறலதுகிட்டாதோ.

67. ஆனவடியார்க்கடிமைகொளக்கிட்டாதோ
ஊனமறவென்னையுணர்த்துவித்தல்கிட்டாதோ.

68. என்னென்றுசொல்லுவண்டாவென்குருவேகேள்டா
பின்னையெனக்குநீயல்லாற்பிறிதிலையே.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

69. அன்னவிசாரமதுவற்றவிடங்கிட்டாதோ
சொன்னவிசாரந்தொலைந்தவிடங்கிட்டாதோ.

சொன்னம் - பொன்.

70. உல்கவிசாரமொழிந்தவிடங்கிட்டாதோ
மலக்குழுவின்மின்னார்வசியாதுங்கிட்டாதோ.

மின்னார் - மாதர்,

71. ஒப்புவமைபற்றோடொழிந்தவிடங்கிட்டாதோ.
செப்புதற்குமெட்டாத்தெளிந்தவிடங்கிட்டாதோ.

72. வாக்குமனாதீதவகோசரத்திற்செல்லவெனைத்
தாக்குமருட்குருவேநின்றாளிணைக்கேயான்போற்றி.

அகோசரம் - அறியவொண்ணாமை.

பட்டணத்தார் முதல்வன் முறையீடு
முற்றிற்று.

# அருட்புலம்பல்

1. ஐங்கரனைத்தெண்டனிட்டேனருளடையவேண்டுமென்று
தங்காமல்வந்தொருவன்றற்சொருபங்காட்டியெனை.
ஐங்கரன் - விநாயகன்.

2. கொள்ளைப்பிறப்பறுக்கக்கொண்டான்குருவடிவம்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி.
கொள்ளை - மிகுதி.

3. ஆதாரமோராறுமைம்பத்தோரக்ஷரமும்
சூதானகோட்டையெல்லாஞ்சுட்டான்றுரிசறவே.

4. மெத்தவிகாரம்விளைக்கும்பலபலவாம்
தத்துவங்களெல்லாந்தலைகெட்டுவெந்ததடி.

5. என்னோடுடன்பிறந்தாரெல்லாரும்பட்டார்கள்
தன்னந்தனியேதரித்திருக்கமாட்டேண்டி.

6. எல்லாரும்பட்டகளமென்றுதொலையுமடி
சொல்லியழுதாற்றுயரமெனக்காறுமடி.

7. மண்முதலாமைம்பூதமாண்டுவிழக்கண்டேண்டி
விண்முதலாமைம்பொறிகள்வெந்துவிழக்கண்டேண்டி.

8. நீக்காப்புலன்களைந்துநீறாகவெந்ததடி
வாக்காதியைவரையுமாண்டுவிழக்கண்டேண்டி.

9. மனக்கரணமத்தனையும்வகைவகையேமட்டழிய
இனக்கரணத்தோடேயெரிந்துவிழக்கண்டேண்டி.

10. ஆத்துமதத்துவங்கள்அடுக்கழியவெந்ததடி
போற்றும்வகையெப்படியோபோதமிழந்தானை.

11. வித்தியாதத்துவங்கள்வெந்துவிழக்கண்டேண்டி
சுத்தவித்தையைந்தினையுஞ்சுட்டான்றுரிசறவே.

12. மூன்றுவகைக்கிளையுமுப்பத்தறுவரையும்
கான்றுவிழச்சுட்டுக்கருவேரறுத்தாண்டி.
ஈகன்று - கக்கி.

13. குருவாகிவந்தானோகுலமறுக்கவந்தானோ
உருவாகிவந்தானோவுருவழிக்கவந்தானோ.

14. கேடுவருமென்றறியேன்கெடுமதிகண்டோற்றாமல்
பாடுவருமென்றறியேன்பதியாண்டிருந்தேண்டி.

15. எல்லாரும்பட்டகளமின்னவிடமென்றறியேன்
பொல்லாங்குதீர்க்கும்பொறியிலியைக்கண்டேண்டி.

16. உட்கோட்டைக்குள்ளிருந்தாரொக்கமடிந்தார்கள்
அக்கோட்டைக்குள்ளிருந்தாரறுபதுபேர்பட்டார்கள்.

17. ஒக்கமடிந்ததடியூருவவெந்ததடி
கற்கோட்டையெல்லாங்கரிக்கோட்டையாச்சுதடி.

18. தொண்ணூற்றறுவரையுஞ்சுட்டான்றுரிசறவே
கண்ணேறுபட்டதடிகருவேரறுத்தாண்டி.

கண்ணேறு - கண்ணெச்சில்.

19. ஓங்காரங்கெட்டதடியுள்ளதெல்லாம்போச்சுதடி
ஆங்காரங்கெட்டதடியடியோடறுத்தாண்டி.

20. தளையாங்குடிலைமுதல்தட்டுருவவெந்ததடி
இளையுமனத்திம்பையெல்லாமறுத்தாண்டி.

இம்பை - துன்பம்.

21. முன்னைவினையெல்லாமுழுதுமறுத்தாண்டி
தன்னையறியவேதானொருத்தியானேண்டி.

22. என்னையேநானறியவிருவினையுமீடழித்துத்
தன்னையறியத்தலமெனக்குச்சொன்னாண்டி.

ஈடழித்தல் - பெருமையழித்தல்.

23. தன்னையறிந்தேண்டிதனிக்குமரியானேண்டி
தன்னந்தனியேதனியிருக்கும்பக்குவமோ.

24. வீட்டிலொருவரில்லைவெட்டவெளியானேண்டி
காட்டுக்கெறித்தநிலாகனவாச்சேகண்டதெல்லாம்,

25. நகையாரோகண்டவர்கள்நாட்டுக்குப்பாட்டலவோ
பகையாரோகண்டவர்கள்பார்த்தாருக்கேச்சலவோ.

ஏச்சு-வசை.

26. இந்நிலைமைகண்டாண்டியெங்குமிருந்தாண்டி
கன்னியழித்தாண்டிகற்பைக்குலைத்தாண்டி

27. கற்புக்குலைத்தமையுங்கருவேரறுத்தமையும்
பொற்புக்குலைத்தமையும்போதமிழந்தமையும்.

பொற்பு - அழகு. போதம் - அறிவு.

28. என்னவினைவருமோவின்னமெனக்கென்றறியேன்
சொன்னசொல்லெல்லாம்பலித்ததடிசோர்வறவே.

29. கங்குல்பகலற்றிடத்தைக்காட்டிக்கொடுத்தாண்டி
பங்கமழித்தாண்டிபார்த்தானைப்பார்த்திருந்தேன்.
கங்குல் - இரவு.

30. சாதியிற்கூட்டுவரோசாத்திரத்துக்குள்ளாமோ
ஓதியுணர்ந்ததெல்லாமுள்ளபடியாச்சுதடி.

31. என்னகுற்றஞ்செய்தேனோவெல்லாருங்காணமல்
அன்னைசுற்றமெல்லாமறியாரோவம்புவியில்.

32. கொன்றாைத்தின்றேனோதின்றாைக்கொன்றேனோ
எண்ணுதெல்லாமெண்ணுமிச்சைமறந்தேனோ.

33. சாதியிற்கூட்டுவரோசமயத்தோரொன்னுவரோ
பேதித்துவாழ்ந்ததெல்லாம்பேச்சுக்கிடமாச்சுதடி.

34. கண்டார்க்குப்பெண்ணலவோகாணார்க்குக்காமமடி
உண்டார்களுண்டதெலாமுணல்லாதுண்பர்களோ.

35. கொண்டவர்கள்கொண்டதெல்லாங்கொள்ளாதார்கொள்ளுவரோ
விண்டவர்கள்கண்டவரோகண்டவர்கள்விண்டவரோ.

36. பண்டாயநான்மறைகள்பாடும்பரிசலவோ
தொண்டாயதொண்டருளந்தோற்றியொடுங்குமதோ.

37. ஓதவெளிதோவொருவருணர்வெளிதோ
பேதமறவெங்கும்விளங்கும்பெருமையன்காண்.

38. வாக்குமனமுங்கடந்தமனோலயன்காண்
நோக்கவரியவன்காணுண்ணியரினுண்ணியன்காண்.

39. சொல்லுக்கடங்கான்காண்சொல்லிறந்துநின்றவன்காண்
கல்லுளிருந்தகனலொளிபோனின்றவன்காண்.

40. சுட்டிறந்தபாழதனிற்சுகித்திருக்கச்சொன்னவன்காண்
எட்டிலெழுத்தோவெழுதினவன்கைப்பிழையோ.

41. சும்மாவிருக்கவைத்தான்சூத்திரத்தைநானறியேன்
அம்மாபொருளிதெனவடையவிழுங்கினண்டி.

42. பார்த்தவிடமெல்லாம்பரமாகக்கண்டேண்டி
கோத்திரலைகுலைத்தகொள்கையறியேண்டி.

43. மஞ்சனமாட்டிமலர்பறித்துச்சாத்தாமல்
நெஞ்சுவெறும்பாழானேனின்றநிலைகாணேண்டி.

44. பாடிப்படித்திருந்தும்பன்மலர்கள்சாத்தாமல்
ஓடித்திரியாமலுருக்கெட்டுவிட்டேண்டி.

45. மாணிக்கத்துள்ளொளிபோல்மருவியிருந்தாண்டி
பேணித்தொழுமடியார்பேசாப்பெருமையன்காண்.

46. அன்றுமுதலின்றளவுமறியாப்பருவமதில்
என்றும்பொதுவாயிருந்தநிராமயன்காண்.

47. சித்தவிகாரத்தாலேசின் மயனைக்காணமல்
புத்திகலங்கிப்புகுந்தேன் பொறிவழியே.

48. பத்தியறியாமற்பாழிற்கவிழ்ந்தேண்டி
ஒத்தவிடநித்திரையென்றொத்துமிருந்தேண்டி.

49. செத்தாரையொத்தேண்டிசிந்தைதெளிந்தேண்டி
மற்றொருமில்லையடிமறுமாற்றங்காணேண்டி.

50. கல்வியல்லகேள்வியல்லகைகாட்டுங்காரணங்காண்
எல்லையளவற்றதடியெங்குநிறைந்ததடி.

51. வாசாமகோசரத்தைமருவியிடங்கொண்டாண்டி
ஆசுசமில்லாண்டியறிவுக்கறிவாண்டி.

52. பத்துத்திசைக்குமடங்காப்பருவமடி
எத்திசைக்குமெங்குமிடைவிடாதேகமடி.

53. தித்திக்கவூறுமடிசித்தமுடையார்க்குப்
பத்திக்கடலுட்பதித்தபரஞ்சோதியடி.

54. உள்ளுணர்வாய்நின்றவர்தமுணர்வுக்குணர்வாண்டி
எள்ளளவுமுள்ளத்திலேயேறிக்குறையாண்டி.

55. தூருந்தலையுமிலான்றோற்றமொடுக்கமிலான்
ஆருமறியாமலகண்டமாய்நின்றாண்டி.

56. எத்தனையோவண்டத்திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலுமணுவுங்குறையாண்டி.

57. வாக்குமனமும்வடிவுமிலாவான்பொருள்காண்
போக்கும்வரவுமிலான்பொருவரியபூரணன்காண்.

58. காட்சிக்கெளியான்காண்கண்டாலுங்காணுன்காண்
மாட்சிமனம்வைத்தார்க்குமாணிக்கத்துள்ளொளிகாண்.

59. வாழ்த்தியவனைவழிப்பட்டால்மன்னுயிர்கள்
தோற்றவரியான்காண்சொல்லிறந்தசோதியன்காண்.

60. ஐயமறுத்தவனையாராய்வாருண்டானல்
வையகத்தேவந்துமலர்ப்பாதம்வைத்திடுவான்.

61. அணுவுக்குமேருவுக்குமப்புறமாய்நின்றான்காண்
கணுமுற்றுஞானக்கரும்பின்றெளிவான்காண்.

62. எந்நாளுமிந்நாளுமிப்படியாயப்படியாய்ச்
சொன்னாலுங்கேளான்காண்சோத்திரத்திற்கொள்ளான்காண்

63. ஆத்தாளுக்காத்தாளாமப்பனுக்குமப்பனுமாம்
கோத்தார்க்குக்கோத்தநிலைகொண்டகுணக்கடல்காண்.

64. இப்போபுதிதோடியெத்தனைநாளுள்ளதடி
அப்போதைக்கப்போதருளறிவுந்தந்தாண்டி.

65. பற்றற்றார்பற்றாகப்பற்றியிருந்தாண்டி
குற்றமறுத்தாண்டிகூடியிருந்தாண்டி.

66. வெட்டவெளியிலெனைமேவியிருந்தாண்டி
பட்டப்பகலிலடிபார்த்திருந்தாரெல்லோரும்.

67. வாழ்வானவாழ்வெனக்குவந்ததடிவாழாமல்
தாழாமற்றாழ்ந்தேண்டிசற்றுங்குறையாமல்.

68. பொய்யானவாழ்வெனக்குப்போதுமெனக்காணேண்டி
மெய்யானவாழ்வெனக்குவெறும்பாழாய்விட்டதடி.

69. கன்னியழித்தவனைக்கண்ணாரக்கண்டேண்டி
என்னியல்புநானறியேனீதென்னமாயமடி.

70. சொல்லாலேசொல்லுதற்குச்சொல்லவாயில்லையடி
எல்லாருங்கண்டிருந்துமிப்போதறியார்கள்.

71. கண்மாயமிட்டாண்டிகருத்துமிழந்தேண்டி
யுண்மாயமிட்டவனையுருவழியக்கண்டேண்டி.

72. என்னசொல்லப்போறேனானிந்தவதிசயத்தை
கன்னியிளங்கமுகுகாய்த்ததடிகண்ணார.

73 ஆர்ந்தவிடமத்தனையுமருளாயிருக்குமடி
சார்ந்தவிடமெல்லாஞ்சவாதுமணக்குதடி.

74. இந்தமணமெங்குமியற்கைமணமென்றறிந்து
அந்தசுகாதீதத்தருட்கடலில்மூழ்கினண்டி.

75. இரும்புநிறைநீர்போலெனைவிழுங்கிக்கொண்டாண்டி
அரும்புநிறைவாசனைபோலன்றேயிருந்தாண்டி.

76. அக்கினிகற்பூரத்தையறவிழுங்கிக்கொண்டாற்போல்
மக்கினம்பட்டுள்ளேமருவியிருந்தாண்டி.

77. கடல்நீருமாறும்போற்கலந்துகளைகாணேண்டி
உடலுமுயிரும்போலுட்கலந்துநின்றாண்டி.

78. பொன்னுமுறைமாற்றும்போற்பொருவரியபூரணன்காண்
மன்னுமனுபூதியடிமாணிக்கத்துள்ளொளிபோல்.

79. கங்குகரையில்லாண்டிகரைகாணாக்கப்பலடி
எங்குமளவில்லாண்டியேகமாய்நின்றாண்டி.

80. தீவகம்போலென்னைச்சேர்ந்தபரசின்மயன்காண்
பாவகமொன்றில்லாண்டிபார்த்திடமெல்லாம்பரங்காண்.

81. உள்ளார்க்குமுள்ளாண்டியூருமில்லான்பேருமில்லான்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி.
உள்ளார் - நினையாதவர்.

82. அப்பிறப்புக்கெல்லாம்அருளாயமர்ந்தாண்டி
இப்பிறப்பில்வந்தானிவனாகுமெய்ப்பொருள்காண்.

83. நீரொளிபோலெங்குநிறைந்தநிராமயன்காண்
பாரொளிபோலெங்கும்பரந்தபராபரன்காண்.

84. நூலாலுணர்வரிய நுண்மையினுநுண்மையன்காண்
பாலாறுசர்க்கரைபோற்பரந்தபரிபூரணன்காண்.

85. உளக்கண்ணுக்கல்லாதூன்கண்ணாலோருமதோ
விளக்குச்சுடரொளிபோன்மேவியிருந்தாண்டி.
உளக்கண் - மனக்கண், ஊன்கண் - மாமிசக்கண், ஓர்தல் - ஆராய்தல்.

86. கல்லுளிருந்தகனலொளிபோற்காரணமாய்ப்
புல்லியிருந்தும்பொருவரியபூரணன்காண்.

87. புல்லி - தழுவி . பொருள் - ஒப்பு.
பொற்பூவும்வாசனைபோற்போதம்பிறந்தார்க்குக்

88. கற்பூவும்வாசனைபோற்காணாக்கயவருக்கு.
போதம் - ஞானம்.

89. மைக்குழம்புமுத்தும்போன்மருவிமறவாதவர்க்குக்
கைக்குட்கனியாகுங்கருவறுத்தகாரணர்க்கு.

90. பளிங்கிற்பவளமடிபற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சிலைவெள்ளியென்பார்கிட்டாதார்கிட்டுவரோ.

91. ஏட்டுக்கடங்காண்டியெழுத்திற்பிறவாண்டி
நாட்டினரிகளெல்லாநற்புரவிசெய்தாண்டி.

92. பஞ்சப்பிரளயத்துமிஞ்சியிருப்பாண்டி
நஞ்சுபொதிமிடற்றானயனத்தழல்விழியான்.
மிடறு - கண்டம்.

93. அகங்காக்கும்புறங்காக்குமளவிலாவண்டமுதல்
செகங்காக்குங்காணுத்திசைபத்துங்காக்குமடி.

94. பேசாப்பிரமமடிபேச்சிறந்தபேரொளிகாண்
ஆசாபாசங்கள்அணுகாதபேரொளிகாண்.

95. தேசமிறந்தவன்காண்டிசையிறந்ததெண்கடல்காண்
ஊசிமுனையூன்றவில்லாவுறுபொருள்காண்.

தெள்கடல் - தெளிவாகியகடல்.

96. சிப்பியின்முத்தொளிகாண்சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோலமர்ந்தவரும்பொருள்காண்.

97. ஆலாவிருட்சமடியளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்விசும்பூடுருவுமெய்ம்பொருள்காண்.

சாகை - கிளை.

98. வங்கிஷமெல்லாங்கடந்துமருவாமலர்ப்பதங்காண்
அங்கிஷமாயெங்குமாய்ந்தவரும்பொருள்காண்.

99. நாமநட்டமானதடிநவிலவிடமில்லையடி
காமனைக்கண்ணுலெரிக்கக்கனல்விழித்தகாரணன்காண்.

100. கொட்டாதசெம்பொனடிகுளியாத்தரளமடி
எட்டாதகொம்பிலடியீப்புகாத்தேனமுதம்.

101. காணிப்பொன்னுணியுடன்கல்லுமாற்றின்னதென்றே
ஆணியுடன்கூட்டியடங்கவிட்டுக்கொண்டாண்டி.

102. அளவிறந்தவண்டத்தாரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும்பேசாப்பிரமமடி.

அண்டத்தார் - உலகத்தார்.

103. கன்னெஞ்சினுள்ளேகழுநீலம்பூத்தாற்போல்
என்னெஞ்சினுள்ளேயிணையடிகள்வைத்தாண்டி.

104. வேதப்புரவியடிவிரைந்தோடியும்மறியார்
காதற்றஞானமடிகாண்பார்கருத்துடையோர்.

105. பாசவினையைப்படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைக்காட்டியடிநில்லென்றுசொன்னுண்டி.

பட - அழிய.

106. ஓசையொடுங்குமிடமோங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும்பிரமமிதுவென்றூண்டி.

107. சின்மயநன்னேக்காற்சிற்சொருபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியேதானவனுய்நின்றூண்டி.

108. தானென்னைப்பார்த்தாண்டிதன்னைத்தானல்லாமல்
நானென்னசொல்லுவண்டிநவிலவிடமில்லையடி.

109. இன்றிருந்துநாளைக்கிறக்கிறபேரெல்லாரும்
என்றுபரிபூரணத்திலினிதிருக்கச்சொன்னாண்டி.

110. பார்க்கிலெளிதலவோபற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்டவவனிதனில்வந்தாண்டி.

111. இத்தனைகாலமடியிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லையடியிரும்பினுறைநீரானேன்.

112. எக்காலம்பட்டதடியிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாம்அழுந்தினேனரகில்.

113. காலங்கழிந்ததடிகர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவுநாமநட்டமாச்சுதடி.

114. முப்பாழுக்கப்பால்முதற்பாழ்முழுமுதலாய்
இப்போதுவந்தான்காணெனைவிழுங்கிக்கொண்டான்காண்.

115. பாலின்கணெய்யிருந்தாற்போலப்பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய்தறவிழுங்கிக்கொண்டாண்டி.

116. தெத்தபடமானேண்டிதீயிரும்பினீரானேன்
ஒத்தவிடத்திரையென்றேதுமுணர்வறிந்தேன்.

தெத்தபடம் - எரிந்தபுடவை.

117. ஒப்புமுவமையுமற்றேதவரிதாயபொருள்
இப்பூவினிற்குருவேயென்னவந்தோன்றுள்வாழி.

பூ - உலகு.

118. ஒப்பாரிசொல்லிடினுமுவமைபிழைத்திடினும்
முப்பாழுங்கற்றுணர்ந்தோர்முன்னோர்பொறுத்தருள்வார்.

அருட்புலம்பல் - முற்றுப்பெற்றது.

---

### பட்டணத்துப்பிள்ளையார்

## இறந்தகாலத்திரங்கல்.

---

1. வார்த்தைத்திறமில்லாமனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள்சொல்லிச் சதுரிழந்துகெட்டேனே.

2. மெத்தமெத்தச்செல்வாக்கில்வேறுமருளடுத்துத்
சத்தித்தலைகீழாய்த்தானடந்துகெட்டேனே.

3. வழக்கந்தலங்களினுமண்பெண்பொன்னாசையினும்
பழக்கந்தவிராமற்பதியிழந்துகெட்டேனே.

4. ஆணிபொருந்துமரும்பூமிபத்தனையுங்
காணிநமதென்றுகனம்பேசிக்கெட்டேனே.

5. ஆசாரமில்லாவசடருடன்கூடிப்
பாசாங்குபேசிப்பதியிழந்துகெட்டேனே.

6. குருமார்க்கமில்லாக்குருடருடன்கூடிக்
கருமார்க்கத்துள்ளேகருத்தழிந்துகெட்டேனே.

கருமார்க்கம் - பிறவிநெறி.

7. ஆலமருந்துமரன்பெருமையெண்ணுமல்
பாலர்பெண்டிர்மெய்யென்றுபதியிழந்துகெட்டேனே.

ஆலம் - விஷம்.

8. பிணவாசமுற்றபெருங்காயமெய்யென்று
பணவாசையாலேபதியிழந்துகெட்டேனே.

9. கண்டபுலவர்கனக்கவேதான்புகழ
உண்டவுடம்பெல்லாமுப்பரித்துக்கெட்டேனே.

உப்பரித்து - பூரித்து.

10. எண்ணிறந்தசென்மமெடுத்துச்சிவபூசை
பண்ணிப்பிழையாமற்பதியிழந்துகெட்டேனே.

11. சிற்றெறும்புசற்றுந்தீண்டப்பொறாவுடம்பை
உற்றுறுக்கவுஞ்சுடவுமொப்பித்துமாண்டேனே.

12. தன்னுடம்புதானே தனக்குப்பகையாமென்
றெண்ணுமுணர்வில்லாமலின்பமென்றுமாண்டேனே.

13. தோலெலும்புமாங்கிஷமுந்தொல்லன்னத்தால்வளரு
மேலெலும்புஞ்சுற்றமென்றுவீறுப்பாய்மாண்டேனே.

14. போக்குவரத்தும்பொருள்வரத்துங்காணுமல்
வாக்கழிவுசொல்லிமனமறுகிக்கெட்டேனே.

இறந்தகாலத்திரங்கல்
முற்றுப்பெற்றது.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## நெஞ்சொடுபுலம்பல்.

---

1. மண்காட்டிப்பொன்காட்டிமாயவிருள்காட்டிச்
செங்காட்டிலாடுகின்றதேசிகனைப்போற்றுமல்
கண்காட்டும்வேசியர்தங்கண்வலையிற்சிக்கிமிக
அங்காடிநாய்போலலைந்தனையேநெஞ்சமே.

2. புட்பாசனவணையிற்பொற்பட்டுமெத்தையின்மேல்
ஒப்பாவணிந்தபணியோடாணிநீங்காமல்
இப்பாய்க்கிடத்தியமனுயிர்கொள்ளுமுன்னே
முப்பாழைப்போற்றிமுயங்கிலையேநெஞ்சமே.

3. முப்பாழும்பாழாய்முதற்பாழ்வெறும்பாழாய்
அப்பாழுக்கப்பாணின்றாடுமதைப்போற்றாமல்
இப்பாழாம்வாழ்வைநம்பியேற்றவர்க்கொன்றீயாமல்
துப்பாழாய்வந்தவினைசூழ்ந்தனையேநெஞ்சமே.

4. அன்னம்பகிர்ந்திங்கலைந்தோர்க்குதவிசெயுஞ்
சென்மமெடுத்துஞ்சிவனருளைப்போற்றாமல்
பொன்னுமனையுமெழிற்பூவையரும்வாழ்வுமிவை
இன்னுஞ்சதமாகவெண்ணினையேநெஞ்சமே.

சதம் - துணை.

5. முற்றொடர்பிற்செய்தமுறைமையால்வந்தசெல்வம்
இற்றைநாட்பெற்றோமென்றெண்ணாதுபாழ்மனமே
அற்றவர்க்குமீயாமலரன்பூசையோராமல்
கற்றவர்க்குமீயாமற்கண்மறந்துவிட்டனையே.

அற்றவர் - தரித்திரர்.

6. மாணிக்கமுத்துவயிரப்பணிபூண்டு
ஆணிப்பொன்சிங்காதனத்திலிருந்தாலும்
காணித்துடலைநமன்கட்டியேகைப்பிடித்தால்
காணிப்பொன்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே.

7. சற்கட்டுமோதிரநற்கடுக்கனரைநாண்பூண்டு
திக்கெட்டும்போற்றத்திசைக்கொருத்தரானாலும்
பற்கிட்டவேமனுயிர்பந்தாடும்வேளையிலே
கைச்சிட்டம்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே.

8. முன்னநீசெய்ததவமுப்பாலுஞ்சேருமன்றிப்
பொன்னும்பணிதிகளும்பூவையுமங்கேவருமோ
தன்னைச்சதமாகச்சற்குருவைப்போற்றாமல்
கண்ணற்றவந்தகன்போற்காட்சியற்றாய்நெஞ்சமே.

பூவை - மனைவி.

9. பையரவம்பூண்டபரமர்திருப்பொற்றாளைத்
துய்யமலர்பறித்துத்தொழுதுவணங்காமல்
கையிலணிவளையுங்காலிலிடும்பாடகமும்
மெய்யென்றிறுமாந்துவிட்டனையேநெஞ்சமே.

பை - படம்.

10. மாதுக்கொருபாகம்வைத்தவரன்பொற்றுளேப்
போதுக்கொருபோதும்போற்றிவருந்தாமல்
வாதுக்குத்தேடியிந்தமண்ணிற்புதைத்துவைத்தே
ஏதுக்குப்போகநீயெண்ணினேயேநெஞ்சமே.

11. அஞ்சருளேப்போற்றியைந்துபுலனைத்துறக்க
நெஞ்சேயுனக்குநினைவுநான்சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கிமறுநினைவுவாராமல்
செஞ்சரணத்தாளேச்சிந்தைசெய்வாய்நெஞ்சமே.

12. அற்புதமாயிந்தவுடலாவியடங்குமுன்னே
சற்குருவைப்போற்றித்தவம்பெற்றுவாழாமல்
உற்பத்திசெம்பொன்னுடைமைபெருவாழ்வைநம்பிச்
சர்ப்பத்தின்வாயிற்றவளேபோலானேனே.

13. உற்றூரார்பெற்றூராருடன்பிறப்பார்பிள்ளேகளார்
மற்றூரிருந்தாலென்மாளும்போதுதவுவரோ
கற்றூவிழுந்தவிளங்கன்றதுபோலேயுருகிச்
சிற்றூகிச்சிற்றின்பஞ்சேர்ந்தனேயேநெஞ்சமே

14. வீடிருக்கத்தாயிருக்கவேண்டுமனேயாளிருக்கப்
பீடிருக்கவூணிருக்கப்பிள்ளேகளுந்தாமிருக்க
மாடிருக்கக்கன்றிருக்கவைத்தபொருளிருக்கக்
கூடிருக்கநீபோனகோலமென்னகோலமே.

பீடு - பெருமை.

15. சந்தனமுங்குங்குமமுஞ்சாந்தும்பரிமளமும்
விந்தைகளாப்பூசிமிகுவேடிக்கையொய்யாரக்
கந்தமலர்சூடுகின்றகன்னியருந்தாமிருக்க
எந்தவகைபோனுயென்றெண்ணிலேயேநெஞ்சமே.

கந்தம் - மணம்.

16. காற்றுத்துருத்திகடியவினேக்குள்ளான
ஊற்றைச்சடலத்தையுண்டென்றிறுமாந்து
பார்த்திரங்கியன்னம்பசித்தோருக்கீயாமல்
ஆற்றுவெள்ளம்போலவளாவினேயேநெஞ்சமே.

17. நீர்க்குமிழிவாழ்வைநம்பிநிச்சயமென்றேயெண்ணிப்
பாக்களவாமன்னம்பசித்தோர்க்களியாமல்
போர்க்குளெமதூதன்பிடித்திழுக்கும்போது
ஆர்ப்படுவாரொன்றேயறிந்திலேயேநெஞ்சமே.

18. சின்னஞ்சிறுநுதலாள்செய்தபலவினையான்
முன்னந்தமார்பின்முளைத்தசிலந்திவிம்மி
வன்னந்தளதளப்பமயங்கிவலைக்குள்ளாகி
அன்னம்பகிர்ந்துண்ணவறிந்திலையேநெஞ்சமே.

மார்பில்முளைத்தசிலந்தி - தனம்.

19. ஓட்டைத்துருத்தியையுடையும்புழுக்கூட்டை
ஆட்டுஞ்சிவசித்தரருளைமிசப்போற்றியே
வீட்டைத்திறந்துவெளியையொளியாலமைத்துக்
காட்டும்பொருளிதென்றுகருதிலையேநெஞ்சமே.

20. ஊன்பொதிந்தகாயமுளைந்தபுழுக்கூட்டைத்
தான்சுமந்ததல்லால்நீசற்குருவைப்போற்றாமல்
கான்பரந்தவெள்ளங்கரைபுரளக்கண்டேகி
மீன்பரந்தாற்போலேவிசாரமுற்றாய்நெஞ்சமே.

21. உடக்கையொருக்கியுயிரையடைத்துவைத்த
சடக்கைச்சதமென்றுசார்ந்தங்கிறுமாந்தை
உடக்கைத்தகர்த்தேயுயிரையமன்கொள்கையிலே
அடக்கமாய்வைத்தபொருளங்குவரமாட்டாதே.

22. தித்திக்குந்தேனைத்தெவிட்டாததெள்ளமுதை
முத்திக்குவித்தானமுப்பாழைப்போற்றாமல்
பற்றிப்பிடித்தியமன்பாசத்தாற்கட்டும்வண்ணம்
சுற்றியிருக்கும்வினைசூழ்ந்தனையேநெஞ்சமே.

23. அஞ்செழுத்தாயெட்டெழுத்தாயைம்பத்தோரட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய்நின்றபெருமானைப்போற்றாமல்
வஞ்சகமாயுற்றமுலைமாதர்வலைக்குள்ளாகிப்
பஞ்சரித்துத்தேடிப்பாழுக்கிறைத்தோமே.

24. அக்கறுகுகொன்றைதும்பையம்புலியுஞ்சூடுகின்ற
சொக்கர்திருத்தாளைத்தொழுதுவணங்காமல்
மக்கள்பெண்டிர்சுற்றமுடன்வாழ்வைமிகநம்பியன்பாய்
எக்காலமுமுண்டென்றெண்ணினையேநெஞ்சமே.

அக்கு - சங்குமணி.

25. ஆண்டகுருவினருளைமிகப்போற்றி
வேண்டுங்கயிலாயவீட்டுவெழிபாராமல்
பூண்டகுழன்மாதுநல்லார்பொய்மாய்கைக்குள்ளாகித்
தூண்டில்கப்பட்டுத்துடிகெண்டையானேனே.

26. ஏணிப்பழுவாமிருளையறுத்தாளமுற்றும்
பேணித்தொழுங்கயிலைபேறுபெறமாட்டாமல்.
காணவரும்பொருளாய்க்கண்கலக்கப்பட்டடியேன்
ஆணியற்றமாமரம்போலாகினனேநெஞ்சமே.

27. கோத்துப்பிரகாசங்கொண்டுருகியண்டமெல்லாம்
காத்தபடியேகயிலாயஞ்சேராமல்
வேற்றுருவப்பட்டடியேன்வெள்ளம்போலுள்ளுருகி
ஏற்றுங்கழுவிலிருந்தபிணமானேனே.

உள்ளுருகி - மனமுருகி.

28. நிலைவிட்டுடலையுயிர்நீங்கியகனுமுன்னே
சிலைதொட்டவேடனெச்சிற்றின்றுனைச்சேராமல்.
வலைபட்டுழலுகின்றமான்போற்பரதவித்துத்
தலைகெட்டநூல்துபோற்றட்டழிந்தாய்நெஞ்சமே

சிலைதொட்டவேடன் - கண்ணப்பநாயனார்.

29. முடிக்குமயிர்ப்பொல்லாமுழுக்குரம்பைமின்னரின்
இடைக்குநடைக்குமிதங்கொண்டவார்த்தைசொல்லி.
அடிக்கொண்டதில்லைவனத்தையனேநாயனையேன்
விடக்கையிழந்தமிருகமதுவானேனே,

விடக்கு - மாமிசம்.

30. பூவாணர்போற்றும்புகழ்மதுரைச்சொக்கரது
சீர்பாதம்போற்றிச்சிவலோகஞ்சேராமல்
தாவாரந்தோறுந்தலைபுகுந்தநாய்போலே
ஆசாதநெஞ்சமேயலைந்துதிரிந்தாயே.

பூவாணர் - உலகத்தார்.

31. பத்தெட்டாயீரைந்தாய்ப்பதின்மூன்றிரண்டொன்றாய்
ஒத்திட்டுநின்றதோரோவியத்தைப்போற்றமல்
தெத்திட்டுநின்றதிரிகண்ணிக்குள்ளாகி
வித்திட்டாய்நெஞ்சேவிடவுமறியாயே.

கண்ணி - வலை.

32. அஞ்சுமுருவாகியைமூன்றுமெட்டுமொன்றாய்
மிஞ்சியிருந்தவிளக்கொளியைப்போற்றமல்
பஞ்சிலிடுவன்னியைப்போற்பற்றிப்பிடியாமல்
நஞ்சுண்டசெண்டையைப்போல்நானலைந்துகெட்டேனே.

வன்னி - நெருப்பு.

33. ஊனமுடனேயுடையும்புழுக்கூட்டை
மானமுடனேசுமந்துமண்ணுலகின்மாளாமல்
ஆனதொருபஞ்சவர்களாண்டிருந்ததேசம்விட்டுப்
போனதுபோலேநாம்போய்ப்பிழைத்தோமில்லையே.

பஞ்சவர்கள் - பாண்டவர்.

34. ஊறையிறைக்கின்றவுப்பிருந்தபாண்டத்தை
நாறுமல்நாறிநழுவும்புழுச்கூட்டை
வீறும்புரத்தைவிரும்புகின்றதெப்படியென்
றுறுதநாட்டில்கன்றிருந்தேனில்லையே

புரம் - உடல்.

35. அரியவரிதேடியறியாவொருமுதலைப்
பரிவுடனேபோற்றும்பரஞ்சுடரைப்போற்றாமல்
கரியபெருவாழ்வைநம்பிக்காமத்தழுந்தியே
அரிவாளிற்பட்டகறியதுபோலானேனே.

பரிவு - அன்பு.

36. தந்திரத்தையுன்னித்தவத்தைமிகநிறுத்தி
மந்திரத்தையுன்னிமயங்கித்தடுமாறி
விந்துருகிநாதமாமேலொலியைக்காணாமல்
அந்தரத்தேகோலெறிந்தஅந்தகன்போலானேனே.

37. விலையாகிப்பாணனுக்குவீறடிமைப்பட்டதுபின்
சிலையார்கைவேடனெச்சிற்றின்றானைப்போற்றாமல்
அலைவாய்த்துரும்பதுபோலாணவத்தினாலழுங்கி
உலைவாய்மெழுகதுபோலுருகினையேநெஞ்சமே

நெஞ்சொடுபுலம்பல்
முற்றிற்று.

## பூரணமாலை.

1. மூலத்துதித்தெழுந்தமுக்கோணசக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல்மதிமறந்தேன்பூரணமே.

வாலை - சத்தி.

2. உந்திக்கமலத்துதித்துநின்றபிரமாவைச்
சந்தித்துக்காணாமற்றட்டழிந்தேன்பூரணமே.

3. நாவிக்கமலநடுவெடுமோல்காணமல்
ஆவிகெட்டியானுமறிவழிந்தேன்பூரணமே.

4. உருத்திரனையிருதயத்திலுண்மையுடன்பாராமல்
கருத்தழிந்துநானுங்கலங்கினேன்பூரணமே.

5. விசுத்திமகேசுரனைவிழிதிறந்துப்பாராமல்
பசித்துருகிநெஞ்சம்பதறினேன்பூரணமே.

6. நெற்றிவிழியுடையநிர்மலசதாசிவத்தைப்
புத்தியுடன்பாராமற்பொறியழிந்தேன்பூரணமே.
பொறி - அறிவு.

7. நாதவிந்துதன்னைநயமுடனேபாராமல்
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே.

8. உச்சிவெளியையுறுதியுடன்பாராமல்
அச்சமுடனானுமறிவழிந்தேன்பூரணமே.

9. மூக்குமுனையைமுழித்திருந்துபாராமல்
ஆக்கைகெட்டுநானுமறிவழிந்தேன்பூரணமே.
ஆக்கை - யுடம்பு.

10. இடைபிங்கலையினியல்பறியமாட்டாமல்
தடையுடனேயானுந்தயங்கினேன்பூரணமே.

11. ஊனுக்குணிநின்றுலாவினதைக்காணமல்
நானென்றிருந்துநலனழிந்தேன்பூரணமே

12. மெய்வாழ்வைநம்பிவிரும்பிமிகவாழாமல்
பொய்வாழ்வைநம்பிப்புலம்பினேன்பூரணமே.

13. பெண்டுபிள்ளைதந்தைதாய்பிறவியுடன்சுற்றமிவை
உண்டென்றுநம்பியுடலழிந்தேன்பூரணமே,

14. தண்டிகைபல்லாக்குடனேசகலசம்பத்துகளும்
உண்டென்றுநம்பியுணர்வழிந்தேன்பூரணமே.

15. இந்தவுடலுயிரையெப்போதுந்தான்சதமாய்ப்
பந்தமுற்றுநானும்பதமழிந்தேன்பூரணமே,
பந்தம் - கட்டு.

16. மாதர்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்து
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே.

17. சரியைகிரியாயோகந்தான்ஞானம்பாராமல்
பரிதிகண்டமதியதுபோற்பயனழிந்தேன்பூரணமே.
பரிதி - சூரியன். மதி - சந்திரன்.

18. மண்பெண்பொன்னாசைமயக்கத்திலேவிழுந்து
கண்கெட்டமாடதுபோற்கலங்கினேன்பூரணமே.

19. தனிமுதலைப்பார்த்துத்தனித்திருந்துவாழாமல்
அனியாயமாய்ப்பிறந்திங்கலைந்துநின்றேன்பூரணமே.

20. ஈராறுதண்கலைக்குளிருந்துகூத்தாடினதை
ஆராய்ந்துபாராமல்றிவழிந்தேன்பூரணமே.

21. வாசிதனைப்பார்த்துமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காசிவரைபோய்த்திரிந்துகாலலுத்தேன்பூரணமே.

22. கருவிகடொண்ணூற்றாறிற்கலந்துவிளையாடினதை
இருவிழியாற்பாராமலீடழிந்தேன்பூரணமே.

23. உடலுக்குள்நீநின்றுலர்வினதைக்காணாமல்
கடமலைதோறுந்திரிந்துகாலலுத்தேன்பூரணமே.
கடம் - காடு.

24. எத்தேசகாலமுநாமிறவாதிருப்பமென்று
உற்றுனைத்தான்பாராமலுருவழிந்தேன்பூரணமே.

25. எத்தனைதாய்தந்தையிவர்களிடத்தேயிருந்து
பித்தனாயானும்பிறந்திறந்தேன்பூரணமே.

26. பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்யானுமுன்றன்
பொற்றுணைத்தாள்தந்துபுகலருள்வாய்பூரணமே.

27. உற்றாரழுதலுத்தாருறன்முறையார்சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள்தாயான்பிறந்தலுத்தேன்பூரணமே.

28. பிரமன்படைத்தலுத்தான்பிறந்திறந்துநானலுத்தேன்
உரமுடையவக்கினிதானுண்டலுத்தான்பூரணமே.
உரம் - வலிமை.

29. எண்பத்துநான்குநூறாயிரஞ்செனனமுஞ்செனித்துப்
புண்பட்டுநானும்புலம்பினேன்பூரணமே.

30. என்னையறியாமலெனக்குள்ளேநீயிருக்க
உன்னையறியாமலுடலிழந்தேன்பூரணமே.

31. கருவாயுருவாய்க்கலந்துலகெலாநீயாய்
அருவாகிநின்றதறிகிலேன்பூரணமே.

32. செம்பொற்கமலத்திருவடியைப்போற்றாமல்
பம்பைகொட்டவாடும்பசாசானேன்பூரணமே,
பம்பை - ஓர்வாத்தியம்.

33. எனக்குள்ளேநீயிருக்கவுனக்குள்ளேநானிருக்க
மனக்கவலைதீரவரமருள்வாய்பூரணமே.

34. எழுவகைத்தோற்றத்திருந்துவிளையாடினதைப்
பழுத்றவேபராமற்பயனிழந்தேன்பூரணமே,

35. சாதிபேதங்கள்தனையறியமாட்டாமல்
வாதனையால்நின்றுமயங்கினேன்பூரணமே.

36. குலமொன்றுல்நீபடைத்தகுறியையறியாமல்யான்
மலபாண்டத்துள்ளிருந்துமயங்கினேன்பூரணமே.
மலபாண்டம் - உடம்பு.

37. அண்டபிண்டமெல்லாமணுவுக்கணுவாய்நீ
கொண்டவடிவின்குறிப்பறியேன்பூரணமே.

38. சகத்திரத்தின்மேலிருக்குஞ்சற்குருவைப்போற்றுமல்
அகத்தினுடையாணவத்தாலறிவழிந்தேன்பூரணமே.
சகத்திரம் - ஆயிரம்.

39. ஐந்துபொறியையடக்கியுனைப்போற்றுமல்
நைந்துருகிநெஞ்சநடுங்கினேன்பூரணமே.

40. என்னைத்திருக்கூத்தாவிப்படிநீயாட்டுவித்தாய்
உன்னையறியாதுடலழிந்தேன்பூரணமே.

41. நரம்புதசைதோலெலும்புநாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறியமாட்டாமல்மயங்கினேன்பூரணமே,

42. சிலந்தியுடைநூல்போற்சீவசெந்துக்குள்ளிருந்த
நலந்தனைத்தான்பாராமல்நலனழிந்தேன்பூரணமே.

43. குருவாய்ப்பரமாகிக்குடிலைசத்திநாதவிந்தாய்
அருவாயுருவானதறிகிலேன்பூரணமே

44. ஒளியாய்க்கதிர்மதியாயுள்ளிருக்குமக்கினியாய்
வெளியாகிநின்றவியனறியேன்பூரணமே
கதிர் - சூரியன்.

45, இடையாகிப்பிங்கலையாயெழுந்தசுழுமுனையாய்
உடலுயிராய்நீயிருந்தவுளவறியேன்பூரணமே.

46. மூலவித்தாய்நின்றுமுளைத்துட்ல்தோறும்மிருந்து
காலனெனவழிக்குங்கணக்கறியேன்பூரணமே.

47. உள்ளும்புறம்புமாயுடலுக்குள்நீயிருந்த
தெள்ளளவுநானறியாதிருந்தேனேபூரணமே.

48. தாயாகித்தந்தையாய்த்தமர்கிளைஞர்சுற்றமெல்லாம்
நீயாகிநின்றநிலையறியேன்பூரணமே.

49. விலங்குபுள்ளூர்வனவசரம்விண்ணவர்நீர்ச்சாதிமனுக்
குலங்களெழுவகையில்நின்றகுறிப்பறியேன்பூரணமே.

விலங்கு - மிருகம். புள் - பறவை.

50. ஆணாகிப்பெண்ணுயலியாகிவேற்றுருவாய்
மாணாகிநின்றவகையறியேன்பூரணமே.

அலி - பேடி.

51. வாலையாய்ப்பக்குவமாய்வளர்ந்துகிழந்தானுகும்
பாலையாய்நின்றபயனறியேன்பூரணமே,

52. பொய்யாய்ப்புவியாய்ப்புகழ்வாரிதியாகி
மெய்யாகிநின்றவியனறியேன்பூரணமே.

வாரிதி - கடல்.

53. பூவாய்மணமாகிப்பொன்னாகிமாற்றாகி
நாவாய்ச்சொல்லானநயமறியேன்பூரணமே.

54. முதலாய்நடுவாகிமுப்பொருளாய்மூன்றுலகாய்
இதமாகிநின்றவியலறியேன்பூரணமே.

55. ஊனுயுடலுயிராயுண்ணிறைந்தகண்ணொளியாய்த்
தேனுய்ருசியானதிறமறியேன்பூரணமே.

56. வித்தாய்மரமாய்விளைந்தகனிகாய்பூவாய்ச்
சித்தாகிநின்றதிறமறியேன்பூரணமே.

57. ஐவகையும்பெற்றுலகவண்டபகிரண்டமெல்லாம்
தெய்வமெனநின்றதிறமறியேன்பூரணமே.

58. மனமாய்க்கனவாகிமாய்கையாயுள்ளிருந்து
நினைவாகிநின்றநிலையறியேன்பூரணமே,

59. சத்திசிவமிரண்டாய்த்தான்முடிவிலொன்றாகிச்
சித்திரமாய்நின்றதிறமறியேன்பூரணமே.

60. பொறியாய்ப்புலனுகிப்பூதபேதப்பிரிவாய்
அறிவாகிநின்றவளவறியேன்பூரணமே.

61. வானிற்கதிர்மதியாய்வளர்ந்துபின்னொன்றானதுபோல்
ஊனுடலுக்குள்ளிருந்தவுயிர்ப்பறியேன்பூரணமே.

உயிர்ப்பு - காற்று.

62. பொய்யும்புலையுமிகப்பொருந்திவீண்பேசலன்றி
ஐயோவுனையுணக்கவறிகிலேன்பூரணமே.

புலை - புலாலுண்ணல்.

63. நிரந்தரமாயெங்குநின் றுவிளையாடினதைப்
பரமதுவேயென்னப்பதமறியேன்பூரணமே.

64. கொல்வாய்பிறப்பிப்பாய்கூடவிருந்தேசுகிப்பாய்
செல்வாய்பிறர்க்குட்செயலறியேன்பூரணமே.

65. வாரிதியாய்வையமெல்லாமன்னுமண்டபிண்டமெல்லாஞ்
சாருதியாய்நின்றதலமறியேன்பூரணமே.

66. வித்தாய்மரமாய்வெளியாயொளியாய்நீ
சத்தாயிருந்ததலமறியேன்பூரணமே.

67. தத்துவத்தைப்பார்த்துமிகத்தன்னையறிந்தறிவால்
உய்த்துனைத்தான்பாராமலுய்வாரோபூரணமே.

68. ஒன்றாயுயிராயுடல்தோறுநீயிருந்தும்
என்றுமறியார்களேழைகள்தாம்பூரணமே.

69 நேற்றென்றுநாளையென்றுநினைப்புமறப்பாய்ப்படைத்து
மாற்றமாய்நின்றவளமறியேன்பூரணமே.

70. மனம்புத்திசித்தமகிழறிவாங்காரமதாய்
நினைவாந்தலைமானநிலையறியேன்பூரணமே.

71. உருப்பேதமின்றியுயர்ந்தசத்தபேதமதாய்க்
குருப்பேதமாய்வந்தகுணமறியேன்பூரணமே.

72. சட்சமயபேதங்கள்தான்வகுத்துப்பின்னுமொரு
உட்சமயமுண்டென்றுரைத்தனையேபூரணமே.

சட்சமயம் - ஆறுசமயம்.

73. முப்பத்திரண்டுறுப்பாய்முளைந்துபடைத்துள்ளிருந்த
செப்பிடுவித்தைத்திறமறியேன்பூரணமே.

74. என்னதான்கற்றாலென்னெப்பொருளும்பெற்றாலென்
உன்னையறியாதாருய்வரோபூரணமே.

75. கற்றறிவோமென்பார்காணார்களுன்பதத்தைப்
பெற்றறியார்தங்களுக்குப்பிறப்பறுமோபூரணமே.

76. வானென்பாரண்டமென்பார்வாய்ஞானமேபேசித்
தானென்பார்வீணர்தனையறியார்பூரணமே.

77. ஆதியென்பாரந்தமென்பாரதற்குணடுவாயிருந்த
சோதியென்பார்நாதத்தொழிலறியார்பூரணமே.

78. மூச்சென்பாருள்ளமென்பார்மோனமெனுமோட்சமென்பார்
பேச்சென்பாருன்னுடையபேரறியார்பூரணமே.

79. பரமென்பார்பானுவென்பார்பாழ்வெளியாய்நின்ற
வரமென்பாருன்றன்வழியறியார்பூரணமே

80. எத்தனைபேரோவெடுத்தெடுத்துத்தானுரைத்தார்
அத்தனைபேர்க்கொன்றுனதறிகிலேன்பூரணமே.

81. நகாரமகாரமென்பார்நடுவேசிகாரமென்பார்
வகாரயகாரமென்பார்வகையறியார்பூரணமே.

82. மகத்துவமாய்க்காமமயக்கத்துக்குள்ளிருந்து
பகுத்தறியமாட்டாமற்பயனழிந்தேன்பூரணமே.

83. உண்மைப்பொருளையுகந்திருந்துபாராமற்
பெண்மயக்கத்தாலேபிறந்திறந்தேன்பூரணமே.

84 வாயாரவாழ்த்திமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காயமெடுத்துக்கலங்கினேன்பூரணமே.

85. சந்திரனைமேகமதுதான்மறைத்தவாறதுபோற்
பந்தமுறயானுமுனைப்பார்க்கிலேன்பூரணமே.

86. செந்தாமரைத்தாளைத்தினந்தினமும்போற்றாமல்
அந்தரமாய்நின்றிங்கலைந்தேனுன்பூரணமே.

87. நீர்மேற்குமிழிபோல்நிலையற்றகாயமிதைத்
தாரகமென்றெண்ணிநான்றட்டழிந்தேன்பூரணமே

88 நெஞ்சமுருகிநினைந்துனைத்தான்போற்றிநெடு
வஞ்சகத்தைப்போக்கவகையறியேன்பூரணமே.

89. எள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைந்திருந்த
துள்ளமறியாதுருகினேன்பூரணமே.

90. மாயாப்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்தே
யோயாச்சனனமொழித்திலேன்பூரணமே.

91. பூசையுடன்புவனபோகமெனும்போக்கியத்தால்
ஆசையுற்றேநானுமறிவழிந்தேன்பூரணமே.

92. படைத்துமழித்திடுவாய்பார்க்கிற்பிரமாவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ்சீவியாத்துலங்குவிப்பாய்பூரணமே.

93. மந்திரமாய்ச்சாத்திரமாய்மறைநான்காய்நீயிருந்த
தந்திரத்தைநானறியத்தகுமோதான்பூரணமே.

94. அல்லாய்ப்பகலாயனவரதகால்மெனுஞ்
சொல்லாய்ப்பகுத்ததொடர்பறியேன்பூரணமே

95. நரகஞ்சுவர்க்கமெனநண்ணுமிரண்டுண்டாயும்
அரகராவென்பதறிகிலேன்பூரணமே

96. பாவபுண்ணியமென்னும்பகுப்பாய்ப்படைத்தழித்திங்
காவலையுண்டாக்கிவைத்தவருளறியேன்பூரணமே.

97. சாந்தமென்றுங்கோபமென்றுஞ்சாதிபேதங்களென்றும்
பாந்தமென்றும்புத்தியென்றும்படைத்தனையேபூரணமே.
பாந்தம் - ஒழுங்கு.

98. பாசமுடலாய்ப்பசுவதுவுந்தானுயிராய்
நேசமுடனீபொருளாய்நின்றனையேபூரணமே.

99. ஏதிலடியாரிரங்கியிகத்தில்வந்துன்
பாதமதில்தாழப்பரிந்தருள்வாய்பூரணமே.
இகம் - இம்மை.

100. நானேநீநீயேநானுமிரண்டுமொன்றானல்
தேனின்ருசியதுபோற்றெவிட்டாய்நீபூரணமே.

101. முடிவிலொருசூனியத்தைமுடித்துநின்றுபாராமல்
அடியிலொருசூனியத்திலலைந்தேனேபூரணமே.

102. பூரணமாலைதனைப்புத்தியுடனோதினர்க்குத்
தாரணியில்ஞானந்தழைப்பிப்பாய்பூரணமே.

பூரணமாலைமுற்றிற்று.

## நெஞ்சொடுமகிழ்தல்.

1. அன்றுமுதலின்றளவுமாக்கையொடுகூட்சியுமாய்
நின்றநிலையறியநேசமுற்றாய்நெஞ்சமே.

2. அங்கங்குணர்வாயறிவாகியேநிரம்பி
எங்கெங்குமானதிலேயேகரித்தாய்நெஞ்சமே,
ஏகரித்தல் - ஒன்றுபடல்.

3. அலையாதபேரின்பவானந்தவெள்ளத்தில்
நிலையாயுருவிறந்துநின்றனையேநெஞ்சமே.

4. பாராமற்பதையாமற்பருகாமல்யாதொன்றும்
ஓராதுணர்வுடனேயொன்றினையேநெஞ்சமே.

5. களவிறந்துகொலையிறந்துகாண்பனவுங்காட்சியும்போ
யளவிறந்துநின்றநிலையன்புற்றாய்நெஞ்சமே.

6. பேச்சிறந்துசுட்டிறந்துபின்னிறந்துமுன்னிறந்து
நீச்சிறந்துநின்றநிலைநேசமுற்றாய்நெஞ்சமே.

7. விண்ணிறந்துமண்ணிறந்துவெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றநிலையேகரித்தாய்நெஞ்சமே.

8. பார்த்தவிடமெங்கும்பரமெனவேயுட்புறம்புங்
கோத்தபடியுண்மையெனக்கொண்டனையேநெஞ்சமே.

9. ஊரிறந்துபேரிறந்துவொளியிறந்துவெளியிறந்து
சீரிறந்துநின்றநிலேசேர்ந்தனையேநெஞ்சமே

10. ஆண்பெண்ணலியென்றழைக்கவரிதாய்நிறைந்து
காணவரிதாயவிடங்கண்ணுற்றாய்நெஞ்சமே.

11 ஆங்காரமச்சமகற்றியறிவினொடு
தூங்காமற்றூங்கிச்சுகம்பெற்றாய்நெஞ்சமே.

12. ஆதியாய்நின்றவகண்டப்ரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ்சார்வுற்றாய்நெஞ்சமே.

13. விருப்புவெறுப்பில்லாதவெட்டவெளியதனில்
இருப்பேசுகமென்றிருந்தனையேநெஞ்சமே.

14. ஆருமுறுப்பேரண்டத்தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்னநிலேபெற்றாய்நெஞ்சமே.

15. உடனாகவேயிருந்துமுணரவரியானோடு
கடனீருமாறும்போற்கலந்தனையேநெஞ்சமே.

16 நெடியகத்தைப்போக்கிநின்றசழக்கறுத்துப்
படிகத்துக்கும்பம்போற்பற்றினையேநெஞ்சமே.

சழக்கு - குற்றம்.

17. மேலாகியெங்கும்விளங்கும்ப்ரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற்பற்றினையேநெஞ்சமே.

18. நீரொடுதண்ணாலிவிண்டுநீரானவாறேபோல்
ஊரொடுபேரில்லானொடொன்றினையேநெஞ்சமே.

ஆலி - ஆலாங்கட்டி.

19. இப்பிறப்பைப்பாழ்படுத்தியிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே.

20. மேலாம்பதங்களெல்லாம்விட்டுவிட்டாராய்ந்து
நாலாம்பதத்தினடந்தனையேநெஞ்சமே.

21. கடங்கடங்கடோறுங்கதிரவனூடாடி
அடங்குமிடந்தானறிந்தன்புற்றாய்நெஞ்சமே.

22. கற்றவனாய்க்கேட்டவனாய்க்காணனாய்க்காண்பவனாய்
உற்றவனாய்நின்றநிலேயொன்றுபட்டாய்நெஞ்சமே.

23. நாலுவகைக்கரண நல்குபுலனைந்துமொன்றாய்ச்
சிலமுற்றுநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே.

24. விட்டிடமுந்தொட்டிடமும் விண்ணிடமுமண்ணிடமுங்
கட்டுமொருதன்மையெனக்கண்ணுற்றாய்நெஞ்சமே.

25. எங்கெந்தநாளுமிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீதமாக்கினையேநெஞ்சமே.

26 வாக்கிறந்துநின்றமனோகோசரந்தனிலே
தாக்கறவேநின்றநிலைதலைப்பெய்தாய்நெஞ்சமே.

27. எத்தேசமுநிறைந்தேயெக்காலமுஞ்சிறந்து
சித்தாயசித்தினிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே.

28. தாழாதேநீளாதேதன்மயமதாய்நிறைந்து
வாழாதேவாழமருவினையேநெஞ்சமே.

தாழ்தல் - தங்குதல்.

29. உள்ளும்புறம்புமுவட்டாதவானந்தக்
கள்ளருந்திநின்றநிலைகண்ணுற்றாய்நெஞ்சமே.

30. வாதனைபோய்நிட்டையும்போய்மாமௌனராச்சியம்போய்
பேதமறநின்றவிடம்பெற்றனையேநெஞ்சமே.

31. இரதம்பிரிந்துகலந்தேகமாம்வாறேபோல்
விரகந்தவிர்ந்தணல்பால்மேவினையேநெஞ்சமே.

விரகம் - காமநோய்.

32. சோதியான்சூழ்பனிநீர்சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள்நீபெற்றாய்நெஞ்சமே.

நெஞ்சொடுமகிழ்தல்முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## உடற்கூற்றுவண்ணம்.

---

தன தன தான, தன தன தான, தந்த தனந்தன தந்த தனந்த,
தனன தனந்த, தனன தனந்த, தானன தானன தானதனந்த,—
தந்தனதானதனதானனா.

1. ஒருமடமாது மொருவனுமாகி, யின்பசுகந்தரு மன்புபொருந்தி
உணர்வுகலங்கி யொழுகியவிந்து, ஊறுசுரோணித மீதுகலந்து

பனியிலோர்பாதிசிறுதுளிமாது, பண்டியில்வந்து புகுந்துதிரண்டு
பதுமவரும்பு கமடமிதென்று, பார்வைமெய்வாய்செவிகால்கைகளென்ற
உருவமுமாகி யுயிர்வளர்மாத, மொன்பதுமொன்று நிறைந்துமடந்தை
உதரமகன்று புவியில்விழுந்த, யோகமும்வாரமு நாளுமறிந்து
மகளிர்கள்சேனை தரவணையாடை, மண்படவுந்தி யுதைந்துகவிழ்ந்து
மடமயில்கொங்கை யமுதமருந்தி, யோரறிவீரறி வாகிவளர்ந்து
ஒளிநகையூற விதழ்மடவாரு, வந்துமுகந்திட வந்துதவழ்ந்து
மடியிலிருந்து மழலைமொழிந்து, வாவிருபோவென நாமம்விளம்ப
உடைமணியாடை யரைவடமாட, வுண்பவர் தின்பவர் தங்களொடுண்டு
தெருவிலிருந்து புழுதியளைந்து, தேடியபாலரொ டோடிநடந்து
அஞ்சுவயதாகிவிளையாடியே.

2. உயர்தருஞான குருவுபதேச, முந்தமிழின்கலை யுங்கரைகண்டு
வளர்பிறையென்று பலரும்விளம்ப, வாழ்பதினாறு பிராயமும்வந்து
மயிர்முடிகோதி யறுபதநீல, வண்டிமிர்தண்டொடைகொண்டைபுனைந்து
மணிபொனிலங்கு பணிகளணிந்து, மாகதர்போகதர் கூடிவணங்க
மதனசொரூப னிவனெனமோக, மங்கையர்கண்டு மருண்டுதிரண்டு
வரிவிழிகொண்டு சுழியவெறிந்து, மாமயில்போல்வர் போவதுகண்டு
மனதுபொறாம லவர்பிறகோடி. மங்கலசெங்கல சந்திகழ்கொங்கை
மருவமயங்கி யிதழமுதுண்டு, தேடியமாமுதல் சேரவழங்கி
ஒருமுதலாகி முதுபொருளாயி, ருந்ததனங்களும் வம்பிலிழந்து
மதனசுகந்த விதனமிதென்று, வாலிபகோலமும் வேறுபிரிந்து
வளமையுமாறி யிளமையுமாறி, வன்பல்விழுந்திரு கண்களிருண்டு
வயதுமுதிர்ந்து நரைதிரைவந்த, வாதவிரோத குரோதமடைந்து
செங்கையினிலோர்தடியுமாகியே.

3. வருவதுபோவ தொருமுதுகூனு, மந்தியெனும்படி குந்திநடந்து
மதியுமழிந்து செவிதிமிர்வந்து, வாயறியாமல் விடாமன்மொழிந்து
துயில்வருநேர மிருமல்பொருது, தொண்டையுநெஞ்சு முலர்ந்துவறந்து
துகிலுமிழந்து சுணையுமழிந்து, தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு
கலியுகமீதி லிவர்மரியாதை, கண்டிடுமென்பவர் சஞ்சலமிஞ்ச
கலகலவென்று மலசலம்வந்து, கால்வழிமேல்வழி காரநடந்து
தெளிவுமிராம லுரைதடுமாறி, சிந்தையுநெஞ்சு முலைந்துமருண்
டிடமுமலைந்து மிகவுமலைந்து, தேறிநலாதர வேதெனநொந்து

மறையவன்வேத னெழுதியவாறு, வந்ததுகண்டமு மென்றுதெளிந்து
இனியெனகண்ட மினியெனதொந்த, மேதினிவாழ்வு நிலாதினிநின்ற
கடன்முறைபேசு மெனவுரைநாவு, றங்கிவிழுந்துக்க கொண்டுமொழிந்து
கடைவழிகஞ்சி யொழுகிடவந்து, பூதமுநாலு சுவாசமுநின்று.

நெஞ்சுதமோறிவருநேரமே.

4. வளர்பிறைபோல்வெயிறுமுரோம,முஞ்சடையுஞ்சிறுகுஞ்சியும்விஞ்ச
மனதுமிருண்ட வடிவுமிலங்க, மாமலைபோல்யமதூதர்கள்வந்து
வலைகொடுவீசி யுயிர்கொடுபோக, மைந்தரும்வந்து குனிந்தழநொந்து
மடியில்விழுந்து மனைவிபுலம்ப, மாழ்கினரோ யிவர்காலமறிந்து
பழையவர்காணு மெனுமயலார்கள், பஞ்சுபறந்திடநின்றவர்பந்தர்
இடுமெனவந்துபறையிடமுந்த, வேபிணம்வேக விசாரியுமென்று
பலரையுமேவி முதியவர்தாமி, ருந்தசவங்கழு வுஞ்சிலொன்று
பணிதுகில்தொங்கல் களபமணிந்து, பாவகமேசெய்து நாறுமுடம்பை
வரிசைகெடாம லெடுமெனவோடி, வந்திளமைந்தர் குனிந்துசுமந்து
கடுகிநடந்து சுடலையடைந்து, மானிடவாழ்வென வாழ்வெனநொந்து
விறகிடைமூடி யழல்கொடுபோட, வெந்துவிழுந்து முறிந்துநிணங்க
ளுருகியெலும்பு கருகியடங்கி, யோர்பிடிநீறு மிலாதவுடம்பை

நம்புமடியேனையினியாளுமே.

பட்டணத்துப்பிள்ளையார்
மூலமும் உரையும்
முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பட்டினத்துப்பிள்ளையார்

என்றுவழங்கும்

# திருவெண்காடர்சரித்திரம்.



தெய்வத்தமிழ்நூலின் பொருளைப்போல விசாலித்தும், அந்தநூல்களைக் கற்றறிந்த பெரியோருடைய புகழைப்போலவுயர்ந்தும், அவர்களுடைய நற்குணத்தைப்போலத் தழைத்தும், தண்ணளியோடு சாந்தமணம் வீசிய அவருடைய மனத்தைப்போல மலர்ந்தும் இருக்கிற நைமிசாரணியத்தில் வாசம்செய்கின்ற முனிவர்கள், சகலசாஸ்திரப்பொருள்களையும் ஐயம் திரிபுகளறக்கற்றறிந்து, உண்மையாகப் பரம்பொருளின்னதென்று நிச்சயித்த வேதவியாசமுனிவரது மாணாக்கரும், தமது ஆசிரியரிடத்தே சகலசாஸ்திரார்த்தங்களையும் நன்றாகக்கற்றுக் கேட்டறிந்தவரும் ஆகிய சூதபுராணிகர் தாம்இருக்குமிடத்தில் எழுந்தருளக்கண்டு, எதிரே சென்று வணங்கி உபசரித்து, தாமிருக்கும்ஆசிரமத்திற்குஅழைத்து வந்து, உயர்ந்தஆசத்தில் எழுந்தருளப்பண்ணி, மலர்முதலியவற்றால் பூசித்துச்சூழ இருந்துகொண்டு, அவரை நோக்கி, சகலசாஸ்திரார்த்த வேத்தாவாகிய முனிவரே, யாம் உய்யும்படி இதுவரையில் தேவரீர் எங்களுக்கருள்செய்த அற்புதமான கதைகள் அநேகங்களைக்கேட்டு மனக்களிப்படைந்தோம், ஆயினும் அவைகள் தேவரீர் சொல்லியருளுந்திறத்தால் எம்து செவிகளுக்கும் மனதுக்கும் அமுதம் போல இன் சுவையைத்தராநின்றன, அவற்றுள் ஸ்ரீ சுதரிசநருடைய திவ்ய சரித்திரத்தைச்சொல்லி முடித்தபிறகு, சிவாநுக்கிரகத்தால் பரிபக்குவமடைந்திருந்த குபேரன் இந்தப்பூலோகத்தில், தென்றிசையிலுள்ள, காவிரிப்பூம் பட்டினத்தில் வைசியனாகப்பிறந்து சிவபிரானைத் தனக்குமகவாகப் பெற்று வாழ்ந்திருந்து, சிவஞானியாகி, சித்திமுத்திகளையடைந்த தாகத்திருவுளம்பற்றினீர், அந்தச்சரிதத்தைச்சவிஸ்தாரமாகஎங்களுக்குஅருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அந்தச் சூதமுனிவர், அந்த நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்களுடைய வேண்டுகோளுக்கிசைந்து, அடியில் வருமாறு சொல்லத்தொடங்கினர்.

கேளும் முனிவர்களே, இந்தச்சரித்திரம், முன்னொருகாலத்தில், சாமவேதசாகையைச்சார்ந்த சாந்தோக்கியம் முதலிய உபநிடதங்களால் சுத்தஞானியென்று புகழ்ந்து சொல்லப்பட்ட சிவஞானமுனிவராகிய உபமந்யு பகவானால், தன்மாணாக்கர்களாகியபலமுனிவருக்குச்சொல்லப்பட்டதென்று பவிஷ்ய புராணத்து உத்தரபாகத்தில் சொல்லப்பட்டுளது. எப்படியெனின்,

தன்னையடைந்தவர்க்குப் பிறவிப்பிணிமுதலிய வற்றை நீக்கிநித்யாநந்தத்தைக்கொடுக்கும் சிவபெருமான்போல, எல்லாவுலகங்களும் அழிந்தகாலத்திலும் அழியாதிருக்கிற கைலாசமலையின் சாரலில், சுகரூபமான ஒருவனமுண்டு, அத்தவனத்தில், உபமந்யுபகவான், பலமுனிவர்கள் தம்மைச்சூழ எழுந்தருளியிருக்குங்காலத்தில், அந்தமுனிவர்கள் பலரும்அந்த உபமந்யு பகவானைவணங்கி, ஐயரே! ஸ்ரீ பக்தபரமேச்சுரர் என்றுவேதாகமங்களால் புகழப்பட்ட சாதுக்களாகிய சிவனடியார்கள் சரித்திரங்களை எங்களுக்குச் சொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பம் செய்தார்கள். அதைக்கேட்ட உபமந்யுபகவான், ஓ முனிவர்களே, நீங்கள் வினவிய வண்ணமே உங்களுக்குச் சொல்லத்தகுந்ததாகிய ஒரு சிவஞானியார் சரித்திரமுண்டு, அது ஸ்ரீ நந்தியடிகளது அருள்பெற்ற சநத்குமாரர்வழியில் வழங்கியது. அதற்கு சுவேதாரண்யசரிதம் என்றும் திருவெண்காட்டடிகள் சரித்திரம் என்றும் பெயர்கூறப்படும். அந்தச்சரித்திரத்தை யாம்சொல்ல நீங்கள் சாவதானசித்தத்தோடிருந்து கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர்.

ஓ முனிவர்களே, முன்னொருகற்பத்தில் குபேரபதவியைப்பெற்றிருந்த ஒருவர், சிவபெருமானுக்குத் தோழனென்று உலகுபுகழும்படி, சிவபெருமானிடத்து அன்புபெருகவாழும் நாளில், ஒருநாள் சிவதரிசநத்தின் பொருட்டுக் கைலாசத்துக்குச் சென்றனர். அப்பொழுது, அவ்விடத்தில், சிவபெருமான் சகலமான தேவரிஷிசமூஹங்கள் தம்மைச்சூழ்ந்து வரவும், தமது தோழர் என்கிற குபேரனர் பின்தொடர்ந்துவரவும் எழுந்தருளி, வியாக்கிரபாதர் பேரன்புசெய்து பூசித்து வருங்காரணத்தால், பெரும்பற்றப்புலியூர், என்னும் பெயர்பெற்ற சிதம்பரமஹாக்ஷேத்திரத்தில் வீற்றிருந்தருளினர்.

அந்நாளில், குபேரனராகிய தோழர், சிவபெருமானரைவணங்கி, சுவாமீ,இத்திருப்பதியிற்போலவே மற்றையதிருப்பதிகளிலும் போய்,தேவரீருடைய திருக்கோலங்களைத்தரிசிக்கவேண்டுமென்று என்மனம் விரும்புகின்றது என்று விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்ட சிவபெருமான், அந்த அன்பர்குறையைமுடிக்கத் திருவுளங்கொண்டு, ஸ்ரீ நந்திதேவர்முதலியபிரமத கணங்கள் சூழ அந்தத் திருப்பதியினின்றும் எழுந்தருளி, ஸ்ரீ சுவேதாரண்யம் என்னும்வடமொழிப் பெயரையுடைய திருவெண்காட்டையடைந்து வீற்றிருந்தருளினர்.

அப்போது சிவபெருமான் பக்கலாகவருகின்ற தோழராகியகுபேரனார் தமக்கு உத்தம சத்திநிபாதம் பிறந்து ஞானசன்மார்க்கத்தையடையும் பரிபக்குவம் சமீபித்திருந்தபடியால் அந்தத்திருவெண்காட்டருகே யுள்ளகாவிரிப்பூம்பட்டினத்தைக்கண்டு, அதனிடத்து மிகவும் விருப்பம்வைத்தார். ஏனெனில், முற்காலத்தில் தேவேந்திரன், தன்தாயாகிய அதிதியானவள் தினந்தோறும் சிவதரிசநம் செய்யும்பொருட்டுத் திருச்சாய்க்காட்டுக்கு வருவதைக்கண்டு, அவளது வருத்தம் நீங்கும்படி அந்த ஆலயத்தைத் தனது நகரத்துக்கு எடுத்துச்செல்ல வேண்டிவந்து, அதை அடியோடுபேர்த்தெடுத்தபோது, பார்வதியார் அஞ்சிப்புறத்தேவந்து கூகூவென்று ஓசைகாட்ட, சிவபெருமான்கண்டு, ஆலயத்தை யெடுக்காதபடி இந்திரனைத்தடுத்தருளி, அவனுக்கும் அவன் தாய்க்கும் அருள்செய்ய, இந்திரன் அவ்விடத்தில் முன்போலவே ஆலயப்பிரதிஷ்டைசெய்யும் பொருட்டு ஒரு நகரத்தையுண்டாக்கி, வேதியர் முதலிய உயர்குலத்தார் நால்வரையும் அமைத்து, வைசியர்மரபு மிகவும் ஓங்கவளம்படுத்தி, சாயாவநம் என்னும் வடமொழிப்பெயருடைய திருச்சாய்க்காட்டில் அமுதவண்ணப்பிரானுக்கும், கூகூ என்ற காரணத்தால் "கூவென்ற மென்மொழிப்பிராட்டி"என்று வழங்கும் எம்பிராட்டிக்கும் ஆலயம் சமைத்து, நித்திய நைமித்திகமுதலிய சிறப்புக்களைவழுவாது நடத்தி, திருப்பல்லவனீச்சரம் முதலிய மற்ற ஆலயப்பிரதிஷ்டைத் திருப்பணிகளையும் நிறைவேற்ற வருத்தான்.

அப்பால், அந்த நகரம் தினக்கிரமமாய், மிகவும் செழிப்பையடைந்து, தன்னினும் மேற்பட்ட நகரமொன்றில்லாதபடி விளங்கிற்று. அந்த நகரத்திலுள்ளார் ஒருபொருளைவிரும்பி வேறுநகரத்துப் புகார் ஆதலால் அந்த நகரத்துக்குப் புகார் எனப்பெயருண்டாயிற்று.

## குபோனர்திருவவதாரம்.

அந்தக்காவிரிப்பூம் பட்டினமானது இயற்பகை நாயனார் திருவவதாரம் செய்யப்பெற்றதாதலால், அரன்தோழராகிய குபேரனார்க்கு அவ்விடத்தில் மிகுதியாகிய விருப்பமுண்டாகி, சிவபெருமானைவணங்கி, எம்பெருமானே, இந்தத்திருப்பதியில் சிலகாலம் வசிக்கவேண்டுமென்னும் விருப்பம் அடியேனுக்குண்டாயிருக்கின்றது,திருவுளமிரங்கி இவ்வாறே யாகவென்று கட்டளையிடவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்ட சிவபெருமான், குபேரனாரைநோக்கி, ஐயா, இந்தக்கருமபூமியின் வாழ்க்கையானது, போகசரீரமுடையவனாய்ப் போக பூமியில்வாழ்கின்றவனுக்கு அடாததாயினும், உனக்கு விருப்பமுண்டானதினால், மாநுடசரீரம் பெற்று இவ்விடத்தில் வாழக்கடவையென்றருளிச்செய்தார். அப்போது குபேரனார் பிறத்தலுக்கஞ்சி! எம்பெருமானே, தேவரீரது அரிதாகிய திருத்தொண்டினைப் பிரியநேர்ந்ததாயினும், மாநுடப்பிறவியையடைந்து செல்வத்

தால் மயங்கும்போது, தேவரீரே அடியேனுக்கு ஒரு புதல்வனாகப்பிறந்து, உண்மை நிலையை அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தலும், சிவபெருமானும் அவ்வாறே யாகவெனத்திருவாய் மலர்ந்தருளி, எம்பெருமாட்டியோடு கூடி மற்றைத்திருப்பதிகளெல்லாவற்றையும் கண்டுசென்று, திருக்கயிலாயமடைந்து வீற்றிருந்தருளினார்.

## பட்டினத்துப்பிள்ளையார்திருவவதாரம்.

அப்பால் அந்தக்குபேரனார், சிவபெருமானது திருவாணையின்படி யாவரிடத்திற்சென்று பிறப்போம் என்னும் விசாரத்தோடிருக்கும்போது, அந்தப் புகார்ப்பட்டினத்தில், வைசியமரபில் அவதரித்துச் சிவபத்திமுதலிய நற்குணக்கடலாய் விளங்கும் சிவநேசர் என்வர், அழகு கற்பு நற்குணம் முதலிய வற்றிற் சிறந்து விளங்கும் ஞானகலாம்பை என்னும் பெயரையுடைய மனைவியாரோடும் கூடி இல்லறம்வழுவாது நடத்தி ஒரு புதல்வியைமாத்திரம் பெற்று, வீடுபேற்றுக்குரிய புதல்வனில்லையேயென்று மனம் வருந்தி, புதல்வனைப்பெறும் பொருட்டுச் செய்யஅடுப்பனவாகிய பலவகை நோன்புகளையும் நோற்றிருந்தனர்.

அதைக்கண்ட குபேரனாரும், இவர்களிடத்து நாம்புதல்வனாகப் பிறப்பதேநன்மை யென்றுதுணிந்து, அந்தஞானகலாம் பையாரது வயிற்றில் பிரவேசித்தார். அப்போது அந்த அம்மையார்முத்துக்களைக் கருவில்வைத்தசெங்கரும்புபோலத் திருவயிறுவாய்த்து விளங்கினர். அதைக்கேள்விப்பட்ட சுற்றத்தார்முதலியோர்பெருமகிழ்ச்சிகொண்டிருந்தனர். மாதம்வளருந்தோறும் சிவநேசனாரும் கருப்பக்கடன்களாகிய சீமந்தம்முதலிய வற்றைநிறைவேற்றி வந்தனர். ஞானகலாம்பையாரும் கருவளரவளர, மேனிவெளுத்தல் முதலிய குறிகளையடைந்து பத்துமாதம் நிரம்புதலும், நன்மையாகிய திதிவார நக்ஷத்ரயோக கரணங்களமைந்த சுபதினத்தில் சுபலக்நத்தில் வலம்புரிச்சங்கம் முத்தினைப்பெற்றாற்போலப் புதல்வனைப்பெற்றார். இதைக்கேட்ட சிவநேசனார் காவிரியாற்றிற்குப்போய் நீராடி,பிதிரர்க்கு நீர்க்கடன் முதலியவற்றைச்செய்து, வீட்டிற்குவந்து, வேதியர்முதலானோர்க்குப் பலவகையாகிய தானங்களைச்செய்து, சோதிடநூல் வல்லோரைஅழைப்பித்துச் சாதகருமஞ்செய்வித்து, புத்ரோத்ஸவம்கொண்டாடி, அப்பால் நாமகரணம் முதலியவைகளை நிறைவேற்றி, மனைவியாரும் தாமுமாக நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்து வந்தார்கள். திருவெண்காடரும் ஐந்துவயதையடைந்தனர். இப்படியிருக்குங்காலத்தில், இவர்தந்தையாராகிய சிவநேசர் சிவபதப்பேற்றையடைந்தனர். அவர்க்குத் திருவெண்காடர் தமது அன்னையாரேவற்படி சுற்றத்தார் சார்புபெற்றுச்செய்யவேண்டிய நீர்க்கடன்முதலியற்றைக் குறைவறநடத்தினார். அதின்பிறகு ஞானகலாம்பையார் புதல்வனைப் பள்ளியிலமைத்தார். திருவெண்காடரும்

தம்தவக்குறை முடிக்கவந்தவராதலால், அந்த இளமைப்பருவத்திற்றானே ஆசாரிடனை முன்னிலையாக்கிக்கொண்டு எல்லா நூல்களையும் கற்றுவல்லராய்ப் பூர்வவாசனையால் சிவஞானச்செல்வருமாகி விளங்கினர். இந்தச் சிவஞானம் வாயிலாக இவர்க்கு உலகப்பற்றறுதியும் சிவபூசைவிருப்பமு முண்டாயின. பிறகு சிவபூசைமுதலிய எல்லாம் ஆசாரியமுகத்தாற் பெற்றாலன்றிப்பயனில்லை யெனத்துணிந்து, ஆசாரியன் எவ்வாறு நமக்குக்கிடைப்பனோ என்று இரவும் பகலுமேக்கமுற்று இளைத்திருக்கும் இவரை அன்னையார்நோக்கி, அப்பாகுழந்தாய், வரவர உன்திருமேனி இளைத்தற்குக் காரணமென்ன, உன்வயிறு குழைந்துவாடுகின்றதே, உண்ண எழுந்திரு ஐயனேயென்றழைக்க, இவர் குருமோகங்கொண்ட குணக்குன்றமாதலால், உணவில்விருப்பமின்றி, தாயே; எனக்கு இன்றுபசியில்லை, நாளை உண்பேன், நீர்வருந்தா திரும் என்று சொல்லி, சிவசிந்தனையோடு படுத்து றங்கிக்கிடந்தார்.

## பட்டினத்தடிகள்கனவில்சிவாநுக்ாஹம்பெறல்.

அப்படியிருக்க, இவரைமுன்னமே தடுத்தாள்வோமென்று திருவருள் செய்திருந்தபெருங்கருணைக்கடலாகியசிவபெருமானார்இவரதுபருவத்துக்கு மேற்பட்டஅதிதீவிரபக்குவமுதலியவற்றைக்கண்டு, திருவருள் சுரந்து, அன்றிரவில்இவரது கனவில் ஒருமுதுவேதியராய் எழுந்தருளி, ஐயா, குழந்தாய், வெண்காடா, மேனியிளைத்தனையோ, என்றுவருடலும், இவர் துணுக்குற்று எழுந்து, அந்தக்கனவே நனவாகக் காந்தத்தைக்கண்ட இரும்புபோலக் குழைந்துருகித் திருவடிபற்றிப் பலமுறை வணங்கித்துதித்து நின்று ஆற்றாமைமேலிட்டுச் சொல்லுவாராயினர்.

எம்பெருமானே, எங்கிற்றது, இங்குவர எத்தவமுடையேன், இனியுன்னைப்பிரிந்தாற்றேன், என்னைக்கைவிடேல் என்றுபலவகையாய்த்துதித்து, திருவடியைப்பற்றிப்பரிசபித்தலும், வந்த ஐயர், இவரை அன்போடுநோக்கி, உன் அமுதவாசகம்இனிதினிது என்று இன்மொழிகூறி, இவரதுகருத்தினுக்கிசைந்தவண்ணமாகத் திருக்குறிப்புக்காட்டிநிற்றலும், திருவெண்காடர் மீட்டும் ஐயனைவணங்கிநின்று, இன்றன்றோ யான் தந்யனானேன், என்செல்வமுதலியயாவும் தேவரீருடையனவே ஆதலால் அவற்றை ஏற்றுக்கொண்டருள வேண்டுமென்று பலமுறைதுதித்துப்பரவசப்பட்டுநிற்க. ஐயர் இவரைநோக்கி, அப்பா! குழந்தாய்! இந்திரபதம் முதலிய செல்வங்களெல்லாம் நிலையுடையன அல்ல ஆதலால் இச்செல்வம் எனக்குயாதுக்கு, ஆனால் இகத்தில் குருலிங்க ஜங்கம ஆராதனங்களுக்குக் கருவியாயிருத்தலால், இச்செல்வத்தைநீயேவைத்துக்கொண்டு மேற்படி விஷயங்களில் உபயோகித்துவருவையாயின் நீ யெண்ணியவை யெல்லாம் அடைவாயென்று திருவாய்மலர்ந்தருளினார்.

அதைக்கேட்ட மாத்திரத்தில், திருவெண்காடர்முன்னமேசிவார்ச்சனையில் விருப்புற்றிருந்தவராதலால் ஐயரைப்பலமுறைவணங்கித்துதித்து, அடியேன் எப்படி, எதுகொண்டு, எவ்விடத்துப்பூசிப்பது, கருணைசெய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துநிற்க, ஆட்கொள்ள வந்த ஐயர் இவரை நோக்கி, அப்பா குழந்தாய்! நாளை திருவோணத்தோடுகூடிய சோமவாரம் மஹாப்ரதோஷகாலமாதலால், நீ திருவெண்காட்டையடைந்து, சுவேதாரண்ணியப் பெருமானையும், அவரிடம் பிரியாதுறையும் பெருமாட்டியையும் விதிப்படி திருமஞ்சனமுதலியவைகளியற்றி, சிவனடியார்களை உபசரித்து, அந்தச்சந்நிதியில் காத்திருப்பையாயின், அவ்விடத்தில் வேதாகமமுதலியவற்றின் பொருள்களை ஐயம் திரிபுகளறவுணர்ந்த வேதியரொருவர்வந்து, நீ அருச்சித்தற்குரிய சிவலிங்கப்பெருமானை எழுந்தருளப்பண்ணிக்கொடுத்து, தீக்ஷாவிதிப்படி உனக்கு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும் உபதேசித்து, பூசிக்கும் முறைமையையும் அநுக்ரஹிப்பார், நீ அவற்றைப் பெற்றுப்பரிபாகமடைந்து இம்மை மறுமைச்செல்வங்களுக்கு மேற்பட்டபேரின்பச்செல்வமாகிய முத்தியையடையக் கடவையென்று ஆசீர்வதித்துத் திருநீறு புனைந்து, ஹஸ்தமஸ்தகசம்யோகம்பண்ணி, அபயமளித்து, மறைந்தருளினர்.

அப்பால், திருவெண்காடர், உடனே கண்விழித்து எழுந்து, ஆரமை மேலிட்டு, அழுது, தொழுது, ஐயனே, என்பிழைப்பு கனவினளவேயாயிற்றே, நனவென்றல்லவோ நான்மகிழ்ந்திருந்தேன், எம்பெருமான் திருவுளம் இவ்வாறாயின் யான் என்செயக்கடவேன் என்று ஏங்கியிருந்தார். அப்போது புதல்வர் அன்று இரவில் ஆகாரமில்லாமல் படுத்துறங்கினராதலால் பெருங்கவலையோடும் நல்லநித்திரையில்லாமல் அருகில்படுத்திருந்த தாயார் வெருண்டு விழித்தெழுந்து, புதல்வனைநோக்கி, ஐயனே என்செய்கிறாய், உனக்கடுத்தது யாது, என்று வினவ, பிள்ளையாரும் தாம்கண்ட கனவைக் குறிப்பாக அறிவிக்க, அந்த அம்மையார் தம்மனத்தில் பெருமகிழ்ச்சியடைந்து, இவரது உண்மை நிலையை அறியும்படி பிள்ளையாரை எடுத்து உச்சிமோந்து, முதுகைத்தடவி, அப்பா குழந்தாய்! உனக்குச் சிவபெருமானது திருவருள்கிடைக்குங் காலம் சமீபித்தது, இனிக்கவலையற்றிரு, இறைவன் உனக்குக்கனவில் கடாக்ஷித்தபடியே நடத்தி நல்லருள்புரிவார் என்று மேலும் சொல்லுகிறார். எப்படியென்றால், சிவபூசைசெய்வது எளிதல்ல, மிகவும் அரிது, சிவபெருமானது மகிமையை வேதாகமங்களும் இன்னும் அறியாது மயங்குகின்றன, நீயோ இன்னும் முலைப்பால்மணம் நீங்காத வாயினையுடைய சிறுகுழந்தை, இரவில் நான் தழுவியணைத்த கைசிறிது நழுவுமாயினும் தனித்திருக்கிறேமென்று வெருண்டெழுந்து அழுகின்ற பருவத்தையுடையவன், பத்தி, வைராக்கியம், அறிவு, ஆசாரம் இவைகளில் ஒன்றுகுறைந்தாலும், சிவபூசை முற்றுப்பெறாது, சிவபூசைசெய்வ

தற்குமுன், ஸ்ரீபஞ்சாக்ஷரஜபத்தால் சித்தசுத்திசெய்துகொள்ளவேண்டும். இந்தப்பஞ்சாக்ஷரமே மந்திரங்களெல்லாவற்றுள்ளும் சிறந்தது, இதைப் படனம்செய்ய மகாமுனிவர்களும் அஞ்சுவார்கள், நீயோ சிறுபிள்ளை, நீ என்செய்வாய், இதுநிற்க, சிவபூசைக்குரிய திருமஞ்சனவகை, நிவேதனதிரவியம் இவைகளைச் சுத்தமுள்ளவைகளாகத் தேடிப்பெறுவது மிக அருமை, முற்காலத்தில், சண்டேசுரர்முதலிய பெரியோர்களைப்போலத் திருமஞ்சனம் முதலியவற்றைச் சிரத்தையோடு சேகரிப்பது உன்பருவத்திற்கு அசாத்தியம், தக்கமுயற்சிசெய்ய உன்மேனிதாங்காது, ஆகையால் உனக்கு இந்த இளம்பருவம்போய்க் குமாரப் பருவம்வந்தபோது உன்கருத்தின்படி சிவபூசைசெய்ய முயல்வது தகுதியென்றார்.

இப்படி சொன்னதாயின் சொல்லைக்கேட்ட திருவெண்காடர், புன்சிரிப்புடன் தாயின்முகத்தை நோக்கி, தாயே; தேவரீர் சொல்லியபடி சிவபெருமான் எல்லாத்தேவருள்ளும் சிறந்தவர் என்பதும், அவரைவிதிப்படி பூசிப்பது மிகவும் அருமையென்பதும் வேதாகமங்களின் துணிபேயென்பதற்குச் சந்தேகமேயில்லை, ஆயினும் "பத்திவலையிற்படுவோன்" என்றும், "அடியவர்க்கெளியான்" என்றும் பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள். அன்றியும், சிவபூசைசெய்வதற்குச் சாதி, ஆச்சிரமம் முதலியவற்றை நோக்கவேண்டுவதில்லை. தேவர் முனிவர்நீங்கலாக, மாநுடர்க்குள்ளே பிராமணன்முதலிய நான்குவருணத்தாருள் யார்தான் பூசிக்கவில்லை. பிரமசாரிமுதலியவர்களுள் யார்பூசியாதவர். தீண்டாத்திருமேனியாகிய திருநாளைப்போவார் அருச்சிக்கவில்லையோ, மாநதபூசையை இடையறாமற்செய்தார். மாநுடர் இருக்கட்டும், பசு, புலி, யானை, நரி, முதலியவையும் பூசித்து அருள்பெற்றனவென்று கேட்டிருக்கிறோமே, இந்தச்சிற்றுயிர்கள் யாவும் அன்பைக்கொண்டல்லது வேறெந்தப்பொருளைக்கொண்டு பூசித்தன. பரிபூரணனாகிய சிவபிரானுக்கு யாம்செய்யும் சுத்திமுதலியவை எவ்வளவையுடையன. இழிந்த கொலைத்தொழிலிற்சிறந்த வேடசாதியிற்பிறந்த கண்ணப்பதேவர், செருப்புக்காலால் நிருமாலியங்களைந்து, வாயெச்சிலோடு கலந்தநீரால் அபிஷேகம்பண்ணி, தாழ்ந்தமாமிசத்தை முன்னே தாம் எச்சிற்படுத்திச் சுவைபார்த்து ஊட்ட, அந்தப்பூசைக்குச்சிவபெருமான் மகிழ்ந்து, அந்தமாமிசத்தை உண்டு, ஆறுநாளில் அவர்க்குத் திருவடிநிழலைக் கொடுத்தருளவில்லையோ; சிலந்திப்பூச்சியானது, சிவலிங்கப்பெருமானுக்குத் தன் வாயெச்சில் நூலால்பந்தலிட்டுக்கோச் செங்கண்ணனாகப்பிறந்து நற்கதியடையவில்லையோ; கோயில்விளக்கு நெய்யைக்குடிக்கப்போன ஒரு எலியினதுவால் அந்தவிளக்கு அணையாமல் தூண்டிவிட்டதனால் அது மாவலிச்சக்கரவர்த்தியாய்ப்பிறந்து மூன்றுலகங்களையும் ஆண்டகதையை எல்லாரும் அறிவார்களே; முசுக்கலையாகிய குரங்கொன்று அன்புபத்திகளைச் சிறி

னும் அறியாதிருந்தும் தன்சாதியியற்கையால் வில்வத்தழையைப்பறித்தெறிந்து முசுகுந்தனுகப்பிறந்து முத்தியை அடையவில்லையோ; பாலகராகிய மார்க்கண்டர் சிவபூசைசெய்த மகிமையால் யமனையும் உயிர்வாங்கவில்லையோ; உத்தானபாதன் என்னும் அரசனுக்கு மகனுன துருவன் தன் சிறியதாயார் சொல்லிய கடுஞ்சொல்லைச்சகியாமல்காட்டுக்குப்போய்ச் சிவபூசைசெய்து அழியாத உயர்ந்தபதம்பெற்ற காலத்தில் அவனுக்குக்கிழவயதோ; தனக்கு இடியினுல் அபாயமுண்டாகுமென்று நாரதமுனிவரால் கேள்விப்பட்ட கிரகபதி என்கிற பிராமணகுமாரன் ஏழுவயதில் சிவபூசை செய்து சிவபெருமானது திருவருளால் அக்கினிபதம் பெறவில்லையோ; வியாக்கிரபாத முனிவருக்கு மகனுகிய உபமன்னியர் இறைவனருளால் பாற்கடல் பெற்றது எந்தக்கிழவயதிலென்று விசாரித்துத் தெரிந்துகொள்ளும்; சுகமுனிவர் கருவிலிருக்கும்போதேயோகமார்க்கத்தால் மானதபூசை செய்யவில்லையோ; புலோமநடையபெண் தாய்வயிற்றிலே சிவத்தியானத்துடனிருந்து வெளிப்பட்டபோது பூர்வஞானமுள்ளவளாய், நாபிக்கொடி அறுப்பதற்குமுன்பே தாயை அழைத்து, சிவபூசைசெய்வதற்குரிய திருமஞ்சனம், பத்திரம், புஷ்பம் முதலிய உபகரணங்களைக்கொண்டு வரும்படிசொல்லிவரவழைத்துப் பூசிக்கவில்லையா; இன்னும் அநேகர் இளமையில் பூசித்துச்சிவபதம் பெற்றிருக்கிருர்கள், ஆதலால், நான் இளையவனென்று என்னைத்தடைசெய்யவேண்டாம். பிள்ளைகளுக்கு நன்னெறியைப் போதித்து அதில்நடக்கும்படிசெய்வது தாய்தந்தைகளுக்குக் கடனுயிருக்க, பிள்ளைகளே நல்வழியிற் செல்லத்தொடங்கினுல் அப்படிசெய்வதைத் தடுப்பதும் உண்டோ; என்று சொல்லிவணங்கிநின்ருர்.

அதுகண்ட அம்மையார், தம்புதல்வனைநோக்கி, ஐயனே, உன்விருப்பத்தின்படியே நடக்கலாம், நான் தடைசெய்யவில்லை, ஆயினும், நல்ல குருவையடுத்து அவர் செய்யும் சமயதீக்ஷை முதலியவைகளைப்பெற்று சிவபூசை, ஸ்ரீ பஞ்சாக்ஷரஜபம் முதலான சற்கருமங்களைச்செய்க வென்றுகூறினுர், அப்பால் திருவெண்காடர், தாயார்முகத்தைப்பார்த்து, அம்மா; தேவரீர் சொன்னவைசத்தியமே, சிவபூசைக்குக் காலம்வரையறுப்பது தகுதியல்ல, தேகம் நிலையற்றதாகையால் அறிவுகிளர்ந்தகாலமே அதற்குவரையறைக்காலம். இனிக்காலத்தை வீணுய்க்கழிக்கலாகாது, முன்னெருகாலத்தில், யமதர்மராஜன் நரகலோகவாசிகளை விசாரித்து வரும்பொழுது அவர்களுள் சிலர்தீவாய் நரகத்திலும், சிலர்ரௌரவநரகத்திலும், சிலர் அசிபத்திரவனம் என்னும் நகரத்திலும், சிலர் கும்பீபாகம் என்னும் நரகத்திலும் விழுந்து பலவாறு வருந்துவதைப் பார்த்துச்சகியாமல், உடனே சித்திரகுப்தர் என்கிற கணிகனைவருவித்து, இவர்கள் என்னதீமை செய்தவர்கள், எத்தனைகாலமாக இந்தத்துன்பத்தை அநுபவிக்கிருர்கள், இனியெப்

போதுவிமோசநம் நேரிடும் என்றுவினவ, அந்தக்கணிகர் தமது கணக்கேட்டைப்பார்த்து, இவர்களெல்லாம் சிவபூசைமுதலிய நற்கருமங்களைச் செய்யாமல், சிவநிந்தைமுதலிய தீக்கருமங்களைச் செய்தவர்கள். இவர்கள் எப்பொழுது இந்த நரகங்களுக்கு வந்தவர்களோ நாங்கள்அறியோம். விமோசநகாலமும் தெரியாது, இவர்கள் வந்தகாலமும் விமோசநகாலமும் தருமதேவதைக்குத்தெரியும்என்று சொல்லக்கேட்ட யமதர்மராஜன் திடுக்கிட்டு நடுநடுங்கி, அந்தப்பாவிகளைப் பார்த்ததனால் தனக்குண்டாகிய பாவம்தொலையும்பொருட்டுச் சிவத்தியானம்செய்தான் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் சிவபூசை எளிதிற்கிடைப்பதல்ல என்று தாயாரைவணங்கி விடைபெற்றுப்போய்த் திருவெண்காட்டை யடைந்து, சிவதரிசநம்செய்துகொண்டு, நல்ல ஆசாரியன்வருமளவும் அவ்விடத்தில் காத்திருந்தார். அப்போது, அங்கே, அழகிற்சிறந்த ஒருவேதியப்பிரமசாரி, சடைமுடிமுதலியவற்றோடு சிவசின்னங்கள்விளங்கத்தரித்துவந்து, அங்கு இருந்தவர்களைப்பார்த்து, திருவெண்காட்டுப் பிள்ளையார் எங்கே யென்று கேட்டுக்கொண்டே ஆலயத்தினுள்ளே பிரவேசித்தார். பிரவேசித்தலும், அங்கு இருந்த அந்தணர்யாவரும் கண்டு, அன்புடனே எதிர்சென்று, ஐயரே; தேவரீர் எங்கு நின்றும் எழுந்தருளினீர், திருவெண்காடரைத்தேடுதற்குக் காரணம்யாது என்றுவினவ, அந்தவேதியர், அவர்களைநோக்கி, நாம் வருதற்குக் காரணமுதலியவும் நாம் திருவெண்காடரைப் பார்த்தளவில் உங்களுக்குத் தெரியலாம் என்று சொல்லிக்கொண்டே ஆலயத்தில் தாயாரோடு சிவபூசைக்குரியபொருள்களையெல்லாம் சேகரித்துக் கொண்டிருந்த திருவெண்காடரைமுகக்குறிமுதலியவற்றாலறிந்துகொண்டு, மனமகிழ்ச்சியுடனும் இன்சொல்லுடனும் எதிரேபோய், அப்பா திருவெண்காடா; உன்னைப்பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தால் இங்குவந்தோம், உன்கருத்து முழுதும் எமக்குத்தெரியும், அந்தக்கருத்து நிறைவேறுதற்குரியகாலமும் அடுத்தது என்று சொல்லி எதிரேநின்றார்.

## பட்டினத்தார்குருதரிசநம்செய்தல்.

அப்போது, திருவெண்காடர் அவரை உற்றுப்பார்த்து, அவரது திருமுகக்கருணைபெற்று, நாம்கனவிற்கண்டபடி நம்மையாட்கொள்ள எழுந்தருளிய கருணைவடிவோ இது என்று நினைத்து, ஆராமையும் அன்பும் பெருக அவரது திருவடியில்விழுந்து, எம்பெருமானே, தேவரீரைக்காணப் பெற்றமையால் அடியேன் உய்ந்தேன், என் உடல், உயிர், பொருள் ஆகிய மூன்றையும் உமக்கே உரியவையாக்கிக்கொண்டு என்னைப்புனிதனாகும்படி செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தார். அந்தச்சற்குருசிகாமணியானவர் திருவெண்காடரது அன்புக்கிரங்கி, அவர்முகத்தைப்பார்த்து, அப்பா; நாம் இருப்பது வியாக்கிரபுரம். நேற்று இரவில் இங்குவந்தோம். எமதுகனவில்

சைவபிராமணர் ஒருவர்வந்து,நாளை உதயகாலத்தில்சுவேதாரணியத்துக்குப் போவாயாகில், அவ்விடத்தில் திருவெண்காடன் என்கிற ஆறுவயதுள்ள சிறுவன் வந்திருப்பான், அவனுக்குச்சைவ தீக்ஷைசெய்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைக் கிரமப்படி உபதேசித்து, இந்தச்சம்புடத்தையும் அவனுக்குக் கொடு, யாவராலும் திறக்கப்படாத இந்தச்சம்புடம் அவனால் திறக்கப் படும். இதற்குள்ளே அவன் பூர்வசன்மத்தில்பூசித்தஆன்மார்த்தமாகிய சிவலிங்கமூர்த்தியிருக்கின்றது. என்று கட்டளையிட்டு, ஒருமண்டல மளவும் உன்னோடுகூட என்னையுமிருக்கும்படி நியமித்தார். அப்போது நீர்யாவர்; எங்குஇருப்பது என்றுவினவினேன், அவர்யாம் எங்கும் இருப்போமாயினும் இப்போது திருவிடைமருதூரில் வசிப்போம் என்றுசொல்லிமறைந்தார். உன்பொருட்டால்,திரிகரணங்களுக்கும்எட்டாத பரம்பொருள் எமக்குவெளியில் காணக்கிடைத்தது என்றுசொல்லி, பட்டுப்பரிவட்டம் சாத்திமூடிவைத்திருந்த சம்புடத்தை ஒரு உயர்ந்த பீடத்தின்மேல் எழுந்தருளப்பண்ணி, மேலேமூடியிருந்த போர்வையைவாங்கின மாத்திரத்தில், அவ்விடத்திலிருந்தவர்கள் யாவரும் அதிககாந்தியுள்ள அந்தச்சம்புடத்தைக்கண்டு அதிசயித்தார்கள். திருவெண்காடர் அதனைக்கண்டுமகிழ்ச்சியையடைந்து, சற்குருவின் திருவடியை வணங்கித்துதித்து நின்றார்.

## திருவெண்காடர் சிவதீக்ஷைபெற்றது.

அதன்பிறகு, சற்குருவாய்வந்தவர் திருவெண்காடரது அதிதீவிரபக்குவத்தைக்கண்டு, அங்கிருந்த அந்தணர்களுடைய சம்மதம்பெற்று அவருடன் திருவெண்காடரையும் அழைத்துச் சென்று காவிரிக்கரையையடைந்து, சைவதீக்ஷாசங்கற்பம் சொல்லி மறுபடியும் ஸ்நாநம் செய்வித்து,திருநீறு ருத்திராக்ஷம்முதலியவற்றை யணிவித்துச் சிவசந்நிதியில் அழைத்துப் போய் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உபதேசித்து, சம்புடத்தையெதிரில்வைத்து, அங்கிருந்த வேதியர் எல்லாரையும் நோக்கி,இந்தச்சம்புடத்தை ஒவ்வொருவராய்த்திறக்கும்படி நியமிக்க, அவர் அப்படியேசெய்து அது திறக்கப்படாமலிருக்க, திருவெண்காடரைநோக்கி, நீ இதனைத்திறக்கக் கடவாயென்று நியமிக்க, இவர் சற்குருவின் ஆணைப்படிசம்புடத்தைக்கிட்டி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தியானத்துடன் அதனைத்தீண்டின அளவில், அது எளிதில் திறப்புற்றது. அதற்குள்ளே கோடி சூரியகாந்தியுள்ள சிவலிங்கமூர்த்தி ஒன்றும், விநாயகமூர்த்தி ஒன்றும் தெய்வமந்தாரமலர் களால் அருச்சிக்கப்பட்டிருந்தன. அவற்றைக்கண்டோர்யாவரும் அந்த மூர்த்தங்களையும் திருவெண்காடரது தவப்பெருமையையும் புகழ்ந்து கொண்டாடினார்கள். பிறகுசற்குருமூர்த்தியானவர் திருவெண்காடரை நோக்கி,அப்பா,இன்றுசுபதினமாதலால் உன் ஆன்மார்த்தத்தைப் பூசிக்கக்கடவாய், பூசைசெய்வதற்குமுன்னே, இந்தத் திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானையும் பிராட்டியையும் பூசைசெய்விக்கக்கடவாய், சிவபூசைசெய்வதற்குமுன்னே சிவனடியாரைப் பூசிப்பது மிகவும் சிலாக்கியமாகும் என்று கட்டளையிட்டருளினார்.

## திருவெண்காடர்சிவபூசைசெய்தல்.

திருவெண்காடரும் தமது ஆசாரியர் நியமித்தபடியே ஸ்நாநாதி, நித்திய கருமமுடித்து நியமமுடையவராய் ஸ்ரீ சுவேதாரணியப் பெருமானுக்கும் தேவியாருக்கும் மஹந்யாஸருத்ராபிஷேகம் செய்வித்து, ஆதிசைவவேதியர் அநேகரைவரவழைத்து ஸ்ரீ ருத்ரநமக சமகபாராயணம் முதலியவற்றை நடத்தி, சுகந்ததைலம் முதலியவற்றால் அபிஷேகம் செய்வித்து, பட்டுப் பரிவட்டம் முதலியவைதரிப்பித்து, மாணிக்கமுதலியவற்றாற்செய்யப்பட்ட திருவாபரணங்கள் அணிவித்து, மல்லிகை முல்லைமுதலிய மலர்களால் தொடுக்கப்பட்டமாலைகள் சாத்துவித்து, பாற்சோறு,பலவகை பரிமளமாகிய அடைக்காய் முதலியவற்றைச்சமர்ப்பித்து, தூபம்,தீபம்முதலிய உபசாரங்கள் செய்வித்து, சிவாக்கினியைப்பூசித்து, சிவனடியார்களையும் ஆராதித்து, அதின் பிறகு தமது ஆன்மார்த்தமாகிய சிவலிங்கப் பெருமானை அருச்சித்து வணங்கிப் பலவாறுதுதித்து ஆநந்தக் கூத்தாடினார். அப்பால் திருவெண்காடர் உத்தரபூசைமுடித்து, உடையவரையும் மூத்தபிள்ளையாரையும் பெட்டகக் கோயிலுள்எழுந்தருளப்பண்ணி,நிவேதநப்பிரசாதத்தைத் தமது ஆசிரியர்க்குச்சமர்ப்பித்துக்களிக்கச்செய்து, அவர்கட்டளைபெற்று, தாயாரோடும் சுற்றத்தாரோடும் சிவப்பிரசாதத்தை உட்கொண்டு, நீறணிந்து,ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக்கொண்டு அலைவற்றமனத்தையுடையவராயிருந்தார், சூரியாஸ்தமநமும் ஆயிற்று.

## திருவெண்காடர்மகேசுரபூசைக்காகத்தாயாரையுசாவுதல்.

அதின்பிறகு, திருவெண்காடர், தமது ஆசிரியர்க்கும் சிவநேசராகிய அந்தணர்க்கும் தக்ஷிணை கொடுக்க நினைத்து, தாயாரிடஞ்சென்று வணங்கி தாயே; தேவரீரது கருணையால் செய்துமுடிக்கவேண்டுவன யாவையும் செய்துமுடித்தேன், ஆயினும்ஸ்த்தாவரசங்கமங்கள் என்னும்இரண்டனுள்ளே சிறந்த சங்கமமூர்த்திகளாகிய சைவமாகேசுரர் என்கிற வேதியர்முதலானோரைப்பூசித்தல் நமதுகடனாதலால் அதற்குவேண்டிய பொருள் சேகரித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். அதற்கு அந்த அம்மையார், குழந்தாய்; நம்மிடத்திலிருந்த பொருள்முழுதும் செலவாகிவிட்டபடியால் இனிக் கடன்வாங்குதலொழிய வேறுவழியில்லை, என்னசெய்யலாம் என்றார். அப்பொழுது திருவெண்காடர், மனங்கலங்கி, ஸ்ரீருத்திரபாராயணஞ்செய்த வேதியர்க்கும் நமது தீக்ஷாகுருவுக்கும் தக்ஷிணைகொடுக்க வேண்டுமே, என்னசெய்வோம் என்றுசிந்தித்து, சிவத்தியாநத்துடன் தரையிற்படுத்துறங்கினார். அம்மையாரும் தம்புதல்வரது கவலையை நோக்கித் தாமும் கவலையையடைந்து அவரருகே படுத்துறங்கினார். மற்றவேதியர் முதலானோர் ஆலயமண்டபம், சோலை,நந்தநவநம் முதலிய இடங்களில் சயநித்திருந்தார்கள். அப்பால், எல்லாம்வல்ல கடவுளானவர், அந்தத்திரு

வெண்காடரது மனக்கவலையை ஒழிக்கத் திருவுளங்கொண்டு, அன்றிரவில் அவரது கனவில் முன்னேவந்தாற்போல ஒருசைவவேதியர் வடிவங்கொண்டு எதிரில்நின்று, அப்பா; திருவெண்காடா! அஞ்சவேண்டாம், அளவற்ற பொன், மணி, பூண், ஆடைமுதலியவற்றை உன்வீட்டிலிருக்கும்படி அமைத்தோம், அவற்றை எம்மடியவர் வேண்டியபடிகொடுத்து நீவேள்விப் பயன்பெறலாமென்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தார். திருவெண்காடர் உடனே விழித்தெழுந்து, நடந்தசெய்தியைத் தாயாரோடு சொல்லிச் சூரியோதயத்தை எதிர்பார்த்திருந்தார். அத்தருணத்தில், காவிரிப்பூம்பட்டினத்தில் இவர்மனையில் காவலாயிருந்தவர்களுக்குள்ளே சிலர் ஓடிவந்துஅம்மையாரைவணங்கி, அம்மா; தாங்கள்பூட்டிவைத்தமனையினுள்ளே, இன்று அர்த்தயாமத்தில், ஒருபெருஞ்சோதியுண்டாகிஇன்னும்மாறாதிருக்கின்றது. இந்த அதிசயத்தைத் தேவரீருக்குஅறிவிக்கவந்தோம் என்றார்கள். அதைக் கேட்டவுடன், அம்மையார், தமது புதல்வரதுகனா உண்மையாமென்று மதித்தெழுந்தார், சூரியோதயமுமாயிற்று. உடனே காலக்கடன்முடித்துத் தம்புதல்வரோடு காவிரிப்பூம்பட்டினம்வந்து தம்மனைபுகுந்து வாயிற்காப்பு நீக்கி உள்ளேபுகுந்து, குபேரனது அளகாபுரியினும் சிறந்த பெருஞ்செல்வம் அமைந்திருக்கப்பார்த்து, இது சிவபெருமான் திருவருளாமென்று வியந்து, அந்தச்செல்வங்களுள், தமக்குவேண்டுமளவும் எடுத்துப்பண்டிகளிலேற்றித் திருவெண்காட்டுக்கு அனுப்பித் தாமும் மைந்தருமாகப் பின்னே சென்று திருவெண்காட்டையடைந்து, சிவாலயத்தின்ஒருபுறத்தில் அந்தத் திரவியங்களையிறக்கி, புதல்வரைப்பார்த்து, அப்பா; இனி உன் எண்ணப்படியே குருபூசையும் மகேச்சுரபூசையும் செய்யலாமென்று சொன்னார். உடனே திருவெண்காடர் விதிப்படிநீராடி, திருவெண்ணீறுபூசி, உருத்திராக்கமாலைதரித்து, பரிசுத்தமனத்தோடிருந்து, தமது ஆசிரியரையும் அந்தணர்முதலிய சிவனடியார்களையும் அவர்கள் மனங்களிக்கப்பூசித்து அவர்கள் வேண்டியவாறே எல்லாப்பொருள்களையும் கொடுத்துப்பணிந்து நின்றார். ஆசிரியர் அந்தணர்முதலானோரும் உனக்குச்சாதுசங்கவழிபாடு மேன்மேல் வளரக்கடவதென்று ஆசிர்வதித்துப் போயினர். அன்றுமுதல் திருவெண்காடர், குருலிங்க சங்கமபத்திசெய்துகொண்டு, காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்திருக்குநாளில், இவர்க்குக் காளைப்பருவம் நேர்ந்ததைத் தாயார் கண்டு, அந்தக் காவிரிப்பூம்பட்டினத்தில், உத்தமவேளாண்டகைமையிற் சிறந்த வசியகுலத்திற்பிறந்து, செல்வம், கல்வி, அறிவு ஒழுக்கங்களையுடையவராயிருந்த சிதம்பரசெட்டியாரென்பவர்க்குச் சிவகாமியம்மை என்னும் மனைவியினிடத்திற்பிறந்த சிவகலையென்னும் பெண்ணைப்பேசிப் பெருஞ்சிறப்பாகத் திருமணம்முடித்துவைத்தார். பிறகு திருவெண்காடர் தன்மனைவியாராகிய சிவகலை என்பவரோடுகூடி இல்லறத்தைக் குறைவறநடத்திவந்தார். இவர்க்கு முப்பத்தைந்துவயதளவும் புதல்வருண்டாகாமையால்

மனம்வருந்தித் திருவிடைமருதூருடையாருக்குத் தமதுகுறையை விண்ணப்பஞ்செய்தார். அப்பொழுது திருவிடைமருதூர்ச்சிவபெருமான், இவர்க்குப்புதல்வராக அவதரிப்போமென்று திருவுளங்கொண்டார். அப்போது அந்தத்திருவிடைமருதூரில், சிவபத்தி அடியார்பத்திகளிற்சிறந்த சிவசருமர் என்னும் வேதியர் சுசீலையென்னும் மனைவியாரோடுகூடி இல்லறம்வழுவாது நடத்தி, காலங்கள்தோறும் மஹாலிங்கநாதரையும் பெருந்தனநாயகியாரையும் விதிப்படி அருச்சித்துவந்ததேயன்றி, தம்செல்வத்தையெல்லாம் சிவார்ச்சனைக்கும் அடியார் மகேச்சுரபூசைக்குமே உபயோகித்துவந்தார். இவ்வாறு நடக்குங்காலத்தில் இவரதுசெல்வம் நாளுக்குநாள்குறைந்து வறுமைக்காலம் நேர்ந்தபடியால், மருதவாணரைப்பிரார்த்திக்க, அவர் இவர்கனவிலும் இவர்மனைவியார்கனவிலும் விருத்தவேதியராய் எழுந்தருளி, நீங்கள் எம்மிடத்துப் பேரன்புடையீர்கள், நம்கோயிலுக் கருகிலிருக்கும் காருண்யாமிர்த தீர்த்தக்கரையின் கிழக்கிலுள்ள வில்வமரத்தடியில் நாம் ஒருகுழந்தைவடிவமாயிருப்போம், எம்மை நீங்கள் எடுத்துப்போய்க் காவிரிப்பூம்பட்டினத்தில் பிள்ளையில்லாமல் வருந்திப்பல அருந்தவங்களைச் செய்கின்றதிருவெண்காடரிடத்திற்கொடுத்தால் அவர்உங்களுக்கு நம்மளவு பொன்கொடுப்பார், அதைப்பெற்று, உங்கள்வறுமைநீங்கி இருமையின்பங்களையும் அடையக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர். அந்தவார்த்தையைக்கேட்ட சிவசருமர், தீயில்வீழ்ந்த புழுப்போலத்துடித்து, பிரமாதிதேவர்களும் அறியாத பெரும்பொருளாகிய உம்மைக்கொடுத்துப் பொன்பெற்று உயிர்வாழ்தலினும் யாம் உயிரைவிட்டுவிடுவதே நன்மையாம், இந்தக்காரியத்துக்கு யாம் உடன்படமாட்டோம் என்றார். அதுகேட்ட வேதியவடிவாகியமருதவாணர், அப்பா,உமதுகருத்தினதுநிலைமையையாமறிவோம், முன்னொருகாலத்தில்எமதுதோழனாகுபேரன்மானுடப்பிறப்பையடையும்படி நேரிட்டது,அப்போது, நாம் அவனுக்குப்புதல்வனாக வருவோமென்று அநுக்ரஹித்திருந்தோம், அந்தக்காரியம் நிறைவேறுங்காலம இதுவாதலால் உங்களை இதற்கு உடன்படும்படி நியமித்தோம் அன்றிவேறல்ல, அந்தக்குபேரன்தான் திருவெண்காடராய்வந்து பிறந்திருக்கும்வசியன், அவனுக்கு மெய்ஞ்ஞானநிலையை அநுக்ரஹித்து நாம் மறைந்துவிடுவோம், அப்போது உமக்குக்குடும்பத்தோடு முத்தியைக்கொடுப்போம், நீர் ஒன்றுக்கும் அஞ்சாமல் நாம்சொல்லியபடி செய்யும் என்று அருளிச்செய்து மறைந்துவிட்டார்.

உடனே சிவசருமர் விழித்தெழுந்து, அற்புதமும் ஆநந்தமும் உடையவராய்ப் படுக்கைவிட்டு நீங்கித் திருநீறணிந்து சிவத்தியானஞ்செய்து பெருஞ்சிந்தையோடு திரும்பினர். அதற்குமுன்பே, கணவனார் கண்டகனவையே கண்டு மருண்டெழுந்து, அவர்விழிப்பை எதிர்பார்த்திருந்த சுசீலையும்

மையார் வணங்கித் தாம்கண்டகனவை அவரோடுசொல்ல, அவரும் தாம் கண்டகனவைச் சொல்லி, இருவரும் அச்சமும் துன்பமும் உடையவர்களாய் முன்பின்தோன்றாமல், கவலைப்பட்டுக்கொண்டிருக்கையில், சுசீலையம்மையார் தம்கணவனைநோக்கி, இந்தவறுமையாலன்றோ நம்மையாளாகவுடைய சிவபெருமானிடத்தில் விண்ணப்பஞ்செய்யவும், இதனைத்தீர்க்கும்பொருட்டும்,அவர் இவ்வாறுகட்டளையிடவும்நேரிட்டது என்றுசொல்லி இரங்கிநின்ற அவரது நிலைமையைப்பார்த்து,சிவசருமர்,பெண்ணே! நீ சொல்லியது உண்மையே ஆயினும், நாம் சிவபெருமானது கட்டளையைத்தடுக்கலாமா, தடுக்கலாகாது, ஆகையால் நீ இவ்விடத்திற்றானேயிரு, நான்போய் வருகிறேன் என்றார். அதுகேட்டு அவ்வம்மையார் பதைத்து, எம்பெருமானே! உம்மைப்பிரிந்து நான்தனியே இருக்கமாட்டேன், என்னையும் உடன் கொண்டு போகவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்கு அவ்வேதியர் மனமிரங்கி, அவ்வம்மையாரையும் உடன்கொண்டு, மனைகடந்து சென்று ஆலயத்திற் புகுந்து, வழக்கப்படி மருதவாணரையும் பெருந்தனநாயகியாரையும் தொழுது, காருண்யாமிர்ததீர்த்தத்தின் கீழ்க்கரையில் வந்தார்கள். அவ்விடத்தில், இந்திரனது நந்தவனம் நாணும்படி வீற்றிருக்கும் கோயில்உய்யானவனத்துள் இளங் குழந்தை அழுகுரல் கேட்டு, விரைவாக அந்த அழுகுரல் வழியேபோய்,அவ்விடத்துள்ள ஒருவில்வமரத்தின் அடியில்,மலரணைமேல்,சிவபெருமான் ஒருசிறு குழந்தையாக வீற்றிருக்கக் கண்டனர்.

### சிவபெருமான்குழந்தையாகஎழுந்தருளியது,

கண்ட அளவில், தம்பதிகள் இருவரும் பேராநந்தக்கடலில் மூழ்கித் தெளிந்தெழுந்து, விரைவாகப்போய், அந்தக்குழந்தையை ஆவலோடு எடுத்து,மார்போடணைத்து! உச்சிமோந்து, ஐயனே! அரசே! அழகின்பயனே, அறிவாநந்தமே; அத்புதப்பேறே; அரும்பெரும்பொருளே; அமுதப்ரவாஹமே; என்று பலவகையாக அழைத்து எடுத்துச்சென்று மனைவியார் கையிற்கொடுக்க, அந்த அம்மையார் வாங்கியணைத்துக் கண்ணிலொற்றி, உச்சிமோந்து, முத்தமிட்டு, அன்பின்மிகுதியால் தனங்களில் பால்சுரக்க ஊட்டுதலும், குழந்தையுருவாயிருக்கிற ஐயர் உண்பவர்போல் அபிநயித்தார். அதைக்கண்ட அம்மையார் பலவகையாகச்சீராட்டி, தம்கணவரை நோக்கி, எம்பெருமானே! இந்தக்குழந்தையின் பேரழகாகிய காந்தம் என்மனமாகிய இரும்பைக் கவர்ந்திழுத்துப் பற்றிக்கொண்டது, இதை ஒருவர்க்கும் கொடுக்கமாட்டேன்,பொருள்வேண்டுமானால் நீர்வேறுவகையால் அதனைப் பெறமுயல்வீராக என்று சொல்லித் தம்வீட்டுக்குக் குழந்தையையெடுத்துப் போகலாயினர். அப்படிப் போகும்போது, சிவாநுக்ரஹத்தால் வழிதப்பித் திருவிடைமருதூருக்கு இருகாதத்திலுள்ள காவிரிப்பூம்பட்டினத்தையடை

ந்து, பசிதாகங்களால் உடல்வாடியிளைத்து, அவ்விடத்தில் ஓருமனைப்புறத்திலுள்ள சோலையிற்போய், அங்குள்ளஇளந்தழைகளைப்பரப்பி, அவற்றின் மீது குழந்தையைக்கிடத்தி, அந்தக்குழந்தையைப் பார்த்துக்கொண்டே இளைப்பாறியிருந்தார். அவர்கணவராகியசிவசருமரும்அவர்மக்களும் உடனே அவ்விடஞ்சேர்ந்து இளைப்பாறியிருந்தார்.

## திருவெண்காடர்மகப்பேற்றுக்கனுத்திறம்,

இப்படியிருக்க, திருவெண்காடர், மக்கட்பேறில்லாத குறைவால் மனம்வருந்தியிருந்தாலும் சிவபூசை அடியார் பூசைகளைக் குறைவில்லாமல் நடத்திவருவார், அன்றிரவில் அவரும் அவர்மனைவியாரும் ஆகிய இருவர் கனவிலும், மருதவாணர் ஒருவிருத்தவேதியராக எழுந்தருளி, மகப்பேறு வேண்டி மாதவஞ்செய்வோரே, இனி நீங்கள் வருந்தாதொழியுங்கள், உங்களுக்கு இந்தப்பிறப்பில்கருவிருந்துவருந்திப்பெறும்புதல்வரில்லையாயினும், வருந்தாது பெறும்புதல்வனொருவன்உளன்,எப்படியென்றால்,நாளையதினத்தில்,உங்கள்மனைப்புறத்திருக்குஞ்சோலைக்குப்போவீரானால்,அவ்விடத்தில் சிவசருமர் என்னும் ஆதிசைவரொருவர் தமதுமனைவியாராகிய சுசீலையம்மையாரோடிருப்பர்,அந்த அம்மையார்கையில் ஒரு சிறுபசுங்குழந்தையிருக்கும், அந்தத்தம்பதிகளை உபசரித்து அழைத்துவந்து பூசித்து அவர்கள் மனமகிழச்செய்தால், அந்தக்குழந்தையை உங்களுக்குத்தருவார்கள். அதைப் பெற்றுக்கொண்டு அந்தக்குழந்தை நிறையளவுபொன்னை அவர்களுக்குக் கொடுத்துவிட்டு, அவர்கள் போனபிறகு அதற்கு நாமகரணமுதலானவைகள் உங்கள் குலாசாரப்படி நடத்திக்கொள்ளுங்கள், அந்தக்குழந்தையால் உங்களுக்கு இம்மை மறுமையின்பங்களும் முத்தியும்கிடைக்கும் என்று சொல்லி மறைந்தருளினர்.

## திருவெண்காடர்மனைவியார் சிவசருமர்மனைவியாரிடத்தில் குழந்தையைப்பெற்றது.

உடனே அவ்விருவரும், விழித்தெழுந்து,சிவத்தியாநத்துடனிருந்து, தாம்கண்டகனவை ஒருவர்க்கொருவர் சொல்லி மகிழ்ந்தபிறகு, திருவெண்காடர் தம்தாயிடஞ்சென்று கண்டகனவைச்சொல்ல, அவரும்கேட்டு ஆநந்தித்து, அனைவரும் சூரியோதயத்தை எதிர்பார்த்திருந்தார்கள், பிறகு சூரியோதயமானவுடன், திருவெண்காடர் நித்தியகாலைக் கடன்கழித்து, சிவார்ச்சனைசெய்து, அடியார் முதலியோரைப்பூசித்து, தம்மனைவியாரோடு தமதுமனைப்புறத்துள்ள சோலைக்குள்ளேபோய், அங்கிருந்த தம்பதிகளையும் குழந்தையையும் கண்டவுடனே, மருதூருடைய பெருமானும் பெருமாட்டியுமாக எண்ணி, அருகேசென்று வணங்கி,இனிய மொழிகளைக்கூறி உபசரித்தார்கள். அப்போது அந்தச்சுசீலையார் கருத்துத் திருவருளால் நிலை

மாறிக்கனிந்து, மகிழ்ச்சியுடன் திருவெண்காடர் மனைவியாராகிய சிவகலையம்மையாரை நோக்கி, அம்மே, நீர்மிகநல்லவராக இருக்கிறீர், அழகும் அருளும் திரண்டொருவடிவமாகிய இந்தக்குழந்தையை எம்கணவர் பொருளாசையால் யார்க்கோகொடுக்க இருக்கிறார். அதை மறுத்து உமக்குக்கொடுக்கிறேன். இதை நீர்பெற்ற குழந்தைபோலப்பாவித்து வளர்ப்பீராயின், உமக்கு எல்லாநன்மைகளும் உண்டாகும். நானும் வேண்டும்போதெல்லாம் வந்துபார்த்து என்கலிதீர்வேன். என்சொல்லைத் தடுக்கவேண்டாம் என்று சொல்லிக் குழந்தையைக் கையிற்கொடுத்தார். உடனே சிவகலையாரும் தாம்கண்டகனவு மெய்யானதைப்பற்றிப் பெருமகிழ்ச்சிகொண்டு இருகையினாலும்குழந்தையைவாங்கி, அன்பின்மிகுதியாற்பெருகிய தமதுதனப்பாலை ஊட்டலும், குழந்தைவடிவமாகிய மருதவாணரும் ஆவலோடுண்டு அழுகை நீங்கிப் பசியாறினமைபோல நடித்தார். சுசீலையாரும் சிவசருமரும் கண்டு களித்தார்கள். உடனே சிவசருமர், வேறுஞாபகமுண்டாகத் திடுக்கிட்டு, நாம் கண்டகனவென்ன, இப்போது நம்மனைவிசெய்த காரியமென்ன, திருவெண்காடர்க்கல்லவா இந்தக்குழந்தை உரியது என்று கொஞ்சநேரம் சிந்தித்து, பிறகு மனந்தெளிந்து, சிவனது திருவிளையாடல் எப்படிமுடியுமோ, போகப்போகப் பார்ப்போம் என்று அடங்கியிருந்தார். இந்த அதிசயத்தையெல்லாம் அருகிலிருந்து பார்த்த திருவெண்காடர், திருவருளைநினைத்து, உடல்பூரித்துப் பேரானந்தங்கொண்டு, சிவசருமரைநோக்கி, ஐயரே! என்ன சிந்திக்கின்றீர், உம்மைநான் இங்குக்காணப்பெற்றது மருதவாணர் திருவருளாலன்றோ, இது உமது திருமாளிகையேயாம், எழுந்தருளலாமென்று உபசரித்தார். சிவகலையம்மையாரும் சுசீலையாரைநோக்கி, அம்மே; நீர் அஞ்சவேண்டுவதில்லை, நீர் கட்டளையிட்டவண்ணம் இந்தக்குழந்தையைக் காப்பேன், சிவாநுக்ரஹத்தால் கிடைத்த இந்தக்குழந்தை என்குழந்தையேயாம், இந்தச்செல்வமெல்லாம் உம்மதே, தேவரீர் எல்லாவிதத்தாலும் எம்மை யாண்டுகொள்ளலாம் என்றார். அப்போது சிவசருமர் இந்தவார்த்தை களைக்கேட்டு; நமது இறைவர் கனவிற்குறித்தருளிய திருவெண்காடர் இவரேயாவர் என்று திருவருள்தோற்றுவிக்க எண்ணி நின்றார்.

அப்பால், சிவகலையம்மையார் தமதுகையிலிருந்த குழந்தையைத் தம் கணவர் கையிற்கொடுக்க, அவர்வாங்கி, "மக்கள்மெய்தீண்டலுடற்கின்பம்" என்ற உண்மைப்பயனை யநுபவித்து, குழந்தையின் கேசாதிபாதாந்தமாகிய அவயவ சௌந்தர்யமாகிய கடலில்மூழ்கி, உச்சிமோந்து, முத்தமிட்டு, மார்போடணைத்துப், பெருமகிழ்ச்சியை யுடையவராய்த் தம்மைந்தனைமீட்டும் தம்மனைவியார் கையிற்கொடுத்து, சிவசருமரையும் அவர்மனைவியாரையும் உபசரித்து அழைத்துப்போய், ஆசநத்திலிருத்திப் பூசித்து, தம்புதல்வனைத் தொட்டிலிற்கிடத்திப், பொன்னினாலும் மணிகளாலும் அலங்கரி

த்து, இச்செய்திகேட்டுக் காணவந்த உற்ரூர்முதலிய எல்லார்க்கும் வறுமைகெடும்படி நிதிமழையைப்பொழிந்து புத்ரோத்ஸவம் கொண்டாடினர்.

அந்தச்சமயத்தில், திருவருளாணையால் பிறர் கேளாதவண்ணம், ஓ சிவசருமரோ; திருவெண்காடரோ; உங்களுக்குக் கனவிலிட்ட கட்டளைப்படி சீக்கிரத்தில் முடிக்கக்கடவீர்களென்று ஒரு அசரீரிவாக்குண்டாதலும், சிவசருமர்கேட்டு, வேதவாக்கியங்களால் தோத்திரம்பண்ணினர். திருவெண்காடர்கேட்டு அன்பும் ஆராமையும்மேலிட, எம்பெருமானே; குழந்தையைப்பெற்ற மகிழ்ச்சியால் மயங்காமல், கருணையால் செல்வமென்னதென்றறிவித்து உய்வித்த பேரருளாளனே, போற்றியென்று துதித்துப் பலகால் வணங்கினபிறகு, ஒருதுலைதருவித்து, அதின்மீது ஒருதட்டில் தம் பெறலரும்பேறுகிய தெய்வக் குழந்தையைக்கிடத்தி, மற்றொருதட்டில் பொன்னையும் மணிகளையும்சொரிய, சிவாநுக்ரஹத்தால் பொன்னிருந்தட்டு மேலெழுந்தே நிற்கக் குழந்தையிருந்த தட்டுநிலத்தில் தாழ்ந்துகிடந்தது. இந்த அற்புதத்தைக்கண்ட யாவரும் அதிசயித்திருந்தார்கள். சிவசருமர் ஆச்சரியமடைந்து, துலையைவலம்வந்து, அஞ்சலிசெய்து, எதிரேநின்று, திருவிடைமருதூர்ச் சிவபெருமானே; அடியேன் பொருளாசையால் தேவரீருக்கு அடிமைப்பட்டதல்லவே, திருவடித்தொண்டுக்கு ஆசைப்பட்டல்லவா அடிமைப்பட்டது, அப்படியிருக்கத் தேவரீர் இப்படிச்செய்வது தருமமல்லவே, செல்வக்கடலில் வீழ்த்தத்திருவுளமோ! இறைவனே! இந்த ஏழையைக்கருணையால் உய்விக்கவேண்டுமென்னுங்கருணை உமதுதிருவுள்த்தில் இருக்குமாயின், இத்துலைத்தட்டு இவ்வளவில் சமநிலையடையவேண்டுமென்று மந்திராக்ஷதையிறைத்து வணங்கினர். உடனே துலைத்தட்டிரண்டும் திருவருளாணையால் சமநிலையடைந்து நின்றன. திருவெண்காடர் சிவசருமரைப்பணிந்து துதித்துநின்றனர். சிவசருமரும் திருவருளைநினைத்துத் தம்மைமறந்து நின்றனர். அப்போது சிவபெருமானாணையால், ஓ சிவசருமரோ; யாம் இப்படிச்செய்தது உம்மைச்செல்வமயக்கில் ஆழ்த்தற்பொருட்டன்று, இத்திருவெண்காடர் பொருள்முழுதும் தருமவழியால் சேகரிக்கப்பட்டதாதலாலும்அதனைப்பெறுதற்குரியர் நீரேயாதலாலும் இப்படிச்செய்தோம், அஞ்சவேண்டாம், இன்றுமுதல் பதினான்கு வருடம் கழிந்தவுடனே நீரும் உமது குடும்பமும் எமதுபதத்தில்அழிவில்லாமல் வாழ்ந்திருக்கக்கடவீர்கள், இந்தப் பொருளைக்கொண்டு இனித் திருவிடைமருதூரை அடையுங்களென்று ஒரு அசரீரிவாக்கு உண்டாயிற்று. அதுகேட்டு அங்கு இருந்தவர் யாவரும் ஹரஹர என்று முழக்கம்செய்தார்கள், சிவசருமர் மனத்துன்பம் நீங்கிப் பலகால் இறைவனைப்பணிந்து துதித்தனர். இவ்வாறு விலைவரம்பில்லாத மாணிக்கத்தைக்குழந்தையாகப்பெற்ற திருவெண்காடர், குழந்தையைத் துலையினின்று மெடுத்து அணைத்துக் கண்ணெச்சில் போக்கி, இரு

க்கைசேர்த்து, பொருள்களையெல்லாம் திருவிடைமருதூரில இருக்கும் சிவசருமருடைய திருமாளிகைக்கு அனுப்பி, அன்றேதம்மைந்தர்க்கு மருதவாணன் என்று நாமகரணம்செய்தார்.

சிவசருமர் திருவிடைமருதூரையடைந்திருத்தல்.

அப்பால், சிவசருமர் விருந்துண்டு, அன்றுகழித்து மறுநாள்போய் மற்றைநாள் காலையிலே, திருவருளாணையின்படி திருவிடைமருதூருக்குப் போகவேண்டிய தம் கருத்தைத் திருவெண்காடருக்குக் குறிப்பிக்க, அவரும் அவ்வேதியரைப்பூசித்து, அவரையும் அவர் மனைவிமக்களையும் பொற்றேரிலேற்றிப் பின் சென்று வழிவிட்டுத் தம்மனைக்குத் திரும்பினார். தேரேறிப்போகிற தம்பதிகள் குழந்தையின் பிரிவாற்றாமல் வருந்தித் தம் வசம்மழிந்து சோர்ந்து தேர்மீது சாய்ந்தனர். அதுகண்டு அவர்மக்கள் வருந்தலும், தேர்ப்பாகன் தேரைநிறுத்திச் சைத்யோபசாரம் செய்தவுடன் அவர்கள் களை தெளிந்து விழித்தெழுவோர்,மருதவாணனே, என்று அழைத்துக்கொண்டே யெழுந்தார்கள். அப்போது சிவபெருமான் மருதவாணன் போலத் திருவுருக்கொண்டு, அவர்கள் கவலை நீங்கும்படி அந்தத் தேரின் ஒருபுறத்தில் அவர்கள் மக்களோடிருக்கக்கண்டு, திடுக்கிட்டுக் குழந்தையை வாரியெடுத்து, அப்பா, எவ்வாறு வந்தாயென்று அன்பினாலுருகி, தேரைவிரைவாக நடத்திக்கொண்டுவருகையில், அந்தத் தம்பதிகளுக்குத் திருவருளாணையின்படி, தேர் வேகத்தால் ஒரு பெருஞ்சுழுத்தியுண்டாயிற்று, தேர் திருவிடைமருதூரைச்சேர்ந்து திருமாளிகைவாயிலையும் அடைந்தது. பிறகு இவர்கள் மயக்கமொழிந்து பார்க்கும்போது குழந்தையைக்காணாமையால் மிகவும் வருந்தி நிற்கையில்,சிவசருமர் தம்மனைவியாரைநோக்கி,பெண்ணே, நீயிந்தப்பொருள்களை யெல்லாம் அதிதிபூசைமுதலான சற்கிரியைகளில் உபயோகித்துக்கொண்டு சுகமாயிரு, நான் காவிரிப்பூம் பட்டினத்துக்குப் போய்க் குழந்தையைப் பார்த்து வருகிறேன். பார்க்க நேரிடாவிட்டால் தேகத்தை விடுகிறேன் என்றார். அது கேட்ட, சுசீலையார், நீர் என்னைப் பிரியுமுன் என் உயிர்பிரியும் என்றார், அதற்குச் சிவசருமர் ஒன்றும் தோன்றாமல் மயங்கி நின்றார்.

அங்கே, காவிரிப்பூம் பட்டினத்தில், குழந்தையானது திருவெண்காடருக்கும் அவர்மனைவியாருக்கும் பல அற்புத நடனங்களைக்காட்டிக் களிப்பித்திருந்தது. இப்படியிருக்க, சிவசருமருக்குத் திருவெண்காடர் கொடுத்த திரவியம் மூன் றுதினமாக வண்டியிலேற்றப்பட்டுத் திருவிடை மருதூருக்கு வந்துகொண்டேயிருந்து மூன்றாநாள் முழுதும் சேர்ந்தது; சிவபெருமானருளால் அப்பொருளோடு காவலர் வேடமாக வந்திருந்த கணநாதர் ஒருவர் ஒரு கவளிகையையும் திருவெண்காடர் எழுதியவாறாக ஒரு ஓலைச்சுருளையும் சிவசருமரிடத்திற் கொடுத்துத் தன்னிச்சைவழியே போயினர்,

பின் சிவசருமர் அந்த ஓலைச் சுருளை நிமிர்த்துப்படித்து, அதனுள், மருத வாணர் சுகமாயிருக்குஞ்செய்தியும், இவரது பிரிவாற்றாமைத்துயரம் நீங்க அந்தக் குழந்தையுரு அமைக்கப்பட்ட படமொன்றனுப்பியசெய்தியும் எழுதியிருக்கக்கண்டு, மிகமகிழ்ந்து, அந்தக்கவளிகையைக் கட்டவிழ்த்து,அதில் குழந்தையுரு வெழுதிய படத்தைப்பார்த்துக் களித்து, மனைவியாருக்கும் காட்டி மனந்தெளிவித்தார். அவரும் துன்பமாறியிருந்தனர். அது முதல் சிவசருமர் அந்தப்படத்தை மிகுதியாகிய அன்போடு பூசித்துவந்தனர். அன்றியும் சிவபூசை, பிதிரர்கடன், அடியார் பூசை, வேதாகமமோதல் முதலியவற்றையும் குறைவற நடத்திவந்தார்.

### அருட்குழவிப்பெருமான்திருவிளையாடல்.

அப்பால், திருவெண்காடரும் அவர்மனைவியாரும்தமதுஅருமைப்புதல்வனை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்து வருகையில், குழந்தை முகக்கவிழ்ந்து செங்கீரையாடல்முதலிய பருவலீலைகளால் தாய்தந்தையரை மனங்களிக்கச்செய்தது. பிறகு தாய்தந்தையர் குழந்தைக்கு அந்நப்ராசநம்முதலிய கருமங்களை நிறைவேற்றிப் பெருங்களிப்போடு வாழ்ந்திருக்கும்நாளில், மருதவாணர் தம்மையொத்த சிறுவரோடுகூடி,காற்றாடிவிடல் கழற்காய்விளையாடல்முதலிய விளையாடல்களைச்செய்துகொண்டிருந்தார்.

### மீனுயிருந்தமணிக்ரீவன்சாபந்தீர்த்தது.

இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள் அந்தச்சிறுவர்களோடு கடற்கரைக்குப்போய் விளையாடிக்கொண்டிருந்தவர், மணிக்ரீவன் என்னும் கந்தர்வனது சாபத்தைநீக்கத்திருவுளங்கொண்டு, அந்தச்சிறுவரோடு ஒருமரக்கலத்திலேறி நெடுந்தூரம்போய்த் திரிந்தாடிவருகையில், ஒருபெருமீன் இவர்களுடைய தோணியைநோக்கி, விழுங்குங்குறிகாட்டி விரைந்தோடி வருதல்கண்டு, அந்தச்சிறுவரெல்லாரும் அஞ்சிப் பெருங்கூச்சலிட்டு வருந்தும்பொழுது, அந்தமீன், தோணிக்கருகில்வந்து கூம்பின்மீது நின்றவருள் ஒருவனைப்பற்றிவிழுங்கியது. அதைக்கண்ட மற்றையோர் நடுங்கிமூர்ச்சையடைந்தார்கள். அதை மருதவாணர்கண்டு இரங்கி, அந்தச் சிறுவர்பயத்தை நீக்கும்பொருட்டுத் தமதுதிருவடியைநீட்டி அந்தமீனினது தலையில் உதைத்தார், உடனே அந்தமீன் உயிர்விட்டுமடிந்தது. மடிந்தவுடனே அதின் உடம்பினின்றும் ஒருதெய்வவடிவமுள்ள புருஷன் வெளிப்பட்டு, விமானத்திலேறி, ஆகாசத்தில்நின்று, மருதவாணரைநோக்கி, ஐயா, நான் மணிக்ரீவன் என்னும் கந்தர்வன், நான் சிந்துமுனிசாபத்தால் இப்படி மீனுயிருக்கநேரிட்டது, அது அவர்சொல்லியபடியே உமது திருவடிபட்டமாத்திரத்தில் ஒழிந்துபோயிற்று, என்று துதித்துத் தன்னுலகுக்குப்போய்விட்

டான். பிறகு மருதவாணர் சிறுவர்களைக் கருணையோடு நோக்கினவுடனே, அவர்களெல்லாம் விழித்தெழுந்து, மருதவாணரையும் மீன் மாண்டுமிதப்பதையும் நோக்கி, அதிசயித்து, முன்னே அந்தமீனினால் விழுங்கப்பட்ட சிறுவனைக்குறித்து விண்ணப்பஞ்செய்ய, மருதவாணர் புன்னகைசெய்து, அவன் இதோவருகிறான் பாருங்களென்றுசொல்ல, அச்சிறுவன் அந்த மீன்வயிற்றினின்றும் அளவற்றவிலையுயர்ந்த நவமணிகளைவாரிச் சுமையாகக் கட்டிச்சுமந்துகொண்டு அதின்வாய்வழியாய்வரக்கண்ட சிறுவர்கள் எதிரே போய் அவனையழைத்துவந்து, அவன்கொண்டுவந்த மணிகளைப்பார்த்து, மகிழ்ந்து, அந்தப்படியே தமக்குங்கிடைக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்றுகுறிப்பிக்க, மருதவாணர் அவர்களைநோக்கி, நீங்கள் ஒவ்வொருவரும் அந்த மீன்வயிற்றில் நுழைந்துவாருங்களென்றுசொல்ல, அவ்வாறே அவர்கள் அந்தமீன்வயிற்றில் நுழைந்து, கணக்கற்றமணிகளை வாரிக்கட்டிச்சுமந்து வந்து தோணியிற்சேர்த்து, சிறந்தமணிகளை மருதப்பெருமானுக்குக் காணிக்கையென்று முடிந்துவைத்தார்கள். உடனே நெடுநேரமாயிற்றே, நமது தாய்தந்தையர் நமது வரவுநோக்கியிருப்பார்களே, நாம் போவோமென்று தோணியை விரைவிற் செலுத்திவராநின்றார்கள். இவர் இப்படியாயிருக்க,

அங்கே நகரத்திலுள்ள வணிகர் எல்லாரும் தத்தம் புதல்வர் மனைக்குவராமையால் மனம் வருந்தித் திருவெண்காடருடைய வீட்டுக்குவந்து விசாரிக்க, அவர்மனைவியாரும் தம்மைந்தர்மனைக்குவராமையைத் தமது கணவனார்க்கு அறிவிக்க, எல்லாரும் நகரமுழுதும் தேடி, எங்குங்காணமல், கடற் கரையையடைந்து விசாரித்தலும், அச்சிறுவர் தோணியேறிக் கடலின் மேற்சென்றதாகக் கேள்வியுற்று, அவரது தோணியின் வரவுநோக்கிக் கடற்கரையில் நிற்கவே, தோணியும் வந்து நின்றது. சிறுவரெல்லாரும் மணிப்பொதிகளோடு கரையேறித் தத்தம் பிதாக்களை வணங்க, அவர்களும் தத்தம் புதல்வரையழைத்து மனைகளிற்போய், அச்சிறுவர் கொண்டுவந்த மணிகளைக்கண்டு மிகமகிழ்ந்து பட்டினத்துப்பிள்ளையாருக்கு அந்த வரலாற்றையறிவித்துக் களித்திருந்தனர். பட்டினத்தாரும் தம்மைந்தர் கொண்டுவந்த மணிகளைக்கண்டு அதிசயித்து, வேதியர்முதலானோர்க்கு அந்த மணிகளைத்தானம் பண்ணிப் புதல்வரோடு சுகித்திருந்தனர்.

### மருதப்பிரான்வித்தியாப்பியாசம்.

இப்படி சிலகாலம் கழிந்தவுடன், மருதவாணருக்குக் கல்விகற்கும்பருவம் உண்டாயிற்று, திருவெண்காடர் அவர்க்குத்தக்க ஆசிரியரிடத்தில் பள்ளிக்கமைத்துச் சகலகலைகளிலும் வல்லவராகும்படிசெய்தார். அப்போது பிறதேசத்திலிருந்து ஒருவணிகன் ஒருபெரியமுத்தை அந்தக்காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள வசியரிடத்திற் கொண்டுவர, அதனை எல்லாரும்

கண்டு பிரமித்து விலைமதிக்கிலராகித் தம்முட்சிறந்த திருவெண்காடரிடத்திற் கொண்டுவந்தார்கள், அப்போது திருவெண்காடர் அந்தமணியை நோக்கிவியந்து, இது பதினாயிரம் பொன்பெறும் என்றார். அதைக்கேட்ட அவ்வணிகரெல்லாரும் தக்கதேயென்று மனமகிழ்ந்தார்கள். அந்தச்சமயத்தில், மருதவாணர் பள்ளிக்குப்போய் வந்தவர் தம்பிதாவுடனிருந்துண்ண விருப்பங்கொண்டு பிதாவை யழைக்கவந்தார். அப்போது அங்குக் கூடியிருந்தவணிகரையும் அவ்விடத்திலிருந்த பெருமுத்தையும் கண்டு,இதன் விலையாது, இது எங்கே கிடைத்தது என்று வினவினர், அப்போது பட்டினத்துப் பிள்ளையார் மருதவாணரைநோக்கி, குழந்தாய்! இந்த மணியைப் பற்றின விசாரம் உனக்கு வேண்டாம், நீ போய்ப்பசியாற வுண்டுபள்ளிக்குப் போ வென்றார், அது கேட்ட மருதவாணர் பட்டினத்துப் பிள்ளையாரை நோக்கி, தந்தையே; ரத்ந லக்ஷணம் எம்மாசிரியரிடத்துக் கற்றபோது கேட்டறிந்த சிலதீயகுறிகள் இந்த மணியினிடத்திற்கண்டேன் ஆதலால் அதனை உமக்கு அறிவிக்க எண்ணினேன் என, அங்கிருந்த வசியரிலொருவர் இவர் சொல்லைக்கேட்டு அதிசயித்து, மருதவாணரே, இந்தமணியைப் பிறதேசத்தார் கொண்டுவந்து விலைமதிக்கத்தந்தார்கள், எம்மால்மதிக்க இயலாமல் உமது தந்தையாரிடத்துக் காட்டினோம், அவர் பதினாயிரம்பொன் பெறுமென்று மதிப்பிட்டார் என்றுசொல்ல,மருதவாணர் நகைத்து, எமது தந்தையார்மதித்த பதினாயிரம்பொன்னை நானேதருவேன் நீங்கள் அஞ்ச வேண்டாம், இதனைக்கண்ணினால் நோக்கினும், வறுமை, நோய்முதலிய பீடைகள் உண்டாகும், இதனுள்நீரிருக்கின்றது, இதனை உடைத்துக்காட்டுகிறேன் பாரும் என்று அந்தமுத்தை உடைத்தார், உடனே அதனுள்ளிருந்த நீர்வெளிப்பட்டது, அதைக்கண்டவரெல்லாம் வியந்தார்கள். பின்பு அந்தமுத்தைத் தம்கையிற்கொடுத்த வணிகனுக்குத் தாம்சொன்னபடியே பொருள்கொடுக்க நினைத்து, கடாரபுரத்திலுள்ள ஞானநந்தன் என்னும் தமதுநேசனுக்குத் திருமுகங்கொடுத்து அனுப்ப, அத்திருமுகத்தைக் கண்டவுடனே ஞானநந்தன் தடைசெய்யாமல் பொற்குவியலைக் கொடுத்தனுப்பினான். இந்தச் செய்தியைக்கேட்ட திருவெண்காடர் தம்புதல்வரிடத்தில் அச்சமும் அன்பும் மிகுந்தவரானார்.

## மருதவாணர் வியாபாரநிமித்தம் கப்பலேறிப்போனது.

இப்படியிருக்கையில், பதினாறுவயது நிறைந்தது. அப்போது மருதவாணர், தாம்முன்புசிவசருமருக்கும் திருவெண்காடருக்கும் அருள்செய்தபடிமுத்திகொடுக்கத்திருவுளங்கொண்டு,பட்டினத்துப்பிள்ளையாரிடம்போய், தந்தாய், கப்பலேறித் தீபாந்தரங்களுக்குப்போய், மணிமுதலிய பலசிறந்த பொருள்களின் வியாபாரஞ்செய்து அதிகமாகப் பொருள் சேர்க்க

வேண்டுமென்னும் விருப்பமுள்ளவனாய் இருக்கிறேன், இதுநமதுகுலாசார தருமமாதலால் விடைதரவேண்டும் என்றார். அதுகேட்ட திருவெண்காடர் திடுக்கிட்டு, மருதவாணனைநோக்கி, அப்பா; நமக்கிருக்கிறசெல்வம், தரந்தரமாயநுபவித்தாலும் தொலையாதே, அப்படியிருக்க, இன்னமும் பொருள் தேடவேண்டுமென்பதும், இந்த இளமைப்பருவத்தில் எங்களைவிட்டுப் பிரிந்துபோவதும் தக்கதன்று என்று வருந்திச்சொன்னார். அதுகேட்ட மருதவாணர், புன்னகைசெய்து, தந்தாய், தேவரீர்சொன்னது உண்மையே, ஆயினும் உலகவியற்கைக்குத்தகுந்தபடிநடப்பது என்கடன்மையாதலால் நான் போய்வரும்படி விடைதரவேண்டும்என, திருவெண்காடர் தமதுமைந்தரது கருத்தையறிந்துகொண்டு, இனி இவர் நமதுதடையில் நில்லார், என்று துணிந்து, ஆயின், யானும் உன்னுடன்வருகிறேன், வாரும் என்றார். அப்போது, மருதவாணர், ஐயரே, நீர் என்னோடுவந்தால் என்மனவூக்கம்செல்லாது, அன்றியும் இங்கு எமது தாய்மாரிருவரும் நமதுபிரிவாற்றாமல் உயிர் நீங்குவர், ஆகையால் நீர் இங்கேயிரும், நான்போய் விரைவாய்வந்து சேர்கிறேன் என்றுசொல்லித் தந்தையார்விடைபெற்று, அவ்வூரினின்றும் வியாபாரநிமித்தம் கப்பலேறிப்போகிற வணிகரோடு தாமுங்கூடிச்சென்றனர். இவர்களுடைய தாய்தந்தையர்முதலாயினோர் காவிரிப்பூம்பட்டினத்திற்றானேயிருந்துகொண்டு தத்தம்வழிபடு கடவுளைவழிபட்டுத் தம்புதல்வருடைய வரவை யெதிர்பார்த்திருந்தார்கள்.

## மருதப்பிரான் வாணிபத்திறனும் மீட்சியும்.

இப்படியிருக்க, பொருள்தேடச் சென்றவரெல்லாரும் ஒருதிபாந்தரத்தையடைந்து அவ்விடத்தில் தம்பண்டங்களை மாறிக்கொண்டு, வேறு பல தேசங்களைநோக்கிச் சென்றனர். மருதவாணர் ஒருவரும் அவரோடு செல்லாமல் அவ்விடத்திற்றானே யிருந்துகொண்டு தம்மிடத்துள்ள பண்டங்களை மாறிப் பொருள்சேகரித்து, கோயில், மண்டபம், மடம், சத்திரம், சாலை, நந்தவனம், குளம் தடாகம்முதலிய அறங்களில் உபயோகித்துச் சிலமாதங்கள் கழித்தனர். வேறுதேயங்களுக்குச் சென்றவணிகர் பெருஞ்செல்வமுடையராய் மீண்டு மருதவாணரிருக்கு மிடத்துக்குவந்து, நீர் இவ்விடத்திற்றானேயிருந்து என்ன லாபமடைந்தீர் என்று வினவ, மருதவாணர், யான் பொருள் சேகரிக்கவில்லை, என் பண்டங்களுக்கீடாக இவ்வூரார் கொடுத்தஎருமுட்டைகளும் அவல்கடலையுமேஇருக்கின்றனஎன்றார், அவர்கள் நகைத்து, நீர் கொண்டுவந்த பொருளையெல்லாம் எருமுட்டைக்கும் அவல்கடலைக்கும் மாறிவிட்டுப்போனால், உமது தந்தையார்க்கு என்ன சொல்வீர் என்றார்கள். அதற்கு அவர் அவர்களைநோக்கி, நீங்கள் என் பொருட்டுப் பரிதபிக்கவேண்டியதில்லை யென்றார். அதுகேட்ட தோழர்

கள் யாவரும், சிலநாள் அவ்விடத்திற்கழித்துத் தம்மூராகிய காவிரிப்பூம்பட்டினத்திற்குச் செல்லநினைத்து மருதவாணரோடு கூடிக்கப்பலேறி வருகையில், மருதவாணர் மாயையால் ஒருகாற்றுமழை யுண்டாகி, அதனால் கப்பல் திசைதப்பிப்போக, தின்பண்டங்கள் யாவுமொழியுங்காலமளவும் கப்பல் அப்படியே துறைதெரியாதிருந்தமையேயன்றி, குளிர்காய எரிகரும்பும் இல்லாமையால், மருதவாணரிடத்திலிருந்த எருமுட்டையைக் கேட்க, அவர் ஊரிற்போய்ச் சேர்ந்தவுடனே கொடுப்பதாகப் பத்திரம் எழுதிக்கொடுத்தால் கொடுப்பேனென்றுசொல்ல, அவர்களும் அப்படியே பத்திரமெழுதிக்கொடுத்து விரட்டியைப்பெற்றுக் குளிருக்கெரித்துக்கொண்டு தம்மூரையடைந்தார்கள். இவருள் ஒருவன் முன்னேவந்து, திருவெண்காடரிடத்தில், உமது புதல்வர் அறிவுமாறியிருக்கிறாரென்று சொல்லிப்போயினன், திருவெண்காடரும் தம்புதல்வரிடத்திருந்த விரட்டியையும் அவல்கடலையையும் கண்டு வணிகன் சொன்னது உண்மையேயென்று துணிந்திருந்தார், ஆயினும் விரட்டியைப் பெட்டியிலிட்டுப் பத்திரப்படுத்துவாருண்டோ, இதில் ஏதோ சிலவிசேஷமிருக்கலாம் என்று அவற்றிலொன்றையொடித்து அதின் நடுவில் உயர்ந்த மாணிக்கமிருந்ததுகண்டு, மற்றெல்லாவற்றையுஞ் சோதித்து, ஒவ்வொன்றிலும் அவ்வாறிருக்கக்கண்டு, மனமகிழ்ந்து, அவல்கடலையைச் சோதித்து முழுதும் பொன்மணல் கலந்திருக்கக்கண்டு பெருமகிழ்ச்சியுடையவராய், இவைகளிருந்த பெட்டியில் இன்னமும் ஏதாகிலும் இருக்கின்றதாவென்று பார்க்கும்போது, அதில் ஒரு ஓலையிருந்தது, அதையெடுத்துப் படித்துப்பார்த்து, அது தம்புதல்வரிடத்தில் பெற்றுக்கொண்ட வரட்டியை ஊர்சேர்ந்த பிறகு கொடுப்பதாக உடன்சென்ற வணிகர் எழுதிக்கொடுத்த பத்திரமாயிருக்கக்கண்டு, அந்த வணிகரையழைத்து, இது நீங்கள் எழுதிக்கொடுத்த பத்திரமோவென்று கேட்க, அவர்களும் ஆமென்று ஒப்புக்கொண்டு, தம்முள் அச்சமும் அதிசயமும் அடைந்து, நாம் சாதாரணமான வரட்டியென்று நினைத்து எழுதிக்கொடுத்தோம், இது இப்படியிருக்கின்றதே, திருவெண்காடர் இதுபோன்ற மாணிக்கம் பொதிந்த வரட்டியைத் தரச்சொன்னால் என்னசெய்வோம் என்று சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

### பட்டினத்தார் மருதப்பிரானைக் காணாதுவருந்துதல்.

இப்படியிருக்க, திருவெண்காடர், தம்புதல்வர்கொண்டுவந்த மணிக்குவியலையும் பொற்குவியலையும் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டு, அவரைத் தழுவிக்கொள்ள வேண்டுமென்னும் ஆவலோடு ஓடி, அவ்விடத்தில்மருதப்பிரானைக்காணாமல் திகைத்திட்டு, மனைக்காவலாளரை வினவ, அவர்கள் நாங்கள் ஜாக்கிரதையாய்ச் சோர்வில்லாமல்காத்துக்கொண்டிருக்கிறோம், அவர் இவ்வழியாய்ப் போகக்காணோம் என்றார்கள். பிறகு அந்தப்புரத்

தில் பிரவேசித்து, மனைவிமுதலியோரைவினவ, அவர்களும் மருதவாணர் வந்து உண்டு இப்பொழுது தான் புறத்தேசென்றனர், அவர் தேடிக்கொண்டுவந்து எமக்குக்கொடுத்த ஆடை ஆபரணங்கள் முதலியவற்றைப்பாருமென்று காட்டக்கண்டு, சற்றுத்தெளிந்து, அவரைப்பார்க்கவேண்டுமென்று இங்கும் அங்குமாக ஓடித்தேடியும் காணாமையால் தம்மாளிகைக்குவந்து கிலேசப்பட்டுக்கொண்டிருந்தார்.

### மருதப்பிரான் திருவுருக்கரந்ததும் சிவசருமர் முத்திபெற்றதும்.

இவர் இப்படியிருக்க, மருதவாணர் திருவிடைமருதூரில் தம்மைப் படவுருவத்தில் அன்போடு பூசித்திருந்த சிவசருமருக்குத் தாம் முன்சொல்லியிருந்தபடி பதினாறுவயது நிரம்பியதனால் ஒளிப்பிழம்பாய் வெளிப்பட்டு அந்தச்சோதியில் அந்தச்சிவசருமரையும் அவர் குடும்பத்தாரையும் ஐக்கியம் பண்ணிக்கொண்டு, தம்முடைய மூலலிங்கமூர்த்தியாகிய மஹாலிங்கத்தோடு பிரிவறக்கலந்து எழுந்தருளி வீற்றிருந்தார்.

### பட்டினத்தடிகள் திருவருள்பெற்றது.

அப்பால் திருவெண்காடர் மருதப்பிரானது பிரிவைச் சகியாமல் ஊண்டிமுதலியவற்றை வெறுத்துச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவர் மனைவியார் ஒரு சிறு பெட்டியைக் கொண்டுவந்து அவர் முன்வைத்து இதைத் தேவரீர் வந்தவுடனே கொடுக்கும்படி உமது புதல்வர் தந்துபோயினர் என்றார். உடனே பட்டினத்தார் ஆவலோடு எடுத்துத் திறந்துபார்த்தார். அதில் ஒரு காதற்றவூசியும் ஓர் ஓலைநறுக்கும் இருக்கக்கண்டு மிகுந்த ஆச்சரியமுடையவராய் அந்த வோலையைப்பார்க்க, அதில் "காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே" என்றெழுதியிருந்தது, அதைப்படித்துப் பார்த்த இவர் மருதவாணரது திருநோக்க முதலியவற்றால் முன்னமே பக்குவப்பட்டிருந்தமையால், சிவாநந்த சாகரத்தில் மூழ்கி, தேடவேண்டிய பொருள்வேறொன்றின்றிக் கவலையற்று, திருவருள் முன்னிற்க, "பட்டைக் கிழித்து" "சூதுற்றகொங்கையும்" என்னும் இவ்விரண்டு திருப்பாடல்களை யருளிச்செய்து, இருவகைப்பற்றுக்களையு மொழித்து உபசாந்தத்தையடைந்த நிர்மலசித்த விருத்தியுடன், உலகத் தாரைக் கருணைநோக்கால் நோக்கி, அவர்கள் உய்யும்பொருட்டு, தமது மனத்தை முன்னிலையாக்கி, "வாதுற்ற" "வேதத்தின்" என்னும் இவ்விரண்டு திருப்பாடல்களை யருளிச்செய்து, தாயாரைநோக்கி, அம்மே; உமது தவம்பலித்தது, நீர்யாதொன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை. உம்மை ஒருகணப்பொழுதும் பிரியேன், யான் குருநாதன்து ஆணைவழியில் நிற்பவனானேன் என்றுசொல்ல, தாயாரும் அந்தக் குறிப்பறிந்து, ஐயனே, எனக்கு அந்திய காலம் சமீபித்திருப்பதால், என் உத்தரக்கிரியைகளை முடித்தபிறகு உன் விருப்பத்தின்படி போக

லாகாதோவென, ஐயர், அப்படியே யாகட்டும் என்றுசொல்லி, எதிரோ நின்ற தமது நண்பரும் தலைமைக்காரியக் காரருமாகிய சேந்தனாைநோக்கி, இப்பொருள் முழுதும் எல்லாரும் கொள்ளையிடச்செய்யும் என்று கட்டளையிட்டு, யாதொருபற்று மில்லாதவராய் வெளிப்பட்டனர். அக்காலத்தில், அவர்திருமேனி மீதுள்ள ஆடைகழன்றிருந்ததையும் அறிந்திலர். அந்த நிலைமையை அவர்மனைவியாராகிய சிவகலையம்மையார் கண்டு சென்று வணங்கி, எம்பெருமானே! அடிமைக்குத் தேவரீரையன்றி வேறுகதியில்லையாதலால் அடியேனும் உம்முடன் வருகிறேனென்று வணங்கிக்கூற, ஐயர், அவளை நோக்கி, பெண்ணே! யாவர்க்கும் கதியாவார் சிவபெருமானார், யானோசற்குருவின் ஆணைவழியில் நிற்பவனானேன், நீயோ என்னைத் தொடர்ந்துவரச் சத்தியற்றவள், ஆதலால், நீ இவ்விடத்தில் சிவநேசத்தையும் அடியார்நேசத்தையும் மறவாமலிருந்து சரீராந்தத்தில் சிவபெருமானது திருவடிநிழலை யடையக்கடவையென்றருளிச்செய்து, நிறுத்திவிட்டு, ஆதரவற்றவர்போல அவ்வூர்ப்பொதுமண்டபத்திற் சென்றுதங்கியிருந்தார். அப்போது, அவ்வூரிலுள்ள சுற்றத்தார், நண்பர், முதியோர், முதலிய யாவரும் இந்தச்செய்தியையறிந்துவந்து, அவரைக்கண்டு, ஐயரோ, என்செய்தீர்; நீர் எங்களுக்கெல்லாம் தலைவராயிருந்தும் இந்தப்பரதேசி கோலத்தைக் கொண்டதற்குக் காரணம்யாது, இனி எமக்கு ஆதரவாவார் யாவர் என்று இரங்கினர். அது கேட்ட திருவெண்காட்டையர் அவர்களைச் சுட்டிநோக்காமல் பராமுகமாகநோக்கி, திருவருளைச் சிந்தித்து "மனையாளும்" "அத்தமும்" "எரியெனக்கு" "அண்ணறன்" என்னும் நான்குதிருப்பாடல்களாலும் நிலையாமையைப்பற்றிக் கூறினபின், தமது நெஞ்சை முன்னிலையாக்கி, "மாடுண்டு" "ஆறுண்டு" "உடுக்க" "நாட்டமென்றே" "ஒன்றென்றிரு" என்னும் ஐந்து திருப்பாடல்களாலும் பெறத்தக்கது இன்னதென உறுதிகூறியபின் அவர்களை முன்னிலையாக்கி, "ஊரீர்" "கண்ணுண்டு" என்னும் இரண்டு திருப்பாடல்களாலும் ஹிதோபதேசஞ்செய்து, வாய்பேசாமல் மௌனமாயிருந்தனர். இவ்வாறு இவர் கூறியதைக்கேட்டவர்கள் அஞ்சி நாணமடைந்து, இந்த நிலையை யாம் அடைவது அருமையாயிருப்பதேயன்றி, இவர் கூறிய உறுதிமொழிகளின் பொருளை உணர்வதும் எமக்கு மிகவும் அருமையாமென்று மனங்கூசிச்சென்றனர்.

### அரசன் சேந்தனாைச் சிறைசெய்ததும் திருவெண்காட்டடிகளைக்கண்டதும்.

அப்பால், இவர் துறவுபூண்ட செய்தியையும், இவரது செல்வமுழுதும் ஊரார் கொள்ளை கொள்ளவிட்ட செய்தியையும் கேள்வியுற்ற அந்நாட்டரசன் வந்து, நிதிக்களஞ்சியம் கொள்ளையாகாதபடி தடுத்து, திருவெண்காட்டடிகளுடைய தமக்கைப் புதல்வனை வரவழைத்து, உரிமை முதலிய

வற்றை அவர்களுக்குக்கொடுத்து அவ்விடத்திலிருக்கச்செய்து, அவர்கள் குடும்பப்பாதுகாப்பினுக்கு வேண்டும் பொருளைக் கொடுத்து, மற்றப்பொருளைத் தனது பண்டாரத்தில் சேர்ப்பித்து, தர்மசாலைமுதலிய வற்றிற்கு உபயோகிக்கக் கட்டளையிட்டான்.

அப்போது, திருவெண்காட்டடிகளுக்கு நண்பரும் தலைமைக்காரியக் காரருமாயிருந்த சேந்தனாரது உண்மைநிலையை அறியாத அவ்வரசன் அவரைநோக்கி, சேந்தனாரே! நமது திருவெண்காடரது செல்வம் அளவு கடந்ததென்று பலரும் சொல்லக் கேள்வியுற்றிருக்கிறோமாகையால், இன்னும் எவ்விடத்தாயினும் இருப்பின் தெரிவியும் என்று கேட்க, சேந்தனார் அரசனைநோக்கி, மஹாராஜனே! அவர் செல்வமுழுதும் காட்டிவிட்டேன், இனி ஒன்றும் அறியேன் என்றுகூற, அரசன் அவர்சொல்லில் நம்பிக்கையில்லாதவனாய்த் தன் பரிஜனங்களைநோக்கி, இவர் திருவெண்காடரது நிதிநிலைகளை எமக்குக் காட்டுமளவும் இவரைச் சிறைசெய்துவையுங்கள் என்று கட்டளையிட்டு, இவர்பொருள் முழுதும் திருவெண்காடரது பொருளே என்று எண்ணிக்கவர்ந்துகொண்டான். உடனே அந்தச்சேந்தனார் மனைவியார் அரசனது கொடுங்கோலுக்கஞ்சித் தமது ஒரேபேறாகிய மைந்தனை எடுத்துக்கொண்டு, பிறதேசத்தில்சென்று கற்புநிலைதவறாமல் கூலிவேலையால் சீவனஞ்செய்திருந்தனர். இது இப்படியிருக்க, அரசன், பின்பு பட்டினத்தடிகளைக் காணவேண்டிவந்து, ஊர்ப்பொதுமண்டபம்அடைந்து, அவ்விடத்தில் சிவயோகசிட்டையில் வீற்றிருக்கும் திருவெண்காடரை நோக்கி, ஐயரே! நீர் இப்பரதேசி கோலங்கொண்டதனால் அடைந்த விசேடப்பயன் யாதென்று வினவ, ஐயர், அரசனைநோக்கி, நீர் நிற்பதும் நாம் இருப்பதும் ஆகிய இந்த நிலையே நாம் பரதேசிகோலங்கொண்டதனால் அடைந்த பயன் என்றார். அதுகேட்ட அரசன் நாணமடைந்துசென்றான்.

## சிவயோகத்திலிருத்தல்.

அப்பால், பட்டினத்தடிகளும் பசிவந்தபோது ஊரிற்போய் இருகையால் ஏற்றுண்டு தமது நாட்டமுழுதும் சிவனடியில்வைத்து, சிவயோக சமாதியில் அலைவற்றிருந்தனர். இவரது நிலைமையறியாத இவர் சுற்றத்தார் இவர் பிச்சையேற்றுண்பது தம்மரபுக்குத் தாழ்வாக எண்ணி, அவ்வூரார் பிச்சையிடாதவண்ணம் தடைசெய்தனர். அப்போது இவர் அந்த வுறவினரிடத்து இரக்கமடைந்து, அவர்களுக்கு மெய்யறிவுண்டாகும்படி, பசுமேய்க்கும் சிறுவருடன் ஆடியும், குப்பைமீது புரண்டும், தமது காலில் பழுதையைச்சுற்றிப்பற்றி யிழுக்கும்படி சிறுவரையேவியும், பித்தரொன்று நாட்டார் பழிக்கும்படி குடியிருந்த வீட்டுக்குக் கொள்ளிவைப்போம் என்று சொல்லித் திரிந்தும்வந்தனர்.

## திருவெண்காடர்க்குத் தமக்கையார்நஞ்சிட்டதும், ஊர்பற்றியெரிந்ததும், தணிந்ததும், திருவெண்காடுசேர்ந்ததும்.

அதைக்கண்ட அவர் தமக்கையார் மனம்பொறுக்காமல், இவர் இறந்தாலும் நன்மையாமென நினைத்து, விஷங்கலந்த ஒட்டப்பம் சமைத்து இவர் உண்ணக்கொடுப்பித்தார். அந்தச்செய்தியைத் திருவெண்காடர் திருவருளாலறிந்து, "தன்வினை தன்னைச்சுடும் ஒட்டப்பம் வீட்டைச்சுடும்" என்று சொல்லி,இட்ட அப்பத்துண்டைத் தமக்கையார் வாழ்கின்ற வீட்டின் இறப்பிற் செருகினவுடன், தீப்பற்றி ஒருவராலும் தணிக்கமுடியாமலும் உயிர்களுக்கு அபாயம் நேரிடாமலும் அந்த மனையுடன் ஊர்முழுமையும் சுட்டெரித்து நீறாக்கிவிட்டது. அதுகண்ட யாவரும் அஞ்சி இவரை வணங்க, அவர்களுக்கு இரங்கி (தங்களைக்கேட்டுப் பிறந்திறந்திலம்) என்னும் செய்யுளைப்பாடி அந்தத்தீயைத் தணிவித்து, திருவெண்காட்டையடைந்து சிவபெருமானைத் தரிசித்து (விளக்கினை வையமுய்ய) என்பது முதலிய செந்தமிழ்ப் பாடல்கள் பலவற்றைப்பாடிப் பலியேற்றுண்டு, அவ்விடத்தில், "குடியிருந்த மனைக்குக் கொள்ளிவைக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே வாழ்ந்திருந்தனர்.

## திருவெண்காடர் தாயார்க்குத்தகனக்கிரியைசெய்தது.

அப்படியிருக்கையில், காவிரிப்பூம்பட்டினத்தில் இவர் தாயார் தேகவியோகமடைய, அவரது உடலை உறவினர் வழக்கப்படி ஈமக்கடன் கழிக்க மயானத்திற்சேர்த்தனர். இந்தச்செய்தியைத் திருவெண்காட்டிலிருந்த பட்டினத்தடிகள் திருவருளாலுணர்ந்து, பெருமான் கட்டளைப்படி, தாம் தமது அன்னைக்குச் சொல்லியவண்ணம்முடிக்க நினைத்துப் புறப்பட்டுவந்து; காவிரிப்பூம்பட்டினத்து மயானத்தெல்லையை யடைந்தவளவில், இவரைக்கண்ட சுற்றத்தார் அஞ்சி ஒதுங்கிநிற்க, தாம் அருகேசென்று, அந்தச்சுற்றத்தார் அடுக்கிவைத்த சிதையைத்தள்ளி, வாழைப்பட்டைகளால் சிதையடுக்கி, அதின்மீது தாயாரைக்கிடத்தி, ஐயிரண்டு (௧). முந்தித்தவம் (௨). வட்டிலிலும் (௩). நொந்துசுமந்து (௪). அரிசியோ (௫). அள்ளியிடுவ (௬). இந்த ஆறுவெண்பாக்களையும் பாடினபிறகு, முன்னையிட்டதீ (௧). இந்த விருத்தத்தைப்பாடித் தீமூட்டி, மூண்டெரியும்போது, "வேகுதே தீயதனில்" என்னும் வெண்பாவைப்பாடி, வெந்து நீறானபிறகு,"வெந்தாளோ" என்னும் வெண்பாவைப்பாடித் தூக்கித்து,மறுநாட்காலையில்,"வீற்றிருந்தாளன்னை" என்னும் வெண்பாவைப்பாடி,உறவினர்முதலிய யாவரையும் வருவித்துச் சஞ்சயநம் நிறைவேற்றிப் புறப்பட்டவர், "மென்றுவிழுங்கி" என்னும் வெண்பாவைப்பாடிக்கொண்டே திருவிடைமருதூரை யடைந்தனர். அங்குள்ள சிவனடியார் இவரது வரவு உணர்ந்து எதிர்கொண்டு வணங்கத்

தாமும் அவர்களைப்பணிந்து, பெருமான் திருவாலயத்தையடைந்து சந்நிதியில்நின்று, "தெய்வத்தாமரைச் செவ்விதின்மலர்ந்து" என்னும் முதற்குறிப்பையுடைய இணைக்குறளாசிரியப்பாவை முதலாக எடுத்து, திருமும்மணிக்கோவையைப்பாடிமுடித்துப்புறத்தேவந்து, மனைதோறும்பிச்சையேற்றுண்டு கோபுரத்திருவாயிலே குடியாகக்கொண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தருளினர். அப்பால் ஒருநாள், இடைமருதுடையார் அவரது நனவில் அவ்வூர்க்காவலன்போலத்தோன்றி எதிர்நின்று, கைக்கோலால் நிலத்தைத்தாக்கித் திருவடியால் தீண்டியுணர்த்தி, நீயார் என்று வினவுதலும், அவர், ஊர்க்காவலனே, நானுவது தோலோ, நரம்போ, தசையோ, உரோமமோ, எலும்போ, உதிரமோ, மூச்சோ, மனமோ, யாதோ அறிகிலேன் என்றனர். உடனே பெருமானும் மறைந்தருளினர். தோன்றி மறைந்தவர் இறைவரென்றுணர்ந்து, ஆராமை மேற்கொண்டு, அன்பாற் கரைந்துருகி, அழுது தொழுது, அவர் நின்ற நிலத்து அடிச்சுவட்டைக் கண்களால் ஒற்றி, மார்பால்அணைத்துப், பொடியை முடிக்கணிந்து வழிபட்டுத் துதித்திருந்தனர். பின்பு ஒருநாள் நீர்விடாய்ப்பட்டு எங்கும் குடிநீர்பெறாமல் வருந்தி மருதரைப்பாடிப்பெற்று, உடம்பை அருவருத்துக், கருப்பங்கழனியில் இழுக்கப்பண்ணி அலுத்து, ஒருபுறந்திண்ணையிற் படுத்துறங்கினர். அப்போது மருதீசர் அவரது கனவில் எழுந்தருளி, வெண்காடனே; இனி நமது திருப்பதிகள்தோறும்சென்று பாடுவாயாகவென்று கட்டளையிட, உடனே திருக்கண்விழித்து எழுந்து, அந்தக்கட்டளையின்படி, உலகத்துயிர்கள் உய்யும், வண்ணம் பலசெந்தமிழ்ப்பாடல்களைப்பாடி, மருதவனத்தையர் சந்நிதியையடைந்து, அன்பினாற்கரைந் துருகிப்பாடிப் புறப்பட்டு, திருக்குடமூக்கு, கீழ்க்கோட்டம், காரோணம், நாகேச்சுரம், குரங்காடுதுறை, மாயூரம் முதலிய திருப்பதிகளைவணங்கி, திருவாரூருக்குச்சென்று அடியவர் எதிர்கொள்ளவணங்கி, உள்ளேபுகுந்து, திருவீதி வலம்வந்து, கோபுரவாயிலைப்பணிந்து, பூங்கோயிலுடையாரையும் வீதிவிடங்கப் பெருமானையும் தொழுது பாடிப், பிச்சையேற்றுண்டு வீற்றிருந்தார்.

## திருவாரூரில் இறந்தவனை யெழுப்பியது.

இப்படித் திருவாரூரில் வீற்றிருக்கும் நாளில், சிவபத்தியில் சிறந்த சிறுவனொருவன் பூர்வ ஜந்மபுண்ணியத்தால் திருவெண்காட்டடிகளிடத்துப் பேரன்பும் பத்தியும்செய்து, காலந்தவறாமல் உணவுமுதலியவற்றால் உபசரித்து, அல்லும் பகலும் பிரியாமல் தொண்டுசெய்துவரும்போது, இந்தச்சிறுவன் தன்தாய்க்கு ஒரேமகனாதலால், இவன் தந்தையோடு பிறந்த நல்லத்தை ஒருத்தி, ஒரே பெண்பெற்று, வேறு திக்கின்மையால் அந்தப் பெண்ணை இவனுக்கேகொடுத்து, தமையன் குடியையும் தன்குடியையும்

விளங்கப் பண்ணவேண்டுமென்னும் கருத்துள்ளவளாய், அவன்தாய்க்குத் தெரிவிக்க, அவள் அந்தச்செய்தியை மகனுக்குத்தெரிவிக்க, அவன் அதற்கிசையாமல் நிற்கக்கண்ட அவ்விருவரும் வருந்தி, தமது குறையைப் பட்டினத்துப்பிள்ளையாரிடத்தில் விண்ணப்பஞ் செய்துநிற்க, அவர் அவ்விருவருடைய முறைப்பாட்டுக்கு இரங்கி, மேல் நடக்கப்போகிற காரியத்தை நினைத்து, இச்சிறுவனைநோக்கி, ஐயா! உன்தாய் அத்தை என்னும் இவர்களுடைய மனக்குறையை ஒழித்துவிடு, இறைவன் திருவருள் உண்டாகுங் காலத்தில் உண்டாகும். என்சொல்லைக் கடக்கவேண்டாம் என்று கட்டளையிட்டார். அதுகேட்ட அந்தச் சிறுவன் அஞ்சி, பட்டினத்தாரை வணங்கி, எம்பெருமானே, தேவரீர் திருவடியைப் பிரியாமல் தொண்டு செய்துகிடக்க நினைத்த எனக்குத் தேவரீர் இவ்வாறு கட்டளையிட்டமைக்குக்காரணம் என் பூர்வசன்மமே, ஆயினும் விவாஹகாலத்தில் தேவரீர் எழுந்தருளி ஆசீர்வதித்து உய்யக்கொண்டருளவேண்டுமென்று வேண்ட பட்டினத்தடிகளும் அப்படியே யாகட்டுமென்று அநுக்ரஹித்து விடைகொடுத்தனுப்பினார். அவன் தாயும் அத்தையும் அவனை மனமகிழ்ச்சியுடன் அழைத்துப்போய் மணம்செய்வித்தார்கள். அந்த மணப்பந்தலில் பட்டினத்தடிகளும்போய் அவன் நினைத்தபடி வாழ்த்தி, அவனுக்கு இனிமேல் நேரிடுங் காரியத்தையுங் கூறவேண்டுமென்னும் கருத்தையுடையராய், "நாப்பிளக்கப்பொய்யுரைத்து" என்னுஞ் செய்யுளைப்பாடிச் சேஷையிட்டு ஆசீர்வதித்துத் தம் இச்சைவழியே சென்றார். அப்பால் அந்தச்சிறுவன் தன்மனையாளோடுகூடி வாழ்ந்திருக்கையில், ஒருநாள் ஊழ்வினை தூண்டலால் எண்ணெயிட்டுத் தலைமுழுகி அன்றிரவில் காமமிகுதியால் மனைவியைப் புணர்ந்தான், புணர்தலும் சந்நிபாதங்கண்டு இறந்தான். அதுகண்ட அவன் மனைவி, மாமி, தாய், சுற்றத்தார் முதலானோர்கூடிக் கடல்போல இரைச்சலிட்டு அழுதார்கள். அந்தச்சமயத்தில், திருவருளிச்சைவழியே உலாவுகின்ற பட்டினத்தடிகள் அவ்வீதிவழியேவர, கண்டோர் சிலர்வணங்கி இந்தச்செய்தியை அறிவிக்கவே, அடிகளும் இரக்கமுற்று அவனருகேசென்றுநின்றனர்,இவரைக்கண்டவளவில்அழுதுகொண்டிருந்த யாவரும் அழுகையொழிந்துநிற்க, அடிகள் அந்தப்பிணமகனைக் கருணையால் நோக்கி, "வடிவந்தானும்" என்ற செய்யுளைப்பாடி, தம்மை யாட்கொண்டாரது பேரருளைநாடி, "மண்ணுமுருகும்" என்ற திருப்பாடலைப் பாடியருளினார், உடனே இறந்துகிடந்த இளைஞன் உயிர்பெற்று உறங்கி விழித்தவன்போல எழுந்து வணங்கிநின்றான், கண்டோரெல்லாரும் ஆநந்த வெள்ளத்தில் மூழ்கினார்கள். உயிர்பெற்றெழுந்த சிறுவன் நடந்தசெய்தி ஒன்றும் அறியாதவனாதலால், பெருமான் அமுதுசெய்யக் காலதாமதமாயிற்றேயென்று வருந்தி, ஐயர் பிச்சை நிவேதநத்தைச் சித்தஞ்செய்ய முயல்வதைக்கண்ட ஐயர் திருவுளங்கனிந்து, "எருவாய்க்கிருவிரன்மேல்" என்ற

செய்யுளைப்பாடி, அச்சிறுவனுக்கு நல்லருள்செய்து, அறிவுணர்த்தி வாழ்த்தி, அப்பால் எழுந்தருளும்போது, அவ்வூரார் யாவரும் வந்து வணங்கி, சுவாமீ, அடியேங்கள் உய்யும்படி, நாங்கள் செய்யும் தொண்டுகொண்டு இவ்விடத்திற்றானே வீற்றிருந்தருளவேண்டுமென்று வேண்ட, அவர்கள் குறிப்பையறிந்து "வெட்டவெளியான" என்னும் பாடலைப் பாடியருளி, அவர்களை நிறுத்தி, அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, வழியிலுள்ள பல திருப்பதிகளையும் தரிசித்து வணங்கிப் பாண்டிநாட்டைஅடைந்தார். அடைந்து மதுரைப் பெருநகரைச்சேர்ந்து, திருவாலவாயுடையாரையும் அங்கயற்கண்ணம்மையாரையுந் தொழுது, "விடப்படுமோ" என்பது முதலாகப் பலபாடல்களைப்பாடிச் சிலநாள் அங்குவீற்றிருந்து, பிறகுஅந்நாட்டிலுள்ள திருப்பதிகளெல்லாவற்றையுஞ் சேவித்து மலைநாட்டையடைந்து திருவஞ்சைக்களமுதலிய திருப்பதிகளைத் தரிசித்துப்பாடி, கொங்குநாட்டையடைந்தார்.

### கொங்குநாடுசென்றது.

அந்தக் கொங்குநாட்டில், பேரூர், அவிநாசிமுதலிய திருப்பதிகளிற் சென்று சிவபெருமானைத்தொழுது, வாய்பேசாத மௌன விரதத்தோடு அவ்விடத்திலிருக்கையில், ஒருநாள் அர்த்தராத்திரியில் மிகுந்த பசியெழுந்து வருத்தச்சென்று, ஒருமூர்க்கனாகிய குடும்பியின் தலைவாயிலில் நின்று கைதட்ட, அவன் இவரை அறியாமல், கள்ளனென்றெண்ணித் தடியெடுத்தோடிவந்து அடித்தான். இவர் தாம் நின்றநிலைபெயராமல், சிவசிவ என்று நிற்க, அடுத்த வீட்டுத்திண்ணையிற் கிடந்தவன் ஓடிவந்து அந்த மூர்க்கனை விலக்கி, இவரை யழைத்துப்போய், அமுது படைத்துப் பசியாற்றி உபசரித்தான். அப்போது, அடிகள் திருவருளைநினைத்து, "பூணும்பணிக்கல்ல" என்ற செய்யுளைப்பாடி, உடனே, "இருக்குமிடந்தேடி" என்றசெய்யுளைப் பாடி, அங்குநின்றும் புறப்பட்டுத் துளுவநாட்டிற்சென்று கோகரணமஹாக்ஷேத்திரத்தைத் தரிசித்து, உஞ்சேனைமாகாளம் அடைந்து மாகாளேச்சுரனைப்பணிந்து, நகருடுத்த சிறுபுறங்காட்டிலுள்ள ஒருவிநாயகர்கோயிலிற் சேர்ந்து பரஞானநிஷ்டையில் வீற்றிருந்தருளினர்.

### கழுமரம்பற்றியெரிந்தது.

அப்படியிருக்க, அந்த நகரத்தை ஆளுகின்ற பத்திரகிரிராஜன் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய உத்தம குணங்கள் வாய்த்து அதிதீவிரபக்குவனாயிருந்தமையால், அவனைத்தேற்றச் சிவபெருமான் அருள் செய்ததனால், அவரது அரண்மனையில் களவுசெய்ய விருப்பமுண்டாகிய சில கள்ளர் கூடிவந்து இந்த விநாயகர் கோயிலை யடைந்து, தாங்கள்போகுமிடத்தில் பெருந்தனம் கிடைக்க அருள்செய்யவேண்டு மென்று

விநாயகரைப் பிரார்த்தித்துப்போய், அரண்மனைக்குள்ளேபுகுந்து, தங்கள் ஆசை தணியுமட்டும் நிதிக்குவைகளையும், ரத்நாபரணவகைகளையும் வாரிச் சுமைசெய்து எடுத்துச் செல்லுகையில், பிரார்த்தனை பலிக்கப்பண்ணின விநாயகர் நினைப்புண்டாக, சந்நிதியையடைந்து ஒருவிலையுயர்ந்த பதக்க மெடுத்து விநாயகர்க்குச் சாத்திச்சென்றார்கள். அது இருட்டுக்காலமாகை யால் அந்தப்பதக்கம் விநாயகர் கண்டத்தில்விழாமல் தவறி, அருகேவீற் றிருந்த பட்டினத்தடிகள் திருக்கழுத்தில்விழுந்தது, இது இப்படியிருக்க, அரசன் மனையில் களவுபோனதைப்பற்றி, அரசன் பரிவாரங்களும் காவ லாளரும் புறப்பட்டு, அந்நகரமுழுதும் தேடிப்புறத்தே புதிய அடிச்சுவடு தோன்ற அச்சுவட்டைநாடி குறுங்காட்டிற்சென்று விநாயகர் ஆலயத்தை யடைந்து தங்கினர், உடனே சூரியோதயமாகவே, சிவயோகநிஷ்டையில் வீற்றிருந்த பட்டினத்தடிகள் திருக்கழுத்தில் அணிந்திருந்த ஆரத்தைக் கண்டு, அரண்மனையிற் களவுசெய்தகள்ளருள் இவர் ஒருவரென்று நினை த்து, இவரைப் பலவாறாகத் துன்பப்படுத்தினார்கள். ஐயர் நிஷ்டைநீங்கி, ஆரத்தின்செய்தியையும் ராஜகிங்கரர் துன்பப்படுத்துதற்குக் காரணத்தை யும் அறியாராதலால், அவர்கள்செய்யும் உபத்திரவங்களையெல்லாம் சகித் துக்கொண்டு சிவசிவஎன்று சொல்லிக்கொண்டு சலியாதுவீற்றிருக்க, அவர் களுள் சிலர் இவர் திருடர் அல்லர்,யாரோ பெரியவராயிருக்கின்றனர் என் றார்கள். அதுகேட்ட வேறுசிலர், ஆம் ஆம், இவரை நாம்தேறவிசாரியாமல் துன்பப்படுத்துவது நன்றல்ல, அரசனுக்கறிவித்து அவன் கட்டளைப்படி நடத்துவதே நன்மையென்றார்கள். இப்படியிருக்க, இவர்களிற் சிலர் ஓடிப் போய் அரசனுக்கு இந்தச்செய்தியைத் தெரிவித்து ஆரத்தையும் எதிரே வைத்து, இந்தக்கள்ளனைத் தக்கபடி தண்டனைசெய்யாமல் விட்டுவிடுவீரா யின் உம்முடைய பொக்கசம்முழுதும் கொள்ளையாய்விடும் என்று வற்புறு த்திச்சொல்லவே, அரசன் அவர்கள் கருத்துக்கிசைந்து பட்டினத்தடி களைக் கழுவேற்றக் கட்டளையிட்டான். அந்தக் கட்டளையின்படியே, கிங்க ரர் ஐயரைக் கழுமரத்தினருகே அழைத்துப்போனார்கள், ஐயர் அந்தக்கழு மரத்தை நோக்கிப் புன்னகைசெய்து, "என்செயலாவதியா தொன்று மில்லை" என்ற திருப்பாடலைப்பாடியருளினர், உடனே கழுமரம்பற்றியெரி ந்துவிட்டது. அவ்வளவில் அங்கிருந்தபரிஜநங்கள் ஓடிஇந்தச்செய்தியை அர சனுக்குத் தெரிவிக்க, அரசன் திடுக்கிட்டுப் பாதசாரியாக ஓடிவந்து, பற்றி யெரியும் கழுமரத்தருகில்நிற்கிற திருவெண்காட்டடிகளைத்தரிசித்து இந்தப் பிரபஞ்சத்தை முழுதும் மறந்துவிட்டனன்.

### பத்திரகிரியார்திருவருள்பெற்றது.

அப்படித் தம்மைமறந்துநின்றபத்திரகிரியார் உணர்ச்சி பெற்றெழுந்து அடிகளைப் பலமுறைவணங்கி அடியேன் தேறவிசாரியாமல் செய்த அப

ராதத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, பட்டினத்தடிகள் கருணைகூர்ந்து அரசனுக்குச்சிவஞானம்விளங்கும்படி தத்துவநிய திசெய்து, "நாய்க்கொருசூலும்" "மானூர்விழியை" என்ற திருப்பாடல்களைப் பாடினவுடனே, ஐயனைப் பூட்டியிருந்த தளைகள்தெறித்துவிழுந்தன. பிறகு அவர்க்கு உறுதியுண்டாகும்படி, "அஞ்சக்கரமெனும்" என்ற திருப்பாடலையருளிச்செய்தார். உடனே பத்திரகிரியார் மனந்தெளிந்து, உலகவிவகாரங்களில் வெறுப்புடையராய் ராஜவேஷத்தைநீக்கி, தம்மைச்சூழ்ந்திருந்த சுற்றத்தார் முதலியோரையும் திரும்பிப்பாராமல், திருவெண்காடரது திருவடியில் அடியற்ற பனைபோல்விழுந்து பற்றிக்கொண்டு, எம்பெருமானே; திருவடிக்கு அபராதியாகிய என்னை உய்யும்வண்ணம் அருள்செய்யவேண்டுமென்று குறையிரந்துநின்றார். அதுகண்ட ஐயர், "ஓங்காரமாய்நின்ற" என்ற திருப்பாடலையருளிச்செய்து, பாவநாதீக்ஷையால் அரசனுள்ளத்தில் சிவயோகாநுபவ நிலைபதியும்படி அநுக்ரஹித்து, அவரைநோக்கித் திருவிடைமருதூருக்குப் போகும்படி கட்டளையிட்டு, அங்குநின்றும் புறப்பட்டு விந்தம், காசி, கேதாரம்முதலிய வடநாட்டுத்திருப்பதிகளைவணங்கி, ஸ்ரீசைலமடைந்து, ஆளுடையாரைப்பணிந்து பாடி சிலநாள் அங்கேயிருந்து புறப்பட்டு மேற் கடற்கரைவழியேவந்து மறுபடியும் கொங்குநாட்டிற்புகுந்து, பிறகு பாண்டிநாட்டையடைந்து திருக்குற்றாலத்தைத் தரிசித்துவணங்கி, "காலன்வருமுன்னே" என்பது முதலாகிய பல திருப்பாடல்களைப் பாடி,இராமேச்சுரம்,வேதாரணியம்முதலிய திருப்பதிகளைவணங்கி,மறுபடியும் திருவிடைமருதூரை வந்தடைந்து மருதவாணரைப்பணிந்து கீழைக் கோபுரவாயிலில் வீற்றிருந்தருளினர்.

## பத்திரகிரியாரதுபின்சரித்திரம்.

பத்திரகிரியாரும் குருவருளாணைப்படி சிவயோகசாதனையைவிடாமல் பிச்சையேற்றுண்டு, தலங்கடோறுஞ் சென்றுவணங்கி, பட்டினத்தடிகள் வந்து சேர்ந்ததினமே திருவிடைமருதூர் வந்துசேர்ந்து ஆசிரியரைப்பணிந்து, அவர் திருவருளாணையின்படி மேலைக்கோபுரவாயிலில் இருந்துகொண்டு நாள்தோறும் பிச்சையேற்றுவந்து குருநிவேதநம் ஆனபிறகு சேஷத்தைத்தாமும் உண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தனர்.

இவ்வாறு நிகழுங்காலத்தில், ஒருநாள் பத்திரகிரியார் தமது ஞானாசிரியன் பரிகலசேஷப்பிரசாதத்தை அமுதுசெய்யப்போம்போது, ஆதரிப்பாரில்லாத ஒரு பெட்டைநாய்க்குட்டிவந்து, வால்குழைத்து, எளியமுகங்காட்டி, பசியால்வருந்துகின்ற தன்னிலையைக் குறிப்பிக்கக்கண்டு,அதனிடத்து இரக்கங்கொண்டு, சேஷப்பிரசாதத்தில் சிறிது அதற்கு இட, அதனை அந்நாய் உண்டு பசியாறி, அன்றுமுதல் இவரைநீங்காமல் இவரது திரு

மேனிக்காவற் றொண்டுபூண்டிருந்தது. இவரும் அதற்குச்சிறிது சேஷப் பிரசாதத்தையிட்டுவந்தார். அந்தப்பெட்டைநாயின் வரலாறு யாதெனின், முற்பிறப்பில் அங்கதேசத்தில் அழகிற்சிறந்த வேசையொருத்தி ஆடவரைப் பலவகையாலும் வஞ்சித்துப் பொருள்தேடி, கள்ளுண்டல், கொலை, புலாலுண்டல் முதலியவற்றால் தன்காலம் போக்கிக்கொண்டிருக்கையில், ஒரு நாள் உச்சிப்பொழுதில், சிவஞானியாகிய தன்னாசிரியன் கட்டளைப்படிப் பிச்சைக்கு வீதிவழியேபோகிற ஒருமாணுக்கன்கையில், தன்விடபுருஷர் களோடுண்டு மிச்சமாயிருந்த சிற்றுண்டியைப் பரிஹாசமாய்க்கொடுத்தாள் அதனை அந்தமாணுக்கன் குருப்ரீதிபண்ணித் தன்பசியாறி இச்சைவழியே போயினன். அப்பால் அந்தவேசை முதுமையடைந்து இறந்து பெட்டை நாயாய்ப்பிறந்தாள். பிறந்தாலும் சிவயோகசாதகியின் பசியைத்தணித்த புண்ணியத்தால் இப்போது பத்திரகிரியாராகிய சிவயோகியின் உச்சிட்ட சேடப் பிரசாதத்துக்குப் பாத்திரமாய் அவரது திருமேனிக்காவற் றொண்டு பூண்டு முத்தியடைதற்குரியவளானாள். இப்படிச் சிலகாலங்கழியவே, அந்தப்பெட்டைநாய்க்குப் பரிபாகமுண்டானதை நோக்கி, மருதூருடையார் ஒரு அருட்சித்தர் வேடம்பூண்டு,வெண்காடரிடத்திற்கு எழுந்தருளி,ஐயா, பசிவருத்துகின்றது. பிச்சையிட வல்லீரோவென, அவரும் புன்னகை செய்து, ஐயரோ; நான்கோவணமே பாரமென்றிருக்கிறேன், நான்தேவரீர்க்குப் பிச்சையிடவல்லேனோ; மேலைக்கோபுரவாயிலில் ஒருகுடும்பியிருக்கிறான், அவனிடத்திற்போவீராயின், உமது பசிக்குத்தக்க பொருள்கிடைக்கும் என்றார். அதுகேட்ட மருதூரர் அவ்வாறே பத்திரகிரியாரிடத்திற் போய், ஐயா; கீழைக்கோபுரவாயிலில் உள்ள ஒருவரைப்பசிக்குச் சோறிடுமென்றேன், அவர் எனக்குக்கோவணமே பாரமாயிருக்கின்றது; மேலைக் கோபுரவாயிலில் ஒருகுடும்பியிருக்கிறான் அவனிடத்திற்சென்றால் அவன் உன்பசிதணிப்பான்என்றுசொல்ல உம்மிடம்வந்தேன்,ஆதலால் நீராயினும் என்பசிதணிக்கவல்லீரோ என்றார்.

அந்தச்சொல்லின் குறிப்புப்பொருளை யறிந்துகொண்ட பத்திரகிரியார் மனம்நடுங்கி, இந்த இரந்துண்ணும் ஓடும், எச்சிலுண்ணும் நாயுமோ என்னைப் பிச்சையிடவல்ல சமுசாரியாக்கிவிட்டன. ஆளுடையார் திருவுளம் இப்படியாயின் இதுதானும் எனக்குவேண்டாம் என்று கையிலிருந்த திருவோட்டைச் சுழற்றியெறிந்தார், அதுபோய் அந்தநாயின் பொறியிற்படவே ஓடும் உடைந்தது, நாயும் இறந்தது. பிச்சைக்குவந்த மருதவாணரும் புன்னகையோடு மறைந்துவிட்டார். பின்பு பத்திரகிரியாரும் திருவருளைநாடிச் சகசநிட்டை பலித்தற்பொருட்டுத் திருப்புலம்பல்முதலிய அநேகம் செந்தமிழ்ப்பாடல்களை அருளிச்செய்து, அலைவற்ற சிவயோகத்தில் வீற்றிருந்தார்.

அப்பால் அந்தநாய் சிவயோகிகையால் இறந்ததனல் முற்பிறவிகளில் செய்த தீவினைமுழுதும் நீங்கிப்புண்ணியம்மேலிட்டு, மக்கள்பொருட்டுத் தவஞ்செய்திருந்த காசிமாநகரத் தரசனுகிய விசுவகுத்தன் என்பவனுக்கு மகளாகப்பிறந்து ஞானவல்லியென்னும் பெயர்பூண்டு, சிவயோகியின் உச்சிட்டப் பிரசாதமுண்ட புண்ணியத்தால் பூர்வஞானம் விளங்கப்பெற்று, குருவின் திருவடியில் அன்புவைத்துவளரும் நாளில், அவளுக்கு மங்கைப் பருவம் வாய்க்கக்கண்ட தந்தையானவன், இவளுக்குத்தகுந்த நாயகன் யாவனென்று விசாரித்து நாயகன்கிடையாமையால் ஒருநாள் மனவருத்தத்தோடு கன்னிகாமாடத்திலிருக்கும்தன்பெண்ணினிடத்திற்குவந்து, தன்னருகிலிருந்த புரோகிதனைப்பார்த்து, இந்தப்பெண்ணுக்குத் தகுந்த மணவாளன் கிடைக்கவில்லையே, என்செய்வேன் என்று சொல்லிக் கண்ணீர் சிந்திக் கிலேசித்தான். அதுகண்ட அந்தப்பெண் தந்தையைவணங்கி நின்று, அப்பா; நான் ஒருவருக்கும் உரியேனல்லேன், என் குருநாதன் தென்னுட்டில் திருவிடைமருதூரில், மருதவாணரது ஆலயத்து மேலைக்கோபுரவாயிலில் எழுந்தருளி யிருக்கிருர். அவருக்கே உரியவளாவேன், அவருக்கு என்னைக் கொடுப்பீராயின், உமது மூவேழுதலைமுறையாரும் முத்தியடைதற்குரியவராவர். இந்தக்காரியத்தை என்கருத்தின்படி முடிக்கவேண்டுமென்று பிரார்த்தித்துவணங்கினுள். அதுகேட்ட அரசன் அஞ்சி, இந்தச் சிறு பெண்ணுக்கு இப்படிப்பட்ட கருத்துண்டானது யாதோ தெரியவில்லை, இவளுடைய நற்குண நற்செய்கைகளையும் அழகையும் நோக்குமிடத்தில் ஏதோ ஒரு அவதாரவிசேஷமென்றே தோன்றுகின்றது, ஆனுல் இந்த வார்த்தையின் உண்மையை அறியவேண்டுமென்று சில ஒற்றரையழைத்து அவர்களுக்குத் தன்கருத்தைத் தெரிவித்தனுப்பினுன், அவர்களும் அப்படியே திருவிடைமருதூரையடைந்து, அடையாளப்படி பத்திரகிரியாரது நிலைமையைத் தெரிந்துவந்து அரசனுக்கு அறிவித்தார்கள். உடனே அரசன் தன்மகளைச் சிவிகையிலேற்றிக்கொண்டு பரிவாரத்தோடு புறப்பட்டுத் திருவிடை மருதூரையடைந்து ஆலயத்தின் மேலைக்கோபுர வாயிலின் அருகே, தன்மகளைச் சிவிகையினின்றும் இறக்கினுன்.

அந்தச்சமயத்தில், பத்திரகிரியார் சிவயோகசமாதியில் இருந்ததனல் அந்த ராஜகுமாரி அஞ்சலியத்தத்தோடும் எதிரேநின்று காலம்பார்த்திருந்தாள். ஐயர், சமாதியினின்றும விழித்து நோக்கலும், அந்தப்பெண், எம்பெருமானே; அடிநாய், மீட்டும் உன்திருவடிப்பேற்றுக்கே வந்தேனென்று வணங்கிநிற்க, ஐயரும் அவ்வரலாறு முழுதும் ஒருங்கேயுணர்ந்து, அந்தப் பெண்ணைக் கைப்பற்றிச்சென்று, கீழைக்கோபுரவாயிலில் இருக்கும் தமது ஞானுசிரியராகிய பட்டினத்தடிகள் சந்நிதியில்விட்டு, எம்பெருமானது எச்சிலையுண்ட நாய்க்கும் இந்தப்பிறவிநோய் வரலாமோவென்று கண்ணீரொழுக விண்ணப்பஞ்செய்துநின்ருர். பட்டினத்தடிகளும் சிவன்செயலுக்கு

நாம் என்செய்யவல்லோமென்று திருவருளை நாடினவுடனே, அவ்விடத்தில் ஒருபெருஞ்சோதி யுண்டாயிற்று, அந்தச்சோதியில் சிவபெருமான் திருவாணைப்படி பத்திரகிரியார் அந்தப்பெண்ணோடு புகுந்து கலந்தனர். இதைக் கண்ட தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். உடனே சோதியும் மறைந்து மஹாலிங்கத்துள்ளேபோய் ஒடுங்கிவிட்டது. அதைக்கண்ட திருவெண்காட்டடிகள் திடுக்கிட்டு, கண்களில் நீர்பெருக அவசமடைந்து சிறிதுநேரத்தில் தெளிவையடைந்து திருவருளைநாடி, இறைவர் சந்நிதியைநோக்கி, எம்பெருமானே; முன் வரகுணபாண்டியனார் பத்தினியாரைத் திருவுருவிற்கலந்துகொண்ட பெருங்கருணையாளனே; இன்றுசெய்த பெருங்கருணைக்கு எல்லையாது, என்னையும் என்வினையையும் இன்னும் இங்குவைத்திருப்பது யாதுக்கு, ஏழையேன் என்செய்யக்கடவேன் என்று நின்று உருகுஞ்சமயத்தில், இறைவர் திருவருளால், திருவெண்காடனே, நம் ஒற்றியூருக்குவரக்கடவாய் என்று ஒரு அசரீரிவாக்கு உண்டாயிற்று, அதுகேட்ட பட்டினத்தடிகள்வணங்கி, விடைபெற்றுப் புறப்பட்டு வழியிலுள்ள திருப்பதிகளையெல்லாம் வணங்கித் திருவெண்காட்டையடைந்தார் என்று உபமன்னியர் சொல்லக்கேட்ட முனிவர்கள், அவரைவணங்கி, வரகுணபாண்டியனார் மனைவியாரை இறைவர் திருவுருவிற்கலந்துகொண்ட வரலாற்றை எங்களுக்குச் சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்திக்க, உபமன்னிய சொல்லத்தொடங்கினர்.

## வரகுணதேவர்கதை.

முனிவர்களே; முன்னொருகாலத்தில், பாண்டிநாட்டில், மதுரையில் அரசாண்ட சந்திரவமிசத்தாராகிய பாண்டியர் குடியில் அவதரித்துச் சிவநேசமே வடிவாயிருந்த வரகுணதேவர் மநுமுறைப்படி அரசுசெலுத்துங் காலத்தில், ஒருநாள் தேரேறி உலாவரும்போது ஒரு விருத்தவேதியன் தேர்க்காலில் அகப்பட்டு இறந்தான், அந்த பிரமகத்தி அவ்வரசனைப்பற்றி வருத்த அரசன் அஞ்சி, சாஸ்திரங்களிற் சொல்லுகிற பரிஹாரங்கள் யாவும் செய்தும் நீங்காதிருக்கக்கண்டு, தம்குலதெய்வமாகிய திருவாலவாயார் சந்நிதியிற்சென்று குறையிரக்க, இறைவனும் திருவுளமிரங்கி, வரகுணனே! திருவிடைமருதூரை யடைவாயானால் இந்தப்பிரமகத்தி நீங்குமென்று அசரீரிவாக்கால் அருளிச்செய்ய, அவ்வரசன் அவ்வாறே திருவிடைமருதூரையடைந்து காருண்ணியாமிர்த தீர்த்தத்தில் மூழ்கி நித்தியகருமம் முடித்து, கோயில்வலம்வந்து கீழைக்கோபுரவாயிலாற்புகுதலும், அந்தப்பிரமகத்தியானது அவனைப்பின்றொடராமல் புறத்தேநின்றது. அரசன் உள்ளேசென்று சிவபெருமானை வணங்கி விடைபெற்று வெளிப்படுகையில், கீழைவாயிலில் பிரமசாயை நிற்பதனால் மேலைவாயிலால் வெளிப்படுவாயென்று அசரீரியுண்டாயிற்று - அப்படியே வெளிப்பட்டுப்போய், இருப்

பிடஞ்சேர்ந்து மருதவாணணைவணங்கி அவ்விடத்துக்காலங்கழிக்கும்போது ஒருநாள், ஒருகள்ளன் அரண்மனையிற் களவுசெய்தான், அவனைக் காவலர் பற்றிக்கட்டிவந்து அரசன்முன்விட, அரசன் அந்தக்கள்ளனுடைய உடம்பில் திருநீறு விளங்கக்கண்டு, சிவனடியவனென்று கட்டவிழ்ப்பித்து வணங்கி அவன் வேண்டுமளவு பொருள்கொடுத்தனுப்பினர். மற்றொருநாளிரவில் ஊர்ப்புறத்தில் நரிகள் ஊளையிட, அவ்வூளையோசையைச் சிவபெருமானைப் பாடிய பாடலோசையாக நினைத்து அவைகளுக்கு ஆடைகளைப்பரிசாகக்கொடுத்தார். மற்றொருநாள் இரவில் தவளைகள் பேரிரைச்சலிட, அவ்விரைச்சல் சிவநாமம்போலச் செவியிற்புகுதலும் மனங்கனிந்து, மணிகளையும் பொன்னையுங்கலந்து அந்தநீரில் இறைப்பித்தார். ஒருநாள் சிவபிரானது திருமஞ்சன தைலத்தின்பொருட்டு உலரவைத்த எள்ளைத்திருடியுண்ட வொருவனைச் சேவகர் கண்டுபிடித்துத் தன்னிடத்திற்கொண்டுவர, அவன் இந்த எள்ளைத்தின்றால் இனிவரும் பிறப்பில் எருதாகப்பிறந்து சிவபெருமான் திருவபிஷேகத்திற்குத் தைலம் அமைக்கும் செக்குமரத்தை யிழுத்தலாகிய திருத்தொண்டு பெறலாமென்னும் ஆசையால் இப்படி செய்தேன் எனக்கேட்டு, அப்படியானால் நானும் அந்தச் செக்குமரத்தை யிழுக்கும் மற்றோர் எருதாதலாகிய பேறுபெறும்படி உமது வாயிலிருக்கிற எள்ளிற் சிறிதுகொடும் என்று, இரந்துண்டு களித்தார். ஒருநாள் மருதூர் எல்லையில் உருண்டுகிடந்த வெற்றுத்தலையைக்கண்டு, இது மருதூரடைவாரது அடிப்பொடியை யணிதற்கன்றோ இப்படிக்கிடந் துருள்வது, அந்தப்பேறு எமக்கு முண்டாக வேண்டு மென்றுஅந்தத் தலையை அடுத்தடுத்து இரந்து வந்தனர். மற்றொரு நாள் திருக்கோயில் வலம் வருகையில், ஒருபுறத்தில் நாய்மலம் இருக்கக்கண்டு, இதை அப்புறப்படுத்துவார்க்கு என் அரசாட்சியிற் பாதிதருவேனென்று கருதி மறுவலம் வருகையில், ஒருவரும் அதைச்சுத்தப்படுத்தா திருக்கக் கண்டு, இனியெடுப்பார்க்கு என் அரசாட்சி முற்றும் தருவேனென்று கருதிச்சென்று மூன்றாமுறை வலம் வருமளவும் யாரும் அதை அப்புறப்படுத்தாதிருக்கக்கண்டு, தாம்தம் மேலிருந்த உத்தரியத்தால் வாரியெறிந்தார். மற்றொருநாள் ஊர் உலாவவருகையில் வேப்பங்கனிகள் உதிர்ந்து தம் கண்ணுக்குச் சிவலிங்கங்களாகத் தோன்ற, அன்புமிகுந்து அவற்றிற்கு விதாநங்கள் அமைத்து ஆநந்தித்தார். இப்படிச் சிவபெருமானுக்குப் பலவகைத் திருத்தொண்டுகளும் செய்துவரும் நாளில், விக்கிரமச்சோழர் திருமகளாராகிய காந்தி மதியென்பவரைத் திருமணஞ்செய்து, அன்று இரவில் பள்ளியறைக்குட் சென்று மனைவியார் திருவுருவைநோக்கி, இந்தப்பெண் நம்மருதவாணருக்கே உரியவளென்றுஅவரைக்கைப்பற்றி ஆலயத்திற்புகப்போக, அந்தச்சமயம் நடுராத்திரியாகையால் ஆலயவாயிற் கதவுதிருக்காப்புச் செய்திருந்தது, அரசர், திருவாயிற் புறத்து நின்று, ஐயா; மருதப்பா; என்றழைத்துத் திருக்கத

வைத் தட்டினவுடனே, இறைவர் அவ்வரசரது அன்புவலையிற் பட்டவராதலால், வரகுணு; வந்தேன் வந்தேன் என்றோடிவந்து கதவைத்திறக்க, உட்சென்று, பெருமானே; இந்த மாது தேவரீருக்குரியவளாமென்றெண்ணிக்கொண்டு வந்தேனென, பெருமானும் அவர்கருத்தினுக்கிசையச் சிவலிங்கத்தில் ஐக்கியம் செய்து கொண்டனர். வரகுணதேவர் திரும்பித் தம் அரண்மனைபுகுந்து பெருங்களிப்புடன் இருந்தார். கோயிலும் பழையபடியே திருக்காப்பமைந்திருந்தது. மறுநாள் விடியற்காலத்தில் கோயிற்றுறையாரெல்லாரும் திருக்காப்பவிழ்த்து உள்ளே சென்று, சிவலிங்கப்பெருமானுக்கு ஒரு புறத்தில் வளைமுதலியன தரித்த பெண்கையொன்று மணிக்கட்டுவரையிலும் வெளிப்பட்டிருக்கக் கண்டு அஞ்சி, வரகுண தேவரிடத்திற் சென்று இந்தச் செய்தியையறிவிக்க, அவர் அச்சமும் நாணமும் மேற்கொண்டு சந்நிதியையடைந்து, அவ்வாறிருக்சக்கண்டு, எம்பெருமானே; பாவியேன் பற்றிய எச்சிலென்றோ அந்தக்கையை உட்கொள்ளாதிருப்பது என்று விண்ணப்பஞ்செய்து நிற்க, பெருமான், வரகுணு; உன்பணியை உலகறியச் செய்யவிட்டபடி யன்றிவேறல்ல என்று அசரீரிவாக்கால் கட்டளையிட்டருளினவுடனே, எல்லாரும் காணும்படி அந்தக்கையும் சிவலிங்கத்தில் மறைந்தது. தேவர்கள் பூமழை சொரிந்தார்கள் என்றுசொல்லி மனமுருகித்திருவருளைத்துதித்து, மறுபடியும் பட்டினத்தடிகள் சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர்.

### பட்டினத்தடிகள் மறுபடியும் திருவெண்காட்டையடைந்தது.

பட்டினத்தடிகள் திருவெண்காட்டையடைந்தவுடனே திருவெல்லையைப்பணிந்து திருவீதிவலம் வந்து கோபுரத்தைவணங்கிப் பெருமான் சந்நிதியையடைந்து சேவித்து ஆநந்த மேலீட்டால் மனங்குழைந்துருகி, "பூதமுங்கரணம்" "யாவரோயிருந்தும்" "உண்டதேயுண்டும்" என்னும் முதற்குறிப்பையுடைய திருவிசைப்பாவைப்பாடிவணங்கி வெளிப்பட்டு அவ்விடத்தில் வீற்றிருக்கும் காலத்தில்,

### திருநாங்கூர்ச்சேந்தனார்வரலாறு.

முன் அரசன்சிறையில் அகப்பட்டிருக்கும் சேந்தனாருடைய மனைவியாரும் மைந்தரும் பட்டினத்தடிகள் இங்கு எழுந்தருளிய செய்தியைக் கேட்டு வந்து திருவடிகளை வணங்கிக் கதறியழுதார்கள். அப்போது பட்டினத்தடிகள் இரக்கமுற்று, நீங்கள்யார், உங்களுக்கு நேர்ந்தது என்ன என்று வினவ, அவர்கள் நடந்த செய்திகளை யெல்லாம் சொல்லிச் சேந்தனாரைச் சிறைவிடுவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதுகேட்ட பட்டினத்தடிகள் திருவுளங்கனிந்து, சிவபெருமான்சந்நிதியிற்சென்று, "மத்தளை தயிருண்டானும்" என்னுந்திருப்பாடலை யருளிச்செய்தவுடன், சிவ

பெருமான், மூத்தபிள்ளையாரைநோக்கி, சேந்தனைச்சிறையினின்றும் நீக்கிக்கொண்டுவந்து,நம் திருவெண்காடர் முன்விடுக்க வென்றருளிச் செய்ய, அவ்வாறே மூத்த பிள்ளையார் சேந்தனாரைச் சிறைவிடுவித்துத் திருவெண்காடர் முன்விடுக்க, அவர் திருவெண்காடரைவணங்கி, இந்தச் சிறையை நீக்கியது போலப்பாசச்சிறையையும் நீக்கியருளவேண்டுமென்று மறுபடியும் வணங்கினர். பட்டினத்தடிகளும்அவரது பரிபாகத்தைநோக்கி, அப்பா; நீ உன்குடும்பத்தோடு காட்டு விறகின் சிறுவிலைப்பொருள் கொண்டு, சிவனடியாரொருவரையூட்டியுண்டு திருத்தில்லைப்பதியில்வாழ்வாயென்று கட்டளையிட்டுச் சீகாழிநோக்கி எழுந்தருளினர். சேந்தனர் சிதம்பரத்தையடைந்து ஆசிரியர் நியமித்தபடி ஒழுகும் நாளில், ஏழுநாளளவும் விடாத அடைமழைபற்றிப் பொழியப்பசியால் வருந்திக்காட்டுக்குப்போய் விறகுகொண்டுவந்து விற்றுக்கிடைத்த மாவைக்கொண்டு வந்து மனைவிகையிற்கொடுக்க, அவர்களியமுது செய்து கணவனுக்கு அறிவிக்க, அவர் சிவனடியாரைத் தேடி யெங்குங்கிடையாமல் கோயில் மண்டபங்களிலெல்லாம் போய்த் தேடுகையில், சிவபெருமான் இவரது அன்பினைவிடும் அமுதையுண்ணத் திருவுளங்கொண்டு, ஒருமுதிய சிவனடியவர் வேடம்பூண்டு ஒருமண்டபத்தில் தங்கியிருக்கக்கண்டு, அழைத்துவந்து களியமுதுபடைக்க, பெருமானும் உண்டு மிச்சிலை முடிந்துகொண்டுபோய்த் திருவம்பலம்புகுந்து அவ்விடத்தில் தரிசநத்துக்கு வந்தவர்களுக்குக் கொடுத்துச் சிவகாமியார் களிக்க வீற்றிருந்தார். சேந்தனரும் தம்குடும்பத்தோடு விரதத்தைக் குறைவற முடித்துச் சேடத்தைப்புசித்துப் பரயோகத்தில் எழுந்தருளியிருந்தார். இப்படியிருக்க, செல்வச்சோழன், நாள்தோறும் திருவம்பலத்தில் தான்செய்விக்கும் பூசைமுடிவில் ஒலிக்கின்ற மணியொலிகேட்டு உண்ணும் விரதம்பூண்டிருந்தான். அவன் ஒருநாள் நடுராத்திரியாகியும் மணியோசை கேளாமையால் மனவருத்தத்துடன் தரையிற்படுத்துறங்கினன். அப்போது அம்பலத்தழகர், சேந்தனரது அன்பை வெளிப்படுத்தும் பொருட்டு, அவனது கனவிற்போய், அரசனே; நீ வருந்தவேண்டாம், இன்று நம்முடைய சேந்தன் நிவேதித்த களியமுதை யுண்ணப்போயிருந்தோம் ஆதலால் நீசெய்வித்த பூசனைக்குவரத் தடைபட்டதென்று மறைந்தருளினர். உடனே அரசன்விழித்தெழுந்து,அப்படிப்பட்ட பேரன்புடையரான சேந்தனரையான் எவ்வாறு தரிசிக்கப்பெறுவேனென்று திருவருளைச் சிந்தித்துச் சூரியோதய மானவுடனே திருக்கோயிலுக்குவந்து, தானும் தில்லைவாழந்தணர் முதலியோரும் திருவம்பலத்திருமுற்றமெல்லாம் களியமுது உதிர்ந்திருத்தல் கண்டு, தன்கனவை அவர்களுக்குச்சொல்ல, அவர்கள் யாவரும் சேந்தனரது பத்தியைப்புகழ்ந்து அவரைத்தரிசிக்க விரும்பியிருந்தார்கள். இப்படியிருக்க, அப்போது மார்கழிமாசம் திருவாதிரைத் திருவிழாநாள்நேர்ந்தது; அன்று சிவபெருமான் எழுந்தருளுந்தேரானது,

மூர்தினநாள் பெய்தமழையினுலுண்டாகிய சேற்றினுல் நட்வாமல் தடைபட்டது, அப்போது சேந்தனுரது பெருமையை வெளிப்படுத்தும்பொருட்டுச் சிவபெருமான், தில்லைவாழந்தணர்முதலிய எல்லாரும் கேட்கும்படி, சேந்தா; தேர்நடக்க எம்மைப் பல்லாண்டுபாடுவாயாக என்று அசரீரிவாக்கினுல் அருளிச்செய்யக்கேட்ட சேந்தனுர் மனமுருகி, என்னையும் ஒருபொருளாகமதித்து இந்தத்திருப்பணியை நியமித்தனையே, இதற்கு யான் செய்யும் கைம்மாறு யாது என்று சொல்லி, "மன்னுகதில்லை" "எந்தையெந்தாய்" என்று திருப்பல்லாண்டு பாடினவுடனே தேர்நடந்து வீதிவலம்வந்து நிலையையடைந்தது. அப்போது அரசன்முதலிய யாவரும் சேந்தனுரைவணங்க, அவர்கள் வணங்குமுன்தாம் அவர்களை வணங்கித்திருவிடைக்கழிக்குச்சென்று, அவ்விடத்து முருகப்பிள்ளையாரை,

"மாலுலாமனந்தம்" என்னுந் திருப்பதிகம்பாடி, திருவாவடுதுறைமுதலிய திருப்பதிகளைத்தரிசித்து, திருவிசைப்பா திருப்பதிகம்பாடி, குருவருளால் குடும்பத்தோடும் சிற்சபையில் ஆடவெடுத்த திருவடிநீழலில் வீற்றிருந்தருளினுர். இவ்வாறு சேந்தனுரை முத்தியடைவித்துச் சீகாழியையடைந்த பட்டினத்தடிகள், சிவாலயத்துட்சென்று, திருத்தோணியில் வீற்றிருக்கும் பெருமானையும் பெருமாட்டியையும்வணங்கி அன்புபெருகநின்று "திருவள்ர் பவளப்பெருமலைமணந்த" என்று தொடங்கித் திருக்கழுமலமும்மணிக்கோவைபாடி, அவ்விடத்தில் சிலநாள்வீற்றிருந்து, உலகெலாம் உய்யச் சிற்சபையிலாடும் திருநடநத்தைக் காணவேண்டுமென்னும் விருப்பமுண்டாகவே, "அத்தனை" என்றபாடலைப்பாடி, கழுமலமுடையானைவணங்கி விடைபெற்றுப் புறப்பட்டு, வழியிலுள்ள திருப்பதிகளைத் தரிசித்துக் கொள்ளிடக் கரையேறிப் பெரும்பற்றப் புலியூரெல்லையை யடைந்து பணிந்து உள்ளே பிரவேசித்து, திருவீதிநான்கையும் பணிந்துவலம்வந்து எழுநிலைக்கோபுரவாயிலை வணங்கித் திருமாளிகைப் பிரதக்ஷிணம்பண்ணி கனகசபையைத்தொழுது சிற்சபையிற்சென்று இறைவரது ஆநந்தத் திருநடநத்தைக்கண்டு, தம்மைமறந்துபரவசராய்நின்று சிறிதுநேரஞ்சென்றபிறகு தெளிந்து அன்பின்மிகுதியால், "பூமேலயனறியா" என்னும் வெண்பாவைமுதலாக எடுத்துக் கோயினுன்மணிமாலைபாடிக் கூத்தாடித் திருவருட்கடலில்மூழ்கி அரிதாகவெளிப்பட்டார். பின்பு பசியுண்டாக, "பண்ணுகவாடகப் பொற்பாதம்" என்று பாடினவுடனே, உலகமாதா ஆகிய சிவகாமியம்மையார் பார்ப்பனப்பெண்ணுருவமாய் உச்சிநிவேதநப்பிரசாதத்தை வட்டகையினின்றும் கொடுத்தருள, உண்டு பசியாறினவுடனே, அம்மையார் மறைந்தருளக்கண்டு, பிராட்டியாரென்றுணர்ந்து ஆராமைமிகுதியால் "ஓடுமெடுத்து" என்றுதுதித்து அலைவற்ற சிவயோகத்தில் வீற்றிருந்தார். இருப்பவர், "சோறிடுநாடு" என்னும் திருப்பாடலையருளிச்செய்து, காலங்கள்தோறும்சென்று சிற்சபைத் திருநடநத்தைக்கும்பிட்டு

"நினைமின்மனனே" என்பதுமுதலிய அநேகம் திருப்பாடல்களை அருளிச்செய்து, பலநாள் சென்றபிறகு திருவருளால் திருவொற்றியூர் நினைப்புண்டாக, "பாற்கடல்கடைய" என்னும் அடைக்கலத் திருவகவல்பாடி, "வான்றேடுமறை" என்றுதொடங்கி, "நானுரோ"என்றுமுடித்து வணங்கி வெளிப்பட்டு வழிக்கொண்டார். வழியில் திருத்தினைநகர்முதலிய திருப்பதிகளைவணங்கித் திருக்காஞ்சி நகரையடைந்து, திருவேகம்ப முடையாரைத்தொழுது நின்று, "மெய்த்தொண்டர்" என்னுஞ் செய்யுள்முதலாக எடுத்துத் திருவேகம்பமுடையார் திருவந்தாதிபாடிப் புறப்பட்டு, அவ்விடத்தி லிருந்துகொண்டு, திருவேகம்பமாலை, கச்சித்திருவகவல் முதலிய திருப்பாடல்களை அருளிச்செய்து, கச்சிக்காரோணத்தருகில் வீற்றிருக்குங் காலத்தில் ஒருநாள் பசிப்பிணிவருத்த, ஆற்ருதவராய், "அத்திமுதல்" என்னும் வெண்பாவைப்பாடியருளினுர். உடனே அறப்பெருஞ்செல்வியாகிய அம்மையார், காமக்கோட்டத்திலிருந்து வேதியமாதுருவமாய்வந்து அமுது கொடுக்க, உண்டுபசியாறி, காமக்கோட்டம், கச்சபாலயம்முதலிய திருக்கோயில்களைப்பணிந்து பலதமிழ்மாலைகள்பாடி, அநேக அற்புதங்கள்விளங்கச் சிலநாள்வீற்றிருந்து, அங்குநின்றும் புறப்பட்டுத் திருவாலங்காடு, திருப்பாசூர்முதலியதிருப்பதிகளைவணங்கி,திருக்காளத்திஇறைவனைவணங்க எண்ணிப் பிரயாணப்பட்டு, "முப்போதும்" என்னுஞ் செய்யுள்பாடித் துதித்து வழிச்செல்லும்போது, கண்ணப்பதேவர் முதலியோருடைய திருத்தொண்டின்பெருமையை எண்ணியெண்ணி மனங்குழைந்துருகி, "வாளான்மகவரிந்து" என்னுஞ் செய்யுள்பாடித் திருக்காளத்தியையடைந்துவணங்கி, அங்கு வீற்றிருக்குங்காலத்தில், வடகயிலைத்திருவோலக்கஞ் சேவிக்கவிரும்பி, "மந்திக்குருளை" என்னும் திருப்பாடலைப்பாடினவுடனே, தென்கயிலைவாணர் வடகயிலைக்கோலத்தைத் தரிசிப்பித்தருள, தரிசித்துப் பலசெந்தமிழ்ப் பாடல்களைப்பாடி, அருள்விடைபெற்றுத் திருவொற்றியூரைக் கருதி எழுந்தருளினுர். எழுந்தருளுகையில், "கண்டங்கரிபதாம்" என்றதனித் திருவெண்பாவைப்பாடி, சராசரங்களெல்லாம் குருலிங்கசங்கமங்களாகக்கண்டு அன்புபெருக, "வாவியெல்லாம்" என்ற திருவெண்பாவால் துதித்துப்பணிந்து திருவெல்லையையடைந்து உட்புகுந்து திருவீதியைச்சேர்ந்தவுடனே தம்மையறியாமல் உண்டாகிய பேரின்பக்கடலில்மூழ்கி, "ஒடுவிழுந்து"என்ற திருவெண்பாவைப்பாடி, அடங்காதபேராசையால், "சுடப்படுவார்" என்று துதித்து, அத்திருவீதியை அங்கப்பிரதக்ஷிணம்பண்ணி, சந்நிதியையடைந்து, சிவபிரானைத் தரிசித்துவணங்கி, "இருநிலமடந்தை" என்று தொடங்கித் திருவொற்றியூர்த் தொகையைப்பாடித் துதித்து மீள்பவர், "ஐயுந்தொடர்ந்து" என்னுஞ் செய்யுளைப்பாடி வெளிப்பட்டு முதல்வன் முறையீடு, அருட்புலம்பல் முதலியவற்றை அருளிச்செய்து பசுமேய்க்குஞ்சிறுவரோடு கூடி விளையாடிவருங்காலத்தில், ஒருநாள் அந்தச் சிறுவரைநோக்கி உங்களு

க்குச் சிலவிநோதங்களைக் காட்டுவேன், என்னை ஒருகுழியில் புதையுங்கள் என்றார். அவர்களும்அப்படியே செய்தார்கள். அவர்களுக்குவியப்புண்டாகும்படி இவர் வெளிப்பட்டு வேறொரு மணற்குன்றின்மேல் நின்றார். அது கண்டு அச்சிறுவர் அதிசயித்துமீட்டுமீட்டும்புதைத்துவர,வெளிப்பட்டுவந்து கொண்டேயிருந்து, பிறகு ஒருதரம்புதைக்கவே,வெளிப்படாமல் சிவலிங்கமாக முளைத்துநின்றார். அப்போது அந்தச்சிறுவர்கள் கண்டு வியந்து இந்த அதிசயத்தை ஊரில் உள்ளவர்களுக்கெல்லாம் அறிவிக்க, அவர்களெல்லாரும் திரண்டுவந்து தம் கண்களிக்கத் தரிசித்தார்கள். இதற்கு முன்பே இவர் பத்தினியாராகிய சிவகலையம்மையார் இவரது திருவடியையே சிந்தித்துக்கொண்டிருந்து சிவபதம் அடைந்தனர். காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ளவர் யாவரும் ஐயரது ஐக்கிய நிலையைக்கேட்டு, அங்குநின்றும் புறப்பட்டுவந்து திருவொற்றியூரை யடைந்து தரிசித்துப் பலதிருத்தொண்டு செய்துதிருவருட்பாங்குக்குஉரியவர்களானார்கள்.கேட்டீரோ முனிவர்களே என்று, உபமன்னியர் கூறியபடி, ஸ்ரீபவிஷ்யோத்தரத்தில் திருவிடைமருதூர் மான்மியத்தில் கூறிய பட்டினத்துப்பிள்ளையார் திவ்ய சரித்திரத்தை சூதபுராணிகர் சவுநகாதியர்க்குச் சொல்லிமுடித்தனர்.

இந்தச்சரித்திரத்தை உண்மையாகிய பக்தியோடும் சிரத்தையோடும் வாசிப்பவர்களும் கேட்பவர்களும் இம்மையில் ஆயுள், செல்வம், புதல்வர் முதலிவற்றைப் பெற்று மறுமையில்பேரின்ப நிலையாகிய சிவபதவியையும் அடைவர்.

திருவெண்காடர்சரித்திரம்

முற்றுப்பெற்றது.

அச்சிடப்பட்ட
பல பிரதிகளிலும் விடுபட்டிருந்த
# திருக்கழுமலமும்மணிக்கோவையின்
# செய்யுளுரை.

இணைக்குறளாசிரியப்பா.

13. சார்ந்தவர்ப்புரக்குமீர்ஞ்சடைப்பெரும
கருணைமுதுவெள்ளம்பெருகுதிருநயந
கைவலசெல்லியங்கனியதுபோலச்
சைவசித்தாந்தத்தெய்வவாகமத்தை
வரன்முறைபகர்ந்ததிருமலர்வாய
பவளவரைமீதிற்றவளமின்னென்னச்
செப்பருமார்பணிமுப்புரிநூல
பேரிகலாணவக்காரிருளினுக்கும்
பின்றொடர்வல்வினைவன்றொடரினுக்கும்
மாயைமாமாயையாயபேயினுக்கும்
அஞ்சலென்றமைத்தகஞ்சமென்கரதல
அருமறைச்சிரத்தும்பெருமைமெய்யன்பர்
துங்கவிதயத்துந்தங்குபொற்பாத
துன்னியபயோதரமின்னினமிடைதலின்
அளப்பரும்பெருமைவளத்தினைவிளைத்தலின்
சந்திரிலக்ஞ்சிந்துரமருவலின்
உறுகண்டீரவந்துறுமுழையுறுதலின்
சாதமுறைசுழீஇச்சோதிமீதமர்தலின்
பணைபெழுமரவம்பிணையொடுமேவலின்
காமரஞ்செவ்வழிகாமரினெய்தலின்
அளகையெதிரொன்னுமாசையுற்றுறைதலின்
ஆடகமருவிரீடறைபெறுதலின்
நாட்டியத்தோகையீட்டமங்கணைதலின்
அகத்தியன்மன்னுமகத்துவஞ்சிவணலின்
மலையாசலமெனநிலைசேர்மாட
மாளிகைசூழ்ந்தசூளிகைப்புரிசை

நேமிமால்வரையெனப்பூமியீதிலங்குங்
காழிமாநகரத்தூழிதோறமர்ந்த
அமையாவன்பினுமையாள்கொழுந்
தெரியநான்முகன்பணிபெரியநாயகநின்
பொன்மலர்ப்பாதஞ்சென்னிவைத்திறைஞ்சுதும்
மேற்படுமிதயப்பாற்கடனடுவட்
பரம்பரைதவருவரம்பெறுகுரவன்
மருளறவிரங்கியருளியகுறியெனு
நிந்தையில்கனகமந்தரகிரிவி
மாணதிவென்னுந்தூணிடைப்பிணித்த
நேசமென்னும்வாசுகிகொளுவி
மதித்தலென்னுமதித்தலையுஞற்றிய
பேராவின்பச்சீரானந்தப்
பெறலருமமுதந்திறனொடும்பெற்று
ஞானவாய்கொண்டுமோனமாவுண்டு
பிறப்பிறப்பென்னுமறப்பெரும்பயத்தாற்
பன்னாட்பட்டவின்னுங்ககற்றி
யென்னையுந்தன்னையுமறந்திட்
டின்பமேலீடெய்துதற்பொருட்டே.

இ - ள். சார்ந்தவர்ப்புரக்கும்-அடைந்தாரைக்காக்கின்ற, ஈர்சடைபெரும - குளிர்ச்சியாகிய சடாபாரத்தையுடைய பெருமானே, கருணைமுந்து வெள்ளம் பெருகு - கருணையாகிய பெரு வெள்ளம் பெருகுகின்ற, திருநயந - திருக்கண்களையுடையவனே, கைவலம்-கையினிடத்ததாகிய, நெல்லியங்கனியதுபோல - நெல்லிப்பழம்போல, சைவசித்தாந்தம் - சைவசித்தாந்த நெறியை யெடுத்துவிளங்கக் கூறுகின்ற, தெய்வ ஆகமத்தை-தைவிகமாகிய சிவாகமங்களை, வரல்முறைபகர்ந்த - வரலாற்று முறைமையாகக் கூறிய, திருமலர்வாய - அழகியதாமரைமலர்போலும் திருவாயையுடையவனே, பவளவரைமீதில் - பவளமலையின் மீதுள்ள, தவளமின் என்ன - வெண்மையாகிய மின்னலென்று கண்டோர் சொல்லும்படி, செப்பு அரு-சொல்லுதல் அருமையாகிய, மார்பு ஆணி - திருமார்பிலணிந்த, முப்புரிநூல் - முப்புரிநூலையுடையவனே, பேர் இகல் - பெரியவலியமைந்த, ஆணவம் - ஆணவமென்கிற, கார் இருளினுக்கும் - பெரிய அந்தகாரத்துக்கும், பின்தொடர்-(சென்றடையுங்கதிகள் தோறும்) பின்றொடர்ந்துசெல்கின்ற, வல்வினை - வலியவினைகளாகிய, வன்றொடரினுக்கும்-வன்மையாகியதளைக்

கும், மாயைமாமாயை ஆயபேயினுக்கும் - மாயை மஹாமாயையாகிய பேய்களுக்கும், அஞ்சல் என்று அமைத்த-அஞ்சவேண்டாமென்று என்னை யமைவித்தருளிய, கஞ்சம் மெல்கரதல - தாமரைமலர் போன்ற மென்மை யகிராய திருக்கைத்தலத்தையுடையானே, அருமறைச் சிரத்தும் - அருமை யாகிய வேதத்தின் முடிவிலும், பெருமைமெய் அன்பர் - பெருமையையும் உண்மையையும் உடைய அன்பரது, துங்கம் இதயத்தும் - பரிசுத்தமாகிய மனத்திலும், தங்கு - நிலைத்திருக்கின்ற, பொற்பாத - திருவடியையுடை யானே, காழிமாநகரத்து-சீகாழியென்னும் பெரியநகரின்கண், ஊழிதோறு அமர்ந்த - ஊழிகள்தோறும் அழியாமல் அமர்ந்திருக்கிற, அமையா அன் பின் - பொருந்து தலிதாகிய அன்பினையுடைய, உமையாள் கொழுந - உமையவளுக்கு நாயகனே, தெரிய-யாவர்க்கும் விளங்கும்படி, நான்முகன் பணி - பிரமன் வணங்குகின்ற, பெரியநாயக - பெரியநாயகனே, மேற் படும் - மேன்மைபொருந்திய, இதயம் - இருதயமாகிய,பாற்கடல் நடுவுள்- பாற்கடலின்நடுவில், பரம்பரைதவறு-உபதேசகர்ண பரம் பரைகள் பிழை யாத, வரம் பெறுகுரவன் - மேன்மைபெற்ற ஆசாரியன், மருள் அற - ப்ரபஞ்சமயக்கம் அற்றொழியும்படி, இரங்கி அருளிய - இரக்கங்கொண்ட ருளிச்செய்த, குறி என்னும் - லக்ஷயமென்கிற, நிந்தை இல் - பழிப்பற்ற, கனகம் - பொன்மயமாயிருக்கின்ற, மந்தரம்நிறுவி - மந்தரகிரியை நட்டு, மாண் - மாட்சிமையுள்ள, அறிவு என்னும் - ஞானமென்கிற, தூணிடைப் பிணித்த - தூணின்கண்கட்டிய, நேசம் என்னும் - அன்பு என்கிற, வாசுகி கொளுவி - வாசுகியைச் சுற்றி, மதித்தல் என்னும் - சிந்தித்தலென்கிற, மதித்தலை உஞற்றிய - கடைதலைச்செய்த, பேரா இன்பம் - அழியாத சுக ஹேதுவாகிய, சீர் ஆநந்தம் - சிறந்த ஆநந்தம் என்கிற, பெறல் அரும் அமு தம் - பெறுதற்கரிய அமிர்தத்தை, திறனொடும் பெற்று - பெறவேண்டிய முறைமைப்படிபெற்று, ஞானவாய்கொண்டு-ஞானமாகிய வாயினால், மோ னமாஉண்டு - மௌனமாயிருந்துண்டு, பிறப்பு இறப்பு என்னும் - ஜநநமர ணங்களென்கிற, அறப்பெரும் பயத்தால் - மிகப்பெரிய அச்சத்தால், பல் நாள்பட்ட-பல நாள்களாகஅநுபவித்த இன்னலுங்குஅகற்றி, துன்பத்தைய கற்றி, என்னையும்தன்னையும் மறந்திட்டு-என்னையும் இறைவனையும் மறந்து, இன்பம்மேலிடுவெய்து தற்பொருட்டு-இன்பமிகுதியை யடைதற்பொருட்டு; நின் - உனது,பொன் மலர்ப்பாதம் - பொற்றாமரைமலர் போன்ற திருவடி களை,சென்னிவைத்து-எமது சிரத்தில் அமைத்து,இறைஞ்சுதும் - வணங்கு வோம். எ - று.

துன்னிய பயோதரம் என்பது முதல் சிவணலின்என்னுமளவும் மாளி கைக்கும் மலையாசலத்துக்கும் சிலேடையாதலால் கீழ்வருமாறு பொருளு ரைத்துக்கொள்க. மலையாசலம் - பொதியமலை. துன்னிய பயோதரம் மின்

இடையிடைதலின் - நெருங்கிய தனங்களைத்தாங்கிய மின் கொடிபோன்ற மாதர் நெருங்குதலால், (மாளிகை). துன்னிய பயோதரம், மின், இடையிடைதலின் - நெருங்கிய மேகங்களும், மின்னற்கொடிகளும் இடையிடையே நெருங்குதலால், (மலையாசலம்) அளப்பு அரு பெருமை வளத் தினை விளைத்தலின் - அளவிடுதற் கரிதாகிய பெருவளங்களையுண்டாக்குதலால், (மாளிகை) அளப்பு அரு பெருமை வளம் தினை விளைத்தலின் - அளவிடற்கரிய பெருமையுள்ள வளமாகிய தினையை விளைத்தலால், (மலையாசலம்) சந்திரதிலகம்சிந்தூரம் மருவலின்-சந்தநமும் யானையும் பொருந்துதலால், (மாளிகை) சந்திரதிலகம் சிந்துரம் மருவலின் - சந்தநமரங்களும் புளியமரங்களும் பொருந்துதலால் (மலையாசலம்) உறுகண் தீரவந்துஉறும் உழை உறுதலின் - துன்பம் நீங்கும்படிகாற்றுலாவுகிற இடங்களையுடைமையால், (மாளிகை) வந்து - காற்று. உறு கண்டீரவம் துறும் முழை உறுதலின் - மிகுந்த சிங்கங்கள் நெருங்குகின்ற குகைகளையுடைமையால், (மலையாசலம்) சாதம் முறை சுழீஇ சோதி மீது அமர்தலின் - உற்பத்திக்ரமமாகச் சூழ்ந்து ஒளியுடைப் பொருள்களாகிய சூரிய சந்திரர்கள் மேலிடத்தில் அமர்தலால், (மாளிகை)சாதம் உறை சுழீஇ சோதி மீது அமர்தலின் - உண்டாகின்ற மழை சூழப்பெற்று மின்னலொளிகள்மேலிடத்தில் அமர்தலால், (மலையாசலம்) பணை எழும் அரவம் பிணையொடுமேவலின் - வாத்தியவிசேஷங்களாலுண்டாகின்ற ஓசையானது பெண்மான் போலும் நாட்டிய மாதரோடு பொருந்துதலால், (மாளிகை) பணை எழும் மரவம் பிணையொடு மேவலின் - கிளைகளுண்டாகிய குங்கும மரங்கள் பூங்கொத்துக்களோடு பொருந்து தலால், (மலையாசலம்) காமர் அஞ்சு எவ்வழிகாமரின் எய்தலின் - அழகாகிய பஞ்சபாணங்களும் எவ்விடத்தினும் மன்மதனால் எய்யப்படுதலால், (மாளிகை) காமரம் செவ்வழி காமரின் எய்தலின் - காமரப்பண்ணும் செவ்வழிப்பண்ணும் அழகோடு பொருந்துதலால், (மலையாசலம்) அளகை எதிர் என்னும் ஆசை உற்று உறைதலின் - அளகாபுரி இணையாமென்னும் படியாகப் பொன்பொருந்தியிருத்தலால், (மாளிகை) அளகாபுரிக்கு எதிரிவுள்ள தென்னும் படியான தென்றிசையைப் பொருந்தியிருத்தலால், (மலையாசலம்) ஆடு அகம் மருவி நீடு அறை பெறுதலின் - ஆடிடங்கள் பொருந்தி நீண்ட அறைகளைப் பெற்றிருத்தலால், (மாளிகை) ஆடகம் அருவி நீடு அறை பெறுதலின் - பொற்பொடியைப் பொருந்தியிழிகின்றஅருவியாறுகள் மிகுதியாகிய ஒலித்தலைப்பெற்றிருத்தலால்,(மலையாசலம்) அருவி நீள் தறை பெறுதலின் - அருவியாறுகள் நீண்டு செல்லுதற்குரிய பாறை நிலத்தைப் பெற்றிருத்தலால் எனினும் பொருந்தும். நாட்டியத்து ஓகை ஈட்டம் அங்கு அணைதலின் - நடநத்தினாலுண்டாகின்ற சந்தோஷமிகுதி அவ்விடத்துப் பொருந்துதலால் (மாளிகை) நாட்டியத் தோகை யீட்டம் - நடநம் பண்ணுகின்ற மயில்போலுஞ் சாயலையுடைய

மாதர் கூட்டம் எனினும் பொருந்தும். நாட்டியம் தோகை ஈட்டம் அங்கு அணைதலின் - நடநம்பண்ணுகின்ற மயிற் கூட்டம் அவ்விடத்துப் பொருந்துதலால், (மலையாசலம்) அகத்து இயல் மன்னும் அகத்துவம் சிவணலின் - அகப்பொருளிலக்கணம் நிலைபெற்றிருக்கிற மனக்கொள்கை பொருந்துதலால், (மாளிகை) அகத்தியன் மன்னும் மகத்துவம் சிவணலின் - அகத்திய முனிவன் நிலைபெற்றிருக்கிற பெருமை பெற்றிருத்தலால், (மலையாசலம்) மலையாசலம்என - பொதிய மலையென்று சொல்லும்படி, நிலைசேர் - நிலைகள்பொருந்திய, மாடமாளிகை சூழ்ந்த சூளிகை புரிசை - வீடுகளும், அரண்மனைகளும் வளைந்த சிகரங்களையுடைய மதில்களும், மால்நேமிவரை என - பெரியசக்ரவாளகிரிபோல, பூமி மீது இலங்கும் - இவ்வுலகத்தில் விளங்குகின்ற, காழிமாநகரம் என இயைத்துக்கொள்க. இறைவன் தன்னை அடைந்தார்க்கு அருள்புரிவோனுதலால், "சார்ந்தவர்ப் புரக்குமீர்ஞ்சடைப் பெரும" என்றார், இதற்கு உதாரணம் "மனைவிலங்கறுமைந்தனே கற்பகமரங்கனல் புனன் மூன்றும், தனையடைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந்தவிர்த்தாளும், அனைய வீசனுமடைந்தவர்க் கருள் செய்வனகன்றவர்க்கருள் செய்யான், இனைய குற்றங்களெவர் குற்றமாகு மென்றெண்ணி நீயறிவாயே" "அன்பருக்கன்பனே" "ஓராதாருள்ளத் தொளிக்குமொளியானே" "துப்பனே தூயாய் தூயவெண்ணீறு துதைந்தெழுதுளங்கொளிவயிரத், தொப்பனே யுன்னையுள்குவார் மனத்தினுறு சுவையளிக்குமாரமுதே, செப்பமாமறை சேர்திருப் பெருந்துறையிற் செழுமலர்க்குருந்தமேவியசீர், அப்பனேயடியேனு தரித்தழைத்தாலதெந்துவே யென்றருளாயே" "அருந்துணையையடியார் தம்மல்லறீர்க்கு யருமருந்தை யகன்ஞாலத்தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டுவான் புலன்களகத்தடக்கி மடவாரோடும், பொருந்தணைமேல் வரும் பயனைப் போக மாற்றிப் பொது நீக்கித்தனை நினையவல்லோர்க் கென்றும், பெருந்துணையைப் பெரும் பற்றப்புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே" "அரியனவுஞ் சேயனவு மல்லாவடி யடியார்கட்காரமுதமானவடி, பணிபவர்க்குப் பாங்காகவல்லவடி பற்றற்றார் பற்றும் பவளவடி,மணியடி பொன்னடிமாண் பாமடி மருந்தாய்ப்பிணி தீர்க்கவல்லவடி,தணிபாடுதண்கெடிலநாதன்னடிதகை சார்வீரட்டத்தலைவன்னடி" வித்தகச்செஞ்சடை வெண்மதிக்கார் நிறக்கண்டத்தெண்டோண், மத்தகக்கைம்மலைப்போர்வை மதிற்றில்லை மன்னனைத்தஞ், சித்தகக் கோயிலிருத்துந் திறத்தார் மிகருக்கல்லால், புத்தகப் பேய்களுக் கெங்கித்ததோவரன் பொன்னடியே" என்பனவும் பிறவும். கங்கை தங்கிய சடையாதலால், "ஈர்ஞ்சடை" என்றார். சைவலம் என்பதில் வலம் எழனுருபு - காழிநாதனே, பிறப்பிறப்புக்க ளற்றுப் பேரின்பமடைதற் பொருட்டு உன் திருவடியை வணங்குவோம் என்பது கருத்து.

### வெண்பா.

14. பொருளாசைபெண்ணாசைபூவாசையென்னு
மருளாசையாமாசைமாற்றித் - தெருண்ஞான
வேந்தராய்வாழலாமெய்யன்பானன்னெஞ்சே
பூந்தராய்நாதனைநீபோற்று.

இ - ள். நல்நெஞ்சே - நல்லமனமே, பூந்தராய் வேந்தனை-திருக்கழுமலத்திறைவனை, மெய் அன்பால் - உண்மையாகிய அன்போடு, நீ போற்று-நீவணங்கு, (வணங்குவையாயின், நாம்) பொருள் ஆசை - பொன்னாசை, பெண் ஆசை - பெண்ணாசை, பூ ஆசை - மண்ணாசை, என்னும் - என்கிற மருள் ஆசை ஆம்-மனமருட்சியை யுண்டாக்குகின்ற மூன்றாசைகளாகிய, மாசை - மனக்களங்கத்தை, மாற்றி - நீக்கி, தெருள் - மனத்தெளிவையுண்டாக்குகின்ற, ஞானம் - ஞானபூமிகள் ஏழுக்கும், வேந்தர் ஆய்-அரசராகி, வாழல் ஆம்-வாழ்ந்திருத்தல் கூடும், எ - று.

பொருளாசை முதலிய மூன்றையும் ஈஷஞ்ஞத்ரயம் என்பர். ஞானபூமிகள் ஏழாவன-சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, சமுசத்தி, பதார்த்தாபாவனை, துரியம் என்பன. இவற்றிற்குமுறையே, துச்சங்கநிவர்த்திவந்து சிவஞானத்தை விரும்புதலும், நற்சங்கமொழிவினவி ஞானநூல்பழகுதலும், முற்சங்க வீடணைகள்விடுதலும், சற்சங்கமனத்திலுண்மையறிவுதித்தலும், தத்துவத்தின் மனமுறைத்து மித்தை யெல்லாமறத்தலும், அத்துவிதாநந்தம் உண்டாதற்குக் காரணமாகிய த்ரிபுடிராஹித்யமும், வஸ்து நிலையிருந்தபடியிருந்தமவுநசுபாவமும் பொருளாம். த்ரிபுடி-ஞாத்ரு, ஞானம், ஞேயம் என்பன. இவற்றைக்காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்பர். மித்தை-பொய்ப்பொருள். பொருளாசை முதலிய மூன்றையும் விட்டுத்திருக்கழுமல வேந்தனைவணங்கினால் ஞானவேந்தராய் வாழலாம் என்பதுகருத்து.

### கட்டளைக்கலித்துறை.

15. போற்றும்பழமறைவாசிப்புனிதர்புகலிவெற்ப
னாற்றுந்தவத்தினைக்கண்டேநகைத்ததணிகொண்முல்லை
தூற்றும்புபல்வடகாற்றேறுவடிக்கத்தொடங்குமதிக்
கீற்றிங்கெனதுமனங்குழம்பாகக்கிடைத்ததின்றே.

இ - ள். இன்று - இப்பொழுது, போற்றும் - தம்மைப்புகழ்கின்ற, பழமறை - அநாதிவேதமாகிய, வாசி-குதிரையையுடைய, புனிதர்-பரிசுத்தராகிய சிவபெருமானது, புகலி - திருக்கழுமலத்துள்ள, வெற்பன் - நண்பன், ஆற்றும்-செய்கின்ற, தவத்தினைக்கண்டு - தவத்தைப்பார்த்து, அணி

கொள்முல்லை - அழகைக்கொண்ட முல்லைக்கொடி, நகைத்தது - சிரித்தது, புயல் - மேகம், தூற்றும் - நீர்த்துளிகளைச் சிதறுகின்றது, வடகாற்றே அடிக்கத்தொடங்கும் - வாடைக்காற்றே வீசத்தொடங்காநின்றது, மதிக்கீற்று - சந்திரகண்டம், இந்த எனது மனம்குழம்பு ஆகக்கிடைத்தது - இவ்விடத்து என்மனமானது குழையும்படிவந்தது, எ-று.

இறைவரது கல்யாணகுணங்களைப் புகழவல்லது அநாதிவேதமாதலால் 'போற்றும் பழமறை" என்றார். வெற்பன் - குறிஞ்சிநிலத்தலைவன். முல்லை நகைத்தது என்றது முல்லைக்கொடி அரும்பிற்று என்றவாறு. கார்காலம் வந்ததென்று குறிப்பித்தற்கு இவ்வாறு கூறலாயிற்று. இது மநோரதங்களெல்லாம் நிறைவேறும்படி தவஞ்செய்து மீள்வேனெனச் சென்ற தலைமகனது நிலைமையைக்குறித்துத் தலைவிகூறியது. தவம்முற்றுப்பெறாது மீள்கைக்குக் காரணமாகக் கார்காலம்வந்தமையால், இதனை யாராயாது சென்றதலைமகனது பேதைமையைக்கண்டு முல்லைநகைத்தது என்றபடி. தான்நகைக்கப்பட்டமையே யன்றி என்னையும் புயல்முதலியவற்றால் வருந்தும்படிப்பண்ணினான் என்றாளாயிற்று.

இணைக்குறளாசிரியப்பா.

16. இன்றெனவுளதெனவன்றெனவாமென
வுரைதருநூலையும்பொருளையுந்தனித்தனி
பல்விதமாகச்சொல்வகைச்சமய
மாகியபயம்பிற்போகுதல்குறித்த
நிலையில்துறைபலநிலையுளதுறைசில
பொருந்திடுமுலகப்பெருங்கடலிடத்தின்
மயிர்நூல்கிடத்திப்பயில்வுறுதோலெனும்
வன்புறுபலகையினென்பெனுமாணியி
னரம்பெனப்பெயரியவுரம்பெறுகயிற்றின்
வெரிநுறுமென்பெனும்பரியகூம்பி
னைம்பொறியாகியமொய்ம்புறுவாய்தலிற்
காயமெனவமைத்தமாயநாவாயி
லிருவினையென்னவருசரக்கேற்றிக்
காமமுலோபமேமமாமோக
மிதமறுகுரோதமதமாற்சரியமென்
றுரைபெறுயவனர்நிரையுறவிருத்தி
செடுநீரென்னப்படுநெடுநோணிற்

றங்கியமடியெனுநங்கூரஞ்சேர்த்தி
யற்றமின்மனமெனப்பெற்றபாய்விரித்துத்
தடைபடாவாசைக்கடுவளிதுரப்பத்
தானமாதிபானதீவுகளிற்
செல்வுழிச்சென்றுபுல்வுழிப்புல்லி
யிவ்வாறியங்குமவ்வாறதனுண்
முன்பார்காலவன்பார்தாக்கத்
தொக்குறுமரக்கலம்பக்குவிட்டம்ம
வக்கடனீருட்புக்கறிவழியுழி
மறலியென்னுஞ்சுறவுபிடித்தீர்ப்பக்
கடுநரகென்னும்படுகுழியழுந்தி
யுளதுயரினுக்கோரளவிலையதனா
லிம்முறையியங்குதல்செம்மையன்றென்று
முற்றுணர்பெரியோயற்றமில்வலியோ
யோதாதுணர்ந்தநாதாதீத
வருவுருவென்னும்பொருண்முழுதுடையோ
யாவருநின்வயமேவரப்புரிவோய்
களையறுமின்பப்புணைதவிர்நிமல
சாந்தணிவனமுலையேந்திழைபாக
ஞானமாமணநிறைமோனமாமலரோ
வித்தகம்பழுத்தமுத்திவான்கனியே
பணைமுதலைம்பணைநிரைபெறக்கிளைத்த
திருத்தகுநீழலருட்பெருந்தருவே
பத்திகொணித்திலமொத்துறநிரைத்த
பசும்பொனிற்செய்ததசும்புபலதொக்க
தோற்றம்போலவீற்றுவீற்றமைந்த
தீங்கனிபணைதொறுந்தாங்குமாதளையும்
வித்துருமத்தினையொத்தசெந்தளிரும்
ஒளிர்வயிடூரியக்குளிர்மதுமலரும்
மேவிடுவண்டெனுநீலமாமணியும்
மரகதமென்னவிரவுகாய்த்திரளும்
மறுவின்மாமணியெனுநறியசெங்கனியுங்

கிடைத்தசீர்வணிகரிற்படைத்தமாந்தருவு
மெண்டிசைசூழ்ந்துவிண்டொடும்புகலி
மேவியபெருமவாவிநாயகனே
கணபணக்கச்சைப்பணவரவசைத்த
மட்டலர்புழுகணிசட்டைநாயக
னென்னுமீகாமன்மன்னினன்புரப்பநீ
வீற்றினிதிருக்கவேற்றமெய்ப்பிரணவத்
தோணியேபற்றெனத்துணிந்து
காணுறுமீறிவொடுகண்டுகொணடேனே.

இ - ள். இன்று என - இல்லையென்றும், உண்டு என - உண்டென்றும், அன்று என - அல்லவென்றும், ஆம் என - ஆமென்றும், உரைதரு நூலையும் சொல்லுகின்றநூல்களையும், பொருளையும் - (அந்த நூல்களின்) பொருளையும், தனித்தனி - வெவ்வேறாக, பல்விதமாகச் சொல்வகை - பல விதமாய்ச்சொல்லும் வகைகளையுடைத்தாகிய, சமயம் ஆகிய பயம்பில் - சமயங்களாகிய படுபள்ளத்தில், போகுதல்குறித்த - சென்றழுந்துதலைக் குறித்த, நிலைஇல் துறைபல - நிலையற்றவழிகள் பலவும், நிலையுள துறைசில - நிலையுள்ள துறைகள்சிலவும், பொருந்திடும் - பொருந்தியிருக்கிற, உலகப் பெருங்கடலிடத்தில் - உலகமாகிய பெரியகடலினிடத்து, மயிர்நூல்கிடத்தி - மயிராகிய நூலையிட்டு, பயில்வு உறுதோல்என்னும் - நெருங்குதலுற்ற தோல்என்கிற, வன்பு உறுபலகையின் - வலிமைமிக்கபலகையாலும், என்பு என்னும் ஆணியின் - எலும்பென்கிற ஆணிகளாலும், நரம்பு எனப்பெயரிய - நரம்பெனப் பெயர்பெற்ற, உரம்பெறுகயிற்றின் - வலிமைபெற்ற கயிறுகளாலும், வெரிந் உறும் என்பு என்னும் பரியகூம்பின் - முதுகெலும்பென்கிறபெரியகூம்பாலும், ஐம்பொறி ஆகிய - பஞ்சேந்திரியங்களாகிய, மொய்ம்பு உறுவாய்தலின் - வலிமிகுந்த வாயில்களாலும், காயம் என அமைத்த - சரீரமென்னும்படி யமைத்த, மாயநாவாயில் - மாயக்கப்பலில், இருவினை என்ன வருசரக்கு ஏற்றி - இருவினையென்று சொல்லுதற்குரிய சரக்குகளையேற்றி, காமம் - காமம், உலோபம் - லோபம், ஏமம் ஆம்மோகம் - இன்பமாகிய மோகம், மிதம் அறுகுரோதம் - எல்லையற்றகுரோதம், மதம் - மதம், மாற்சரியம் - மாத்ஸர்யம், என்று உரைபெறு யவனர் - என்று சொல்லப்பெற்ற யவனர்களை, நிரை உற இருத்தி - வரிசைபெற அமைத்து, நெடுநீர் என்னப்படும் நெடுநாணில் - பெருங்குணமெனப்படுகின்ற நீண்ட கயிற்றில், தங்கியமடி என்னும் - நிலைபெற்ற சோம்பலென்கிற, நங்கூரம் சேர்த்தி - நங்கூரத்தைச்சேர்த்து, அற்றம் இல்மனம் எனப்பெற்ற - சோர்வில்லாத மனமென்று சொல்லப்பெற்ற, பாய்விரித்து - பாயைப்பரப்பி,

தடைபடா ஆசை - தடைபடாத ஆசையென்கிற, கடுவெளிதுரப்ப - கடுங் காற்றுச்செலுத்த, தானம் ஆதி ஆனதீவுகளில் - தேவலோகம்முதலிய தீவு களில், செல்வுழிச்சென்று - போதற்குரிய இடங்களுக்குப்போய், புல்வுழிப் புல்லி - தங்குதற்குரிய இடங்களில்தங்கி, இவ்வாறு இயங்கும் அவ்வாறு அதனுள் - இப்படிச் சஞ்சரிக்கிற அந்தவழியில், முன்பு ஆர்காலம் - முன் பே வகுக்கப்பட்டிருக்கிற காலவரையறையாகிய, வல்பார்தாக்க - வலிய பாறைபடுதலால், தொக்கு உறுமரக்கலம் - தோற்றெழில் மிகுந்திருக்கிற கப்பலானது, பக்குவிட்டு - பிளந்து, அம்ம - அம்மா, அக்கடல்நீருள்புக்கு- அந்தக்கடல் நீருக்குள்ளேபுகுந்து, அறிவுஅழி உழி - அறிவழியுமிடத்தில், மறலி என்னும் - யமனென்கிற, சுறவுபிடித்து ஈர்ப்ப - சுறாப்பற்றியிழுக்க, கடுநரகு என்னும் - கடுமையாகிய நரகமென்கிற, படுகுழி அழுந்தி - படுபள் ளத்தில் முழுகி, உள துயரினுக்கு - உளவாகிய துன்பங்களுக்கு, ஓர் அளவு இல்லை - ஒரு எல்லையில்லை, அதனால் - ஆதலால், இம்முறை இயங்குதல் - இந்தவண்ணம் சஞ்சரித்தல், செம்மை அன்று என்று - நன்மையல்லவெ ன்று துணிந்து, முற்று உணர்பெரியோய் - முழுதுமுணர்ந்த பெரியோனே, அற்றம் இல்வலியோய் - இறுதியில்லாத வலியையுடையோனே, ஓதாது உணர்ந்த - படியாமலே யெல்லாவற்றையுமறிந்த, நாத அதீத - நாத தத்து வத்துக்கும் மேற்பட்டவனே, அரு உரு என்னும் - அருவம் உருவம் என் கிற, பொருள்முழுது உடையோய் - பொருள்முழுதும் உடையவனே, யா வரும் - எல்லாரும், நின்வயம் - உன்வசத்தில், மேவரப்புரிவோய் - அடங் கும்படிச் செய்வோனே, கரை அறும் இன்பம் - எல்லையில்லாத ஆநந்தத் தையுடைய, புரைதவிர்நிமல - குற்றமற்ற நிர்மலனே, சாந்து அணி - சந் தநமணிந்த, வனம்முலை - அழகாகிய தனங்களையுடைய, ஏந்திழைபாக - உமாதேவியை ஒருபாகத்தில் உடையவனே, ஞானம் ஆம் - ஞானமாகிய, மணம்நிறை - வாசனைநிரம்பிய, மோனம்மாமலரே - மௌநமாகிய பெரிய புஷ்பமே, வித்தகம்பழுத்த - ஞானம் என்கிற மரத்திற்பழுத்த, முத்தி வான்கனியே - மோக்ஷம் என்கிற பெரியபழமே, பணைமுதல் - பணைமுத லாகிய, ஐம்பணை - ஐந்துகிளைகள், நிரைபெறகிளைத்த - வரிசையாகக்கிளை த்த, திருதகுநிழல் - அழகுபொருந்திய நிழலும், அருள் - பெருங்கருணையு முள்ள, பெருதருவே - பெரிய கற்பகவிருக்ஷமே, பத்திகொள் நித்திலம் - வரிசைகொண்ட முத்துக்களை, ஒத்து உற - ஒன்றற்கொன்று பொருந்த, நிரைத்த - வரிசைப்படவைத்த, பசும்பொன்னின்செய்த - பசும்பொன்னி னாற்செய்யப்பட்ட, பலதசும்புதொக்க - பலகுடங்கள் கூடியிருந்த, தோற் றம்போல - காட்சியைப்போல, வீற்றுவீற்று அமைந்த - வேறு வேறா யமைந்திருக்கிற, தீகனி - மதுரமாகிய பழங்களை, பணைதொறும் தாங்கும் - கிளைகள்தோறும் தாங்குகின்ற, மாதளையும் - மாதளமரங்களும், வித்தரு

மத்தினை ஒத்தசெந்தளிரும் - பவளத்தைநிகர்த்த செவந்ததளிர்களையும், ஒளிர் வயிடூரியம் குளிர்மதுமலரும் - விளங்குகின்ற வைடூர்யம்போன்ற குளிர்ந்ததேனையுடைய புஷ்பங்களையும், மேவிடுவண்டு என்னும் நீலமா மணியும் - அம்மலர்களின்மேல் மொய்க்கின்ற வண்டுகள் என்கிற அழகிய நீலரத்நங்களையும், மரகதம் என்ன விரவுகாய்த்திரளும் - மரகதமணிபோலப் பொருந்திய காய்த்தொகையையும், மறு இல்மாமணி என்னும் நறிய செங்கனியும் - குற்றமில்லாத மாணிக்கம் என்று சொல்லுதற்குரிய நறுமணமுள்ள செவந்தகனிகளையும், சீர்கிடைத்தவணிகரில் - சிறப்புப்பெற்ற வணிகரைப்போல், படைத்த - கொண்டிருக்கிற, மாதருவும் - மாமரங்களும், எண்திசைசூழ்ந்து - அஷ்டதிக்குகளிலும் வளைந்து, விண்தொடும் - ஆகாயத்தைத்தீண்டுகின்ற, புகலிமேவியபெரும - திருக்கழுமலத்தில் எழுந்தருளிய பெருமானே, ஆவிநாயகனே - என்னுயிர்த்தலைவனே, கணபணம் கச்சை - தொகையாகிய பணம்பெற்ற கச்சையாகிய, பணம் அரவு அசைத்த-படங்களையுடைய சர்ப்பங்களைத் திருமுடிதிருவரைமுதலிய இடங்களிற்கட்டின, மட்டு அலர் - தேன்பொருந்திய மலர்களையும், புழுகு - புனுகையும், அணி - அணிந்த, சட்டைநாயகன் என்னும் - சட்டைநாயகன் என்கிற, மீகாமன் - மாலுமி, மன்னினன்புரப்ப - நிலைபெற்றுக்காக்க, நீ இனிதுவீற்றிருக்க - நீ இனிதாகவீற்றிருத்தற்கு, ஏற்ற - தகுதியுள்ள, மெய்பிரணவம் - உண்மையாகிய பிரணவமென்கிற, தோணியே - மரக்கலத்தையே, பற்று எனத்துணிந்து - ஆதாரமென்று நிச்சயித்து, காணுறும் அறிவொடு - காணுதற்குரிய அறிவுடன், கண்டுகொண்டேன் - கண்டு கொண்டேன், எ-று.

பயம்பு - படுபள்ளம். யவநர் - சோநகர். பனைமுதலைம்பனை என்றது, பராசத்தி, சிற்சத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் பஞ்ச சத்திகளை.

## வெண்பா.

**17.** கண்டேன்புகலிக்கருத்தனைத்தன்மெய்ஞ்ஞான
வண்டேனுண்டேமகிழும்வண்டானேன் - பண்டே
யளியனுமானேன்மனமெய்யார்பதம்வேறின்றிக்
குளிர்சிவானந்தமிலங்கும்.

இ-ள். புகலிக்கருத்தனை - திருக்கழுமலநாதனை, கண்டேன் - தரிசித்தேன், தன் - அவனது, மெய்ஞ்ஞானம் - மெய்ஞ்ஞானமாகிய, வள்தேன் உண்டு-வளமாகிய தேனைப்பருகி, மகிழும் - களிக்கின்ற, வண்டு ஆனேன் - வண்டாயினேன், பண்டே - பூர்வத்திற்முனே, அளியனும் ஆனேன் -

குழைவோனும் ஆயினேன், மனம் - என்மனத்தில், மெய்யார்பதம் - சத்து உருவினையுடையராகிய சிவபெருமானது திருவடிகள், வேறு இன்றி - வேற்றுமையில்லாமல், குளிர் - குளிர்ந்த, சிவானந்தம் இலங்கும் - சிவாநந்த ரூபமாய் விளங்கும், எ-று.

திருக்கழுமல நாதனைக்கண்டு மெய்ஞ்ஞானத்தைப்பெற்று மனமுருகுவோனாயினேன், ஆதலால் என்மனத்தில் அவனதுதிருவடி வேற்றுமையின்றிக்கலந்து சிவாநந்தரூபமாய் விளங்காநின்றது என்பது கருத்து.

கட்டளைக்கலித்துறை.

18 கும்பிட்டபத்தர்க்கழியாதவின்பங்கொடுக்குமுத்தர்
வம்பிட்டகொங்கையுமைபாகர்சண்பையர்வந்திலரோற் [று
கொம்பிட்டகோழிக்கொடிவேந்தன்கொச்சையைக்கொல்வத
லம்பிட்டகட்சிற்றிடைச்சிக்கென்னோபயனாகுவதே.

இ - ள். கும்பிட்ட பத்தர்க்கு - அஞ்சலிசெய்த பக்தர்களுக்கு, அழியாத இன்பம் கொடுக்கும் - கெடாத ஆநந்தத்தைத்தருகின்ற, முத்தர்-முக்தர், வம்பு இட்ட - கச்சணிந்த, கொங்கை-தனங்களையுடைய, உமைபாகர்-உமாதேவியைப் பாகத்திலுடையவர், (அவரது.) சண்பையர் - திருக்கழுமலத்திலுள்ள தலைவர், வந்திலரேல் - வந்திலராயின், கொம்பு இட்ட - கொம்பிற்கட்டிய, கோழிக்கொடி-கோழிக்கொடியையுடைய, வேந்தன் - அரசனாகிய முருகக்கடவுளது,கொச்சையை-(வாகனமாகிய)ஆட்டை,கொல்வதனால் - கொலைசெய்தலால், அம்பு இட்டகண்-அம்புபோன்ற கண்களையுடைய, சிறு இடைச்சிக்கு-சிற்றிடையையுடைய நம்தலைவிக்கு, ஆகுவது-உண்டாவதாகிய, பயன் என்னோ - பயன் யாதோ, எ – று.

அம்பு இட்ட என்பதற்கு அம்பின் தன்மை யமைக்கப்பெற்ற என்றுரைப்பினுமமையும். இது வெறிவிலக்கல் என்னுந்துறை. அதாவது தலைமகன் பிரிவாற்றாது தலைவிவருந்துவதை, நற்றாய்முதலியோர் இவளுக்கு ஏதோ ஒரு தெய்வக்குறையா யிருக்கலாமென்று துணிந்து அதைப்பரிகரிக்கும்பொருட்டு வேலனையழைத்து வெறியாடவும் மறியையறுக்கவும் தொடங்கக்கண்ட தோழி, இது தகாதகாரியமெனத் தடுத்தல். மறி - ஆடு. "வேலன் புகுந்து வெறியாடுக வெண்மறியறுக்க" என்பது கோவையார்.

இணைக்குறளாசிரியப்பா.

19. ஆகுவாகனனைத்தோகைவாகனனை
யுற்றசீர்மகாரெனப்பெற்றசுந்தரனே
ஞானவாரிதியிலானவாரமுதே

கற்றவர்கருதுநற்றவக்கரும்பே
யிருட்குறும்பெறிந்தவருட்கலாமதியே
கதிர்த்தொகைகுன்றுதுதித்தசெங்கதிரோ
னிறைந்தவன்பலரினுறைந்தசெந்தேனே
துன்பமொன்றறியாவின்பவாரிதியே
மறைமுடிவிளக்குஞ்சுடர்விடுமணியே
விறலரிபிரமன்பெறலரும்பொருளே
சிற்பநூன்முழுதுமற்பமின்றுணர்ந்த
வோவியர்ற்புதமேவுகைத்தொழிலர்
சுத்தவெண்படிகப்பித்திகைத்தலத்தி.
னவமணிதெளித்துக்குவவினகூர்நுதித்
தூரியங்கொண்டுசீரிதிற்குயிற்று
மிமைப்பிலாநாட்டத்தமைப்பருங்கலாப
நீலமேகாரமுங்கோலமார்குயிலுந்
துப்பமர்வளைவாயொப்பறுபச்சைத்
தகைசிறைக்கிளியும்புகைநிறப்புறவு
மேனிமிர்தூவிப்பானிறவனமு
நன்மதுநிகர்த்தவின்மொழிப்பூவையு
மினமெனக்கருதிமனமுவந்தணைத்த
வுயிர்நிலைபெற்றமயின்முதற்பறவையுங்
கூறுபடநோக்கினர்வேறுபாடறியா
வளனுடுசெறிந்தவளவிலாமாடத்
துறைதருகற்புநிறைகுலமடவா
ரளிமுரல்குழலுமொளிகிளர்முகமுங்
குலாவியபுருவமுநிலாவிரிகுழையு
நறியமென்சொல்லுஞ்சிறியநுண்ணிடையுந்
தத்துநீருவரிமுத்தமாலிகையும்
பிரளயவெள்ளத்திரளினுமழியாத்
திருநகரிதுவெனக்கருதிவான்முகிலுஞ்
சந்திரவிம்பமுமிந்திரதனுவு
மிலங்குசெங்கதிருந்துலங்குவானமுதும்
வாராமின்னுந்தாராகணமு

மொருங்குவந்திருந்தபெருந்திறனேய்ப்பக்
காட்சியிற்பொலிந்தமாட்சிமைசிறந்த
காழிநாயகனேவாழிபூரணனே
யோர்தரும்பொற்கிரிசேர்கருங்கொடியும்
பொன்னிறமாமெனச்சொன்னதொன்மொழியு
மேதமினிறைமதிச்சீதளகிலவா
லாருமெய்புருப்பார்தீருமென்பதுவு
மொழிதருமிரதகுளிகைதற்சேர்ந்த
காளிமச்சிருணரீளியற்கனக
மாமெனக்கூறுந்தோமறுமொழியுங்
கருடதியானமருடபவந்தோர்
நோக்கினிற்றவிருந்தீக்கடுவென்றலு
மாயிரங்கிரணத்தலர்கதிர்முன்னம
பாயிருள்கெடுமெனப்பகர்பழமொழியு
மங்கஞ்மாஞாலத்தெங்கணுமொப்ப
வியலும்பட்டாங்கயலலவென்னல்
சரதமெய்ஞ்ஞானவரதகிற்சேர்ந்த
பேதையேன்பாசத்தீவினையகற்றித்
திருவருட்செல்வம்பெருகுமாறுதவி
யளித்தருள்பேரின்பாகும்
களித்திடுமுத்திக்காழிவான்கனியே.

இ - ள். ஆகுவாகனனை-மூஷிகவாஹநனாகிய விநாயக மூர்த்தியையும், தோகைவாகனனை - மயில்வாகனனாகிய முருகவேளையும், உற்றசீர் - மிக்க சீரினையுடைய, மகார் எனப்பெற்ற - புதல்வராகப்பெற்ற, சுந்தரனே-அழகனே, ஞானவாரிதியில் ஆன - ஞானக்கடலிலுண்டாகிய, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, கற்றவர்கருதும் - (அறிவுநூல்களைக்) கற்றவர் நினைக்கின்ற, நல்தவக்கரும்பே - நன்மையாகிய தபோரூபமாகிய கரும்பே, இருள் குறும்பு எறிந்த - (அஞ்ஞானமாகிய) இருளைவீசின, அருள் கலாமதியே - திருவருளாகிய கலைகள்நிறைந்த பூர்ணசந்திரனே, கதிர் தொகைகுன்றாது உதித்த - கிரணத்தொகுதி குறையாமல் உதயஞ்செய்த, செங்கதிரே - சூரியனே, நிறைந்த அன்பு அலரின் உறைந்த - நிறைந்த அன்பாகிய மலரின் கண் தங்கிய, செந்தேனே-செவந்ததேனே, துன்பம் ஒன்று அறியா-துன்பஞ் சிறிதுமுணராத, இன்பவாரிதியே - ஆநந்தசாகரமே, மறைமுடிவிளக்

கும்-வேதாந்தத்தைவிளங்கச்செய்கின்ற, சுடர்விடும்மணியே-ஒளிவீசுகின்ற மாணிக்கமே, விறல் அரிபிரமன் - வெற்றியையுடைய திருமாலும்பிரமனும், பெறல் அரு பொருளே - பெறுதற்கரிய பொருளே, சிற்பநூல் முழுதும் - சிற்பநூல்முழுமையும், அற்பம் இன்று உணர்ந்த-சிறிதும் விடாமல்அறிந்த, ஓவியர் - சித்திரக்காரராகிய, மேவுகைத்தொழிலர் - பொருந்திய கைத்தொழிலாளர், சுத்தவெண்படிகப் பித்திகைத்தலத்தில் - சுத்தமாகிய வெண்படிகத்தாற்செய்த சுவர்த்தலத்தில், நவமணி தெளித்து-நவரத்தினங்களைப் பரப்பி, குவவின கூர்நுதி - குவிந்த கூராகிய நுனியையுடைய, தூரியம் கொண்டு - எழுதுகோலைக்கொண்டு, சீரிதின் குயிற்றும் - சீர்மையாக எழுதின, இமைப்பு இல்லா நாட்டத்து-இமைத்தலில்லாத கண்களோடுகூடிய, அமைப்பு அருகலாபம் - (பிறரால்) அமைத்தற்கரிய தோகையையுடைய, நீலமேகாரமும் - நீலநிறமுள்ள மயிலையும், கோலம் ஆர் குயிலும்-அழகுள்ள குயிலையும், துப்பு அமர் வளைவாய் - பவளமும் விரும்புகின்ற வளைந்த வாயினையும், ஒப்பு அறு - இணையற்ற, பச்சை - பச்சைநிறமுள்ள, தகை சிறை கிளியும் - அழகியசிறைகளையுமுடையகிளியையும், புகைநிறப்புறவும்-புகைநிறமுள்ள புறாவினையும், மேல் நிமிர் தூவி - மேலேநிமிர்ந்த இறகுகளையும், பால் நிறம் - வெண்ணிறத்தையும் உடைய, அன்னமும்-அன்னங்களையும், நல்மது நிகர்த்த - நல்லதேனையொத்த, இன்மொழி - இனிய மொழிகளையுடைய, பூவையும் - நாகணவாய்ப்புட்களையும், இனம் எனக்கருதி - தமக்கினமென்று நினைத்து, மனம் உவந்து அணைத்த - மனங்களித்தணைத்த, உயிர்நிலைபெற்ற - உயிர்நிலைமையுடைய, மயில்முதல் பறவையும் - மயில்முதலிய புட்களையும், கூறுபட நோக்கினர்-வகைபடப்பார்த்தவரும், வேறுபாடு அறியா - வேறுபாட்டையுணரவொண்ணாத, வளனொடுசெறிந்த - வளங்களோடும் நெருங்கிய, அளவு இல்லாமாடத்து - அளவற்ற மாளிகைகளில், உறைதரு - வாசம்பண்ணுகிற, கற்புநிறை - கற்புநிரம்பிய, குலமடவார் - குலமாதரது, அளிமுரல்குழலும் - வண்டுகள் ஒலித்தற்கிடமாகிய கூந்தலையும், ஒளிகிளர்முகமும்-ஒளிவிளங்குகின்ற முகத்தையும், குலாவிய புருவமும் - வளைந்த புருவத்தையும், நிலாவிரி குழையும்-நிலவுவிரிந்த காதணியையும், நறியமெல்சொல்லும் - நன்மையாகிய மிருது வசனங்களையும், சிறிய நுண் இடையும் - மிகுதியும் நுட்பமாகிய இடையையும், சத்தம் நீர் உவரி - பாய்கின்ற நீரையுடைய கடலிலுண்டாகிய, முத்தமாலிகையும் - முத்துமாலைகளையும், பிரளயவெள்ளத்திரளினும் அழியா-பிரளயகாலவெள்ளத்தொகுதியினாலும்அழிவையடையாத,திருநகர் இதுஎன-திருநகரம் இதுவென்னும்படி, கருதி - நினைத்து, வான்முகிலும்-ஆகாயத்திலுள்ள மேகங்களும், சந்திரவிம்பமும் - சந்திரபிம்பமும், இந்திரதனுவும்-இந்திரவில்லும், இலங்குசெங்கதிரும் - விளங்குகின்ற சூரியனும், துலங்குவான் அமுதும் - பிரகாசிக்கிற மேன்மையாகிய அமிர்தமும், வார் ஆம் மின்னும்-நீட்சியாகிய

மின்னற்கொடியும்,தாராகணமும்-நக்ஷத்ரகூட்டமும்,ஒருங்குவந்துஇருந்த-ஒருங்கேவந்திருந்த, பெருந்திறன் ஏய்ப்ப-பெரியவரலாற்றை நிகர்க்க, காட்சியில்பொலிந்த-தோற்றத்தால் பிரகாசித்த,மாட்சிமைசிறந்த-பெருமையிற் சிறந்த, காழிநாயகனே - திருக்கழுமலநாதனே, பூரணனே-பரிபூரணனே, ஏர்தரும் பொற்கிரி - அழகைத்தந்த பொன்மலையை, சேர்-அடைந்த, கருகொடியும் - கருமையாகிய காக்கையும், பொன் நிறம் ஆம் எனச்சொன்ன - பொன்னிறமாகுமென்றுசொன்ன, தொல்மொழியும்-பழமொழியும்,ஏதம் இல்-குற்றமில்லாத, நிறைமதி-பூரண சந்திரனது,சீதளநிலவால்-குளிர்ச்சியாகிய சந்திரிகையினால்,ஆரும் மெய்உருப்பம்-பொருந்தியஉடல்வெப்பம்,தீரும் என்பதுவும்-நீங்குமென்பதுவும், மொழிதரும்-சொல்லப்பட்ட, இரதகுளிகை-ரசகுளிகையானது, தற்சேர்ந்த-தன்னையடைந்த,காளிமச்சீர்உண்ணதாமிரக்களிம்பின்மிகுதியையுண்ணவே, (அது நீள் இயல்கனகம் ஆம் எனக்கூறும் - பெருவிலைப்பொன்னாகுமென்றுசொல்லுகின்ற,தோம் அறுமொழியும்-குற்றமற்றசொல்லும், கருடதியானம் - கருடத்தியானமானது, மருள்தபவந்தோர்-மயக்கந்தீரக் கைவந்தவர்களுடைய, நோக்கினில்-நோக்கத்தால், தீகடுதவிரும்என்றலும்-கொடியவிஷம்நீங்குமென்பதும்,ஆயிரம்கிரணத்து-ஆயிரங்கிரணங்களையுடைய, அலர் கதிர்முன்னம்-விசாலமாகிய சூரியனுக்கெதிரில்,பாய்இருள்கெடும்எனப்பகர்-பாயாநின்றஇருள்கெடுமென்றுசொன்ன,பழமொழியும்-பழையசொல்லும், அங்கண் மாஞாலத்து-அழகியஇடப்பரந்த பெரியவுலகத்தில், எங்கணும் ஒப்ப - எவ்விடத்தினுமொக்க, இயலும் பட்டாங்கு-நடக்கின்ற வுண்மையே, அயல் அல்லஎன்னல்-வேறல்லவென்பது, சரதம்-உண்மை, (ஆதலால்) மெய்ஞ்ஞானவரத-மெய்ஞ்ஞானத்தைத் தருவோனே, நிற்சேர்ந்த - உன்னை அடைந்த, பேதையேன் - அறியாமையுடையேனது,பாசம்-பாசசம்பந்தமாகிய, தீவினை அகற்றி-பாவத்தொழிலை நீக்கி,திருஅருள் செல்வம் பெருகும் ஆறு-உன் திருவருளாகியசெல்வம்பெருகும் வண்ணம், உதவி-கிருபைசெய்து, பேர் இன்புஆகும்-பேரானந்தமாகிய, களித்திடும்-மகிழ்தற்குக் காரணமாகிய, காழிவான்கனியே-திருக்கழுமலத்திலுள்ள மேலாகிய கனியே, அளித்தருள்-என்னைக்காத்தருள்வாய்,எ-று.

திருக்கழுமலத் திறைவனே, பொன்மலை முதலானவை தம்மைச் சேர்ந்த கருங்காக்கை முதலியவற்றையும் பொன்னிறமுதலியவாகச்செய்யுமென்று மேலோர் கூறுதலால்,உன்னையடைந்த அடியேனைப் பாசவிமுக்தனாக்கி, உன் திருவருட்செல்வத்தையெனக்கருள்புரிந்து காக்கவேண்டுமென்பது கருத்து. பொன்மலையானது தன்னைச்சேர்ந்த காக்கையின் கருநிறத்தைப்போக்கிப் பொன்னிறந்தருதல்போல, பாசவிமுக்தனாகிய இறைவனும் தன்னை யடைந்தாரது பாசத்தைநீக்கிப் பாசவிமுக்தனாக்குவன் என்றற்கு இவ்வாறு கூறினர். குறும்பு-குறுநிலமன்னன் என்னினுமாம்.

### வெண்பா.

**20.** காழிக்குவேந்தர்கருணாலயர்முனநீ
காழிக்குமாரன்கவிகையினை - யாழிக்கட்
கண்டமட்டிற்சூடகமுங்கார்விழியிற்கங்கணமும்
கொண்டனளென்றன்னமேகூறு.

இ - ள். அன்னமே - அன்னப்பேடே, காழிக்குவேந்தர் - திருக்கழுமலத்துக்குத் தலைவரும், கருணாலயர்-கருணைக்கிருப்பிடமாயிருப்பவருமாகிய சிவபெருமானுக்கு, முன்னம் நீ - எதிரே நீ (போய்நின்று) காழ் இக்கு - வயிரங்கொண்ட கரும்புவில்லையுடைய, மாரன் - மன்மதனது, கவிகையினை - குடையை, ஆழிக்கண் - கடலினிடத்தே, கண்டமட்டில் - (உதிக்கக்) கண்டளவில், சூடு அகமும்-வெப்பமாகிய மனத்தையும், கார்விழியில்-கரியகண்களில், கம்கணமும் - நீர்ப்பெருக்கையும், கொண்டனள் என்று-(தலைமகள்) கொண்டாளென்று, கூறு - விண்ணப்பம்பண்ணுவாய், எ-று.

பூலோகத்தாரெல்லாரையும் வெல்லுமாற்றலுள்ள கரும்பு வில்லென்பார், "காழ் இக்கு" என்றார். மாரன் கவிகை - சந்திரன். சந்திரனைக்காணின், பிரிந்திருக்கும் நாயகி நாயகர்களுக்கு விரஹமிகுவது இயல்பாதலால், சந்திரன் கடலின்கண் உதிப்பதைக்கண்டளவில் இவளுக்கு மனவெதுப்பும் கண்ணீருமுண்டாயினவென்று தோழி அன்னத்துக்குக்கூறிவிடுத்தலால் இது அன்னவிடுதூது என்னுந்துறை. கழுத்தில் சூடகத்தையும் கண்ணில் கங்கணத்தையும் அணிந்தாளெனச் சொன்னயந்தோன்றுமாறுங்காண்க. சூடகம்-கைவளை. அன்னம் எனப்பொதுப்படக் கூறினும், மாதர் ஆண்பாலாரோடுளையாடல் மரபன்றாதலால் அன்னம் என்றதற்கு அன்னப்பேடு என்றுரையுரைக்கலாயிற்று. இது திருக்கோவையார் 244-வது, "மீண்டாரெனவுவந்தேன்" என்னுஞ் செய்யுளுரையால் இனிது விளங்கும். அன்றியும், திருவாய்மொழி, க-பத்து, ச-ம் திருவாய்மொழி, க-பாட்டில் "அஞ்சிறையமடநாராயளியத்தாய்நீயுகின், அஞ்சிறையசேவலுமாய்" என்பதனாலும் விசதம்.

### கட்டளைக்கலித்துறை.

**21.** கூறுஞ்செனனக்குடினெடுநாணுழைகூன்முழுது
மாறும்படிக்குமருந்துளதோசண்பைவாணர்கொண்ட
நீறுந்திருவெழுத்தோரைந்துங்கண்டியுகித்தகித்தந்
தேறும்பொருளென்றுணராதமாயச்செருக்கினர்க்கே.

இ - ள். சண்பைவாணர்கொண்ட-திருக்கழுமலவாணர் கொண்டிருக்கிற, நீறும் - திருவெண்ணீற்றையும், திரு எழுத்து ஓர் ஐந்தும் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையும், கண்டியும் - உருத்திராக்கமாலிகையையும், நித்தநித்தம் - நாள்தோறும், தேறும் பொருள் என்று-யாம் தெளிவடைதற்குக் காரணமாகிய பொருள்களென்று, உணராத - அறியாத, மாயச்செருக்கினர்க்கு-மாயக்களிப்பையுடையார்க்கு, கூறும் - (பலவகையாகச்) சொல்லப்பட்ட, செனனக்குடில்-பிறவிகளாகிய சிறுவீடுகளில், நெடுநாள்-நெடுங்காலமாக, நுழை - நுழைதலாலுண்டாகிய, கூன்முழுதும் - கூனல்முற்றும், மாறும்படிக்கு-நீங்கும்வண்ணம், மருந்து உளதோ-ஒரு அவுஷதமுண்டோ.எ-று.

கண்டியென்பது கழுத்தணியி லொன்றேயாயினும் இவ்விடத்து, நீறு, திருவெழுத்தோரைந்து என்னும் இனம்பற்றி, உருத்திராக்கமாலையை யுணர்த்திற்று. தேறும்பொருள் - ப்ரபஞ்சவாசனையாகிய மயக்கம் நீங்கி ஞானத்தை யடைதற்குரிய பொருள்கள். இதனால் சிவசின்னங்களையுடையார்க்கு மாயாமயக்கமொழிந்து மெய்ஞ்ஞான முதிக்குமென்ற தாயிற்று. குடில் என்றதற்கேற்ப நுழை என்றும் கூன் என்றும், கூனும் பிணிகளுள் ஒன்றாதலால் அதற்கேற்ப மருந்து என்றும் கூறினார். திருவெண்ணீறு முதலியவற்றை உறுதிப்பொருள்களாகக் கொள்ளாதார்க்குப் பிறவிப்பிணி யொழியாதென்பது கருத்து.

### இணைக்குறளாசிரியப்பா.

**22.** செருக்குடனிகலித்தருக்கமேதேற்றி
யெம்மனோரினிறந்துபிறந்துழலு
மம்மரிற்பெரியவானவர்குழுவை
மெய்ப்பொருளென்றுகைப்பொருளுதவியும்
வழுத்தியுநெஞ்சத்தழுத்தியும்வறிதே
புறவார்பசும்புற்கறவாக்கற்பசு
வாயிடைச்செருகித்தூயநீருதவி
யருஞ்சுவைப்பால்கொளப்பெருஞ்சுனைவருடும்
பேதையர்போலவுமோதுநஞ்சமரு
மெட்டியைவிரும்பிமட்டுநீர்தேக்கி
யீநுழைகல்லாமேனிமிர்வேலி
யுறும்படியமைத்தூறுங்கனிகொள்ளக்
கருதிமுயலுந்திருவிலிபோலவு
மிலகுவாலரிசியுலைபெயவெண்ணி

வெற்றுமிகுற்றும்பற்றிலர்போலவு
மருகிலமுழுததினெருமிகப்பெய்து
வித்திட் டாங்கேவிளைபயன்கொள்ளச்
சித்தத் துன்னுமத்தர்போலவும்
வாழ்நாளனைத்தும்வீழ்நாளாக்கி
யிம்மையுமறுமையுஞ்செம்மையிற்பொருந்தா
திடருறுமாந்தர்புடவியிற்பலரால்
அன்னவாறெளியனுமுன்னிமதிமயங்கா
தெய்ப்பினிலுதவுமெய்ப்பொருளாகி
என்றுமோரியல்பொடுநின்றகாரணநின்
சேவடித்தாமரைப்பூவிணைப்புனைந்து
நாத்தழும்பேறவேத்தியுள்ளுருகிப்
பெருகியவன்பெனவருநீர்நிறைந்த
விதயவாவிப்பதுமமாமலரின்
குணனெனப்பொருந்துமணமாநின்னைக்
கண்டிடுமாந்துபண்டைவாதனைதீர்ந்
தறைகடலழுந்துநிறைகுடமதுபோன்
றசைவற்றிருக்கவிசையத்தருதி
நிலைமிகப்பொருந்திப்பலமுறைசாரலா
லுந்தியவன்னவுருமருவுதலான்
மந்திரத்துறுசுடர்மகத்துயர்தலினு
விதம்பயிலிசைகொள்பதங்கலந்துறலால்
வேதமேயொப்பெனவோதுகோபுரமும்
ஒழுக்குநெறிசிறிதும்வழுக்கிலவதனு
னற்பகப்பிரிவினின்மேற்பதமதனுற்
பலகலையொளிர்மதிநிலவியவதனுன்
முத்தரைவியக்கும்பத்திமையதனுற்
சிவாகமமெனவொளிர்தவாமணிமேடையும்
வெள்ளைவாரணமேற்கொள்ளுமாங்கதனுற்
கட்டாமரைபலமட்டார்தலினு
லஞ்சுமந்தாரம்விஞ்சியோங்குதலா
லிந்திரனெனப்பொலியந்திரவாவியும்

மெங்கணுநிறைந்தவெங்குருநாதர
கருவலிதொலைக்கும்பெருமலைமருந்தே
கருணைசூற்கொண்டபெரியவான்முகிலே
சிற்றிடைக்கருங்கட்பொற்றொடிக்கரத்தா
ளாகமார்வனமுலையணையும்
போகமாரிதழிப்பூங்கண்ணியனே.

**இ - ள்.** செருக்குடன் இகலி - செருக்கோடு பகைத்து, தருக்கமே தேற்றி - தருக்கவாதமே பொருளெனத்தெளிந்து, எம் அன்னோரின் - எம் போலியர்போல, இறந்து பிறந்து உழலும் - செத்தும் ஜன்மித்தும் உழல்கின்ற, மம்மரில் பெரியவானவர் குழுவை-மயக்கத்திற் பெரியராகிய தேவசமூஹத்தை, மெய்ப்பொருள் என்று - உண்மைப்பொருளென்று கருதி, கைப்பொருள் உதவியும் - கைப்பொருளை அவர்கள் விஷயத்திற் செலவு செய்தும், வழுத்தியும் - வாயினால் துதித்தும், நெஞ்சத்து அழுத்தியும் - மனத்திற்பதித்தும், வறிதே-வீணாகவே, புறவு ஆர் பசும்புல்-முல்லைநிலத்திலுள்ள பசும்புல்லை, கறவா - பால்கறவாத, கல்பசுவாய் இடைசெருகி - கற்பசுவின் வாயிற்செருகி, தூயநீர் உதவி - பரிசுத்த நீரைக்காட்டி, அருசுவைபால்கொள்ள - அருமையாகிய சுவையையுடைய பாலைக்கொள்ளும் பொருட்டு, பெருசுரைவருடும் - (அதனது) பெரிய முலைக்காம்பை வருடுகின்ற, பேதையர்போலவும் - அறிவீனர்போலவும், ஓதும்நஞ்சு அமரும் - சொல்லப்பட்ட நஞ்சின்றன்மையமைந்த, எட்டியை-எட்டிமரத்தை, விரும்பி - இச்சித்து, மட்டுநீர் தேக்கி - அதனளவாகிய நீரைத்தேங்கச்செய்து, ஈ நுழைகல்லா - ஈக்களும் நுழைய வொண்ணாமல், மேல் நிமிர் வேலி - மேலேயுயர்ந்த வேலியை, உறும்படி அமைத்து-பொருந்தும்படி யமைத்து, நறுகனிகொள்ளக்கருதி - (அதினின்றும்) நல்லகனிகளைப் பெறநினைத்து, முயலும் - முயற்சிசெய்கிற, திருஇலிபோலவும் - பாக்யஹீநன்போலவும், இலகுவால் அரிசி-விளங்குகின்ற வெள்ளிய அரிசியை, உலைபெய்யஎண்ணி-உலையிற்பெய்ய நினைத்து, வெறு உமிகுற்றும் - வெற்றுமியைக்குற்றுகின்ற, பற்று இலர்போலவும் - வறியர்போலவும், அருநிலம் உழுது-அருமையாகிய நிலத்தையுழுது, அதின்-அதில், எருமிகப்பெய்து-எருவை மிகவும்பெய்து, வித்து இட்டு-விதைத்து, ஆங்கு-அவ்வளவிற்றானே, விளைபயன்கொள்ள-விளையும்பயனைக் கைக்கொள்ள, சித்தத்து உன்னும் - மனத்தில்நினைக்கின்ற, மத்தர்போலவும் - உன்மத்தர்போலவும், வாழ்நாள் அனைத்தும் - தம் ஆயுள்நாள்கள் முழுதும், வீழ்நாள் ஆக்கி - பயன்படாதொழிந்த நாள்களாக்கி, இம்மையும் மறுமையும் - இகலோகசுகத்தையும் பரலோகசுகத்தையும், செம்மையின் பொருந்தாது - செவ்வேயடையாமல், இடர் உறும் மாந்தர் - துன்பமடையும் மக்கள், படவியில் பலர் - உலகத்தில் பலருளர்,

ஆல் - ஆதலால், அன்ன ஆறு - அவ்வண்ணம், எளியனும் - ஏழையாகிய நானும், உன்னிமதிமயங்காது - எண்ணி அறிவுமயங்காமல், எய்ப்பினில் உதவும் - இளைத்தகாலத்தில் உதவுகின்ற, மெய்ப்பொருள் ஆகி - உண்மைப் பொருளாகி, என்றும் - எக்காலத்தும், ஓர் இயல்பொடும் - ஒரு இயற்கையுடன், நின்ற - நிலைபெற்றிருக்கின்ற, காரண - ஜகத்காரணனே, நின் - உனது, சேவடி - திருவடியாகிய, தாமரைப்பூவினைப் புனைந்து - தாமரை மலரைச் சிரசிற்சூடி, நாதழும்பு ஏற ஏத்தி - நாவின்கண் வடுவுண்டாகத் துதித்து, உள் உருகி - மனமுருகி, பெருகிய அன்பு எனவரு - மிக்க அன்பென்று சொல்லவருகிற, நீர்நிறைந்த - நீர்நிரம்பிய, இதயம் - இதயமென்கின்ற, வாவிபதுமமாமலரின் - வாவிக்கமலமலரினது, குணன் எனப்பொருந்தும் - குணம்போலப் பொருந்திய, மணம் ஆம் நின்னை - வாசனையாகியவுன்னை, கண்டு இறுமாந்து - பார்த்து இறுமாப்படைந்து, பண்டை வாதனைதீர்ந்து - பழைய வாசனையொழிந்து, அறைகடல் அழுந்தும் - ஒலிக்கிற கடலின்கண் அழுந்துகின்ற, நிறைகுடம்போன்று - நிறைகுடத்தையொத்து, அசைவு அற்று இருக்க - சலனமற்றிருக்கும்படி, இசையத் தருதி - பொருந்துமாறு கிருபைசெய்வாய், வேதமே ஒப்பு என ஓது கோபுரமும் - வேதமேநிகரென்று சொல்லுதற்குரிய கோபுரங்களும், சிவாகமம் என ஒளிர்தவாமணி மேடையும்-சிவாகமம்போல் விளங்குகின்ற அழியாத நவமணிமேடைகளும், இந்திரன் எனப்பொலி - இந்திரன்போல விளங்குகின்ற,சந்திரவாவியும்-சந்திரவாவிகளும்,எங்கணும் நிறைந்த-எவ்விடத்தும் நிறைந்த, வெங்குரு - திருக்கழுமலத்துக்கு, நாதா - தலைவனே, கருவலி தொலைக்கும் - பிறவிவலியைக்கெடுத்துப் போக்குகின்ற, பெருமலைமருந்தே - பெரியமலை மூலிகையே, கருணைசூல்கொண்ட - கருணையைச் சூலாகக்கொண்ட, பெரியவான்முகிலே - சிதாகாயத்திலுள்ள மேகமே, சிறு இடை - சிறிய இடையையும், கருங்கண் - கருங்கண்களையும், பொன்தொடிகரத்தாள் - பொன்வளையலையணிந்த கையினையுமுடையவளாகிய உமாதேவியின்,ஆகம் ஆர் - திருமார்பிற்பொருந்திய, வனம்முலை அணையும்- அழகாகிய தனங்களைத் தழுவுகின்ற, போகம் ஆர் - பாக்கியம்படைத்த, இதழிப்பூசண்ணியனே - கொன்றைப்பூமாலையை யணிந்தவனே, எ-று.

வேதத்துக்கும் கோபுரத்துக்கும் சிலேடை:—நிலைமிகப் பொருந்திப் பலதுறைசாரலால் - நிலைபேற்றை மிகவும் பெற்றுப் பலதுறைகளைச் சார்ந்திருத்தலால். (வேதம்) நிலைமிகப் பொருந்தி பலதுறைசாரலால்-நிலைகளை அதிகமாகப்பெற்று பலவழிகளைப் பொருந்துதலால். (கோபுரம்) உந்திய வன்ன உருமருவுதலால் - சிறப்பிக்கப்பட்ட அக்ஷரரூபத்தைப் பொருந்துதலால். (வேதம்) உந்திய அன்ன உருமருவுதலால் - செய்யப்பட்ட அன்னப்புள்ளின் உருவமாகச் சித்திரித்தலைப் பொருந்துதலால். (கோபுரம்)

மந்திரத்து உறுசுடர் மகத்து உயர்தலினல் - மந்திரங்களால் மிகுந்த அக்நி காரியமாகிய யாகத்தில் சிறந்திருத்தலால், (வேதம்) மந்திரத் துறுசுடர் மகத்து உயர்தலினல் - (தன்) நிலைகளிலுள்ள மிக்க ஒளியானது பெருமை உயர்ந்து தோன்றுதலால், (கோபுரம்) இதம்பயில் இசைகொள் பதம்கலந்து உறலால் - உரிமையாய்ப் பயிலுதற்குரிய ஒலியைக்கொண்ட வாக்கியங் கலந்திருத்தலால். (வேதம்) இசையென்றது - உதாத்தம் அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என்னும் வேதஸ்வரமாகிய நான்கினை. இதம்பயில் இசைகொள் பதம்கலந்து உறலால் - நன்மைபயின்று கீர்த்தியைக்கொண்ட அழகு சேர்ந்திருத்தலால். (கோபுரம்) இசை - இசைப்பு எனினும் பொருந்தும்.

சிவாகமத்துக்கும் மேடைக்கும் சிலேடை:—ஒழுக்கு நெறிசிறிதும் வழுக்கு இல அதனல் - உயிர்களை ஒழுகுவிக்கும் நன்னெறியிற் சிறிதும் தவறுதல் இல்லாததனல் (சிவாகமம்) ஒழுக்கு நெறிசிறிதும் வழுக்கு இல அதனல் - சிற்பநூலொழுங்கில் சிறிதும் தவறுதல் இல்லாததனல் (மேடை) நாற்பதப்பிரிவினின் மேற்பதம் அதனல் - நான்குபாதங்களாகிய பிரிவில் மேலாகிய ஞானபாதத்தை யுரைத்தலால். (சிவாகமம்) நாற்பதப்பிரிவினின் மேற்பதம் அதனல்-(அழகாகிய நான்கு பிரிவினையுடையதாய் மேலிடத்தையடைந்திருத்தலால் (மேடை) மரகதமேடை, பொன்மேடை, முத்துமேடை, மாணிக்கமேடை,என மேடைநான்குவகைப்படும். கந்தபுராணம்-நகரப்படலம்-௩௦. ஒலிபத்தியல் என்னும் பாடலிற்காண்க. பலகலை ஒளிர்மதிநிலவிய அதனல்-பலகலைகளாலும்விளங்குகின்ற ஞானம் நிலைத்திருத்தலால்.(சிவாகமம்)பலகலை ஒளிர்மதிநிலவிய அதனல்-பலகலைகளையுடைத்தாய் விளங்குகின்ற பூர்ணசந்திரன் தவழ்தலால் (மேடை) முத்தரைவியக்கும் பத்திமை அதனல்-பாசவிமுக்தராகிய சிவபெருமானைப் புகழும் பத்திமையுடைத்தாதலால். (சிவாகமம்) முத்தரைவியக்கும் பத்திமை அதனல் - மூன்றுலகங்களும் புகழ்கின்ற ஒழுங்குடைமையால். (மேடை).

இந்திரனுக்கும் எந்திரவாவிக்கும்சிலேடை:—வெள்ளைவாரணம் மேற்கொள்ளுமாங்கதனல் - வெள்ளையானையை ஊர்வதனல். (இந்திரன்) வெள்ளைவாரணம் மேற்கொள்ளுமாங்கதனல் - வெள்ளியசங்குகளைத் தன்னிடத்துக்கொண்டிருத்தலால். (எந்திரவாவி) கண்தாமரை பலமட்டு ஆர்தலினல் - கண்ணகிய தாமரைமலர்கள் அநேகமாகப் பொருந்துதலால். (இந்திரன்) கண்தாமரை பலமட்டு ஆர்தலினல் - பெருமையுள்ள பலதாமரைமலர்கள் தேன்பொருந்தியிருத்தலால். (எந்திரவாவி),அஞ்சுமந்தாரம்விஞ்சி இங்குதலால் - மந்தாரமுதலிய பஞ்சதருக்கள் தழைத்து உயர்தலால்

(இந்திரன்) அம் சுமந்து ஆரம்விஞ்சி ஓங்குதலால் - அழகைக்கொண்டு முத்துகள் மிகுந்துவிளங்குதலால். (எந்திரவாவி) ஆர் அம் எனப்பிரித்து நிறைந்தநீர் என்றலும் பொருந்தும். கோபுரமும மேடையும் எந்திரவாவியும் நிறைந்த வெங்குரு என இயையும். வெங்குரு - சீகாழி, ஆகாயங்கள் பலவுஞ் சென்றொடுங் குதற்குரிய பெருமையுடைமையால் சிதாகாயத்தைப் பெரியவான் என்றார். வால்முகில் எனப்பிரித்து வெண்மேகம் எனினுமாம், இப்பொருட்கு இறைவனது நீறணிந்த திருமேனியுவமையாகக்கொள்க. உடலைவருத்தும் பிறபிணிகள் போலாது இடையறாது உயிரைவருத்தும் பிறவிப்பிணிக்கு உயர்ந்த சிவபெருமானாகிய மருந்துவேண்டுமென்பார், "கருவலிதொலைக்கும் பெருமலைமருந்தே" என்றார். கைலாயமலைமீது அன்பர் பிறவிப்பிணி தீர்க்குமருந்தா யெழுந்தருளியிருத்தலால் இறைவனை மலைமருந்தென்றார். திருக்கழுமலத்திறைவனே, பிறதெய்வங்களைப் பேணித்தொழாது உன்னையேவணங்கி அலைவற்ற மனத்தையுடையேனாய் நானிருக்கக் கருணைபுரிய வேண்டுமென்பது கருத்து.

## வெண்பா.

**23.** கண்ணின்றொளிருங்கருமணியினுள்ளொளிபோ
லுண்ணின்றொளிருமொளிவிளக்கென் - றெண்ணிப்
புகலிப்பெருமானைப்புண்ணியனைப்போற்றி
லகலுமேபாசவிருளன்று.

இ - ள். புகலிப்பெருமானை - திருக்கழுமலத்தெம்பெருமானை, புண்ணியனை - புண்ணியவுருவனை, கண்நின்று - கண்ணில் நிலைபெற்று, ஒளிரும் - விளங்குகின்ற, கருமணியின் உள் ஒளிபோல் - கருமணியின் உள்ளொளிபோல, உள்நின்று ஒளிரும் - மனத்தின்கண்நின்று விளங்குகின்ற, ஒளிவிளக்கு என்று - ஒளியையுடைய தீபமென்று, எண்ணி - நினைத்து, போற்றில் - போற்றினால், அன்று - அன்றே, பாச இருள் அகலும் - பாச இருளானது நீங்கும், எ - று.

போற்றல் என்பதற்குத் துதித்தலும் வணங்கலும் பொருளாதலால் இருபொருளும் இவ்விடத்துக்கொள்க. எண்ணி என்பது மனத்தொழிலையும், போற்றில் என்பது வாக்குகாயம் என்பவற்றின்தொழிலையும் உணர்த்தலால், முக்கரணத்தாலும் இறைவனை வழிபடவேண்டுமென்றதாயிற்று. வாக்கும் காயமும் மனத்தின்வழிநிகழ்வன ஆதலால் எண்ணியென மனத்தொழிலைமுற்கூறினார். கண்ணுக்குக் கருமணிபோல உளத்துக்கு ஒளிவிளக்காயிருப்பவன் அறிவுருவனாகிய சிவபெருமான் என்றாராயிற்று. திருக்கழுமலத்திறைவனை முக்கரணத்தாலும் வழிபட்டால், பாச இருள் நீங்குமென்பது கருத்து.

### கட்டளைக்கலித்துறை.

**24.** இருளந்தகன்வரினீரெயிறேபிறையேய்ந்தசெவ்வான்
சுருள்குஞ்சிபாசமெனவந்திவந்ததுதோகைசொற்றேன்
பருகும்புகலிப்பிரானெனும்பானுப்பலகிரணம்
பெருகும்படிவந்துதித்தான்மின்னுவிபெறுகுவளே.

இ - ள். இருள் அந்தகன்வரின் - இருளாகிய யமன்வந்தால், (அவனுக்கு) பிறை - பிறையானது, ஈர் எயிறே என - இரண்டு பற்களேபோலவும், ஏய்ந்த செவ்வான் - பொருந்திய செவ்வானமானது, சுருள் குஞ்சி என - சுருண்ட சிகைபோலவும், அந்தி - மாலைக்காலமானது, பாசம் என - பாசக்கயிறுபோலவும், வந்தன - உடன்தோன்றின, தோகைசொல் தேன் பருகும் - மயிலியலியாகிய உமாதேவியின் மொழித்தேனைப் பருகுகின்ற, புகலிப்பிரான் என்னும் பானு - திருக்கழுமலநாதனென்னும் சூரியன், பல கிரணம் பெருகும்படி - அநேக கிரணங்கள் மிகும்படி, வந்து உதித்தால் - வந்து உதயஞ்செய்தால், மின் - மின்கொடிபோல் வாளாகிய எமது பெண், ஆவிபெறுகுவள் - உயிர்பெறுவாள்,

பலகிரணம் என்றது இறைவனுக்கு உயிர்களின்மீது பலபடியாயுண்டாகும் அருளை. திருக்கழுமலத்திறைவன் எழுந்தருளினாலன்றி இவள் பிழையாதிறந்து படுவாளென்பது கருத்து. இது தோழிகூற்று. தோகைசொற்றேன் பருதுமியல்புளனுதலால் இவளது சொற்றேனையும் பருகவரவேண்டுமென்றாளாயிற்று. மயிலுக்குரிய நிலமாகிய குறிஞ்சியிற்பிறந்தமையால் உமாதேவியைத் தோகையென்றார். இவள் பிறந்த குறிஞ்சிநிலம் இமயமலை.

### இணைக்குறளாசிரியப்பா.

**25.** பெறுவதுபெற்றவுறுதியுத்தமர்கட்
காயினுஞ்சிறந்தநேயநெஞ்சினனே
யாகக்கழனியின்யோகத்தபோதன
ரானபேருழவர்மானமோடாக்கிய
முயலகனென்னுமியல்பெருங்கரும்பை
யுதிரமென்னுமுதிர்சாறுமூக
நகையெனுமுத்தந்தொகையுறத்தோன்றச்
சுந்தரப்பதமெனுமெந்திரவாலையிட்
டரைத்தகவயிரங்கரைத்தவித்தகனே
குங்குமக்கொங்கையங்கயற்செங்கட்

பெண்ணரசிபிரியாவண்ணமெய்ப்பாக
பாடலம்புன்னையேடவிழிலஞ்சி
வெளியகற்பூரங்களிகொள்கஸ்தூரி
நறுமணமெவையுமுறுமுறைபொருந்தி
யுண்ணீர்பெற்றதண்ணீர்ப்பந்தரும்
செய்கமழ்கருணையுங்குய்கமழ்கறியு
மதிதருநிலவெனப்புதியவெண்டயிரும்
வருக்கையின்கனியுஞ்சருக்கரைக்கட்டியு
முதலுபகரணம்பதனொடுமரீஇத்
தளவரும்பென்னவளமலிபோனக
மாதவரெவர்க்குமாதுலரெவர்க்கு
நன்னயத்துடனருளன்னசத்திரமும்
பாடகச்சீறடிப்பான்மொழிமடவார்
நாடகத்தொழில்பயினீரடங்கெவையுங்
கலைபயில்கழகமும்பலர்பயின்மன்றமு
முள்ளனகரவாதுவந்தெதிர்ந்தளிக்கும்
வள்ளியோர்வாழுமணிநெடுவீதியும்
பூமகளுறையுளாமெனவிளங்கும்
பெரும்புகழ்க்காழிவிரும்புசங்கரனே
யேந்தெழிற்புவனவேந்தனீயாதலின்
வளமலிநான்முகக்களமருனேவலி
னூரம்பெறுகுலவரைக்குறும்பகப்பட்ட
மண்டலமென்னுங்கண்டநீள்வயலுட்
சராசரத்தொகுதிவிராயவித்திட்டுப்
பாதவமிருகம்பறவைமானிட
ராதிப்பைங்கூழமைத்தனர்நிற்ப
மாவுறைமருமக்காவலாளர்
வளமையினோம்பவிளைவுமுற்றியபின்
புரிபயன்பெறுவானரிதரவியற்றி
மெய்வலிக்கூற்றுவக்கைவினைமாக்களிற்
புலாலுடையாக்கைப்பலாலமதகற்றி
யற்றமிலுயிரெனப்பெற்றநெற்றிரளைப்
பூதசாரத்தநுப்பூதமகாதநு

பூதபரிணாமம்புகலுறுயாக்கை
மூவகைப்பண்டியின்மேவரவேற்றிப்
பொன்னிலகிராயமிங்கிலமென்னு
மிடந்தொறுமாங்கவையடங்கவைத்தவற்று
ளொருசிலவற்றைநின்றிருவடிவீட்டிற்
சேர்த்தனையன்னதுகூர்த்துநோக்கி
லரசுகொள்கடமையாதிலொன்றென்னும்
புரைதீர்முறைமைப்புதுக்கினைபோலுமதனான்
மாசுகநீபுறும்வண்மை
பேசுககருணைப்பெரியநாயகனே.

இ - ள். பெறுவதுபெற்ற - பெறுவதற்குரிய புருஷார்த்தத்தைப் பெற்ற, உறுதி - மனவுறுதியையுடைய, உத்தமர்கட்கு - உத்தமர்களுக்கு, ஆயினும் சிறந்த - தாயினும்மிகுந்த, நேயம்நெஞ்சினனே - கிருபையுள்ள மனத்தையுடையவனே, யாகக்கழனியில் - வேள்வியாகிய வயலில், யோகம் - யோகத்தைப்பயிலுகின்ற, தபோதனர் ஆன - தவச்செல்வர்களாகிய, பேருழவர் - பெரியவுழவர்கள், மானமோடு ஆக்கிய - பெருமையோடு விளைவித்த, முயலகன் என்னும் - முயலகன் என்கிற, இயல் - பொருந்திய, பெருங்கரும்பை - பெரியகரும்பினை, உதிரம் என்னும் - ரக்தம் என்கிற, முதிர்சாறு ஒழுக - முதிர்ந்தரசம் ஒழுகவும், நகை என்னும் முத்தம் - பல் என்கிறமுத்துக்கள், தொகை உறத்தோன்ற - தொகுதியாய் மிகவும்வெளிப்படவும், சுந்தரப்பதம் என்னும் - அழகிய திருவடியென்கிற. எந்திரம் ஆலையிட்டு - ஆலையந்திரத்திலிட்டு, அரைத்து - தேய்த்து, அகவயிரம் - உள்வைரத்தை, கரைத்த - கரையப்பண்ணின, வித்தகனே - ஞானரூபனே, குங்குமம் கொங்கை - குங்குமக்குழம்பு பூசியதனங்களையும், அம்கயல் செங்கண் - அழகிய சேல்மீன்போலும் செவந்த கண்களையுமுடைய, பெண்ணரசி - மங்கையர்க்கரசியாகிய வுமாதேவி, பிரியா - நீங்காத, வண்ணம்மெய்பாக - அழகியதிருமேனியின் ஒருபாகத்தையுடையவனே, பாடலம் - பாதிரிப்பூ, புன்னை - புன்னைப்பூ, ஏடு அவிழ்இலஞ்சி - இதழ்விரிந்த மகிழம்பூ, வெளிய கர்ப்பூரம் - வெண்மையாகிய கர்ப்பூரம், களிகொள்கத்தூரி-மகிழ்ச்சியைத்தருகின்ற கஸ்தூரி (என்னும்), நறுமணம் எவையும் - சுகந்தவர்க்கங்களெல்லாம், உறுமுறைபொருந்தி - கலக்கவேண்டிய முறைமைப்படி கலக்கப்பெற்று, உண் - பருகுதற்குரிய, நீர் - நீரை, பெற்ற - தம்மிடத்துக் கொண்டிருக்கிற, தண்ணீர்ப்பந்தரும் - தண்ணீர்ப்பந்தல்களும், நெய்கமழ்- நெய்மணக்கின்ற, கருணைடம் - பொரிக்கறியும், குய்கமழ்கறியும் - தாளித்தல்மணக்கின்ற வேறுகறிகளும், மதிதரும் நிலவுஎன - சந்திரன் விரிக்கின்ற

நிலவுபோல, புதியவெள் தயிரும் - நூதனமாகிய வெண்டயிரும், வருக்கையின் கனியும் - பலாப்பழமும், சருக்கரைக்கட்டியும் - சர்க்கரைக்கட்டியும், முதல் - முதலாகிய, உபகரணம்-துணைக்கருவிகளை, பதனுமெரீஇ - பக்குவத்துடன் பொருந்தி, தளவு அரும்பு என்ன-முல்லை அரும்புபோல, வளம் மலிபோனகம் - வளமிகுந்த சோற்றை, மாதவர் எவர்க்கும் - பெருந்தவத்தினரெல்லாருக்கும், ஆதுலர் எவர்க்கும் - வறியர் எல்லாருக்கும், நன்னயத்துடன் அருள் - நல்லவுபசாரத்தோடு உண்பிக்கிற, அன்னசத்திரமும் - அன்னசத்திரங்களும், பாடகம்சீறடி - பாடகமணிந்த சிற்றடியையும், பால் மொழி - பால்போலும் மொழியையுமுடைய, மடவார் - விலைமாதர்கள், நாடகத்தொழில் பயில் - நாட்டியத்தொழிலைப் பழகுகின்ற, நீடு அரங்கு எவையும் - நீண்ட ஆடிடங்கள்பலவும், கலைபயில் கழகமும் - கலைகற்கிற இடங்களும், பலர்பயில் மன்றமும் - பலரும் சஞ்சரிக்கிற பொதுவிடங்களும், உள்ளன - தம்மிடத்துள்ள பொருள்களை, கரவாது - ஒளியாமல், உவந்து எதிர்ந்து - மகிழ்ந்து எதிர்கொண்டு, அளிக்கும் - (வறிஞர் முதலானோர்க்குக்) கொடுக்கின்ற, வள்ளியோர் - கொடையாளிகள், வாழும் - வாழ்கின்ற, மணிநெடுவீதியும் - அழகிய நீண்டதெருக்களும், பூமகள் - இலக்குமிக்கு, உறையுள் ஆம் என - உறைவிடமாமென்றுசொல்லும்படி, விளங்கும் - பிரகாசிக்கிற, பெரும்புகழ் - பெருங்கீர்த்தியமைந்த, காழி - சீகாழியை, விரும்பு - விரும்புகின்ற, சங்கரனே - சிவபெருமானே, ஏந்து எழில் புவனம் வேந்தன் - அழகைக்கொண்ட சகலபுவனங்களுக்கும் அரசன், நீ ஆதலின் - நீயாதலால், வளம்மலி - வளமிகுந்த, நான்முகக்களமர் - பிரமர் என்கிற உழவர், உன் ஏவலின் - உனது ஏவலால், உரம்பெறு - வலிபெற்ற, குலவரை - குலமலைகளாகிய, குரம்பு-செய்கரைக்கு, அகப்பட்ட - உட்பட்ட, மண்டலம் என்னும் - மண்ணுலகென்கிற, கண்டம்நீள்வயலுள்-துண்டுகள் மிகுந்தவயலினுள், சராசரம் தொகுதிவிராய - சராசர ஜீவராசிகளாய்க்கலந்த, வித்து இட்டு - விதைவிதைத்து, பாதவம் மிருகம் பறவை மானிடர் ஆதி - மரம் மிருகம் பக்ஷி மானிடர்முதலாகிய, பைங்கூழ் - பயிரை, அமைத்தனர் நிற்ப - அமைத்துநிற்க, மா உறை - திருமகள் வாழ்கின்ற,மருமம்-திருமார்பையுடைய (விஷ்ணுக்களாகிய), காவலாளர் - காவலாளிகள், வளமையின் ஓம்ப - வளமையாகக்காக்க, விளைவுமுற்றிய பின் - விளைச்சல் முதிர்ந்தபின்பு, புரிபயன்பெறுவான் - விரும்புதற்குரிய பயன்பெறும்பொருட்டு, அரிதரவுஇயற்றி - அரிந்து, மெய்வலிகூற்றுவன்-சரீரபலமுள்ள யமர்கள் என்கிற, கைவினைமாக்களின் - கைத்தொழிலாளிகளைக்கொண்டு, புலால் உடையாக்கை - மாமிசத்தையுடைய உடம்புகள் என்கிற, பலால்மது அகற்றி - வைக்கோலைக்கழித்து, அற்றம் இல் - முடிவற்ற, உயிர் எனப்பெற்ற - உயிர்களென்று சொல்லப்பெற்ற, நெல்திரளை - நெல்லின்தொகுதியை, பூதசாரத்தநு - பூதசாரதேகம், பூதமகாதநு - பூத

மகாதேகம், பூதபரிணமம் - பூதபரிணமதேகம், (என்று) புகலுறுயாக்கை- சொல்லப்பட்ட சரீரங்களாகிய, மூவகைப்பண்டியில் - மூன்றுவகையாகிய வண்டிகளில், மேவர ஏற்றி - பொருந்த ஏற்றி, பொன்னிலம் - சுவர்க்க லோகம், நிரயம் - அதோலோகம், இந்நிலம் - இந்தமத்யலோகம், என்னும்- என்கிற, இடந்தொறும் - இடங்களிலெல்லாம், ஆங்கு அவை அடங்கவை த்து - அவைகள் முழுமையும்வைத்து, அவற்றுள் ஒருசிலவற்றை - அவை களுள் மிகச்சிலவற்றை, நின்திருவடிவீட்டில் சேர்த்தனை - உன்திருவடி யாகியவீட்டில் தொகுத்துவைத்தனை, அன்னது கூர்த்துநோக்கின் - அதனை ஆராய்ந்துபார்க்கின், அரசுகொள்கடமை - வேந்தர்கள் கொள்ளு தற்குரிய கடமைப்பொருள், ஆறில் ஒன்று என்னும் - ஆறிலொன்றென் கிற, புரைதீர்முறைமை - குற்றமற்ற முறைமையை, புதுக்கினைபோலும் - புதுக்குவித்தாய்போலும், அதனல் - ஆதலால், நீ உறும்வண்மை - நீபொ ருந்திய வளமைப்பாடாகிய, மாசுகம் - பெரியசுகத்தை, பேசுக - உரைத்தரு ளுவாயாக, கருணைப்பெரிய - கருணையிற்சிறந்த, நாயகனே - இறை வனே, எ - று.

திருக்கழுமலவாணனே, நீ சகலபுவனங்களுக்கும் வேந்தனுதலால், உன்கட்டளையால் மண்டலமென்னும் வயலில், பிரமனென்னும் உழவர், சராசரங்களென்னும் விதைவிதைத்து, தேவமானவதான வாதியராகிய பயிரை யமைத்துநிற்க, அந்தப்பயிரை விட்டுணுக்களென்னும் காவலாளர் காத்துநிற்க, அப்பயிர் முற்றியபிறகு, அதன்பயனை யடைதற்பொருட்டு, கூற்றுவர்களென்னும் கூலியாட்களைக்கொண்டு சரீரமாகிய வைக்கோலைக் கழித்து, உயிரென்னும் நெல்லினது தொகுதியை மூவகைத்தேகங்களா கிய வண்டிகளிலேற்றி, சுவர்க்கமத்திய பாதாளங்கள்என்னும்மூன்றுகளஞ் சியங்களில் அமைத்துவைத்து, அவற்றுள் சிலவற்றை நீயேற்றுக்கொள்ளு கின்றனை, இதை நோக்குமிடத்து, அரசுகொள்கடமை ஆறிலொன்று என் னும் பழையமுறைமையைப் புதுக்கினைபோலும் என்பது கருத்து.

வெண்பா.

28. பெருமானே கூடிப்பிரிந்தாலுமங்கைக்
கொருவாதருள்வரமொன்றுண்டே—திருமால்
விடையாய்புகலிவிமலாமவுன
விடையாய்பிறியாவிடை.

50

இ - ள். பெருமானே - எம்பெருமானே, திருமால்விடையாய் - அழகிய பெரிய இடபத்தை யுடையானே, புகலி விமலா - திருக்கழுமலத்தி லெழுந்தருளிய நிர்மலனே, மவுனவிடையாய் - மௌநநிலையாகிய விடையையருளினவனே, கூடிப்பிரிந்தாலும் - நீகலந்துபிரியினும், மங்கைக்கு-இந்தப்பெண்ணுக்கு, ஒருவாது - நீங்காமல், அருள் - அருள்செய்தற்குரிய, வரம் ஒன்று உண்டு-ஒருவரமுளது (அது என்னெனின்)பிரியாவிடை-பிரியாவிடையேயாம், எ - று.

பிரியாவிடை-உள்ளம்பிரியாத அன்புடன் விட்டுநீங்கல். சநகாதியருடைய வினவுக்கு வாயினால்விடைவிடுக்காது மௌநநிலையிலிருத்தலாகிய விடையருளி அவர்களையந்தீர்த்தானாதலால் மவுனவிடையாய் என்றார். திருக்கழுமலத்திறைவனே, எமது மங்கையைப்புறத்துவிட்டு நீங்கினும் அகத்தன்பு நீங்காதிருத்தல் வேண்டுமென்பது கருத்து. இது தோழி கூற்று.

கட்டளைக்கலித்துறை.

27. விடையம்பொருளென் றுணராதமார்க்கம்விரும்புமழூப்
படையம்புயக்கரத்தெந்தாதைஞானபரம்வென் றெண்
சடையம்புனலணிவேணுபுரேசனந்தாண்மலர்தூ
விடையம்பொருளென் றிருநீயென் றுண்மைவிளம்பினனே.

இ - ள். (நெஞ்சே) நீ - நீ, விடையம் - சப்தாதிவிஷயங்களை, பொருள் என்று உணராத - பொருளாகமதியாத, மார்க்கம் - நன்னெறியை, விரும்பு - இச்சிப்பாய், மழூப்படை - மழுவாயுதத்தையேந்திய, அம்புயம் கரத்து - தாமரைமலர்போலுங் கையினையுடைய, எம்தாதை - எமது தந்தையே, ஞான - சர்வஞ்ஞனே, பரம - மேலானவனே, என்று எண் - என்று நினைவாய், சடை - சடையின்கண், அம்புனல் அணி - அழகிய கங்கையைத்தரித்த, வேணுபுரேசன் - திருக்கழுமலத்திறைவனது, அம் தாள் - அழகாகிய திருவடியின்மீது, மலர்தூவிடையம் - மலர்களைச்சொரிதலாகிய விஷயமே, பொருள் என்று இரு - உறுதிப்பொருளென்று இருப்பாய், என்று - என்று, உண்மைவிளம்பினன் - உண்மையாய்ச்சொன்னேன், (இவ்வாறுசெய்தால் யாமுய்யலாம்) எ - று.

இதற்கு இவ்வாறன்றி; மழுப்படை அம்புயக்கரத்து எம்தாதையாகிய சடையம் புனலணிவேணுபுரேசன், என்னைநோக்கி, நீ, விடையம்பொருளென்றுணராத மார்க்கம்விரும்பு, ஞானபரம என்று என்னைத் தியாநம் பண்ணு, நம்தாள் மலர்தூவிடையம் பொருளென்று இரு, என்று உண்மை விளம்பினன் எனப் பொருள்கூறினும்பொருந்தும். விடையம்பொருளென்றுணராத மார்க்கம் - ஞானநெறி.

இணைக்குறளாசிரியப்பா.

28. விளம்புவன்யானென்றுளம்புகுநெறியா
லெழுத்தினுறழாதுவழுத்துபொருளின்றிக்
குறிப்பொடுபடாதுவெறித்தபுன்சொல்லே
யாயினும்பயந்ததஞ்சேயவர்சொலுமொழி
குழலினுமியாழினுமழகிதாமதுபோ
னற்றாயாகியெற்பெற்றாயென்சொற்
றிருச்செவிக்கேறும்பொருத்தமுண்டதனாற்
கேட்டிகேட்டிவாட்டமில்பெரியோய்
மதுமழைபிலிற்றிப்புதுமணம்விரித்துப்
பற்பலவுதவுங்கற்பகத்தருவும்
நந்தாவளனருள்சிந்தாமணியும்
வாமமாமேனியகாமதேனுவும்
அருளியவேவல்வரன்முறைகேட்பக்
கடவுளரணிமணித்தடமகுடங்கள்
காற்றுணைவருடப்போற்றினரிறைஞ்சி
முனிவராசிநனிபலமொழியக்
கரம்பயில்கவரிபரம்பையரிரட்டக்
கின்னரர்விபஞ்சிநன்னரம்புளரா
விசையமுதிருஞ்செவிமிசையெடுத்தூற்ற
முடங்குளைச்செங்கண்மடங்கலணைநாப்ப
ணமுதுகுமென்சொற்குமுதமென்செவ்வா
யிந்திராணிவந்தருகிருப்பக்

கருமுகிலாயிரந்திருமலர்பூத்துச்
செங்கதிர்ச்சேகரந்தங்கவீற்றிருந்த
பெருந்திறன்கடுப்பவிருந்துவிண்புரக்கு
மண்ணல்புரந்தரப்பண்ணவனரசும்
பழமறைகனிந்துமழவுபெற்றிருந்த
செந்நாத்தவிசின்முன்னாட்டங்கிப்
பனுவலாட்டியினிதுவந்திருப்ப
வண்டுபொண்மூரன்றுகிண்டுபுததைந்து
பொற்றாதுண்ணுமுற்றாவின்பப்
பிரசமுற்றிருந்தவரசரோருகத்தன்
நெருக்கியபுவனப்பெருக்கினைத்தனது
திண்ணியமனத்திடையெண்ணியாங்கியற்றி
யெம்மாலெவையுமியன்றனவென்னச்
செம்மாந்திருக்குஞ்சிறியவாழ்க்கையும்
திதலைபூத்தலர்ந்துமதகளிறிகலி
வருமுலைசுமந்ததிருமகள்பச்சைப்
பசுந்துழாயலங்கலசும்புதேன்றுளித்துக்
கடிகமழ்மார்பிற்குடிபுகுந்திருப்பத்
தண்ணிலவெனவிரிவெண்ணிறப்பாற்கட
லொல்லொலித்தரங்கமெல்லடிவருடக்
காமர்தென்காலெனுஞ்சாமரையசையத்
துத்திநெய்பரந்துபைத்தபையகலி
லணிகிளர்பலகதிர்மணிவிளக்கொளிரச்
சுடிகைவாளரவநெடியபூவணைமேன்
மறுவிலாநீலவரைகிடந்தென்ன
வறிதுயிலமர்ந்தவச்சுதன்வாழ்க்கையு
மழியாவின்பமென்றெழியாதுரைப்பினுங்
கற்றவர்கருத்தினுற்றுநோக்குழி
யிந்திரசாலமுந்துநீள்கனவு
வெண்டேர்போலவுண்டெனத்தோன்றி
யிலவாமாதலினலமலவாங்கவை
நிலைபெறுடையதுநின்னருட்செல்வ

